# முருகன் பாடல்
# ஒன்பதாம் பகுதி



தெட்சணத்தார் வேளாளர் மகமை
பரிபாலன சொசைட்டி லிமிட்டெட்
98, ஜிந்துப்பிட்டி தெரு
கொழும்பு-11, இலங்கை

உரிமை பதிவு
யுவ ஆவணி
திருவள்ளுவராண்டு 2026
1995 ஆவணி

ஆறு பகுதிகள் கொண்ட ஒரு
தொகுதியின் விலை.

இலங்கையில் : ரூபா 2700/-
இந்தியாவில்: ரூபா 1200/-
பிறநாடுகளில் அமெரிக்க டாலர் 60/-

பாட்டு முதற் குறிப்பு அகராதி
பாட்டுடைக் கோவில் அகராதி
பாட்டுத் தலைப்பு அகராதி
ஆசிரியர் அகராதி
என்பன
பன்னிரண்டாம் பகுதியில்
இறுதிப் பக்கங்களாக உள.
தொகுப்பின் பொருளடக்கம்
முழுமையும் எல்லாப் பகுதிகளிலும்
முன் பக்கங்களில் உள.

ஒளிஅச்சுக்கோப்பு, அச்சிடல்:
*காந்தளகம்*, 4, முதல்மாடி, 834, அண்ணாசாலை,
சென்னை-600 002. தொலைபேசி: 834505, 8250050.



தென்பசிபிக் காவலன், பிஜித்தீவு, லவுடோகா நகர்.
அருள்மிகு, வள்ளி, தெய்வானை
உடனுறை சிவசுப்பிரமணியசுவாமி கோவில்,
முன் — பின் புறத் தோற்றங்கள்.



# பொருளடக்கம்

## ஒன்பதாம் பகுதி

## பத்தாம்பகுதி

## பதினோராம் பகுதி



## பன்னிரண்டாம் பகுதி

உ

# திருப்பரங்கிரி மும்மணிக் கோவை

## வே. இராமநாதன் செட்டியார்

### காப்பு

#### நேரிசை வெண்பா

பரங்குன்றிற் சேய்மகிழப் பன்னுமணிக் கோவை
தரங்குன்றா தெந்நலமுஞ் சாரக்—கரங்களஞ்சு
நாலுமுக மூன்றுவிழி நாதநிறை காதிரண்டொ
டேலுமருப் பொன்றுடையா யெண். 1

கடலில் மிதந்துயர்ந்த காழிவரு காளை
மடலெழுதா மாமறைசொல் வான்சே—யடல்வலிமைச்
சிங்கமே றன்னமுலைத் தெள்ளமுத முண்டுசெய்யுள்
சங்கையறச் சொற்றோன் சரண். 2

### நூல்

#### நேரிசையாசிரியப்பா

திருவடி வணங்குமின் திருவடி வணங்குமின்
பரங்கிரி விளங்குங் கரங்களீ ராறுடைக்
குமர நாயக னமருய வருடரத்
திருவடி வணங்குமி னுருவமை தெய்வக்
குஞ்சர மெழில்பெறக் கொஞ்சிய வுருவ
நெற்றிப் பாலன் கற்றை வார்சடைக்

கடவுள் கண்ணிணை யிடமெனத் தோன்றிய
கருணை வெள்ள மருணரா யிரவர்
காலு மொளியினு மேலு மொளிர்தரு
சோதி மாமயில் நாதன்
பொன்னடி நமது சென்னியிற் பூவே. 1

நேரிசை வெண்பா

பூமணக்கும் வான்றருக்கள் பொன்னுலக மன்னவளர்ந்
தேமமளித் தெந்நலமு மெய்துவிக்கக்—காமியத்தை
யெண்ணா விருடிகள்சேர்ந் தேத்துபரங் குன்றடைந்து
கண்ணால்மூன் றுள்ளானைக் காண். 2

கட்டளைக் கலித்துறை

காண்டற் கரிய பெருமா னெனினுநீ காதலொடு
வேண்டு மடியார் விரும்புவ தீந்து வினைகெடுத்துத்
தாண்டவ நீள்பவ நீக்குவ துன்னிச் சரணடைந்தே
னாண்டவ னாகிப் பரங்கிரி சேர்ந்த வருட்கடலே. 3

நிலைமண்டில வாசிரியப்பா

கடனீர் சுவற வடலுடை வேல்விடு
புண்ணிய பரங்கிரி நண்ணிய நாதா
பாசித் திரைவை காசிற் றுயிர்க
ளானியற் றாடினர்க் காவணி யளிக்குஞ்
சரவணோற் பவதாள் பரவுத லுற்றே
னுளப்புரட் டாசிவ நிலைப்புறத் துய்க்கு
நின்னைப் பசித்தற் கென்னுள நாடிக்
கார்த்திகை சிறுவ வேத்தின னினிதே
மார்கழி யுவகை சார்தர வெந்தை
மாசிலா துனதடி பேசிலா பங்குனி
விருப்பொடு நின்றனன் பொருப்பமர் தேவே. 4



நேரிசை வெண்பா

வேதனைமுன் னாட்சிறையில் விட்ட பரங்கிரிக்கோன்
சீதமதி கொன்றையணி தேசிகற்கு—நாதனா
யேரகத்திற் ப்ரம்மோப தேசஞ்செ யெம்மிறைவ
னாரகத்து வைப்பா னலம். 5

### கட்டளைக் கலித்துறை

நலமுறுந் தென்பரங் குன்றமர் சேய்நின்றார் நாடினளா
யலமருஞ் சோரு நெடிதுயிர்ப் பெய்திடு மாவெனவே
நிலமுற வீழ்ந்திடு மாமுரு காவென நின்றுகையைத்
தலைமிசை வைத்திடுஞ் சாமி யிவட்கருள்
சாதிப்பையே. 6

### நேரிசை யாசிரியப்பா

பைந்நா கம்வளர் மன்னவன் பாகப்
பனிவரை மகள்மகிழ் கனிவுடைப் பால
னெள்ளத் தனைவரு தெள்ளிய பசிக்கும்
பண்டியை யெக்கிப் பரிந்து குழைந்து
மணிவா யினைநெறித் தணிபெற வழுது
துள்ளி யிடம்புடை மெள்ளவே பெயர்ந்து
தொட்டிலை யுதைத்துக் கட்டை விரலைச்
சுவைத்துக் கடைவாய்த் துளிநீர் புவித்தலை
சிந்தத் தவழ்ந்து நந்தலில் செவ்வாய்
திறந்து குறுநகை சிறந்திட விளைத்து
அம்மைமுக நோக்கிக் கொம்மைமுலை வள்ளத்
தமுதுண் டிருந்த சுமுகன்
பரங்கிரி மேவிய பண்ணவன் றானே. 7

### நேரிசை வெண்பா

வன்மைமனத் தார்பரனன் மாதிரத்திற் பாயசத்தைப்
புன்மை யகலவெனப் போற்றிநின்று—நன்மைநிறை
கந்தற் குறித்துக் களத்திடுகின் றாரெனக்கீ
தெந்தநல முந்தரா தே. 8

### கட்டளைக் கலித்துறை

தேவன் பரங்கிரிச் செல்வனென் றேத்துநர் தீமையற
வாவ னிருதருக் காகா னடியருக் காதரவிங்
கீவ னுதல்விழித் தீயான் மகிழ்செம்ம லென்னுயிர்க்கச்
சாவனெக் காலத்துஞ் சாகான் மலரடி சார்மின்களே. 9

### நிலைமண்டல வாசிரியப்பா

மின்னல் மேக மன்னிய சிகரப்
பரங்கிரிச் சாரல் பிறங்கிய தடாகக்
கரையிலா லின்கீழ்ப் பரவிய புகழ்சேர்
நக்கீர முனிவன் முக்கணற் போற்றிப்
பூசனை செயுங்கால் வீசுகிளை பொலிந்த
ஆலிலை பாதி சாலநன் னீரிலும்
பாதி நிலத்தின் மீதும் விழுந்து
நீர்ப்பாதி மச்சம் நிலப்பாதி பறவை
வடிவமுற் றொன்றை மற்றொன் றிழுக்கப்
பூசனை புரிந்த மாசிலா முனிவ
னெஞ்சக மிங்குத் துஞ்சிட வதனால்
பூசைப் பங்கம் பொருந்திட முன்பு
அம்முறை வழுவிய செம்மை யாளர்
தொள்ளா யிரத்துத் தொண்ணூற் றொன்பது
மக்களைக் குகையில் முக்கிய பூத
மற்று மொருவர்க் கற்ற நோக்கி
நக்கீ ரரையு மொக்க வடைத்துத்
தன்னிய மப்படி மன்னுமா யிரவரை
உண்ணுதற் கெண்ணித் தண்ணீர்ச் சுனையில்
மூழ்கச் சென்றது வாழ்வினை வேண்டி
அடைபட் டிருந்தோர் தடைபடா வாக்குக்
கீரரை வேண்டச் சூரனா தியரை
வென்ற வைவே னன்றுகொள் பெரும
நின்னை வேண்டி மன்னுமாற் றுப்படை
செய்தா யிரவருந் திருவரு ளாலுயிர்
வாழ வைத்தனர் வீழ்வினை யறுத்தே. 10

### நேரிசை வெண்பா

அறுத்தா ரெனதுபவ மன்பன் பிழைகள்
பொறுத்தார் பரங்கிரியிற் போக—மறுத்தார்பின்
னென்னகமுஞ் சென்னியுமே யேற்றவிட மாவுறைந்தா
ரென்ன குறையுமிலை யெற்கு. 11

### கட்டளைக் கலித்துறை

குவளைநற் பூவணச் செவ்வாய் முகவள்ளி கூறுநலத்
தவளைப் புனவாயிற் கூடல்செய் தாண்ட வமரரிறை

குலவுகுற் றாலமுண் கோமகன் மாகொடுங் குன்றனைய
சவுரிய வாகுடைச் சாமி பரங்கிரி சார்ந்தவனே. 12

### நேரிசை யாசிரியப்பா

சாரு சாரு கூரல்சேர் சாரு
பத்திர நிறத்தொடு நத்திய தூல
மெனவமைந் திலங்கிக் கனமுறு கூரல்
சேருஞ் சாரு திகழ்தரு சாரு
என்றுயர் நீக்குதற் கின்றள வும்மொரு
தோழரைக் காணேன் வேழந் துணைகொடு
வள்ளியை மணந்த புள்ளுயர் துவசன்
சந்நிதி சென்று கன்னி யொருத்தி
நின்மயல் கொண்டுதன் றன்மைக ணீங்கி
யூணு முறக்கமும் பேணாள் வளைதுகில்
சோர்ந்தது மறியாள் நேர்ந்தவள் பாலடைந்
தின்னலை நீக்கெனப் பன்னல்
வேண்டின னெனது விருப்புரைப் பாயே. 13

### நேரிசை வெண்பா

பாயுந் தகரிப் பரந்த புவனமுற்றுங்
காயுங் குணத்தாற் கடிதழிக்க—நேய
மிகுவீர வாகுகொணர் மேடமுற வேறித்
தகுபரங்குன் றுற்றோன் சரண். 14

### கட்டளைக் கலித்துறை

அண்மைநில் ஞாயிறு சென்றது திங்க ளணைந்ததுநல்
வெண்மையடைந்தது செவ்வாய் புதன்பொடு
வியாழநெஞ்ச
ணுண்மை யிவணுற வெள்ளி தயமவற் குற்றதிலை
தண்மைப் பரங்குன்றி னிருதர்க் கசனியாச்
சார்ந்தவனே 15

### நிலைமண்டல வாசிரியப்பா

வன்றுய ரடைசுரர் மாதொர்பா கன்பாற்
சூரனா தியரால் நேரிடு மின்னலை

நீக்குதல் வேண்டத் தீக்கணி லிருந்தர
னாறு பொறிவிட வீறுசேர் வாயு
அப்பொறி கைக்கொண் டக்கினி கைதரக்
கனல்பொறுக் காதவன் புனலிடை விடுப்பக்
கார்த்திகை மாதர் பூத்தன ருதர
மக்க ளறுவரை யக்கணம் பெறவுமை
யிருமூன் றுருவையு மொருமுகப் படுத்தி
யறுமுகத் தொருவுரு வாக்க வளர்ந்து
சூரனை வென்று காரமர் புரந்தரன்
வானமர் தெய்வ யானையை வதுவை
கொள்ளென வேண்ட வள்ள லருஞ்சீர்
மங்கையை மணந்து துங்கநற் பரங்கிரி
சார்ந்தடி யவர்க்கரு ளீந்தனன் பெரிதே. 16

**நேரிசை வெண்பா**

பெரிதுதடங் கண்ணிமைக்கும் பிஞ்ஞகனின் சென்னி
மருவுபிறை போலுநுதல் வாடத்—தரும்வியர்வை
சூடு மலர்வாடுந் தூவடிமண் டோயுமிதா
னாடுபரங் குன்றினளிந் நாரி. 17

**கட்டளைக் கலித்துறை**

நாகப் பணியார நாடும் பிரான்மக னாரிட்டெலி
வேகப் படவுய்ப்பான் றம்பிநற் றேங்குழல் வேயுடையா
னேகப் படுமரு மான்றே ரதிரச வின்மொழிப்பெண்
ணாகப் பெருமகள் மைந்தன் பரங்கிரி நற்பொருளே. 18

**நேரிசை யாசிரியப்பா**

பொருதுதா னவரை விருதுடன் போந்து
தெய்வ யானையைத் திருமணம் பூண்ட
பரங்கிரி நகரந் தரங்கமென் றிசைக்க
அல்லும் பகலும் பல்லவர் நிற்பர்
அன்னவ ரொழியினெ னன்னை துஞ்சாள்
அன்னை துஞ்சில் மன்னுவே லிளைஞர்
காவலர் மறுகில் மேவுவ ரவரு
மருவா தொழியின் வெருவுற ஞாளி
மருட்சி செயுமது தெருட்டா திருப்பின்
வானத் திங்கள் வளம்பட வொளிசெயுந்

திங்க ளொளிசெயாத் திறத்திற் கூகை
குழறுதல் செய்யும் பழிபெற வில்லெனில்
விடியற் கோழியல் முடிவினை யுரைக்கு
மிப்பல விடுக்கண் தப்பிய நாளிற்
பன்னுமென் னுளங்கவர் பரங்கிரி
வாழுங் குமரர் சூழவா ரலரே. 19

### நேரிசை வெண்பா

அல்லமருங் கூந்த லணிதெய்வ குஞ்சரத்தை
நல்ல பரங்குன்றி னாடினாய்—ஒல்லையினில்
வள்ளியினை வேண்டி வதுவைசெய் தாய்முறையோ
எள்ளலிலா தித்தொழிலை யெண். 20

### கட்டளைக் கலித்துறை

எண்ணும் பரங்கிரி யின்ப மொடுவள ரெம்பெருமா
னண்ணு மிரவு வெகுவிரை வாக நடந்துவிடும்
புண்ணியன் போதா விரவுப் பொழுது புலர்வதிலை
யெண்ணிய விவ்விரண் டாலு மிராமிக் கிழிதகைத்தே. 21

### நிலைமண்டல வாசிரியப்பா

தக்க பரங்குன் றொக்க வடைந்தனை
ஆறு முகமும் வீறுசேர் கரங்கள்
இருமூன் றிரண்டு மருவிடப் பெற்றனை
தோமரங் கொடிவா ளாமுயர் குலிச
மம்பங் குசமணி வெம்பிய தாமரை
தண்டம் வில்மழு மிண்டிய வடிவேல்
ஒன்னார் வெருவ மன்னினை கரத்தே
நூலணி மார்பினை சீலனா யுறைந்தனை
ஈரமி னெஞ்சச் சூரனா தியரை
வீர மழித்து விறல்கொடுத் தருளினை
பொன்னுல கடைந்து கன்னலந் தீஞ்சொல்
தேவ குஞ்சர மேவிடப் பெற்றனை
புண்ணியன் நீயே புராதனன் நீயே
கண்ணியன் நீயே கற்பக நீயே
எண்ணிய வெண்ணியாங் கெய்திடத் திருவருள்
பண்ணுதல் வேண்டிப் பணிந்தன னினையே. 22

### நேரிசை வெண்பா

ஏதமறுஞ் செட்டி யியற்கரு மான்மருகன்
மோதவண்ணான் பிள்ளை முதலிருந்து—நீதியொடு
விக்கினங்க ணீக்கும் விநாயகற்குத் தம்பியாந்
தக்க பரங்கிரிநா தன். 23

### கட்டளைக் கலித்துறை

தன்னே ரிலாத பரங்கிரி மால்வரை தன்னிடத்தே
யென்னே யநங்கன் பொருவதற் கெண்ணி யெதிரிருந்து
மின்னே கருப்புவில் வேல்வாள் சயந்தன மிக்கிருக்கக்
கொன்னே குழல்தரிற் போர்வெல லெங்ஙனங்
கூறுவையே. 24

### நேரிசை யாசிரியப்பா

வைப்பென வென்னுடை யெய்ப்பினி லுதவப்
பரங்கிரி நின்றருள் பண்ணவ வுன்னை
முத்தமிழ் கொண்டு மெத்தவை தாலும்
வாழவைப் பாயெனச் சூழுநின் னன்ப
னருண கிரிசொற் பொருணய முணர்ந்தே
நின்னை யியற்றமிழ் பன்னின
னெண்ணுவ தீந்தருள் புண்ணிய ரேறே. 25



### நேரிசை வெண்பா

ஏறானா னுந்தை யெழிலுருவிற் பாதிபெற்றான்
மாறாத பாணமா மன்னினான்—கூறாகித்
தேவியா னானந்தச் செல்வன் பரங்கிரியாய்
மேவுமுனக் கம்மானோ மேல். 26

### கட்டளைக் கலித்துறை

மேலுயர் சென்னிப் பரங்கிரி யுற்ற விதமறிந்தே
னேலுந் தினைப்புன மங்குண்டு மால்வரை
யின்சுவைத்தேன்
சாலவு முண்டு குறிஞ்சி நிலம்வளர் தையலரின்
பாலெனுஞ் சொல்லுண் டிவற்றின் சுவைபெறப்
பற்றினிரே. 27

### நிலைமண்டல வாசிரியப்பா

பற்றுன தடிமிசை நற்றவ கொண்டேன்
பிறந்தநாட் டொட்டுத் துறந்திடற் கரிய
காமம் வெகுளி யாமிருங் குப்பை
பலபடக் கிடப்பதை நிலைபெறப் போக்கி
விருப்பு வெறுப்பெனு மேடுபள் ளங்கள்
நிரவி வாய்மையாற் பரவிட மெழுகி
இருளற நின்ன தருள்விளக் கேற்றி
யுண்மை யென்னு முயர்தரு விதானம்
விரித்தென் மனத்தே மேவிடல் வேண்டுந்
தென்பரங் கிரியிற் றிகழ்தரு சேயே. 28

### நேரிசை வெண்பா

சேயாவா னப்பனகஞ் சேர்மயிலான் பாட்டன்பு
மேயாவன் னெஞ்சரிட மேவாதான்—தாயாகி
யெவ்வுயிருங் காக்க வெழில்சேர் பரங்குன்றில்
செவ்வியுடன் நின்றருளுந் தேவு. 29

### கட்டளைக் கலித்துறை

தேவாதி தேவனைத் தென்பரங் குன்றமர் செம்மலினை
மூவா முதல்வனை முத்திக்கு வித்தா முதியவனைச்
சாவா வொருவனைச் சைவ சமயமுஞ் சார்தமிழு
நாவாய்முந் நீருல கில்வளர்ப் போன்றனை நாடுதிரே. 30

### வாழ்த்து

வாழ்க பரங்குன்று வாழ்க முருகனருள்
வாழ்க தமிழ்சமயம் வண்மையுடன்—வாழியரோ
மாதமும் மாரி வளத்தா லுலகெங்கு
மோதுதெய்வ யானை யுடன். 31

### திருப்பரங்கிரி மும்மணிக் கோவை முற்றிற்று

உ

### மயிலணி

# முருகவேள் மும்மணிக்கோவை

## கு. முத்துக்குமாரசுவாமிப் பிள்ளை



### காப்பு

நேரிசை வெண்பா

மன்னு மயிலணிவாழ் மாமுருக வேள்மீது
பன்னு மணிக்கோவை பாடவே—இன்னல்தீர்
தும்பிக்கை யானைத் தொழுதவ னின்னருளை
நம்பிக்கை யாய்ப்பெறுவேன் நான்.

### நூல்

நேரிசை வெண்பா

பத்தியொடு நித்தமுன் பாதம் பணியுமென்றன்
சித்தம் தெளிவிக்கும் செவ்வேளே!—நித்தமும்
நேசமாய்த் தீவினையை நீக்கி அருள்வையேற்
பாசத்தால் எற்கென் பயம். 1

கட்டளைக் கலித்துறை

பயமின்றி வாழ வழியுண்டு சுன்னைப் பழம்பதிவாழ்
கயலுண்கண் வள்ளி கணவன் குமரன்றன் கான்மலரை
மயலின்றி வாழ்த்தி மலமூன்றும் போக்கி மகிதலத்திற்
செயலற்று யாவும் அவனரு ளென்று தெளிந்திடினே. 2

ஆசிரியப்பா

எவ்வகை இடரையுஞ் செவ்வனே தீர்க்கும்
வெயில்நுழை பறியா மயிலணிப் பதிவாழ்

முருகா போற்றி, முருகா போற்றி,
இலகுவெண் நீறும் திலகமும் அணிந்து
பூசைப் பொருள்களை ஆசையோ டேந்திச்
சிரத்தில் வைத்த கரத்தோ டேகித்
தலத்தைச் சுற்றி வலமாய் வந்து,
பத்தியோ டர்ச்சனை நித்தமுஞ் செய்து,
நவத்தமிழ் மறையை உவப்போ டோதி,
நாத்தழும் பேறத் தோத்திரஞ் செய்து,
கந்தன் பெருமையைச் சந்ததங் கூறி,
உடல்பொருள் ஆவியைத் திடமுடன் அளித்துப்
பேரருள் முருகன் சீரருள் பெற்றுப்
பயந்துதீ வினையை நயந்து நீக்கி,
வாழும் பெரியோர் தாழும் மயிலணிப்
பதியுறை எமையுங் கதிபெற் றோங்க
அருள்செய் குவையே ஆறுமா முகனே. 3

நேரிசை வெண்பா

ஆறக் கரத்தை அனுதினமும் ஓதிடுவோர்
பேறா மெவையும் பெறலாமே—மாறாத
நோயினைத் தீர்த்தருளும் நுண்மருந்தும் அஃதேயாம்
வாயினால் ஆங்கதனை வாழ்த்து. 4

கட்டளைக் கலித்துறை

வானத் தவர்புகழ் மாலோன் மருகன் மயிலணிவாழ்
ஞானக் கொழுந்தினை நான்மறை தேர்திரு நாயகனை
ஊனம் நனிதோய்ந் தொளிர்வடி வேலனை ஓவியமார்
கானக் குறவள்ளி காந்தனை அன்பொடு காண்குவனே. 5

ஆசிரியப்பா

அறுசுவைக் கறியும் நறுநெயுஞ் சோறும்,
வெறிகமழ் குழம்புஞ் செறிபுளிச் சாறும்,
சில்வகைப் பொரியலும் பல்வகை அரையலும்,
அப்பளம் பாயசம் ஒப்பில்பல காரமும்,
மட்டில் கனிகளும் கட்டித் தயிரும்,
இன்னன பற்பல துன்ன இயற்றி

வருவிருந்து பார்த்துப் பெருவிருந் தோம்பும்
தாளாண்மை குன்றா வேளாண் மக்கள்
வதியும் பெருமைப் பதியாஞ் சுன்னை
மயிலணித் தளிவாழ் அயில்வேற் குமர!
வேண்டுவன் ஒன்று கேண்மதி ஐய!
வரமுறு முத்தி திரமுறச் சேர்க்கும்
மாறாக் கருணைகூர் ஆறக் கரத்தை
அன்புடன் என்றும் இன்புற ஓதியுன்
செஞ்சர ணத்தை அஞ்சலி செய்தே
சஞ்சித வினைகள் எஞ்சா வண்ணம்
அருளினைச் செய்தென் மருளினைத் தீர்க்கவே. 6

**நேரிசை வெண்பா**

மட்டி லழகுடைய மாமுருக வேளையே
இட்டமாய் ஏத்தி னிடர்களெல்லாம்—சட்டெனவே
நீங்கும் அவன்நாமம் நெஞ்சில் அழுத்தவே
தேங்குமா னந்தஞ் சிறந்து. 7

**கட்டளைக் கலித்துறை**

ஆணவப் பேய்தனின் ஆட்டத்திற் கஞ்சி அவனியிலே
நாணமிக் குன்திரு நாண்மலர்ப் பாதத்தை நாடினனல்
மாணவ னாய்வரு மாதேவற் கோதிய மால்மருகா!
மாணரு ளைக்கூட் டிடுவாய் எனக்கிந்த மாநிலத்தே. 8

**ஆசிரியப்பா**

வானுற நிவந்த சேணுயர் பனையும்,
தென்னையுங் கமுகும் புன்னையும் புளியும்,
இருப்பையும் வேம்பும் வருக்கையும் மாவும்,
பொன்பூ நிறைந்த மென்னறுங் கொன்றையும்,
வில்வமும் ஆத்தியும் வெறிகமழ் பிச்சியும்,
அறுகும் பொலிந்த நறும்பூஞ் சோலையும்,
காமரு பூநிறை தாமரைத் தடாகமும்,
இன்னன வளஞ்சேர் சுன்னைமா நகரில்
பொங்கருள் பாலிக்கும் ஐங்கரன் கோயிலும்,
மருதடி உறையும் மாசாத்தன் கோயிலும்,

கதிதனைக் கொடுக்குங் கதிரமலைக் கோயிலும்,
வியப்பார் விஸ்வ நாதன் கோயிலும்
நாற்றிசைச் கண்ணும் ஏற்றமுற் றோங்க
மயிலணிப் பதியில் மன்னிய முருகா!
அறைகுவன் ஒன்று இறைவ! கேண்மதி
சுன்னைமா நகரில் முன்னைநாள் வைகிய
வரகவிப் புலவனாம் வரதன் ஆதிய
வித்தகப் புலவோர் வியப்புடன் அளித்த
அத்த்கு சொன்மலர் அனைத்தையும் ஏற்றனை;
பன்மொழி அறியாச் சின்மொழி உடையேன்
ஆசையாற் சொற்றவிவ் வோசையில் கோவையை
குற்றமுங் குணமாக் கொண்டே பொற்புற
நாடி மாலையாய்ச் சூடிப் பொலிகவே. 9

### நேரிசை வெண்பா

பொல்லாத பொய்யுடலைப் போற்றியே மெய்யென்று
பொல்லாங்கு யாவும் புரிந்திட்டேன் — நல்லருள்கூர்
பஞ்சமுகன் பெற்றசுன்னைப் பாலகனே எட்டுணையும்
அஞ்சலென இன்றே அருள். 10

### கட்டளைக் கலித்துறை

இயலாற் சிறந்திடு தேவிய ரான இருவரையும்
மயலால் இருத்திநன் மாண்புறச் செய்தருள் மாமுதலை
வயலாற் சிறந்து வளமோங்கு சுன்னை வரதனையே
நயவாது காலம் நடத்தினை நெஞ்சேயிந் நானிலத்தே. 11

### ஆசிரியப்பா

நானிலந் தன்னில் தானினி தோங்கிய
விமலன் வைகும் இமயஞ் சார்ந்த
கந்தவேள் வாழுங் கந்த வெற்பினைக்
காணுவான் வேண்டிக் கலங்கா நெஞ்சுடன்
ஏழா யிரமடி தாழா தேறி
மதூரி என்னுமா மலைச்சிக ரத்தின்மேல்

தாங்கருங் குளிரில் ஆங்கோர் இரவு
தயங்கிய என்னைத் தாங்கி அருளினை;
உச்சயினி இராமேசுரம் மெச்சு குஷ்ணேசுரம்
ஆதியாம் புண்ணிய சோதி லிங்கத்
தலங்களை முறையே வலம்வரு வித்தனை;
காசி மதுரா காஞ்சி மாயா
அவந்தி அயோத்தி ஆதிய புகழ்சேர்
உத்தம தலங்களாம் முத்தித் தலங்களை
முறையாய் ஏத்த நிறையருள் புரிந்தனை;
பவங்களைத் தீர்க்கும் அவந்திமா நகரில்
மாமை வளஞ்சால் ஆமைகள் நிறைந்த
சிப்பிர நதியின் அப்புறத் தோப்பில்
உம்பர் மகிழும் கும்பமே ளத்திற்காய்
ஒன்று திரண்டே பன்மொழி பேசும்
மூவா யிரத்துமேல் முனிபுங் கவரை
தரிசனஞ் செய்யும் பரிசினை வழங்கினை;
பாசம் நிலவுமென் நேசமில் நெஞ்சில்
நின்கழல் ஏத்தி இன்னிசைப் பாக்களாற்
கோவை பாடும் ஓகையைக் கொடுத்தனை;
என்னைகொல் அடியேன் இயற்றுபுண் ணியமே. 12

### நேரிசை வெண்பா

ஏனற் புனங்காத்தே எண்டிசையும் ஓம்புபுகழ்க்
கானக் குறவள்ளி காந்தனே—தேனார்
மயிலணிவாழ் வேலவா! மாதேவன் மைந்தா!
அயில்வேற் படையோய்! அருள். 13

### கட்டளைக் கலித்துறை

பற்பல கோடிமெய் அன்பர்கள் ஏத்து பதாம்புயமேல்
நற்கவிக் கோவை நலனுறப் பாடுவன் நானிலத்தில்
வெற்பினைத் தூள்பட வேல்விடு சுன்னையில் மேவிடுநல்
அற்புதக்கோல! எனையாண் டருளுவை அன்புடனே. 14

### ஆசிரியப்பா

அன்பே உருவாய் அறுகுணங் காட்டும்
மூவிரு முகங்களும் மேவி ஒன்றாய்க்

கந்தன் என்னுங் கவின்பெறு நாமம்
பயின்று விளங்கும் மயிலணி முருகனை
குன்றைக் கூறுசெய் குமரன் என்கோ?
இருதயக் குகைவாழ் ஈசன் என்கோ?
தாரகன் சிங்கன் மாரகன் என்கோ?
தத்துவ கூடமாம் சரவணம் என்கோ?
சித்தா காசமாம் சீரிய வெளியில்
பொற்புற ஓங்கும் பேரொளி என்கோ?
வள்ளிதெய் வானை மணாளன் என்கோ?
தேவர்கள் இடுக்கணைத் தீர்த்தவன் என்கோ?
வேதமயி லேறும் நாதன் என்கோ?
ஆசிலா அறுமுகத் தேசிகன் என்கோ?
அஞ்ஞானம் நீக்கும் மெய்ஞ்ஞா னனுக்கு
கண்களும் ஈராறே, கரங்களும் ஈராறே,
முகங்களும் ஆறே, மூலமந்திர முமாறே,
தலங்களும் ஆறே, தகுகுணங் களுமாறே,
அம்மகோ! அவன்தன் விம்மிதஞ் சேரும்
பெருமையை உரைக்க அருகன் ஆவனோ?
அவன்திறம் என்றும் அன்புடன் கூறியே
ஆசானாம் முருகன் தாசன் ஆவனே. 15

**நேரிசை வெண்பா**

முருகவேள் நல்லருளை முப்போதும் பெற்றே
அருவினையை ஓட்ட அருளாய்—அருவுருவாய்ச்
சொற்பொருளுக் கெட்டாத சோதியே சுன்னைவாழ்
அற்புதனே பாலித் தருள். 16

**கட்டளைக் கலித்துறை**

பாக்கிளர் செந்தமிழ்க் கோவையைப் பாடிப்பணியுமெனைக்
காக்குதல் உந்தன் கடனெனச் சற்றுங் கருதலையே
ஆக்குங் கடவுளுக் கோங்கார மந்திரம் அன்றுரைத்துத்
தேக்கும் படிசெய்த சேந்தநற் சுன்னையிற் றேசிகனே. 17

**ஆசிரியப்பா**

தேசிகம் பூத்த மாசிலா மக்கள்
கூரிய மதியாற் சீரிய முறையிற்

செந்தமிழ் நூல்பல செவ்வனே கற்றுச்
சந்ததம் ஆகமத் தடங்கடல் மூழ்கிச்
சித்தாந்த சைவ தத்துவம் ஆய்ந்து
அஞ்ஞானம் நீங்கி மெய்ஞ்ஞானம் பெற்றே
கள்ளம் இல்லா உள்ளக் கோயிலில்
நிறையருள் ஞானம் உறைபெருஞ் சோதியை
அன்பெனும் பாலால் இன்போ டாட்டி
சரவண பவனே! சண்முக நாதா!
கந்தா! கடம்பா! கார்த்தி கேயா!
என்னுனின் நாமம் பன்முறை சொல்லிப்
போற்றி நிற்கும் ஏற்ற முளோர்வாழ்
சுன்னைப் பதிமேவு மன்னு மயிலணிப்
புண்ணியப் பதியை நண்ணிடும் முருக!
அன்னையில் இனிய இன்னருள் மூர்த்தி!
என்னிலும் எனக்கு இனியவன் நீயே!
வேண்டிய அளிக்கும் ஆண்டலைக் கொடியோய்!
அன்பிலன் அடியேன் தென்பில னேனும்
உள்ளத் துன்கழல் விள்ளா அன்பனை
கருணை கொண்டு மருள்நீக்கி அருளே. 18



**நேரிசை வெண்பா**

அருளுண்டு நெஞ்சே! அலமருதல் வேண்டா
தெருளுண்டே உண்மை தெளிவாய்—மருளறவே
முன்னை வினைதீர்க்கும் முக்கண்ணன் மைந்தன்
அன்னைபோற் காப்பான் அறி. 19

**கட்டளைக் கலித்துறை**

அறிவரு ளாணைக் கயிற்றாற் பிணித்தெமை
ஆண்டருள்செய்
நெறிமயிர்ப் பூங்குழல் வள்ளிதெய் வானை
நிறைகணவன்
பொறிமயில் ஊர்ந்திடும் பொற்பார் முருகனைப்
போற்றுதற்கு
வெறிமலர்ச் சோலை மிளிர்சுன்னை நோக்கி
விரைகுமினே. 20

### ஆசிரியப்பா

விரைந்து வம்மின், விரைந்து வம்மின்,
வரைமகள் பெற்ற முருகனைப் போற்ற
நரைதிரை வருமுன் விரைந்து வம்மின்,
தத்துவ மயமாம் வித்தக உலகில்
அட்டதிக் கெங்கணும் அலைந்துலை யாது
சுன்னை மயிலணி சூழ்திருத் தளிக்கு
உள்ளத் தன்பொடு பொள்ளென வம்மின்,
தீபம் ஏற்றுமின், தூபம் இடுமின்,
வெற்றிலை பாக்குப் பொற்புறு முக்கனி
ஆதிய வைத்தே அர்ச்சனை செய்மின்,
ஐம்பு லன்களும் அறியஒண் ணாத
அருவமும் உருவமும் இல்லா ஒருவனை,
நிர்க்குண ரூபியாம் ஞானக் கொழுந்தினை,
அவ்வியம் அற்ற திவ்விய மனத்துடன்
ஆசையோ டென்றும் பூசனை செய்மின்,
மயில்மேல் ஏறும் அயில்வேற் குமரனைக்
குமர! குருபர! முருக! சரவண
பவ!வென அல்லும் பகலும் சொன்மின்,
தத்துவ முடிவில் தாண்டவம் ஆடும்
சிவசக் திகளின் சேர்க்கை வடிவமே
ஆறுமுகக் கடவுளென் றுறுதி கொண்மின்,
அகமுகம் நோக்கி ஆழ்ந்து தியானிப்போர்
புருவ மத்தியில் மருவிடுஞ் சோதியை
ஓயா தென்றுந் தியானஞ் செய்மின்,
தேக்குமா னந்தம் நீக்கமறப் பெறுமின்,
உள்ளத் தாமரை விள்ளவீற் றிருக்கும்
மாயா குணங்கள் தோயா முருகனை
மரணம் வருமுன் சரணம் புகுமின்,
விழிநீர் சிந்தக் கழிபேர் உவகையொடு
இறைவனை நாளும் இறைஞ்சி அழைமினே. 21

### நேரிசை வெண்பா

இருளிற் கிடக்குமென் ஏக்கந் தவிர்த்தே
தெருளை அளித்தினிது தேற்றாய்—முருகா!

மயிலணிவாழ் பெம்மானே! மால்மரு கோனே!
அயில்வேற் குகனே! அருள். 22

கட்டளைக் கலித்துறை

அஞ்ஞானத் தாலெழு மாணவ மிக்குன் அடிமலரை
விஞ்ஞானத் தாற்பெற வேண்டி முயல
விரைந்தனன்யான்
மெய்ஞ்ஞான சாகரம் மேவி மகிழ்வுற்று வீடுபெற
இஞ்ஞாலந் தன்னில் எமக்கருள் செய்க இறையவனே. 23

ஆசிரியப்பா

அண்டருக் கிடுக்கண் அகற்றுவான் வேண்டிச்
சிவமெனும் செம்பொருள் நவமாய்த் தோன்றி
ஐந்து முகத்தோ டதோமுகஞ் சேர்த்து
ஆறுமா முகத்தோ டவனியில் வந்து
கலியுக வரதனாய் நலிவுகள் தீர்த்தே
கந்தனெனு நாமம் கவின்பெறப் பூண்டு
நவரத்ன முடியும், நறைகமழ் நுதலும்,
பன்னிரு விழியும், பவள வாயும்,
இலகுதிண் செவியும், ஈராறு கரங்களும்
குறுமென் நகையும், முறுகிய நூலும்,
தாளும், சதங்கையும், தண்டையும், சிலம்பும்,
சேவலும், மயிலும், வேலும், பாம்பும்,
கானக் குறமகளும், வானகுஞ் சரியும்
தன்னிரு மருங்கும் மன்னிவீற் றிருக்க
ஞானமே உருவாய் மோனமே பொருளாய்
என்னகத் தேயொளிர் சுன்னையம் பதிசேர்
மயிலணிப் பதிவாழ் மாசிலா மணியே!
அருள்மதி எந்தாய்! தெருள்நனி செழிக்கவே. 24

நேரிசை வெண்பா

செல்வமுஞ் ஞானமுஞ் சீர்த்தியும் நல்வாழ்வுங்
கல்வியும் வாய்மையுங் கையளிக்குஞ் — சொல்லு
மனமொழிக் கெட்டா மயிலணிவாழ் சேயைத்
தினமும் பணிவாய் தெளிந்து. 25

### கட்டளைக் கலித்துறை

பதிபசு பாசத் தியற்கையும் புண்ணிய பாவமும்வெவ்
விதிவலி தன்னையும் வேண்டி அறிந்திலன் வீணிலியான்
சதிசெயு மாந்தரின் சங்கமும் சால்பெனச் சாதிக்குமென்
மதியினை என்னென்று கூறுவன் சுன்னையின்
மாமணியே. 26

### ஆசிரியப்பா

மாயை வயமாம் மாசுடை மனத்தொடு
மயிலணிப் பதிவாழ் அயில்வேற் குமரன்றன்
குஞ்சித பாதத்தை அஞ்சித் தொழுகிலேன்,
நெஞ்சுநெக் குருகி அஞ்சலி செய்கிலேன்,
தஞ்சம் புகுந்து சஞ்சிதம் நீக்கிலேன்,
பத்தி வலையிற் பட்டும் இருக்கிலேன்,
எத்திறத் தோர்க்கும் சித்தம் இரங்கிலேன்,
செற்றம் நீக்கிலேன், பற்றுகள் அறுக்கிலேன்,
பயந்து தீவினை நயந்து ஒருவிலேன்,
தபத்தைச் செய்கிலேன், செபத்தைப் பண்ணிலேன்,
உண்மை நூலுணர் திண்மை பெறுகிலேன்,
அமிழ்தினும் இனிய தமிழ்மறை ஓதிலேன்,
தத்துவ மசியின் தத்துவம் அறிகிலேன்,
வேதாந்த சித்தாந்த சமரசம் விளங்கிலேன்,
சிவோகம் பாவனை சிறிதும் பண்ணிலேன்,
சின்னாள் வாழ்வை உன்னா தலைவேன்,
இன்னன குணங்கள் துன்னும் அடியேன்
அன்புவழி நில்லா அறிவில னேனும்
புண்ணிய மார்க்கம் நண்ணிலே னேனும்
புறமெனைத் தள்ளல் சிறப்பன்று முருகா!
சேவற் கொடியோய்! சேவடி அருள்கவே. 27

### நேரிசை வெண்பா

சேவற் கொடியுவக்கும் செவ்வேளை நாடியே
ஆவலுடன் ஆலயத்தை அண்டினேன்—பாவப்
பிறப்பறுத் தாண்டருளிப் பேரின்ப வீட்டைச்
சிறப்போ டளிப்பான் தெளி. 28

## கட்டளைக் கலித்துறை

சிறக்கும் மயிலணிச் செவ்வேள் அடியிணை சித்தமதில்
மறக்கும் வகையின்றி மானிலத் தென்றும் வரந்தருவாய்
துறக்கம் புகினும் அதுதனை வேண்டுவன் தொல்லுலகில்
இறக்கும் பொழுதெனக் கின்னருள் பாலித்
திரங்குவையே. 29

## ஆசிரியப்பா

அண்டரைக் காக்கும் அறுமுகா! போற்றி,
கலியுக வரதா கந்தா! போற்றி,
குறத்தியை மணந்த குமரா! போற்றி,
சேவற் கொடியுடைச் செவ்வேள்! போற்றி,
ஈசற் கோதிய ஆசான்! போற்றி,
சிந்தனைக் கெட்டாச் சேயே! போற்றி,
புலமையிற் சிறந்த புலவா! போற்றி
தலந்தொறும் இருந்தருள் சிலம்பா! போற்றி,
விருப்பு வெறுப்பில் விசாகா! போற்றி,
திருமால் மருகா! முருகா! போற்றி,
வேளே! குறிஞ்சி வேந்தே! போற்றி,
சரவண பவனே! சண்முகா! போற்றி,
மயிலணிப் பதிவாழ் மன்னா! போற்றி,
போற்றி போற்றிநின் பொற்பதம் போற்றி,
போற்றி போற்றி போற்றி என்று
நித்தம் ஏத்திப் பத்திசெய் குவனே. 30

**மயிலணி முருகவேள் மும்மணிக் கோவை முற்றிற்று**

உ

# திருச்செந்தில் முருகன் சந்நிதிமுறை

## முருகைய பங்கஜாக்ஷி

### காப்பு

அறம்காக்கும் அன்பர்உறை அலையார்க்கும் திருச்செந்தில்
திறம்சேர்க்கும் முருகையன் பங்கயமாம் சேவடியை
உறல்வேண்டி உயர்வேலன் துதிமாலை சாற்றுதற்கு
செறல்நீக்கும் சிந்தூரன் திருவடியே காப்பாமே.

### கணபதி துதி

வீட்டின்ப வெள்ளத்தே விளையாட விரும்பி
வினையாவும் விலகிடவே விரைகமழும் மலர்சேர்
தேட்டமிகு கழலிணையே திடமாகக் கொள்ளத்
திகைப்புடனே மருளெல்லாம் சிதறிடவே செய்து
காட்டிடையிற் கனலெனவே கர்மவினை போக்கிக்
காலனவன் கைப்பிடியிற் கலக்கமுறா முக்தி
நாட்டின்பம் நாம்பெறவே நயந்துதரு மூர்த்தி
ஞானமவி ரானைமுகன் நற்றாள்நம் தலைக்கே.

வெண்கமலத் தமர்கின்ற வித்தகியாம் விமலை
விரிகடலிற் றுயில்மாலின் உந்திவரு வேதன்

ஒண்ணாவி லுறைகின்ற உத்தமியாந் தேவி
உண்மையிற்செம் பொருளுணர ஊட்டுவிக்கும் கல்விப்
பெண்மணியைப் போற்றிநிதம் பெறற்கருநற் கலையைப்
பெற்றின்பம் பெற்றிடவே பேரமுதாம் பாதம்
எண்ணிடவே தந்தருளும் எழிலரசி வாணி
இணையற்ற நற்பதமே இறைஞ்சியுளம் வைப்பாம்.

### சக்தி துதி

எல்லையிலா நற்கருணை இன்னமுத மூட்டி
இணையறுதன் திருவடியை எளிதுணரக் காட்டி
நல்லசவு பாக்கியமும் நற்குணமும் நல்கி
ஞானமெனும் வீடருளி நலிதருவெம் பாவ
அல்லலெலாம் நீங்கிடவே அஞ்சலென அன்போ
டாதரம்நல் கருளனையாம் ஆதிபரா சக்தி
வல்லமைசேர் வாரிசச்செம் மலர்ப்பதமே நாளும்
மனமென்னும் நற்றளியில் மகிழ்வுறவைத் திடுவாம்.

### சிவன் துதி

ஆற்றிடையிற் றுயில்வோனும் ஆரணனுங் காணா
அருணேசன் தன்னடியை அன்புடனே பாடிப்
போற்றிடுவோர் புன்பிறவி போக்கிடவே யருளும்
பொற்கொன்றை யரவணிந்து பொடிபூசும் பெம்மான்
கூற்றினையும் காமனையுங் குறுகவிடா தென்னுட்
குலவியிருந் தெனையளிப்பான் குளிர்தருபா மாலை
சாற்றும்எனைப் புரந்தருளும் சங்கரன்தா ளிணையில்
தாபமற நம்சென்னி தாழ்த்திவணங் குவமே.

### ரமணகுரு வணக்கம்

பந்தமெனுந் திரைநீக்கிப் பக்தியெனும் புனலில்
பரிவுடனே நீராட்டிப் பரமசுகம் நல்கக்
கந்தனவன் அன்புடனே காசினியில் தெய்வக்
கதியருளும் ஞானவொளிக் கதிரெனவே உள்ளச்

சிந்தனையும் மாய்ந்திடவே சித்தொளியைக் காட்டிச்
சிதைவில்லா நிலையருளத் திடஞான குருவாய்
வந்ததிரு ரமணமகா வள்ளலடி யிணையில்
வாழ்வுறநாம் துதிபாடி வந்தனைசெய் திடுவாம்.

## 1. வினைநீக்கப் பதிகம்

('கற்றாங் கெரியோம்பி' என்னும் தேவாரப் பண்)

பண்: குறிஞ்சி (சுருட்டி)

அந்திப் பிறைசூடும் அத்தன் தருபாலன்
வந்தித் திடுதேவர் வருத்தந் துடைவேலன்
செந்தில் வளர்தேவன் செவ்வேள் திருப்பாதம்
சிந்தித் திருப்போரைச் சேரா வினைதாமே. 1

கரிமா முகநாதன் துணைவன் கதிர்காமன்
அரிமா முகசூரன் அழியச் செறுவேலன்
விரிமா மலர்ப்பாதம் வேண்டித் தொழுதேத்திப்
புரிமா தவர்தம்மைப் புணரா வினைதாமே. 2

ஊனா யுயிராகி உள்ளத் துணர்வாகி
யானா யவனாகி யாண்டும் நிறைவாகித்
தேனா ரமுதான தேவன் திருப்பாதம்
கோனா யடைவாரைக் கூடா வினைதாமே. 3

மதியார் புரமூன்றும் வனியா லெரிசெய்த
பதியார் மனந்தேற்றும் பழனிப் பெருமானை
கதியாம் எனநாடிக் கமலப் பதம்போற்றிப்
பதியாய் அடைவாரைப் பற்றா வினைதாமே. 4

இமயப் பிடியீன்ற எழில்சேர் குமரேசன்
திமிரத் திரளாகும் அவுணர் திறல்மாய்த்தே
இமையோ ரிடர்தீர்த்த எந்தை திருப்பாதம்
தமரா யடைந்தோரைச் சாரா வினைதாமே. 5

புள்ளி மயில்வீரன் புனிதச் சுடர்வேலன்
வள்ளிக் கொடிநாதன் வரமீந் தருள்தெய்வம்
வெள்ளத் தருளீயும் வேந்தன் கழல்நாடித்
தெள்ளத் தெளிந்தோரைச் சேரா வினைதாமே. 6

பித்தன் எனப்பாடும் பெரியோன் பெருநம்பிக்
கத்தன் களிகூர அருளுங் குருநாதன்
நித்தம் நமைக்காக்கும் நேயன் அடிபேணும்
அத்தன் அடியாரை அணுகா வினைதாமே. 7

பார்க்கும் இடமெங்கும் பலவா மெழிலாக
ஈர்க்கும் ஒளியாகி என்னுள் உயிராகிக்
காக்கும் கடவுள்நம் கந்தப் பெருமானை
நோக்கும் அடியாரை நோக்கா வினைதாமே. 8

மலைமா மகள்பாகன் மடிசேர் மயிலீசன்
அலைமா மகள்மார்பன் அரிமால் மருகேசன்
கலைமா மகள்காந்தன் கருதும் திருப்பாதம்
நிலையாய்க் கொள்வாரை நேரா வினைதாமே. 9

சரணாம் புயம்போற்றிச் சாரும் அடியாரை
அரணாய்த் தினம்காக்கும் அழகன் வடிவேலன்
முரணாம் சனனத்தை முடிக்கும் திருப்பாதம்
சரணாய் அடைந்தாரைச் சாரா வினைதாமே. 10

## 2. தொழுத பத்து

('வானமர் திங்களும்' என்னும் தேவாரப் பண்)

பண்: கேதாரம் (நவரோசு)

விண்ணமர் மாமதி யோடு
விசையுறு கங்கையும் சூடும்
அண்ண லருள்கும ரேசன்
அன்பர்க் கருளும் விசாகன்
பண்ணொடு மின்கவி பாடிப்
பணிபவர் பாவ மகற்றும்
தண்ணமர் செந்திலெம் பெம்மான்
தாள்தொழ வீடெளி தாமே. 1

விரைசெறி கொன்றை யிலங்க
விடையுகந் தேறிய ஈசன்
பரையொடு பாகத் தமர்ந்தோன்
பரிவோ டருளும் விசாகன்

புரைபடு கன்மங்கள் போக்கப்
    புரிதவ மாதவ ரேத்தும்
தரைபுகழ் செந்திலெம் பெம்மான்
    தாள்தொழ வீடெளி தாமே. 2

கருநிற வண்ணமு ளானும்
    கமலனும் காணவொண் ணாத
கருநிறக் கண்டத் திறைவன்
    களிக்க வருள்செய் விசாகன்
மருநிறை நீபமார் மார்பன்
    மருளுரு மாயையை மாய்க்கும்
தருநிறை செந்திலெம் பெம்மான்
    தாள்தொழ வீடெளி தாமே. 3

வந்தியின் பிட்டுண வேண்டி
    மண்முடி யேற்ற பிரானும்
கந்திக் களத்துமை யாளும்
    கனிவோ டருளும் விசாகன்
தந்திய ணங்கொடு வள்ளி
    தகைதரு காட்சிதந் தாளும்
சந்ததம் செந்திலெம் பெம்மான்
    தாள்தொழ வீடெளி தாமே. 4

மலையெடு ராவணன் வன்றோள்
    வலிகெட வூன்றிய கோமான்
கலையெழு பாடற் கருளும்
    கடவு ளருளும் விசாகன்
நிலைபெறு சிற்சுகம் வேண்டி
    நித்தமும் போற்றிடு வோர்தம்
தலைவனாம் செந்திலெம் பெம்மான்
    தாள்தொழ வீடெளி தாமே. 5

கண்ணுதற் றீயினிற் காமன்
    காந்திட வேவெகுள் பெம்மான்
பெண்ணொரு கூறுடை ஈசன்
    பேணி யருளும் விசாகன்
அண்ணலெம் மரசனே யென்றென்
    றடிபணி அன்பருக் கன்பன்

தண்ணளிச் செந்திலெம் பெம்மான்
தாள்தொழ வீடெளி தாமே. 6

அரவொடு திங்களு லாவும்
அவிர்சடை மேற்புனல் வைத்து
மரைகொள் கரத்தெம் பெருமான்
மகிழ்வோ டருளும் விசாகன்
கரையில் கருணைக் கடலோன்
கடம்பமர் மாலைசேர் மார்பன்
தரைபுகழ் செந்திலெம் பெம்மான்
தாள்தொழ வீடெளி தாமே. 7

பேயுட னேபுறங் காட்டில்
பெருநடம் செய்திடும் கூத்தன்
பாயும் புலியதள் பூண்டோன்
பரிவோ டருளும் விசாகன்
தீய மயற்பிறப் போயத்
திடமுறு ஞானம ளிக்கும்
தாய்நிகர் செந்திலெம் பெம்மான்
தாள்தொழ வீடெளி தாமே. 8

கார்நிறக் காலனை வீழக்
கால்கொடு மாய்த்த விடையோன்
ஏர்நிறை மாதொரு பாகன்
இனிதோ டருளும் விசாகன்
சீர்பெறு குன்றுதோ றாடும்
சிறப்புறு வேலொடு நீபத்
தார்புனை செந்திலெம் பெம்மான்
தாள்தொழ வீடெளி தாமே. 9

தனஞ்சய னோடமர் செய்தே
தகைமிகு பாசு பதத்தை
மனமுவந் தருள்செய் பெருமான்
மகிழ்வோ டருளும் விசாகன்
எனதுள மின்புற எனையே
ஏன்றரு ளின்னுயிர்க் கேள்வன்
தனமிகு செந்திலெம் பெம்மான்
தாள்தொழ வீடெளி தாமே. 10 + 10 = 20

## 3. வினையறு பதிகம்

('பித்தா பிறைசூடீ' என்னும் தேவாரப் பண்)

**பண்:** இந்தளம் (நாதநாமக்கிரியை)

வேலைக்கெழு விடமுண்டருள் விகிர்தன்தரு மேலோன்
வேலைக்கரம் கொண்டேவினை வீட்டும்விரைக்
கழலோன்
சோலைத்திகழ் பரங்குன்றினில் சுடர்பன்னிரு விழியான்
நீலப்பரி அமர்வோனடி நினைவார்வினை யறுமே. 1

வினைதீர்விழி சுடரும்சிவ பெருமானருள் வேலன்
அனையேயென விழைவாருளம் அமரும்சுட ரயிலோன்
கனைமாகடற் கரைமேற்றிகழ் செந்தில்வளர் கந்தன்
புனைசேவடிப் புகழேதுதி புரிவார்வினை யறுமே. 2

திருந்தார்புர மூன்றும்எரி செய்தோனருள் சேயோன்
வருந்தாமலுய் வழியேயருள் மயிலோன்அடி பரவித்
திருவுந்தொழும் திருவாவினன் குடியில்வளர் தெய்வம்
முருகன்கழல் பணிவோர்களின் முந்தைவினை
யறுமே.3

விடையேயுகந் தேறுங்கனல் விழியோனருள் வேலோன்
கடையாவன அணுகாவணம் காக்கும்மலை கிழவோன்
நடையேபயில் மயிலூர்ந்திடு ஞானக்குரு மலையோன்
அடியேசர ணெனவேநித மடைவார்வினை யறுமே.4

கண்ணாற்சிலை மதனைச்சுடு கடவுள்தரு கந்தன்
பண்ணோடிசை புகலும்உளம் பரிவோடமர் பரமன்
விண்ணோர்புகழ் தணிகாசலம் மேவும்வடி வேலன்
தண்ணார்பதம் புகலாய்மனம் சார்வார்வினை
யறுமே. 5

தலையாற்பலி தாங்கும்சிவ பெருமானருள் தனயன்
கலையாவுளம் களமாக்கொளும் கந்தன்கதிர் வேலன்
மலையார்புனல் வீழும்பழ முதிர்சோலையில் வளரும்
நிலைவீடருள் நிமலன்பதம் நினைவார்வினை யறுமே.6

வானின்மதி வனையும்சடைச் சிவனாரருள் மைந்தன்
மானின்விழி நிகர்மாதுமை மகிழ்வோடணை பாலன்

தேனின்றுதிர் கனிசேர்திருப் போரூரினிற் றிகழும்
கோனின்கழல் குறுகித்தொழக் கொடும்பாழ்வினை
யறுமே. 7

வட்டங்குறை மதிசூடிய விடையோனருள் வள்ளல்
கொட்டங்கொளும் வினைமாய்த்திடு குமரன்கழல் பேணி
எட்டுத்திசை ஏத்தித்தொழும் எட்டிக்குடி வளரும்
சிட்டன்பதம் சிந்தையுறச் சேர்ப்பார்வினை யறுமே. 8

மின்னுஞ்சடைக் கொன்றைமதி வேய்வோனருள் விமலன்
தன்னைப்புகல் அடைவாருளத் தவிசேயமர் தலைவன்
அன்னம்துயில் அமர்வாவியின் அழகார்வய லூரன்
பொன்னின்பதம் கதியாய்ச்சரண் புகுவார்வினை
யறுமே. 9

மலைமாதினைப் பாகங்கொளும் இறையோனருள்
மைந்தன்
சிலையார்மனம் கனிவித்திடு சிவசண்முக நாதன்
கலைவான்மதி தவழும்பொழில் கதிர்காமனின் கழலை
நிலையேதரு நிமலாவென நினைவார்வினை யறுமே.

20 + 10 = 30

## 4. குயிற் பத்து

('பணிந்தவ ரருவினை' என்னும் தேவாரப் பண்)

**பண்:** வியாழக்குறிஞ்சி (சௌராஷ்டிரம்)

அமரர்க ளுய்ந்திட ஆலமு தருந்திடும்
இமயநன் மகள்பதி இறையவன் ஈன்றருள்
சமரநற் புரிவளர் சண்முக வேலனைக்
குமரனை வாவெனக் கூவாய் குயிலே. 1

பாயுறு கங்கையைப் படர்சடை வைத்தவன்
வேயுறு தோளுமை வேந்தனன் றீன்றருள்
சேயெனத் திகழ்தரு செல்வனென் குமரனைக்
கோயிலென் னகம்புகக் கூவாய் குயிலே. 2

பாணியி லேபலி கொள்ளுநம் பரசிவன்
வேணியில் வெண்மதி விழைபவன் ஈன்றருள்

நாணிட வினைகளை நலித்திடு குமரனைப்
பேணியென் பால்வரப் பேசாய் குயிலே. 3

திருந்திடல் இலரவர் திரிபுரந் தீயினில்
வருந்திடச் சிரித்திடு வல்லவர் ஈன்றருள்
அருந்திடச் சுவைதரும் அருட்கனிக் கந்தனைப்
பொருந்திடத் துதித்துநீ போற்றாய் குயிலே. 4

கண்ணுத லுடையநங் கடவுளவ் வானுறு
தண்மதி சூடிடு தலைவனன் றீன்றருள்
விண்மணி யாகிய வேலவன் புகழினைப்
பண்ணிசை யோடுநீ பாடாய் குயிலே. 5

ஐங்கணை வேளுரு அழிய விழித்திடும்
சங்கரன் மகிழ்வுறச் சாம்பவி ஈன்றருள்
ஐங்கரன் சோதர ஆறு முகன்றனைப்
பங்கயப் பதந்தரப் பகர்வாய் குயிலே. 6

படைமழு மானனல் ஏந்திடு பான்மையன்
விடையுகந் தேறிடு விமலனன் றீன்றருள்
நடைபயில் மயில்மிசை நடமிடு நாதனைக்
கொடையருள் செய்திடக் கூவாய் குயிலே. 7

மாலவன் நான்முகன் மத்தியி லழல்மிகு
சீலவு ருக்கொளும் சிவனவன் ஈன்றருள்
பாலகன் வேற்கரன் பழனியிற் பிரான்தனைக்
கோலனே வாவெனக் கூவாய் குயிலே. 8

விலங்க லெடுத்தவன் விறல தழிந்திடக்
கலங்க அடர்த்தவற் கருள்இறை ஈன்றருள்
துலங்கநற் பொறிகொள்செஞ் சேவலந் துவசனை
அலங்கல்கொள் மார்பனை அழையாய் குயிலே. 9

கால்கொடு காலனைக் காய்ந்திடு கடவுளந்
நாலெனு மறைதுதி நம்பனன் றீன்றருள்
வேல்கொளும் இறையவன் எனக்கருள் வேந்தனை
மால்மரு காவென வாழ்த்தாய் குயிலே. 30 + 10 = 40

## 5. நினைந்து நின்ற பத்து

('முத்தினை மணியை' என்னும் தேவாரப் பண்)

பண்: திருநேரிசை (நவரோசு)

இமையவ ரேத்துந் தேவை
இணையிலாத் தனது பாதம்
எமதுளம் மேவ வைத்த
இறைவனை எங்கள் கோவை
இமவரை மாதின் மைந்தன்
எளியவர்க் குறவாய் நின்ற
நிமலனை நினைந்த நெஞ்சம்
நிலையதாய் நின்ற வாறே. 1

மதியினைப் புனையும் பெம்மான்
மகிழ்வுறுந் தேனை ஞானக்
கதியினைக் கூட்டும் பாதம்
காட்டியே என்னுள் நின்ற
பதியினைப் பக்த ருள்ளம்
பரிவுற நிறைந்த இன்ப
நிதியினை நினைந்த நெஞ்சம்
நிலையதாய் நின்ற வாறே. 2

மாதினைப் பாகம் வைத்தோன்
மடிதவழ் குகனை நீபப்
போதினை மார்பில் வைத்த
புலவனை அரனார்க் குற்ற
போதனை என்றும் நீங்கா
தென்னுளம் நிறைந்த ஞான
நீதனை நினைந்த நெஞ்சம்
நிலையதாய் நின்ற வாறே. 3

கருப்பினை வில்லாய்க் கொண்டோன்
காய்ந்திட விழித்தோன் மேருப்
பொருப்பினை வில்லாய்க் கொண்டோன்
புகழ்ந்திடு சுதனை என்னில்
விருப்பினை வைத்தே ஆண்ட
விமலனை வினையை மாய்க்கும்

நெருப்பினை நினைந்த நெஞ்சம்
நிலையதாய் நின்ற வாறே. 4

மாயனை விடையா யூர்ந்த
மன்னனும் உமையும் பெற்ற
சேயனை மயிலோன் தன்னைச்
சிறப்புற ஆண்ட என்றன்
தாயனை வானோர் போற்றும்
தலைவனை அன்பர் நெஞ்சின்
நேயனை நினைந்த நெஞ்சம்
நிலையதாய் நின்ற வாறே. 5

கருத்தனைக் கனகக் குன்றைக்
கந்தனை வானோர் துன்பம்
திருத்தனைச் செந்தில் மேவும்
திகழொளி வேல்கொள் ஞான
விருத்தனைக் குமரன் தன்னை
வினையெலாம் நீக்கி என்னுள்
நிருத்தனை நினைந்த நெஞ்சம்
நிலையதாய் நின்ற வாறே. 6

அத்தியை யுரித்துப் போர்த்தே
அரவினை அணியா யார்த்த
அத்தனைத் தேவர் வேண்ட
அளித்திடுங் கனியை ஞானச்
சத்தினை அறியா என்னைத்
தயையுடன் தடுத்தாட் கொண்ட
நித்தனை நினைந்த நெஞ்சம்
நிலையதாய் நின்ற வாறே. 7

ஈசனே எந்தாய் என்றென்
றிறைஞ்சியே மலர்கள் தூவிப்
பூசனை புரியு மன்பர்
புகலிட மாகி இந்த
நீசனை ஆண்டு கொண்ட
நிமலனை மங்கை வள்ளி
நேசனை நினைந்த நெஞ்சம்
நிலையதாய் நின்ற வாறே. 8

நறையினை யுற்ற நீபன்
நாவலன் கீரன் வன்கற்
சிறையினை மீட்ட தீரன்
சிறைமயி லேறும் வீரன்
குறையினை நீக்கி என்னைக்
குளிர்பதத் தேன்ற இன்ப
நிறையினை நினைந்த நெஞ்சம்
நிலையதாய் நின்ற வாறே. 9

ஆதியை அமரர் கோவை
அரியயன் தேடிக் காணாச்
சோதியாச் சுடரும் செம்பொற்
சுந்தர மேனி தன்னில்
பாதியை மாதுக் கீந்தோன்
பாலனைக் குமர நாம
நீதியை நினைந்த நெஞ்சம்
நிலையதாய் நின்ற வாறே. 40 + 10 = 50



## 6. பணிந்த பத்து

('திரைதரு பவளமும்' என்னும் தேவாரப் பண்)
பண்: கொல்லி (நவரோசு)

அலைதரு முத்தமும் அழகொளிர் சங்கமும்
மலைவுற நிறைத்திடும் மல்லலைக் கடற்கரைக்
கலைபெறு தளியமர் கடவுளெம் கந்தனின்
நிலைதரு கழலிணை நித்தமும் பணிமினே. 1

தீமலர் சிதறிடும் திருநுதற் கண்ணனின்
தேமலர்ப் புயத்தினிற் றிளைத்திடும் சேயினை
நாமலர் பொழிந்திடு நாவலர் நம்பனைக்
காமலர்த் தோளனாம் கந்தனைப் பணிமினே. 2

மலைபடும் அருவியில் வளிதரு சுகமதில்
கலைமிகு மதியினில் கதிரவ னொளியினில்
நிலைபெறும் அழகினை நிறைத்திடு கந்தனெம்
தலைவனைச் சரணெனச் சார்ந்தடி பணிமினே. 3

பாவிரி மலர்புனை பாவலர் புகழ்ந்திடும்
காவிரி வளர்கரைக் கனகநேர் சாலியும்

பூவிரி வாவியும் பொலிந்திடும் ஏரகன்
தூவிரி மலர்ப்பதம் துணையெனப் பணிமினே. 4

குலைவிடு தாலமும் குன்றன புளினமும்
விலைபடு பணிலமும் விளங்கிடும் கடற்கரைக்
கலைபடு தளியமர் கந்தனெம் பத்தியாம்
வலைபடு தலைவனின் மலரடி பணிமினே. 5

நாடிடும் தென்றலும் நன்மலர் வாசமும்
கூடிடும் பழமுதிர் சோலையிற் குலவிடும்
ஆடிடும் மணிமயில் அமருமென் கந்தனைப்
பாடிடும் பணியதே பணியெனப் பணிமினே. 6

எரிமிகு காட்டிடை எழிலுற நடமிடும்
கரியதள் துகில்கொளுங் கடவுள்கண் மணியினை
அரிமகிழ் மருகனை அயிலுடை யரசனைப்
பரிமயில் அமர்ந்திடும் பதியினைப் பணிமினே. 7

மலையசை அரக்கனின் வலிவற அடர்த்திடும்
மலைசிலை தொடுத்திடும் வல்லவன் பாலனைக்
கலைமலி மூவிரு முகமொளிர் கந்தனை
நிலைபெறு நிதியருள் நிமலனைப் பணிமினே. 8

ஓரிரு நதியிடைத் துயில்கொளும் ஒருவனும்
ஈரிரு முகத்தனும் ஏத்தியும் காண்கிலா
மூவிரு பதமுரன் முடியனின் மைந்தனை
நாவிரி மலரதால் நம்பனைப் பணிமினே. 9

ஆறுசேர் சடையனும் அணைத்துமுத் தாடிடும்
நாறுசேர் கடம்பணி நாதனை நலந்திகழ்
வீறுசேர் சேவலந் துவசனை விமலனைக்
கூறுசேர் வடியயிற் குமரனைப் பணிமினே.

50 + 10 = 60

## 7. நற்றுணைப் பதிகம்

('மந்திர மாவது நீறு' என்னும் தேவாரப் பண்)

பண்: காந்தாரம் (நவரோசு)

விண்ணவ ரேத்திடும் பாதம்
வேதனும் வேண்டிடும் பாதம்

மண்ணவ ரும்மகிழ் பாதம்
　　மாமயில் வேலனின் பாதம்
பண்ணவ ரும்பணி பாதம்
　　பாமலர் சூடிடும் பாதம்
நண்ண வருள்தரு பாதம்
　　நற்றவர் நற்றுணை யாமே. 1

முல்லை மணங்கமழ் பாதம்
　　மூவுல குந்தொழும் பாதம்
கல்லைக் கனிவிக்கும் பாதம்
　　கனிவோ டருளிடும் பாதம்
எல்லை மிகுதயைப் பாதம்
　　எங்கள் குமரனின் பாதம்
தொல்லை விலக்கிடும் பாதம்
　　தூயவர் நற்றுணை யாமே. 2

குராவணி யுந்திருப் பாதம்
　　குமர குருபரன் பாதம்
நிராமய நின்மலன் பாதம்
　　நீடுயர் வேலனின் பாதம்
சுராமலர் சூடிடும் பாதம்
　　சுத்த மனத்தொளிர் பாதம்
பராபரை பாலகன் பாதம்
　　பக்தரின் நற்றுணை யாமே. 3

நெஞ்சம் நிறைந்திடும் பாதம்
　　நினைக்க இனித்திடும் பாதம்
கொஞ்சும் சிலம்பணி பாதம்
　　குவலயம் போற்றிடும் பாதம்
வஞ்சம் துடைத்திடும் பாதம்
　　வாழ்வரு ளுந்திருப் பாதம்
மிஞ்சும் மயல்செறு பாதம்
　　மேலவர் நற்றுணை யாமே. 4

கங்குல் களைந்திடும் பாதம்
　　கன்னியர் கேள்வனின் பாதம்
எங்கும் நிறைந்திடும் பாதம்
　　என்னுள் ஒளிர்திருப் பாதம்

சிங்கன் குலஞ்செறு பாதம்
சீர்தரு செம்மலின் பாதம்
பொங்கும் கருணைசெய் பாதம்
புனிதரின் நற்றுணை யாமே. 5

நீல மயிலமர் பாதம்
நேர்மை நிறைந்திடு பாதம்
கோல வயிலவன் பாதம்
குறியா யெனைக்கொளும் பாதம்
சீல மிகுதிருப் பாதம்
சிந்திக்கச் சீரருள் பாதம்
பால முருகனின் பாதம்
பற்றற நற்றுணை யாமே. 6

கங்கை சுதன்திருப் பாதம்
கதிதரு கந்தனின் பாதம்
மங்கை உமைமகன் பாதம்
மாதவர் வாழ்த்திடும் பாதம்
சங்கை யறுத்திடும் பாதம்
சார்ந்திடத் தக்கதோர் பாதம்
செங்கை அயிலவன் பாதம்
செல்வழிக் கோர்துணை யாமே. 7

பாச மறுத்திடும் பாதம்
பரவ இனித்திடும் பாதம்
நேச மிகுத்திடும் பாதம்
நீப மணிந்தவன் பாதம்
மாசறு மாமலர்ப் பாதம்
மாணிக்க வேலனின் பாதம்
தேசொளிர் தேசிகன் பாதம்
தீதற நற்றுணை யாமே. 8

மலைதொறும் நின்றிடும் பாதம்
வான்மகள் நாதனின் பாதம்
அலைகடற் செந்திலோன் பாதம்
அடிமையென் சென்னிசேர் பாதம்
கலைமிகுங் கந்தனின் பாதம்
கவிஞனைக் காத்திடும் பாதம்

நிலைபதங் காட்டிடும் பாதம்
    நினைத்திட நற்றுணை யாமே. 9

என்னை யெடுத்தருள் பாதம்
    எழில்மிகும் ஏந்தலின் பாதம்
தன்னைக் கொடுத்தருள் பாதம்
    சரவண நாதனின் பாதம்
பொன்னை நிகரொளிப் பாதம்
    புகழ்வீ டளித்திடும் பாதம்
அன்னை யெனவரும் பாதம்
    அன்பரின் நற்றுணை யாமே. 60 + 10 = 70

## 8. கதி விழை பத்து

('முதுவாயோரி' என்னும் தேவாரப் பண்)

**பண்:** கொல்லிக்கௌவாணம் (நவரோசு)

குருவாய் வருவாய் இதுவே தருணம்
    குகனே முருகா இனிநீயே
இருளும் பவமும் மருளும் தவிர்த்தே
    எனதுள் ஒளிர வருவாயே
தருவாய் எனக்குன் பதத்தா மரைக்கீழ்ச்
    சரணா ரமிர்தம் பருகிடவே
கருணா நிதியே கடையேன் களிக்கக்
    கந்தா அருள்வாய் கதிநீயே. 1

தலைவா சரணம் தமியேன் தனது
    சகப்பித் தொழிக்க நினையாயோ
மலைமா மகள்தன் மடிமீ தமர்ந்து
    மழலை மொழிந்த சிவபாலா
கலைமா மணியே கடைநா யடியேன்
    கவலை கடியும் கதிர்வேலா
நிலையா னசுகம் நேர்நா யகமே
    நிமலா அருள்வாய் கதிநீயே. 2

உள்ளம் நெகிழ்ந்து கண்ணீர் பெருகி
    உரையும் குழறி உனைப்போற்றும்

கள்ளம் ஒழிநெஞ் சுடையார் களிக்கக்
கழலே அருளுங் கதிரேசா
எள்ளி யொதுக்கி எளியேன் றனைநீ
இகழ்ந்தால் இனியார் தமையடைவேன்
புள்ளி மயில்மேற் புவியை வலங்கொள்
புனிதா அருள்வாய் கதிநீயே. 3

திருமால் மனமும் மால்கொள் ளழகா
சிவனார் செவியில் உபதேசா
குருமா மணியே குற்றம் குறியாக்
குணமா நிதியே குமரேசா
பருமா மயில்நீள் தோகை விரித்துப்
பரிவாய் நடிக்க அதன்மீதே
வருவாய் வடிவேல் வலக்கை யணைத்தே
வரதா அருள்வாய் கதிநீயே. 4

அலையாம் கரத்தால் வாவென் றழைக்கும்
அழகார் திருச்செந் திலில்வாசா
மலையான் குலத்து மங்கை கொழுநன்
மகிழ்ந்தே யணைக்கும் சிறுபாலா
கலைவா ணரின்கற் பகமே எளியேன்
கருத்திற் புணருங் கடம்பாஆல்
இலைமேற் றுயிற்கொண் மாயோன் மருகா
இனிதே அருள்வாய் கதிநீயே. 5

கஞ்சன் தனையும் கடிந்தே சிறைசெய்
கந்தா மலர்சேர் கழல்தாராய்
செஞ்சொற் கூறிச் சிவையாள் மடியில்
சிறக்கும் ஞானப் பைங்கிளியே
வஞ்சங் கொளுஞ்சூ ருடலம் பிளக்க
வடிவே லெடுத்த மயில்வீரா
தஞ்சம் எனவே அடைந்தேன் எனக்குன்
தாளே அருள்வாய் கதிநீயே. 6

மாலும் அயனும் காணற் கரிய
மலையான் மருங்கே மகிழ்பாலா
வேலும் மயிலும் சேவற் கொடியும்
விரைசேர் கடம்பும் விளங்கிடவே

காலிற் புனைந்த சிலம்பின் மணிகள்
கல்லென் றொலிக்க வரவேண்டும்
சீலம் மிகுந்த செந்தில் வளரும்
செல்வா அருள்வாய் கதிநீயே. 7

ஏது மறியா இளமை தனிலே
எனையாட் கொண்ட குருநாதா
தீது நிறைந்த மாய உலகில்
திகைத்தே வினையில் உழன்றேனைச்
சோதித் தெனையும் வேதித் தரும்பொற்
சுடரா யொளிரச் செய்தோனே
நாத எனதுள் மாறா தொளிரும்
நலனே அருள்வாய் கதிநீயே. 8

மருவார் குழலார் மாத ரொடுநீ
வடிவேல் எடுத்து மயில்மீதே
வருவாய் அடியேன் பெருவாழ் வுறவே
வனச மலர்த்தாள் தருவாயே
திருவே ரகத்தில் குருவா யமர்ந்த
சிவமெய்ஞ் ஞானக் கதிரோனே
அருணை முனிக்கன் றருளே பொழிந்த
அழகா அருள்வாய் கதிநீயே. 9

அடியார் தமதுள் அகலா திருந்தே
அரசாள் கின்ற அழகோனே
கொடிசேர் இடைமா துமையாள் கொஞ்சிக்
குலவும் மதிமா முகத்தோனே
கடிமா மலர்கள் கமழும் பதத்தைக்
களிக்க எனக்கிங் கருள்வோனே
படிமீ தெளியேன் தொடுபா மலர்கள்
பரிவாய் அணிவாய் கதிநீயே. 70 + 10 = 80

## 9. திருவருள் பத்து

('கூற்றாயினவாறு' என்னும் தேவாரப் பண்)

**பண்:** கொல்லி (நவரோசு)

அடியே னுனதன் படியே புகலாய்
அடைந்தே னெனநீ அறிவா யெனினும்

மிடிதீர்ந் துயவெவ் வினையேற் கனையாய்
விரையா யெனில்நீ துணைவே றுளதோ
கடியார் மலரே முடிமீ தணிவோன்
களிக்க வருவாய் கடையேன் மகிழ
வடிவே லுடனே வருவாய் இனியான்
வருந்தா வகையே அருள்வாய் முருகா. 1

தாயா கியநீ தயைசெய் கிலையேல்
தமியேற் கருள்வார் சகமீ துளரோ
சேயா கியவென் செயிர்தீர்த் தருளாய்
திகழ்சே வலகா வலசண் முகனே
காயா கியவென் கடுநெஞ் சளியக்
கருணை செயல்உன் கடனே கடனே
பேயா யலையப் பெறுதல் முறையோ
பேரா தரவீந் தருள்வாய் முருகா. 2

ஓடித் திசைகெட் டுழலும் மனதை
ஒடுக்கி அருள்வன் கயிற்றால் பிணித்து
வீடின் பமதைப் பெறவே அருளாய்
விறல்வே டர்குல மகள்தன் கணவா
பாடி அடைவார் பவநோ யறவே
பரம சுகநன் னிலைதந் தருள்வோய்
தேடி உனையே சரணா யடைந்தேன்
தேறும் படிநீ அருள்வாய் முருகா. 3

காரார் பிறவிக் கடலைக் கடிதே
கடக்க உனடிப் புணைநீ தருவாய்
நீரா யுருக்கும் நினைவின் துயரம்
நிலையா தருளாய் நெடுவே லவனே
ஓரா றுசடைப் புனைவோ னுணர
ஓங்கா ரமதை உரைசற் குருவே
ஆரா வமுதன் களிக்கும் மருகா
ஆதா ரமளித் தருள்வாய் முருகா. 4

எந்தா யுமெனக் கருள்தெய் வமுமாய்
எளியேன் தனையேன் றருள்மா மணியே
கந்தா வெனவே கருதும் அடியார்
கவலை கடியும் கதிர்வே லவனே

பந்தா டவிதீர்ந் திடவே வருவாய்
பரிபூ ரணஞா னசுகந் தருவாய்
சந்தா பமுடைத் தமியே னுயவே
தயவே புரிவாய் அருள்வாய் முருகா. 5

எண்ணி லடங்காப் பிறவி யெடுத்தே
எளியே னலுத்தா லுமுன தடியே
எண்ணி உருக வரமீந் தருள்வாய்
இறைவா உனக்கே எனையாட் படுத்தாய்
கண்ணீர் பெருகக் கதறும் எனையே
கருதி நினதன் பினில்சேர்த் திடின்பின்
விண்ணின் அமுதும் புவிவாழ் சுகமும்
விரும்பேன் கதிநீ அருள்வாய் முருகா. 6

நின்னை யலதொன் றிதுநாள் வரையும்
நினையே னொருவர் புகலா யறியேன்
அன்னை யலதோர் துணைசேய்க் குளதோ
அணைத்தாள் வதற்கோர் தடைவே றுளதோ
தன்னை யறிந்தோர் உளக்கோ யிலினில்
தானா யொளிரும் உயிரோ வியமே
உன்னை யெனதுள் உணராச் சிறியேன்
உணரும் படிநீ அருள்வாய் முருகா. 7

விண்ணா டவர்க்கோர் தலைவா துணைவா
விரைசேர் மலர்த்தாள் பணியத் தருவாய்
மண்ணா டவர்தம் கதியே மதியே
மறவார்க் குனையே தருநற் பதியே
எண்ணா எளியேன் தனைநின் னெழிலால்
இணையும் படிசெய் திடுநா யகனே
பண்ணார் சுவையே பணிவோ ரிறையே
பரிபூர் ணசுகம் அருள்வாய் முருகா. 8

புள்ளி மயில்மீ தமர்புண் ணியனே
புகழ்வீ டதனைத் தருசே வலனே
துள்ளும் சுடர்வேல் புனையும் கரனே
துரியோ ரிதயம் மகிழும் பரனே
தெள்ளுந் தமிழ்மா லையணி புயனே
திமிரத் தடைசேர் சிறியேன் தனைநீ

எள்ளி யொதுக்கி இகழ்தல் முறையோ
எனையேன் றருள்வாய் இறைவா முருகா. 9

வேலும் மயிலும் விரைசேர் கடம்பின்
விரிதார்ப் புயமும் வியன்கிண் கிணிசூழ்
காலும் நினைவார் கவலை யொழிந்தே
கருவே யணுகாக் கதிசேர் குவரே
மாலும் வியந்து மயல்கொள் ளழகா
மறையோர் இறைவன் மடிசேர் குழகா
நாலும் இரண்டா கியமா முகவா
நாயேன் தனையாண் டருள்வாய் முருகா.
80 + 10 = 90

## 10. வருகைப் பத்து

('முத்தா முத்தி' என்னும் தேவாரப் பண்)

**பண்:** பழம்பஞ்சுரம் (சங்கராபரணம்)

அடியார் நிமலத் திருவகத்துள்
அலரும் தெய்வத் தாமரையே
விடியா என்றன் வினையிருளை
விடியச் செய்யும் விரிசுடரே
செடிசே ருடலின் மயக்கொழித்துச்
சீவ போதங் கெடவென்னை
வடிவே லுடனே வந்தாள்வாய்
வள்ளல் முருகா வருவாயே. 1

கறைகொள் மிடற்றோன் களிகூரக்
கௌரி வருக வென்றழைப்பச்
சிறையார் தோகைப் பரியேறிச்
செகத்தை நொடியில் வலம்வருவோய்
குறைவற் றொளிரும் மோனசுகக்
குளிர்மா மதியே குணக்கடலே
மறையா கமங்கள் தொழுதேத்தும்
மயிலூர் மணியே வருவாயே. 2

ஆறு தெய்வ வதனமுடன்
அளிசேர் கடம்பை யணிதோளும்

வீறு கொள்வே லணிகரமும்
விண்ணோர் பணியுந் திருத்தாளும்
கூறுந் திறனில் லாவெளியேன்
கூடிக் களிக்க வருவாயே
வேறு துணையொன் றறியேனே
வேண்டும் என்முன் வருவாயே. 3

வான மகளுக் கொருதுணைவா
வள்ளிக் குறப்பெண் மணவாளா
ஞானக் களிறு மகிழ்ந்தணைக்கும்
நலங்கொள் துணைவா நெடுவேலா
தானற் றார்தம் மனமன்றில்
தனித்தே யொளிரும் தன்மையனே
கூனற் பிறைகொள் வேணியரன்
கொஞ்சும் மதலாய் வருவாயே. 4

இமயப் பிடிபா லமுதருந்தும்
இன்பக் குருந்தே இனியோனே
நிமலச் சுகநற் புரணமதில்
நிலையாய் எனைநீ வைப்பாயே
கமலக் கண்ணன் மருகோனே
கன்னி இருவர் நாயகனே
அமணக் குலம்வே ரறுத்திட்ட
அருள்மா மணியே வருவாயே. 5

அயனா ரறியா அரும்பொருளை
அரனார்க் குரைத்த குருமணியே
வியனா ருலகப் பதிசிறையை
விடுவித் தருளும் வடிவேலா
மயலா மிருள்தீர்த் தெனைக்காக்க
மன்னே பொன்னே அம்பலவன்
புயமீ தணைத்துப் புளகிக்கும்
புனிதச் சுதனே வருவாயே. 6

கணப்போ தெனினும் நின்னடியைக்
கடையேன் மறத்த லுண்டோதான்
மணத்த உன்றன் மலரடியை
மறைத்து நிற்றல் வழக்கோதான்

கணக்கில் லாத பலபிறப்பில்
கலகப் புலனைந் தால்நொந்தேன்
பிணக்கில் லாமல் பேதைமுனம்
பேணிக் காக்க வருவாயே. 7

முரணும் கொடிய பவக்கடலில
ழூழ்கித் திசையும் தடுமாறிக்
கரண மெனுமோர் சுழலதனில்
கலங்கிக் காமப் புயலமுந்தி
மரண மென்னும் முதலையின்வாய்
மடிந்து போகா தெளியேனைச்
சரண மலராம் தனிப்புணையைத்
தந்தே அருள வருவாயே. 8

தண்ணா ரொளியே சண்முகனே
சண்பைக் குருந்தே வருவாயே
கண்ணா ரமுதே கருத்தமர்ந்த
கதிர்மா மதியே வருவாயே
பண்ணா ரிசையே பவவினைதீர்
பதியே கதியே வருவாயே
உண்ணா டுறவே உயர்வேலா
உமையாள் பாலா வருவாயே. 9

திருத்தண் மலையில் சிறப்புறுநல்
திருவே ரகத்தோய் வருவாயே
திருக்குன் றமர்ந்து தெய்வமகள்
திளைக்கும் கோவே வருவாயே
திருப்போ ரூரா வருவாயே
திருமால் மருகா வருவாயே
திருக்கை வேல்கொண் டென்னெதிரே
திருவே குருவாய் வருவாயே. 90 + 10 = 100

## 11. வேண்டற் பதிகம்

('சடையா யெனுமால்' என்னும் தேவாரப் பண்)

**பண்:** இந்தளம் (நாதநாமக்கிரியை)

மதியார் முடிமேல் மலரே யணிவோன்
மதியார் புரமூன் றெரிசெய் நகைகொள்

பதியார் மகிழும் பரனே எளியேன்
பதியா யுனையே பணிதற் கருளே. 1

உள்ளும் புறமோ ரிருவோ ருணரா
துள்ளும் புறமோ ரொளியாய் நிறைந்தோன்
உள்ளம் பொலியன் புறவே எளியேன்
உள்ளம் பொலியும் படிநீ அருளே. 2

மலையைக் குடியா யுடையோன் சுதனே
மலையைக் குடையா எடுத்தோன் மருகா
மலையைக் குடைகூர் வடிவே லுடையாய்
மலையை நிகரென் மயல்தீர்த் தருளே. 3

பச்சை மயில்மா துமைபா லகனே
பச்சை மயில்மீ தமர்தற் பரனே
பச்சை நிறமால் மருகா பயனார்
பச்சை வயல்சூழ் வயலூர்ப் பதியே. 4

சிலைமா மலையான் சிதர்தீ விழியால்
சிலைமா ரனைவெல் சிவனார் சிறுவா
சிலைவே டர்குலத் திருவின் கணவா
சிலைநே ரெனுளம் சிதைவித் தருளே. 5

மதவா ரணமா முகன்சோ தரனே
மதவா ரணவா கனனன் மருகா
மதவா ரணமா யையொழித் தருள்வோய்
மதவா ரணஞா னசதோ தயனே. 6

அலைவாய்த் துரும்பாய் அடியே னைஇனி
அலைவாய் எனநீ விடுதல் அழகோ
அலைவாய்த் தரளங் களலைத் திடுசீர்
அலைவாய்க் குருவே அடிசேர்த் தருளே. 7

நிலையற் றமன முடையே னினியும்
நிலையற் றகனா நிகர்வாழ் வுறவோ
நிலையுற் றிடுசெந் நெறிதந் தெனையே
நிலையுற் றிடுமெய்ந் நிலைசேர்த் தருளே. 8

பொன்றா வருளே புகலா வடையாப்
பொன்றா வினையேன் புனிதா உனிடம்

பொன்றா துறவே புரைதீர்த் தருள்வாய்
பொன்றா இயல்ஞா னசிவப் பொருளே. 9

வருவாய் வடிவே லுடனே மயில்மேல்
வருவாய் அடியேன் மயல்தீர்ந் துயவே
வருவாய் தருவாய் மலர்நேர் பதமே
வருவாய் குருவாய் அருள்வாய் குகனே. 100 + 10 = 110

## 12. அழைத்த பத்து

('ஓம்பினேன் கூட்டை' என்னும் தேவாரப் பண்)

பண்: திருநேரிசை (நவரோசு)

மின்னைநேர் உடலை நம்பி
 மிகுபொருள் விரும்பும் பேதை
தன்னையே தென்தி சைக்கோன்
 சார்ந்திடும் பொழுதி லேங்கி
அன்னையே அப்பா வென்றும்
 செந்திலெம் அரசே யென்றும்
உன்னையே கூவி நிற்பேன்
 உவந்தெனை ஏன்று கொள்ளே. 1

தந்தைதாய் தமர்க ளென்னும்
 தளையினிற் பட்டு நாளும்
சிந்தையே மிகவும் நொந்து
 சிறியனே னல்ல லுற்றே
அந்தியில் அந்த கன்வந்
 தழைத்திடும் பொழுதில் யானும்
எந்தையே கூவி நிற்பேன்
 இணைப்பதத் தேன்று கொள்ளே. 2

பெருமையாய் எண்ணி யிந்தப்
 பேயுல கரங்க மாடி
அருமையாம் நின்ப தத்தை
 அணுகிடா அவல னேனைக்
கருமைகொள் மேதி வாகன்
 கடுகிவந் தழைக்கும் போது

முருகனே கூவி நிற்பேன்
முளரித்தாள் ஏன்று கொள்ளே. 3

உடலுறு கரண மோடும்
உலகபோ கங்க ளாய
விடயவெங் கனலில் நாளும்
வீழ்ந்திடும் வினையி னேன்பால்
அடமதாய்க் காலத் தச்சன்
அடர்த்தெனை அழைக்கும் போது
திடமதாய்க் கூவி நிற்பேன்
திருக்கரத் தேன்று கொள்ளே. 4

கனலலை நீரென் றெண்ணிக்
கடுகிமான் ஓடு மாப்போல்
கனவுறழ் வாழ்வை நம்பிக்
கலங்கிடும் நாயி னேனைச்
சினமொடு காலன் ஆவி
தேக்கிடும் போது கந்தா
உனதடி கூவி நிற்பேன்
உவந்தெனை ஏன்று கொள்ளே. 5

நஞ்சென உலக மாயை
நலிந்திடப் பேதை யானும்
அஞ்சியே நின்ப தத்தில்
அடைக்கல மாக வந்தேன்
வெஞ்சின நமனார் என்பால்
மேவிடும் போதி லெந்தாய்
தஞ்சமாய்க் கூவி நிற்பேன்
தளிர்க்கரத் தேன்று கொள்ளே. 6

பொன்பொருள் போக மோடு
புதுமனை வாழ்க்கை யெல்லாம்
என்பொரு ளாக எண்ணும்
எளியனைக் கால தேவன்
தன்பொரு ளாகக் கொள்ளும்
தருணமென் தலைவா என்றே
உன்னருள் கூவி நிற்பேன்
உனதடிக் கேன்று கொள்ளே. 7

மருள்திரைப் பிறவி மூழ்கி
மடிந்திடத் துணையாய் நிற்கும்
இருள்மனத் துட்டன் தன்னோ
டிசைவுறும் ஏழை யேனைக்
கருமைகொள் மறலி பாசக்
கைவலை வீசும் போது
குருபரா கூவி நிற்பேன்
குளிர்பதத் தேன்று கொள்ளே. 8

தாழ்வுறு தரணி வாழ்வில்
தமியனேன் தாபங் கொண்டு
ஊழ்வினை வித்துக் கின்னும்
உரமிடும் உலுத்த னேனைப்
பாழுடற் சுமையை நீக்கும்
படிநமன் வரும்போ துன்னை
வாழ்வுறக் கூவி நிற்பேன்
வருந்திடா தேன்று கொள்ளே. 9

இந்திர ஜாலம் போல
எளிதினில் மறையும் இந்தப்
பந்தஞா லத்தை மெய்போற்
பாவித்து வாழு மென்னை
அந்தகன் அந்தி மத்தில்
அழைத்திடும் பொழுதி லெந்தாய்
கந்தனே கூவி நிற்பேன்
கருணைகூர்ந் தேன்று கொள்ளே. 110 + 10 = 120

## 13. அபயப் பத்து

(திருவருட்பா-உருவா யருவாய்)

கந்தா உமையாள் மைந்தா அபயம்
கருணா கரநின் கழலே அபயம்
சிந்தா குலந்தீர் குமரா அபயம்
சேவற் கொடியாய் அபயம் அபயம்
மந்தா கினிதன் மகனே அபயம்
மயிலூர் மணியே மருந்தே அபயம்

பந்தா டவிதீர் பரனே அபயம்
பரங்குன் றமர்ந்த பதியே அபயம். 1

சுரர்தம் இறைவன் தலைவா அபயம்
சுடர்நன் மணியே அபயம் அபயம்
வரமாய் உனருள் தருவாய் அபயம்
வருவாய் குருவாய் அபயம் அபயம்
அரமேற் றுயில்வோன் மருகா அபயம்
அருள்ஞா னியர்தம் துணைவா அபயம்
சிரமே வணங்கும் சிறியேற் கருள்வாய்
செந்தூர் முருகா அபயம் அபயம். 2

நலமாந் துணையே அபயம் அபயம்
நவநன் மணியே அபயம் அபயம்
குலமும் உனதாக் கொண்டாய் அபயம்
குலவுந் தெய்வக் கொழுந்தே அபயம்
மலவா தனைதீர் மருந்தே அபயம்
மலைமா மகள்தன் மகனே அபயம்
நிலவும் இணையில் சுடரே அபயம்
நிலைகொள் பழனா புரியாய் அபயம். 3

பண்ணின் பயனே அபயம் அபயம்
பரனே குகனே பதியே அபயம்
நண்ணும் அடியார் வாழ்வே அபயம்
நல்லா ரமுதே அபயம் அபயம்
மண்ணில் உறையும் மயல்தீர்ந் திடவே
மலர்த்தாள் தருவாய் அபயம் அபயம்
எண்ணும் எனையேன் றருள்வாய் அபயம்
எழில்சேர் குருமா மலையாய் அபயம். 4

அன்பின் வடிவே அழகா அபயம்
அன்னே அரசே அபயம் அபயம்
பொன்னே மணியே புனிதா அபயம்
பொன்னார் பதமே தருவாய் அபயம்
என்னுள் கடவுட் சுடராய் ஒளிரும்
எழிலோ வியமே அபயம் அபயம்
தன்னே ரிலையாம் தலைவா அபயம்
தணிகை முருகா அபயம் அபயம். 5

கருணை உருவே அபயம் அபயம்
கந்தா கதிர்வேல் முருகா அபயம்
மருள்தீர் மணியே அபயம் அபயம்
மயில்வா கனனே அபயம் அபயம்
குருவாய் வருவாய் எளியேன் றனையோர்
குறியாய்க் கொணர்வாய் அபயம் அபயம்
பொருவே லெறியும் புனிதா அபயம்
போரூர் முருகா அபயம் அபயம். 6

உள்ளத் தமர்ந்த தேவா அபயம்
உயர்வே அருள்வாய் அபயம் அபயம்
துள்ளும் வடிவேற் சுடரே அபயம்
தோகை மயில்மேல் வருவாய் அபயம்
தெள்ளுந் தமிழ்நன் மலர்மா லைகொளும்
தெய்வப் புலவா அபயம் அபயம்
வள்ளல் அறிவின் வடிவே அபயம்
வயலூர் மகிபா அபயம் அபயம். 7

இருள்வெம் பவநோய் அறவே அருள்வாய்
இடர்தீர்த் தெனைநீ இனிதாண் டருள்வாய்
மருள்வா தனைநீக் கிடுவாய் அபயம்
மயில்மேற் சுடர்போல் வருவாய் அபயம்
அருளா ரமுதம் அடியேன் பெறவே
அனைபோ லெனைநீ அணைவாய் அபயம்
வருணன் தலைவன் மருகா அபயம்
வளஞ்சே ரும்வள்ளி மலையாய் அபயம். 8

தானே எனைநீ கொண்டாய் அபயம்
தயவே புரியும் தாயே அபயம்
கோனே குருநற் சுடரே அபயம்
குறையா மதியே பதியே அபயம்
மானேர் விழியாள் உமையாள் பங்கன்
மகிழுஞ் சுதனே அபயம் அபயம்
யானே பழைய அடிமை அபயம்
யாவும் நீயே ஆவாய் அபயம். 9

திருவாழ் வருள்வாய் தலைவா அபயம்
திருச்சீ ரலைவாய்ச் செல்வா அபயம்

திருவே ரகமே திகழ்வாய் அபயம்
திருமா மணியே அபயம் அபயம்
திருவார் பழனா புரியாய் அபயம்
திருமால் மருகா அபயம் அபயம்
திருவாய்க் குருவாய் வருவாய் அபயம
தினமென் மனதி லமர்வாய் அபயம்.

120 + 10 = 130

## 14. சரணப் பத்து

(திருவருட்பா-அருளா ரமுதே சரணம்)

வடிவே லரசே சரணம் சரணம்
வரதா அபயா சரணம் சரணம்
முடியா மறையின் முடிவே சரணம்
முகிலூர் தியின்நன் மருகா சரணம்
நடிமா மயிலோய் சரணம் சரணம்
ஞானோ தயனே சரணம் சரணம்
கடிமா மலர்தோய் புயனே சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 1

வானோர் பதியே சரணம் சரணம்
வாழ்வே யருளும் வளமே சரணம்
தேனார் பதமே தருவாய் சரணம்
தெய்வப் பிடிதன் கணவா சரணம்
யானோர் பொருளாக் கொண்டாய் சரணம்
யான்செய் தவமே சரணம் சரணம்
கானே சூழும் தளியாய் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 2

தேனின் தெளிவே சரணம் சரணம்
தெளிவின் சுவையே சரணம் சரணம்
ஊனின் மயல்தீர் உயர்வே சரணம்
உயர்வாழ் வருளும் உறவே சரணம்
ஆனின் தலைவன் மருகா சரணம்
ஆடும் மயில்வா கனனே சரணம்
கானின் மகள்தன் கணவா சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 3

இன்பப் பெருக்கே சரணம் சரணம்
இலைவே லுடையாய் சரணம் சரணம்
அன்பர்க் கருளும் அரசே சரணம்
அகமே ஒளிர்மா மணியே சரணம்
துன்பந் துடைக்குந் துரையே சரணம்
சுகந்தந் தருள்நன் னிதியே சரணம்
கன்மந் தவிர்க்கும் கடம்பா சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 4

இலையிற் றுயில்வோன் மருகா சரணம்
இடர்கள் களையும் இறைவா சரணம்
சிலைவிற் பரனார் சிறுவா சரணம்
செந்திற் பதியே சரணம் சரணம்
மலையில் வளர்செங் கனியே சரணம்
மணஞ்சூழ் பதனே சரணம் சரணம்
கலையின் சுவையே சரணம் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 5

செங்கண் விடையோன் மைந்தா சரணம்
சிகிநற் பரியாய் சரணம் சரணம்
பொங்குங் கருணைக் கடலே சரணம்
புனிதா புகழ்வே லவனே சரணம்
எங்கும் நிறையும் எழிலே சரணம்
எனையேன் றருள்மா மணியே சரணம்
கங்குல் களைபே ரொளியே சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 6

அடியார்க் கெளியாய் சரணம் சரணம்
அழகா அமலா சரணம் சரணம்
வடியாக் கருணை வளமே சரணம்
வயலூர் வளர்சின் மயனே சரணம்
கொடிசே ரிடையாள் தனயா சரணம்
கொடும்பாழ் வினைதீர் குருவே சரணம்
கடியார் கடம்பின் தொடையாய் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 7

பனிமா மலையாள் மகனே சரணம்
பண்ணின் பயனே பரனே சரணம்

இனிதா கியசெந் தமிழே சரணம்
இனைவே யகற்றும் இறைவா சரணம்
தனிநா யகனின் தனயா சரணம்
தயையே புரியும் தலைவா சரணம்
கனிதே னொழுகும் மலையாய் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 8

புரிமா தவசர்தம் புகலே சரணம்
புகழ்வே லவனே சரணம் சரணம்
விரிமா மலர்ப்பூந் தொடையாய் சரணம்
வினைதீர் விமலா விகிர்தா சரணம்
அரிகே சவனின் மருகா சரணம்
அழகார் சிகண்டிப் பரியாய் சரணம்
கரிதோ லுடையோன் கனியே சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 9

அருள்மா மணியே சரணம் சரணம்
அன்னே அப்பா அரசே சரணம்
இருள்தீ ரிதயத் தொளியே சரணம்
இமையோர் குறைதீர் இறைவா சரணம்
குருமா மணியே அருள்வாய் சரணம்
குறியேன் இனிதோர் பதமே சரணம்
கருவா தனைநீக் கிடுவாய் சரணம்
கந்தா சரணம் சரணம் சரணம். 130 + 10 = 140

## 15. வைத்த பத்து

('கங்கையைச் சடையுள் வைத்தார்' என்னும் தேவாரப் பண்)

பண்: திருநேரிசை (நவரோசு)

எண்ணிட எண்ணம் வைத்தார்
இனியவை யாவும் வைத்தார்
பண்ணிலே பாவம் வைத்தார்
பணிபவர்க் கருளும் வைத்தார்
மண்ணிலே மயலை வைத்தார்
மயலறத் தெளிவும் வைத்தார்

திண்ணிய வேல்கை வைத்த
செந்திலெம் மிறைவ னாரே. 1

பன்னிரு நயனம் வைத்தார்
பரிவுசேர் பார்வை வைத்தார்
தன்னிரு பாதம் வைத்தார்
தமியனேன் வாழ வைத்தார்
துன்னிரு ளகல வைத்தார்
தூயமெய்ஞ் ஞானம் வைத்தார்
தென்னனோய் விலக வைத்த
செந்திலெம் மிறைவ னாரே. 2

வான்சுடர் மணியும் வைத்தார்
மதியினில் தண்மை வைத்தார்
தேன்கடம் பணியும் வைத்தார்
தேசொளி வேலில் வைத்தார்
மான்விழி மாதர் வைத்தார்
மலரினில் வாசம் வைத்தார்
தேன்நிகர் மொழியும் வைத்த
செந்திலெம் மிறைவ னாரே. 3

நீலநற் பரியும் வைத்தார்
நேர்மையை நெஞ்சில் வைத்தார்
வேலையங் கையில் வைத்தார்
வெல்கொடிச் சேவல் வைத்தார்
மாலைகள் புனைய வைத்தார்
மகிழ்ச்சியை மனதில் வைத்தார்
சீலநற் சேவை வைத்த
செந்திலெம் மிறைவ னாரே. 4

பவபயம் போக்கி வைத்தார்
பக்தியாற் பரவ வைத்தார்
கவலைகள் கரைய வைத்தார்
கதிபெற நெறியும் வைத்தார்
நவமிகு ஞாலம் வைத்தார்
நல்லன யாவும் வைத்தார்
சிவநிலை சேர வைத்த
செந்திலெம் மிறைவ னாரே. 5

வானவர் வாழ வைத்தார்
　　வாழ்த்துவார்க் கருளும் வைத்தார்
தானவர் தாழ வைத்தார்
　　சாகரம் சுவற வைத்தார்
கானவர் கன்னி வைத்தார்
　　காரெனக் கருணை வைத்தார்
தேநனை நீபம் வைத்த
　　செந்திலெம் மிறைவ னாரே. 6

ஆடுபொன் மயிலும் வைத்தார்
　　அணிதிகழ் வேலும் வைத்தார்
பாடுசெவ் வண்டும் வைத்தார்
　　பன்மலர்த் தாரும் வைத்தார்
பாடுதீர் ஞானம் வைத்தார்
　　பாதமும் பணிய வைத்தார்
தேடுமெய் வீடும் வைத்த
　　செந்திலெம் மிறைவ னாரே. 7

பண்ணினாற் பஜிக்க வைத்தார்
　　பழவினை மாய வைத்தார்
வண்ணமார் சோலை வைத்தார்
　　வழிபட வழியும் வைத்தார்
எண்ணிட நாமம் வைத்தார்
　　எய்திடப் பதமும் வைத்தார்
திண்ணிய மனம்ம லர்த்தும்
　　செந்திலெம் மிறைவ னாரே. 8

பாமலர் மாலை வைத்தார்
　　பன்னிரு தோளும் வைத்தார்
மாமலர் வாவி வைத்தார்
　　வரையிலா வரையும் வைத்தார்
காமலர் கனியும் வைத்தார்
　　களிதருங் காட்சி வைத்தார்
தேமலர் சொரியும் சோலைச்
　　செந்திலெம் மிறைவ னாரே. 9

என்வினை நீங்க வைத்தார்
　　எதிரிலா நிலையில் வைத்தார்

தன்புணை பாதம் வைத்தார்
தாழ்வெலாம் தாழ வைத்தார்
அன்பினை வளர வைத்தார்
அளவிலாக் கருணை வைத்தார்
தென்திசை ஆழி சூழ்ந்த
செந்திலெம் மிறைவ னாரே. 140 + 10 = 150

## 16. திருச்செந்திற் பதிகம்

(‘மானினேர்விழி’ என்னும் தேவாரப் பண்)

பண்: கொல்லி (நவரோசு)

மலைமகட்கிடப் பாகமேதரு
மன்னன்வானவர் வேண்டிட
அலைகடற்கடு விடமருந்திய
அண்ணலின்திரு நன்மணி
விலையிலாவொளி வேலணிந்தவி
சாகன்என்பணி யேற்பவன்
சிலைமனக்கொடி யேனையாண்டவன்
செந்தின்மாநகர்த் தெய்வமே. 1

தக்கன்செய்பெரு வேள்வியையறச்
சாடிவீழ்த்து சமர்த்தனாம்
அக்கமாமணி பூணுமேனிஎன்
ஐயனின்திரு நன்மணி
சிக்கல்மேவுசிங் காரவேலவன்
சீர்திகழ்மயில் வாகனன்
சிக்கலார்மன மழியுமாறருள்
செந்தின்மாநகர்த் தெய்வமே. 2

வல்லிநுண்ணிடை மாதிடங்கொள
வந்திடும்விடை வாகனன்
கல்லைநேர்மனக் காலனையுதை
காலனின்திரு நன்மணி
நல்லஉள்ளவ ரங்கிலாடிடும்
ஞானநாயக தற்பரன்

சில்லுறும்மன மழியுமாறருள்
செந்தின்மாநகர்த் தெய்வமே. 3

கருப்புவில்லியை நுதல்விழிக்கனல்
காய்ந்திடச்சினம் கொண்டவன்
பருப்பதந்தனை வில்லெனத்தொடு
பகவனின்திரு நன்மணி
நெருப்பையொத்தெழு மவுணர்சேனையை
நேரழித்துயிர் மாய்த்தவன்
திருப்பிநன்னெறிக் கென்னையாண்டவன்
செந்தின்மாநகர்த் தெய்வமே. 4

மதுமலர்பொழி கொன்றையஞ்சடை
மதியணிந்திடு சங்கரன்
மதுரைமாநகர் வணிகனாய்வரு
மன்னவன்திரு நன்மணி
புதுநலங்கெழு காவிரிக்கரை
பொலியுமேரகப் போதகன்
சிதைவுசெய்மய லழியுமாறருள்
செந்தின்மாநகர்த் தெய்வமே. 5



வில்லெறிந்திடு விஜயனோடமர்
வேண்டிநின்று விருப்பொடு
கல்லெறிந்திடு சாக்கியர்க்கருள்
காட்சிதந்தவன் நன்மணி
மல்லலைக்கடல் சுவறவேநெடு
வேல்விடுத்திட வல்லவன்
தில்லுசெய்மன மழியுமாறருள்
செந்தின்மாநகர்த் தெய்வமே. 6

பஞ்சின்மெல்லடிப் பாவையாளுமை
பதறவேவரு வெங்கரி
துஞ்சவேயதன் தோலுரித்திடு
சுந்தரன்தரு நன்மணி
குஞ்சரற்கிளை சோதரன்குறை
யேயிலாக்கரு ணைக்கடல்
செஞ்சுடர்ப்பதத் தென்னையாண்டவன்
செந்தின்மாநகர்த் தெய்வமே. 7

ஏனமோடுபுள் திருவடிமுடி
எட்டொணாவண மோங்கிறை
வானமார்மதி புனைசடையழல்
வண்ணமேனியன் நன்மணி
தானவர்குலம் நாசமாக்கிய
சண்முகன்குரு நாயகன்
தீனமாமன மழியுமாறருள்
செந்தின்மாநகர்த் தெய்வமே. 8

மஞ்சுலாமலை தன்மகள்மிக
மருளவேவரை தூக்கினோன்
கெஞ்சவேவிர லூன்றிடும்பரை
கேள்வனின்திரு நன்மணி
பஞ்செனத்திகழ் பாதநூபுரன்
பச்சைமாமயில் வாகனன்
செஞ்சொலேநவின் றென்னையாண்டவன்
செந்தின்மாநகர்த் தெய்வமே. 9

வண்டினந்துயில் கொன்றைகங்கை
வனைந்தசந்திர வேணியன்
அண்டருந்தொழும் அம்பலத்தமர்
அத்தனின்திரு நன்மணி
வண்டமர்குழல் வள்ளிதன்மண
வாளனாம்வடி வேலவன்
திண்சிலைமனத் தேனையாண்டவன்
செந்தின்மாநகர்த் தெய்வமே. 150 + 10 = 160

## 17. ஆண்ட பத்து

('பூவார் மலர்கொண் டடியார்' என்னும் தேவாரப் பண்)
பண்: தக்கேசி (காம்போதி)

வெஞ்சொற் பேசி வஞ்ச மனங்கொள்
வினைசே ரெளியேனைச்
செஞ்சொற் பேசி வலிந்தாட் கொண்ட
சேவற் கொடியோனே
நெஞ்சத் துள்ளும் புறமும் நிறைந்து
நிலவும் பேரின்பே

பஞ்சின் திரைவந் தார்க்கும் செந்திற்
பதிவாழ் குமரேசா. 1

பிணக்கு மனத்தின் பின்சென் றுழலும்
பிழையாம் புலனாலே
பிணிக்கப் பட்ட பேதை யெனையும்
பேணி யாட்கொண்டாய்
மணக்கு மலர்த்தாள் மறவா தெனைநின்
மவுன நிலைவைத்தாய்
மணற்குன் றுறுபே ரலைவாய்ச் செந்தில்
மகிபா மயில்வீரா. 2

கள்ளப் புலன்கொள் கயவர் குழுவிற்
களித்தே திரிவேனை
உள்ளத் திமிரம் நீக்கி யாட்கொண்
டுய்யும் வழிதந்தாய்
தெள்ளத் தெளிநின் னருள்வா ரியிலே
திளைத்தற் கெனைவைத்தாய்
வெள்ளித் திரைகள் வீசும் செந்தில்
விளங்கும் குருநாதா. 3

தீராப் பிறவிப் பிணியால் வாடித்
திகைத்தே மாய்வேனை
நீரா யுருக்கும் நெஞ்சின் துயரம்
நீக்கி யாட்கொண்டாய்
பேரார் கழலின் தண்ணீ ழலிலே
பெயரா தமர்வித்தாய்
சீரா யலைகள் அழைக்கும் செந்திற்
சிகிநற் பரியோனே. 4

விதியா கியநஞ் சரவந் தீண்ட
விதிர்த்தே மாய்வேனை
சதியாய்ச் சூழும் தரண மயக்கம்
தகர்த்தே யெனையாண்டாய்
பதியா யுனையே எளியேன் பெறவே
பரிவா யுளம்வைத்தாய்
மதிகண் டார்க்கும் கடல்சூழ் செந்தில்
வளரும் முருகோனே. 5

களியா லுன்றன் கழலை மறந்தே
கலங்கித் திரிவேனை
அளியா மனத்தின் அயர்வை நீக்கி
அருள்தந் தெனையாண்டாய்
தெளிவார்ந் துனையே தினமும் நினைந்து
தேறுந் திறமீந்தாய்
களியால் நடஞ்செய் திரைசூழ் செந்திற்
கந்தா கதிர்வேலா. 6

நிலையில் லாஇவ் வுடலைப் பேணி
நித்தம் அலைவேனை
மலையா யெழுமென் மயலை மாற்றி
மணியே எனையாண்டாய்
அலையே யில்லா ஆழிக் கிணையா
அகம்நின் றிடவைத்தாய்
விலைகொள் முத்தம் விளையுஞ் செந்தில்
விமலா உமைபாலா. 7

வஞ்சத் துழலும் மனவாக் குகளின்
வழிப்பட் டெய்த்தேனை
நஞ்சா முலகின் நசைதீர்த் தருளி
நன்றே ஆட்கொண்டாய்
கஞ்ச மலர்ச்சே வடியின் துணையால்
கலங்கா நிலைவைத்தாய்
அஞ்ச லென்றே அலையார் செந்தில்
அமரும் வடிவேலா. 8

எண்ணில் தீராத் துயர்த்தீ வாழ்வில்
இச்சை கொண்டிந்த
மண்ணிற் பிறந்தே மடிவே னெனையும்
மகவா யாட்கொண்டாய்
விண்ணோர் போற்றும் விரைசேர் பாதம்
விளங்க எனுள்வைத்தாய்
பண்ணோ டிசைசொல் அலையார் செந்திற்
பதியே இளையோனே. 9

கனிவில் லாத கல்நேர் நெஞ்சக்
கசடன் மருள்கொண்டே

இனிதா யெண்ணி உலகில் வாழும்
எனையும் ஆட்கொண்டாய்
அனிலஞ் சேராத் தீபச் சுடராய்
அசையா நிலைவைத்தாய்
இனிதாந் தென்றல் வீசும் செந்தில்
இறைவா குழகோனே. 160 + 10 = 170

## 18. குகப் பத்து

('மற்றுப் பற்றெனக் கின்றி' என்னும் தேவாரப் பண்)

பண்: பழம் பஞ்சுரம் (சங்கராபரணம்)

பற்று மற்றுனை யன்றி யானொரு
பற்று யாது மறிகிலேன்
குற்ற மேபல செய்யு மென்னையும்
கொண்ட சற்குரு மாமணி
செற்ற வர்புரம் செற்ற வன்திருச்
செல்வமே செந்தில் தெய்வமே
நற்ற வாவுனை நான்ம றக்கினும்
நாச்சொ லும்குகன் நாமமே. 1

தமரெ லாமென தாகக் கொண்டு
தருக்கி நின்ற சழக்கனை
அமர ரும்தொழு பாத மேயளித்
தாண்ட சற்குரு நாதனே
திமிர மாயநஞ் சுண்ட வன்திருச்
செல்வமே செந்தில் தெய்வமே
நமனி லாவுனை நான்ம றக்கினும்
நாச்சொ லும்குகன் நாமமே. 2

என்னை யேபெரி தாக எண்ணி
மயங்கு கின்றஇவ் வேழையேன்
தன்னை யேஉன தன்பெ னும்மமு
தூட்டி யாண்டஎம் தந்தையே
சென்னி மேல்நதி கொண்ட வன்திருச்
செல்வமே செந்தில் தெய்வமே
நன்ன வாவுனை நான்ம றக்கினும்
நாச்சொ லும்குகன் நாமமே. 3

சித்த முன்வசம் வைத்தி டற்கறி
யாத புன்மதிச் சேயனைச்
சுத்த னேசுடர் வேல னேசுக
மோன நன்னிலை சேர்த்தனை
சித்த முத்தர் தொழும வன்திருச்
செல்வமே செந்தில் தெய்வமே
நத்த வேயுனை நான்ம றக்கினும்
நாச்சொ லும்குகன் நாமமே. 4

பாச வல்வலைப் பட்ட ழிந்து
பதைத்து நின்ற பதக்னைக்
கேச வன்மரு காநின் தாளினில்
கேடு றாவணம் வைத்தனை
தேசு றுஞ்சடைச் செம்ம லின்திருச்
செல்வமே செந்தில் தெய்வமே
நாச மாமன மேம றக்கினும்
நாச்சொ லும்குகன் நாமமே. 5

காணி யேபெரி தாய்நி னைந்து
கலங்கு மிந்தக் களங்கனை
பேணி யேநினை எண்ணி நைந்திடப்
பேர ருள்சுரந் தீந்தனை
சேணு லாம்பிறை சூடி யின்திருச்
செல்வமே செந்தில் தெய்வமே
நாணி யேயுனை நான்ம றக்கினும்
நாச்சொ லும்குகன் நாமமே. 6

உலகெ னும்பெரு மாயை யாழி
உவந்து விழுமிப் பித்தனை
கலக வைம்புலன் மாய்த்து நின்னடி
காட்டி உய்ந்திட வைத்தனை
சிலைம திதிகழ் வேணி யன்திருச்
செல்வமே செந்தில் தெய்வமே
நலவ னேயுனை நான்ம றக்கினும்
நாச்சொ லும்குகன் நாமமே. 7

பொய்யு டல்தனை மெய்ய தாகநி
னைந்த லைகின்ற பொய்யனை

மெய்ய தாகிய நின்ம லர்க்கழல்
மேவு மாறருள் செய்தனை
செய்ய தீநிற மேனி யன்திருச்
செல்வமே செந்தில் தெய்வமே
நைவி லாவுனை நான்ம றக்கினும்
நாச்சொ லும்குகன் நாமமே. 8

மண்ணி லேயுறு மாண்ப னைத்தும்
மனத்தி லேற்றி மயங்கினேன்
கண்ணி லேயுறு காட்சி யாய்வந்து
காட்டி னாய்நின் னருட்கழல்
தெண்ணி லாவணி தேவ னின்திருச்
செல்வமே செந்தில் தெய்வமே
நண்ண வேயுனை நான்ம றக்கினும்
நாச்சொ லும்குகன் நாமமே. 9

மின்ன னேருடல் பேணி யேமிக
வேத னைப்படு வேனெனைப்
பொன்ன னையருட் போத மேதந்து
போற்று மாறடி கொண்டனை
தென்ன னையடர் ஈச னின்திருச்
செல்வமே செந்தில் தெய்வமே
நன்ன யாவுனை நான்ம றக்கினும்
நாச்சொ லும்குகன் நாமமே. 170 + 10 = 180

## 19. மறவர்ப் பதிகம்

('பித்தா பிறைசூடீ' என்னும் தேவாரப் பண்)
பண்: இந்தளம் (நாதநாமக்கிரியை)

அலையார்சடை பிறைசூடிடும்
அழகார்விடை வாகன்
மலைமாதுமை பங்கன்மனம்
மகிழவரு குமரன்
அலைவாய்மணி ஆடுந்திருச்
செந்தில்வளர் அழகன்
நிலையாயெனக் கருள்செய்பதம்
நினைவேன்மற வேனே. 1

சுடலைதிரி அலகைக்குழு
துள்ளிக்குதித் தாட
நடலைசெயும் அரவேயணி
நம்பன்தரு குமரன்
கடலின்கரைக் கணிசெய்கவின்
செந்தில்வளர் கந்தன்
உடலின்மயக் கொழிக்கும்பதம்
உணர்வேன்மற வேனே. 2

ஆழிப்படை மாலும்மல
ரமரும்திசை முகனும்
வாழிபெரு மானேயெனும்
வள்ளல்தரு குமரன்
ஆழித்திரை ஆர்க்குந்திருச்
செந்தில்வளர் அமலன்
பாழ்விட்டிடப் பணிகொள்பதம்
பணிவேன்மற வேனே. 3

மூவார்புரம் தீயில்விழ
முறுவல்கொளும் முதல்வன்
சாவார்படும் துயர்தீர்த்தருள்
தலைவன்தரு குமரன்
வாவாவென அழைக்குந்திரைச்
செந்தில்வளர் வள்ளல்
காவாயெனும் எனையாள்பதம்
கடையேன்மற வேனே. 4

புனைவார்சடை கொன்றைமதி
புனையும்சிவ பெருமான்
நினைவார்வினை நீக்கும்சிவை
நேசன்தரு குமரன்
கனையார்கடற் கரைமேற்றிகழ்
செந்தில்வளர் கடவுள்
எனையோர்பொரு ளெனக்கொள்பதம்
எளியேன்மற வேனே. 5

மேதிப்படர் காலன்தனை
வீழ்த்துங்கரு மிடற்றோன்

பாதிக்கொளும் மங்கைக்கருள்
பாகன்தரு குமரன்
ஆதித்தனும் மங்கச்செயும்
செந்தில்வளர் அயிலோன்
தீதற்றிட எனையாள்பதம்
சிறியேன்மற வேனே. 6

அரவேயணி பூணாக்கொளும்
அரன்சுந்தரற் கந்நாள்
பரவைமனைத் தூதாய்ச்செலும்
பரமன்தரு குமரன்
பரவைத்திரை பாடித்தொழும்
செந்தில்வளர் பகவன்
பரவும்எனக் கருள்செய்பதம்
பணிவேன்மற வேனே. 7

அலையார்புனல் வீழுந்திரு
வண்ணாமலை அண்ணல்
சிலைவாணுதல் மங்கைமகிழ்
சிவனார்தரு குமரன்
அலைநீள்கரம் கொட்டும்திருச்
செந்தில்வளர் ஐயன்
மலையாய்வரு துயர்தீர்பதம்
மறவேன்மற வேனே. 8



பதறச்சிரம் நெரியத்தலை
பத்தோன்தனை யடர்த்தோன்
கதறிக்கரி விழத்தோலுரி
கடவுள்தரு குமரன்
சிதறித்திரை தரளங்கொணர்
செந்தில்வளர் முருகன்
உதறிப்பழ வினைதீர்பதம்
உளமேமற வேனே. 9

படமாடிய அரவங்கரம்
பற்றும்சிவ பெருமான்
விடமாடிய கண்டன்பரு
விடையோன்தரு குமரன்

நடமாடிட அலையேபயில்
செந்தில்வளர் நம்பன்
சடமாடிய மயல்தீர்பதம்
தமியேன்மற வேனே. 180 + 10 = 190

## 20. மறந்துய்யாப் பத்து

('வட்ட ணைம்மதி சூடியை' என்னும் தேவாரப் பண்)

**பண்:** திருக்குறுந்தொகை (நாதநாமக்கிரியை)

ஐங்க ரற்கிளை யானெனும் சண்முகன்
பங்க மில்பதம் காட்டும் பராபரன்
திங்கள் சூடியின் செல்வக் குமரனின்
பங்க யப்பதம் யான்மறந் துய்வனோ. 1

வினைக்க டல்விழு மென்னையும் தாங்குற
அனையெ னப்பரிந் தாண்ட அருட்கனி
கனைக டல்திருச் செந்திலிற் கந்தனின்
புனைப தப்புகழ் யான்மறந் துய்வனோ. 2

காற்றி னிற்கலந் தென்னுயிர்ப் பாகியே
சாற்றொ ணாப்புகழ்த் தாளிணை தந்தவன்
ஆற்றொ ணாத்துயர் ஆற்றிட வானவர்
போற்று பூம்பதம் யான்மறந் துய்வனோ. 3

வெள்ளி வெற்புறை ஏறமர் ஈசனும்
அள்ளி நெஞ்சணைத் தார்த்திடு தண்மதி
வள்ளி மான்மண வாளன் முருகனின்
தெள்ள ருட்டிறம் யான்மறந் துய்வனோ. 4

அடிய னுக்கருள் அன்னையு மானவன்
மிடிய கற்றிடு வேந்தனென் னின்னுயிர்
வடிவ கொள்மயில் வாகன வேலனின்
அடிம லர்க்கழல் யான்மறந் துய்வனோ. 5

நேச மாயழைத் தென்னுள் நிறைந்தவன்
பாச மாமிருட் பாழ்ச்சிறை வாழ்மனம்

நாச மாக்கிட நன்றருள் நாயகன்
ஆச கல்பதம் யான்மறந் துய்வனோ. 6

மருளு றுங்கன மாயையை மாய்த்தெனைத்
தெருளு றுங்கழல் சேர்த்திடும் கந்தன்நற்
பொருளு றும்பதம் போற்றிடச் செய்தவன்
அருளு றும்அடி யான்மறந் துய்வனோ. 7

உறங்கிப் பின்னெழல் ஓரிரண் டாகிய
பிறப்பி றப்பெனும் பேரிடர் நீக்கியே
மறலி கைப்படா வாறெனை ஆண்டருள்
விறல்மி கும்பதம் யான்மறந் துய்வனோ. 8

மண்ணும் பொன்னுமற் றும்மனை வாழ்க்கையும்
விண்ணின் போகமும் வேம்பெனச் செய்துதன்
கண்ணின் மாமணி யாயெனைக் காத்தருள்
அண்ண லார்பதம் யான்மறந் துய்வனோ. 9

அவனெ னைத்தன தாக்கியே கொண்டபின்
அவனி மேற்சுவை யாவதும் எப்பொருள்
பவனி யாகஇப் பார்வலம் வந்திடும்
அவன ருட்பதம் யான்மறந் துய்வனோ. 190 + 10 = 200

## 21. பதம் வைத்த பத்து

('மண்ணினல்ல வண்ணம்' என்னும் தேவாரப் பண்)

பண்: கொல்லி (நவரோசு)

அன்னையாய் அப்பனாய் ஆருயிர்க் கிறைவனாய்
என்னையும் இனிதுற ஏன்றுகொண் டருளினாய்
தன்னையோர் நிகரிலாத் தலைவஎம் முருகனே
என்னையோர் நிகரிலா இணைப்பதம் வைத்தனை. 1

கண்ணிடை ஒளியெனக் கருத்தினில் உணர்வென
பண்ணிடை இசையெனப் பாரினில் எழில்மிக
நண்ணிட நலமெலாம் நாட்டியே நின்னருள்
எண்ணிட என்னுளம் எழிற்பதம் வைத்தனை. 2

மறையொலி ஆர்த்திடும் வாரியில் நின்னருள்
நிறைவினைக் கண்டஎன் நெஞ்சுளே நிலவிடும்
குறைவிலா மதியெனக் குளிர்முகம் காட்டியே
கறையறுத் தென்னைநின் கவின்பதம் வைத்தனை. 3

நன்றுதீ தறிகிலா நாயினேன் வாழ்வுற
நன்றருள் தந்தனை ஞானவீ டுதவினை
குன்றுதோ றாடலைக் கொண்டஎம் முருகனே
நின்றுளம் நிறைவுற நின்பதம் வைத்தனை. 4

பாலினில் வெண்ணெய்போற் பரவியென் உயிரினிற்
கோலமாய் நின்றனை கூர்ந்தருள் வழங்கினை
காலமாம் கட்செவி தீண்டிடாக் கதிபெறச்
சீலமாய் என்னுளே சேவடி வைத்தனை. 5

ஆடிடும் இறையவன் ஆவலோ டணைத்திட
ஆடிடும் மணிமயில் வந்திடும் அழகனே
கேடுசெய் வினையெலாம் கேடுற நீக்கியே
நாடிடும் என்னுளம் நற்பதம் வைத்தனை. 6

தரணியில் தாயினுந் தயைமிகக் கொண்டனை
அரவணைத் தன்புகூர்ந் தஞ்சலென் றருளினை
சரவணப் பொய்கையிற் பூத்தொளிர் சண்முகா
புரணமாய் என்னுளே பொற்பதம் வைத்தனை. 7

தவழ்ந்திடும் முகிலினில் தகைமயில் வண்ணமும்
அவிழ்ந்திடும் மலரினில் அளிமுக வண்ணமும்
தவழ்ந்திடும் நதியினில் தரணியோர் வண்ணமும்
மகிழ்ந்திட என்னுளம் மலர்ப்பதம் வைத்தனை. 8

மலையினில் நின்னருள் மாண்பினைக் கண்டிட
அலையினில் நின்புகழ் ஆர்த்திடக் கேட்டிட
விலையிலா வேலொளி மின்னிடைக் கண்டிடக்
கலையுறு நின்பதம் கருத்தினில் வைத்தனை. 9

என்னையே ஒப்பவர் எவரினி இங்குளார்
என்னையே உனதென இறைவநீ கொண்டபின்
அன்னிய மின்றியே அன்பமிழ் துண்டிடப்
பின்னையோர் குறையிலாப் பெருநிலை வைத்தனை. 10

200 + 10 = 210

## 22. இன்னருட் பத்து

('மாசில் வீணையும்' என்னும் தேவாரப் பண்)

பண்: திருக்குறுந்தொகை (நாதநாமக்கிரியை)

எந்தை யாயெனக் கின்னருள் செய்பவன்
முந்தை யூழ்வினை யாவும் முடிப்பவன்
சிந்தை கோயிலாச் சேர்ந்தருள் கூர்பவன்
விந்தை மாமயில் வீரன் முருகனே. 1

அண்டி னோர்தமக் காழிக் கருணையான்
விண்டி சைதொழும் வேத விபூதியான்
வண்டி சைக்கும் மதுப்பொழிற் சோலைவாழ்
எண்டி சையொளிர் எந்தை முருகனே. 2

பாவ லோர்பணி பைந்தமிழ்ச் செல்வன்பே
ராவ லாயடை வார்க்கருள் செய்பவன்
காவ லாய்வழி காட்டுந் துணைவன்செஞ்
சேவ லங்கொடிச் செம்மல் முருகனே. 3

சேயென் றேயழை தீனரின் பாலனாம்
தாயென் றேயழைப் போர்தமக் கன்னையாம்
வாவென் றேயழைப் போரெதிர் வந்திடும்
நாய கன்என்றன் நாதன் முருகனே. 4

வண்ண மாமலர் வாச மதானவன்
பண்ணி சைதனில் பாவ மதானவன்
விண்ண கத்தில் விபுதசத் தானவன்
அண்ண லாகுமென் னையன் முருகனே. 5

என்னை யோர்பொரு ளாகநன் கேன்றவன்
பின்னை யோர்புகல் பேதை அறிகிலேன்
தன்னை யோர்நிக ரில்லாத் தலைவனாம்
அன்னை யாயெனை ஆண்ட முருகனே. 6

மலைகள் யாவினும் வாழ்ந்திருந் தன்பரை
நிலைகொள் தன்பதம் நேடிடச் செய்பவன்
இலையின் கட்டுயில் ஏந்தல் மருகனாம்
அலைகள் ஆர்த்திடும் செந்தில் முருகனே. 7

கறைம னத்தவர் காணவொண் ணாதவன்
குறையி லாஉளக் கோயிலி ருப்பவன்
நறைகொள் நீப மலரணி நாயகன்
பிறைகொள் வேணியன் பெற்ற முருகனே. 8

விரவு ராக்கதர் வீர மழித்தவன்
சுரர்மு தல்வனைத் தொல்சிறை மீட்டவன்
அரன்த னக்குப தேசிக ஆரியன்
நரவு ருக்கொள் ரமணன் முருகனே. 9

ஆடிப் பாடி அவனடி வேண்டுவோர்
நாடும் யாவையும் நன்றருள் நாயகன்
ஆடும் மாமயி லூர்ந்தடி யேனெதிர்
நாடும் நற்றணி கேசன் முருகனே. 210 + 10 = 220

## 23. தலைமைப் பத்து

('வண்ணமா மலர்கொடு' என்னும் தேவாரப் பண்)

**பண்:** கொல்லி (நவரோசு)

வண்ணமா மலர்ப்பதம் வாழ்வுறச் சென்னியில்
திண்ணமாய் வைத்தெனைத் திடமுறச் செய்தவன்
எண்ணமாய் என்னுளே இனிதுற நிறைந்தவன்
தண்ணளி சுரந்திடும் தலைவனெம் முருகனே. 1

களிமயில் நடமிடக் கனிவுடன் அருளிட
அளியினம் மொய்த்திடும் தொடையணி அசைந்திட
எளியவன் என்முனே எழிலுற வந்தவன்
தளியகம் கொண்டிடும் தலைவனெம் முருகனே. 2

பையணை ஐந்தலைப் பாம்பணை மீதிலே
கையணைக் கொடுதுயில் காவலன் மருகனென்
மெய்யணைத் தென்னுயிர் மேம்படச் செய்தவன்
தையலாள் வள்ளியின் தலைவனெம் முருகனே. 3

பஞ்சரக் கிள்ளையாய்ப் பதைத்திடா தென்னுயிர்
தஞ்சமே ஒன்றிடத் தயையுடன் அருளினன்
கஞ்சமா மலர்ப்பதம் காட்டியே எளியனென்
சஞ்சலம் நீக்கிய தலைவனெம் முருகனே. 4

வாடுறும் உயிர்மிக வளம்பெறக் காழியில்
பீடுறும் ஆளுடைப் பிள்ளையாய் வந்தவன்
ஆடிடும் மணிமயில் அமர்ந்தென தல்லலைச்
சாடிடும் சக்திவேல் தலைவனெம் முருகனே 5

அலையிடைத் துரும்பென அலைந்தவெம் மனதினை
நிலைபெறத் தன்னடி நினைந்திடச் செய்தனன்
மலையெனத் துயர்தரு மனமயக் கரவினைத்
தலையகற் றிடுமொரு தலைவனெம் முருகனே. 6

வானவர் வாழ்த்திட வையகம் வழிபடக்
கானவர் கன்னியின் கரங்கொளும் காவலன்
ஈனவர் தம்முளம் இலகிடா இறையவன்
தானவர் தமையடர் தலைவனெம் முருகனே. 7

பேதையென் நெஞ்சுளே பீடுற நின்றதால்
போதையால் எனக்கினிப் பொய்ம்மயக் கில்லையே
வாதையாம் உலகெனும் மாயையிங் கில்லையே
தாதையார் தேசிகன் தலைவனெம் முருகனே. 8

மாதவர் மகிழ்வுற மருளெலாம் நீக்குமெய்
ஆதவன் எனவொளிர் அருணிறை நாயகன்
மாதவன் சோதரி மடியமர் தண்மதி
தாதவிழ் கடம்பணி தலைவனெம் முருகனே. 9

யாவரும் பெறற்கரி யான்எனக் கெளியவன்
நாவலர் தீந்தமிழ் மாலைகொள் நாயகன்
மேவருட் குருவென மேவிடும் மாண்பினன்
தேவரும் பணிந்திடும் தெய்வமென் முருகனே.

220 + 10 = 230

## 24. அடைக்கலப் பத்து

('பரவும் பரிசொன் றறியேனான்' என்னும் தேவாரப் பண்)

**பண்:** காந்தாரப்பஞ்சமம் (கேதாரகௌளம்)

வடிவேல் முருகா வந்தருள்வாய்
வானோர் பதியே மால்மருகா
அடியார் வாழ்வே அருட்கனியே
அல்லல் தீர்க்கும் அருமருந்தே

மிடியா ருலகில் மெலிந்தேனை
　　மேவிப் பணிகொள் வித்தகனே
முடியா மறையின் முழுமுதலே
　　முருகா உன்றன் அடைக்கலமே. 1

தண்ணின் மலனே தணிகைவாழ்
　　தயையின் வடிவே தற்பரனே
உண்ணின் றுவக்கும் உத்தமர்கள்
　　உள்ளத் தொன்றாய் ஒளிர்வடிவே
எண்ணில் லாத இடர்ப்பிறவி
　　எடுத்தே அலுத்த எளியேனைக்
கண்ணின் மணியாய்க் காத்தணைத்த
　　கந்தா உன்றன் அடைக்கலமே. 2

போரூர் முருகா புண்ணியனே
　　பொன்னார் பதங்கள் காட்டிமிக
ஆரும் பெறுதற் கரும்பொருளை
　　அளித்த ஞான அருட்சுடரே
ஆரூ ரன்றன் தோழனருள்
　　அருமை மைந்தா அயிலரசே
சீரும் சிறப்பும் மிகவளித்த
　　செல்வா உன்றன் அடைக்கலமே. 3

உமையாள பாலா உத்தமனே
　　உயர்மா நிதியே உலகாசைச்
சுமையே நிறைந்த துகளேனைச்
　　சுகமாம் கழல்சேர் சுடர்வேலா
எமையே நின்பால் இணைவிக்க
　　எழில்சேர் மயிலில் வருவாயே
அமைவே உறுவாழ் வருள்செய்த
　　அப்பா உன்றன் அடைக்கலமே. 4

பிரண வத்தின் பொருளறியாப்
　　பிரமன் தன்னைச் சிறையிட்டே
அரனார் தமக்கவ் வரும்பொருளை
　　அருள்மா மணியே அன்பரசே
தரணி தன்னில் நின்னடியார்
　　தமக்கோர் துணையே தவக்கனலே

பரனே பேதைக் கருள்செய்த
பதியே உன்றன் அடைக்கலமே. 5

கைமா முகத்தோன் கண்டுவக்கும்
கந்தா குமரா பாற்கடலில்
பைநா கத்தே துயில்வோனின்
பரிவார் மருகா மயில்மீதே
மையார் தடங்கண் மாதிருவர்
மருவ வந்தே ஆட்கொண்டாய்
நைவா முலகின் நசையொழித்த
நலனே உன்றன் அடைக்கலமே. 6

குன்று தோறும் குடிகொண்ட
கோவே அருளாற் குவலயத்தில்
அன்றும் இன்றும் என்றுமெனை
அணைத்தாட் கொண்ட அயிலரசே
மன்று ளாடும் மகேசன்தன்
மகனே யானைக் கிளையோனே
என்றும் அன்பர்க் கிறையோனே
எந்தாய் உன்றன் அடைக்கலமே. 7

சரணம் என்றே தாள்சேர்ந்தார்
சனன மரணம் தவிர்ந்திடவே
அரணாய் மேவி அபயம்நல்
கரசே கந்தா அகமகமென்
புரணப் பொருளே பொன்னடியைப்
புகலாய்க் கொண்ட புண்ணியர்க்குன்
சரண மலர்ப்பா தந்தருவாய்
தயாளா உன்றன் அடைக்கலமே. 8

குற்றம் பலவும் செய்தாலும்
குணமாக் கொள்ளும் குருமணியே
நற்றாள் நயவா நாயேனை
நயந்தாட் கொண்ட நாயகனே
கற்றார் போற்றும் கற்பகமே
களியா ரமிர்தே கரணமெனைப்
பற்றா நிலையிற் பதிவித்தாய்
பரனே உன்றன் அடைக்கலமே. 9

வாம பாகப் பெண்மணியுள்
　　மகிழும் குருந்தே கனியமுதே
நேம முற்ற நீர்மையுளார்
　　நேசித் தேத்து தயாநிதியே
காம முற்ற கயவரெலாங்
　　காண வொண்ணாக் கதிரொளியே
ஏம நெறியுய்த் தெனையாண்ட
　　எந்தாய் உன்றன் அடைக்கலமே. 230 + 10 = 240

## 25. நிராதரவுப் பத்து

('பொன்னார் மேனியனே' என்னும் தேவாரப் பண்)

பண்: நட்டராகம் (பந்துவராளி)

எண்ணா ரின்புரமூன் றெரிவீழ்ந்திட நோக்குநுதற்
கண்ணா ரின்கனியே கலைமேவுங் கதிரொளியே
பண்ணா ரின்னிசைசேர் பரவைக்கரைச் செந்திலமர்
அண்ணா நின்னையல்லால் எனக்காரினி ஆதரவே. 1

என்பே பூணணியாய் எரிகாட்டிடை ஆடிடுஞ்சீர்
மன்பே ராதிரையான் மகிழுந்திரு வேற்குமரா
தென்பே ராழிக்கரை திகழுந்திருச் செந்திலமர்
அன்பே நின்னையல்லால் எனக்காரினி ஆதரவே. 2

கறைசே ருங்களத்தன் களிகூரத் திருச்செவியில்
மறைபே சுங்கிளியே மயில்மீதமர் தேசிகனே
மறைபா டித்திரைகள் வழுத்துந்திருச் செந்திலமர்
இறைவா நின்னையல்லால் எனக்காரினி ஆதரவே. 3

தூசா மாமணியும் துகிலுந்துவர் வாயழகும்
ஆசா பாசமறும் அழகார்திருச் சேவடியும்
கூசா தென்னுளமே குலவும்படி பேரருள்செய்
ஈசா நின்னையல்லால் எனக்காரினி ஆதரவே. 4

மேதி ஊர்ந்திடுவோன் விரித்தேவிழக் கால்விசிறும்
பாதி மாதவனும் பரிவோடணை பாலகனே
சோதி மாமணிகள் சுடருங்கரைச் செந்திலமர்
ஆதி நின்னையல்லால் எனக்காரினி ஆதரவே. 5

மன்னே மாமயிலோய் மலைமாதுமை யாள்மகிழும்
பொன்னே பூரணனே பொருளாயெனை
ஆண்டுகொண்டாய்
என்னே நின்கருணை எழில்மேவிடும் செந்திலமர்
அன்னே நின்னையல்லால் எனக்காரினி ஆதரவே. 6

பொய்யா டும்மனத்தேன் புரிகுற்றமெல் லாம்பொறுத்தே
துய்யா நின்னடியே துணையாயளித் தாண்டுகொண்டாய்
மெய்யா டும்மனத்தார் மிகமேவிடும் செந்திலமர்
ஐயா நின்னையல்லால் எனக்காரினி ஆதரவே. 7

கந்தா என்றுனையே கருத்தோடுணர்ந் தேத்திடுவோர்
சிந்தா குலந்தவிர்க்கும் சிகிநற்பரி வேலவனே
சிந்தா மணிசிதறும் கடலின்கரைச் செந்திலமர்
எந்தாய் நின்னையல்லால் எனக்காரினி ஆதரவே. 8

இருளே தன்னியல்பாய் எணியேங்குறு மேழைமன
மருளே மாற்றியுன்றன் மலர்ச்சேவடி உன்னிடவே
தெருளே தந்தருளும் திருக்கந்தனே செந்திலமர்
அருளே நின்னையல்லாமல் எனக்காரினி ஆதரவே. 9

இப்பா ரிற்பிறப்போ டிறப்பிற்கழல் பேதையெனைத்
தப்பா தாண்டுகொண்டாய் தலைவாநின் னருள்பெரிதே
ஒப்பா ராருமிலா உயர்வேலனே செந்திலமர்
அப்பா நின்னையல்லால் எனக்காரினி ஆதரவே.

240 + 10 = 250

## 26. கொண்ட பத்து

('பற்றற் றார்சேர்' என்னும் தேவாரப் பண்)

**பண்:** பழம்பஞ்சுரம் (சங்கராபரணம்)

செழுந்தே னமுதே திருவருளே
செல்வத் திரளே சிவனருளும்
கொழுந்தே உமையாள் குலவுமொரு
குருந்தே கொடிதாம் பவக்கடலில்
விழுந்தே திகைத்த எனையாண்ட
விந்தை மயிலோய் வினையேனுந்
தொழுந்தே சிகனே தொழும்பனெனைச்
சுடர்ச்செம் பதத்தாட் கொண்டாயே. 1

மன்னே மலைவாழ் மாமணியே
மறையா கமங்கள் வழுத்திடுசெம்
பொன்னே பொருளே புகழ்வேலோய்
புனிதா ஞானப் புரியோனே
எந்நே ரமும்நின் னிணையடியை
இறைஞ்சி யேத்தா எளியேனை
அன்னே அன்போ டாண்டனைநின்
அழகாம் பதத்தாட் கொண்டாயே. 2

கண்ணா ரொளியே கனிரசமே
கந்தா உனது கழலிணையை
எண்ணா நின்றே இடருற்ற
எளியேன் தனையும் இனிதாண்டு
பண்ணா ரிசையா லுனைப்பரவும்
பணியாம் பரிசே பரிந்தளித்தாய்
அண்ணா அலைவாய் அரசேநின்
அன்பாம் பதத்தாட் கொண்டாயே. 3

நாணும் செயலால் நலிவுற்று
நலனே உன்றன் நல்லருளைக்
காணுந் திறனில் லாக்கடையேன்
கல்லாம் நெஞ்சைக் கனிவித்து
பூணும் படியுன் பொற்கழலைப்
பொருந்த என்னுட் பொலிவித்தாய்
பேணுந் தாயே பெரியோயே
பிரியாப் பதத்தாட் கொண்டாயே. 4

பிறவா விறவாப் பெருநிலையைப்
பெறவே யுணராப் பிழையேனும்
மறவா நினைவால் உனைவணங்க
மகவா யெனைநீ மகிழ்ந்தாண்டாய்
குறமா தினையே குலவுமொரு
குமரா என்னுட் குடிகொண்ட
உறவே என்னை உரிமையுடன்
உயர்வாம் பதத்தாட் கொண்டாயே. 5

மணியே மதியே மலைமருந்தே
மன்னா எனவா னோர்பரவிப்

பணிவே லவனே பரைசுதனே
    பரனே உன்றாள் என்றலைமேல்
அணியாய்ப் புனைவித் தாட்கொண்ட
    அரசே மயில்மீ தமர்வோனே
தணிகா சலனே தற்பரனே
    சரணாம் பதத்தாட் கொண்டாயே. 6

சிலையாம் மனதைச் சிதைவித்துச்
    சிறியே னெனையும் சிறப்பித்துன்
நிலையாம் பதமும் நினைப்பித்து
    நிமல அருளை நிறைப்பித்து
அலைவாய் மணிகள் ஆடிடும்சீர்
    அலைவாய் அரசே ஆட்கொண்டாய்
இலையாம் வேலுக் கிறையோனே
    இணையாம் பதத்தாட் கொண்டாயே. 7

தீரா வினையால் திகைப்புற்றுத்
    திடமா யுன்றன் திருவடியைச்
சேரா துலகில் திளைப்புற்றுச்
    சிந்தை நொந்து திரிந்தேனைச்
சீரா யணைத்துத் திருவடியைச்
    சேர்ப்பித் தாயென் சென்னிமிசை
ஆரா வமுதே அடியேனை
    அன்பாம் பதத்தாட் கொண்டாயே. 8

வள்ளிக் கொடியும் வான்பிடியும்
    மருவி மகிழும் மணிமார்பா
புள்ளி மயிலிற் போந்தருளும்
    புனிதத் தெய்வப் புதுமலரே
கள்ள மனமுங் கழன்றோடக்
    கடையே னெனையும் கடைக்கணித்தே
அள்ளக் குறையா அமுதளித்தே
    அருட்பூம் பதத்தாட் கொண்டாயே. 9

விஞ்சும் வினையும் வெருண்டோட
    விரைசேர் பாதம் வினையவனேன்
நெஞ்சம் பதித்த நிறையொளியே
    நிமலா நீலப் பரியோனே

கொஞ்சும் சதங்கை குலுங்கிடவே
கௌரி மகிழ வருபாலா
தஞ்சம் என்ற தமியேனைத்
தயவாம் பதத்தாட் கொண்டாயே. 250 + 10 = 260

## 27. உய்ந்த பத்து

('மாசில் வீணையும்' என்னும் தேவாரப் பண்)

**பண்:** திருக்குறுந்தொகை (நாதநாமக்கிரியை)

நிறைவெ லாந்தரு நீளயி லேந்திடும்
குறையி லாக்குணக் குன்றென நின்றிடும்
சிறைம யிலிறை சீரலை வாயினில்
மறைதொ ழும்பெரு மானைக்கண் டுய்ந்தெனே. 1

வினையெ லாங்களை வித்தக வேலனை
அனையி னன்புகொண் டாண்டவென் னையனை
நினைதொ றும்மனம் நின்றிடு நித்தனைக்
கனைக டற்றளிக் கண்டுகொண் டுய்ந்தெனே. 2

வேத னைமிகு வெம்பவ நோயறத்
தீத னைத்தையுந் தீர்த்திடு தேவனைக்
கோதி லாத்திரை கூங்கடற் செந்திலில்
நாத னின்பதம் நன்றுகண் டுய்ந்தெனே. 3

கால னுங்கம லோனும ணைந்திடாச்
சீல மாகிய செவ்வழிச் சென்றிடக்
கோல நற்பதம் கூட்டுகு கேசனை
வேலை சூழ்தளி மேவிக்கண் டுய்ந்தெனே. 4

மிண்டு செய்மன மாயைமி ரண்டிடப்
பண்டை ஊழ்வினை பாழ்படச் செய்தெனைத்
தொண்டு கொண்ட சுடர்மணி வேலனைத்
தெண்டி ரைக்கடற் செந்திற்கண் டுய்ந்தெனே 5

புரையு லாமன மாயையைப் போக்கியே
உரையொ ணாநிலை யுற்றிடச் செய்தவன்
விரைக டம்பணி வேதநற் கந்தனைக்
குரைக டற்றளிக் கூடிக்கண் டுய்ந்தெனே. 6

பாதி மாமகள் பாகனுக் கோர்பொருள்
ஓதி மாபுகழ் உற்றஎம் நாதனைச்
சீத மார்கடற் செந்திலிற் சென்றுநான்
போத மெய்திடப் போற்றிக்கண் டுய்ந்தெனே. 7

பாடி யேத்திப் பணிந்தவர் பாவமும்
ஓட வென்றிடும் ஒண்சுடர் வேலனைப்
பாடிப் பாடித் திரைதொழு செந்திலில்
நாடி என்வினை நாணக்கண் டுய்ந்தெனே. 8

வான வர்க்கிறை வாழ்த்தருள் வீரனை
தீன வர்க்கருள் செய்திடு தேவனை
ஞான வீடருள் நாதனைச் செந்திலில்
தேன னைப்புகல் தேர்ந்துகண் டுய்ந்தெனே. 9

அன்னை தந்தை அருட்குரு அண்ணலான்
என்னைத் தன்னடிக் கேன்றத யாளனைப்
பொன்னொ ளிச்சிக ரத்தளி போந்துநான்
என்னை யர்ப்பணஞ் செய்துகண் டுய்ந்தெனே

260 + 10 = 270

## 28. அதிசயப் பத்து

(திருவாசகம்-'முத்திநெறி யறியாத')

இராகம்: மோகனம்

உன்னருளை இன்னதென
உணராத சிறியேனை
பின்னையொரு நிகரில்லாப்
பெருநிலையில் வைத்திடவே
என்னையொரு பொருளாக
ஏற்றுக்கொண் டெளியேனை
அன்னையென அன்புடனே
ஆட்கொண்டாய் அதிசயமே. 1

தன்னொப்பா ரில்லாத
தலைவாநின் தாளடைந்த
என்னொத்த அருளுடையா
ரீண்டுளரோ எங்கோவே

மின்னொத்த பொய்யுடலை
மெய்யாக நினைவேனை
பொன்னொத்த பதங்காட்டிப்
புகல்தந்தாய் அதிசயமே. 2

மருளுடையேன் பிழையெல்லாம்
மாண்புறவே பொறுத்ததிரு
அருளுடையாய் அம்பலவன்
அகங்களிக்கும் உமைபாலா
இருளுடையேன் மனதிலுற்ற
ஏக்கமெலாம் களைந்தென்னை
அருளுடைநின் பதங்காட்டி
ஆட்கொண்டாய் அதிசயமே. 3

ஈண்டுலகில் உனைமறந்தே
எனையேநான் பெரிதாக
மாண்டுபல பிறவிகளில்
மருள்கொண்டு திரிந்தேனை
ஆண்டுகொளக் குறிகொண்ட
அளவில்லா நின்கருணை
ஆண்டவநீ தந்தெனையே
ஆட்கொண்டாய் அதிசயமே. 4

பிணக்குறுமென் மனப்பரியைப்
பேரருளால் அடக்கியெனை
மணக்குறுநின் பதமலரிற்
பணிகொண்ட மாண்பினையும்
கணக்கிடவும் எளிதோவேல்
கரங்கொண்ட கதிரேசா
வணக்கமிலா நாயேனை
வாழ்வித்தாய் அதிசயமே. 5

அலையெனவே வருபிறவி
ஆழியினில் வீழ்வேனை
மலையெனவே நின்கருணை
மிகவளித்தே மயக்கொழித்தாய்
சிலையெனவே கடினமனக்
கடையேனைச் சிறியேனை

அலைவில்லா மனந்தந்தே
ஆட்கொண்டாய் அதிசயமே. 6

கறைகொண்ட சிறுமதியேன்
கயமையெலாம் மிகப்பொறுத்தே
நிறைகொண்ட நின்னின்பக்
கடல்மூழ்க நிகழ்வித்தாய்
நறைகொண்ட நீபமணி
நற்புயனே சண்முகனே
மறைகொண்ட பதங்காட்டி
மலர்வித்தாய் அதிசயமே. 7

பந்தமுறும் உலகரங்கில்
பலகாலம் நடித்தலுத்தே
சிந்தைமிக நொந்தேனைச்
சேவடியை மறந்தேனை
விந்தைமயில் மீதமர்ந்தே
வியனுறுநற் காட்சிதந்தே
அந்தமிலாப் பதங்காட்டி
ஆட்கொண்டாய் அதிசயமே. 8

சிறியவனேன் நின்னடியைச்
சிந்திக்க மறந்தாலும்
அறிவொளியால் உனைக்காண
அருள்செய்த அழகோனே
நெறியல்லா நெறிதன்னில்
நில்லாமல் தடுத்தாண்டாய்
குறியாக நின்பதத்திற்
கூட்டுவித்தாய் அதிசயமே. 9

கள்ளமிகு நெஞ்சுடையேன்
கள்ளமெலாம் களைந்தருளால்
உள்ளமல இருள்நீக்கி
உயர்ஞான ஒளியேற்றித்
தெள்ளமுத மெனஇனிக்கும்
தேனருளைப் பருகவைத்தாய்
அள்ளிடினுங் குறையாஇன்
படைவித்தாய் அதிசயமே. 270 + 10 = 280

## 29. போற்றிப் பதிகம்

('ஓம்பினேன் கூட்டை' என்னும் தேவாரப் பண்)

பண்: திருநேரிசை (நவரோசு)

பொய்யொரு வடிவாய்த் தோன்றும்
புவியுறு போக மெல்லாம்
மெய்யென நம்பி நாளும்
மெலிவுறு பேதை யேனைத்
துய்யனே நினத டிக்கீழ்த்
துகளறு வாழ்க்கை தந்தே
உய்யவே ஆண்டு கொண்டாய்
உயர்வுறு குருவே போற்றி. 1

நல்லன என்றும் நாட
நாணியே வாழும் என்றன்
கல்லன நெஞ்சங் கண்டும்
கனிவுடன் அருளே தந்து
பொல்லன யாவும் நீக்கிப்
புகழுறு வீட ளித்தே
வல்லனே ஆண்டு கொண்டாய்
வடியயிற் குருவே போற்றி. 2

பிணிகொளும் யாக்கை பேணிப்
பிறப்பினோ டிறப்பி லாழும்
திணிவிலா நெஞ்சங் கொண்டே
திகைப்புறு மேழை யேனை
அணிதிகழ் பாதங் காட்டி
அழிவிலா மோன ஞானத்
துணிவுதந் தாண்டு கொண்ட
தூயசற் குருவே போற்றி 3

பஞ்சரக் கிள்ளை யாகப்
பதுங்கிய கூட்டை நீக்கி
வெஞ்சின நமன்பி ணிப்பில்
வீழ்ந்திடு வினைய னேனைக்
கஞ்சமா மலர்த்தாள் காட்டிக்
கவலைகள் யாவும் போக்கி

அஞ்சலென் றாண்டு கொண்ட
அருள்மிகு குருவே போற்றி. 4

ஐம்புலன் வழியே யோடி
அழிவுற விழையும் நெஞ்சம்
வெம்பியே நின்னைப் போற்றா
வீணனேன் வினையும் நீக்கிச்
செம்மைசேர் பாதங் காட்டிச்
சிதைவுறா வாழ்வுங் கூட்டி
அம்மைபோல் ஆண்டு கொண்ட
அலைநகர்க் குருவே போற்றி. 5

உள்ளன போலத் தோன்றி
ஒருநொடிப் போதின் மாயும்
கள்ளங்கொ ளுலகி லிங்குக்
களிப்புற மூழ்கு வேனைத்
தள்ளிட மனங்கொ ளாது
தாங்கிடும் தாய்நி கர்த்த
வள்ளலே ஆண்டு கொண்ட
மனத்தமர் குருவே போற்றி. 6

வீடொடு பொருளும் பொன்னும்
விரும்பிடு வீண னாகி
வாடிய பேதை நெஞ்சம்
வாழ்வுற இலகு ஞான
வீடுறு பேற ளித்தே
விரைமலர்ப் பாதங் காட்டிப்
பீடுறு மாறு செய்த
பெறற்கருங் குருவே போற்றி. 7

என்னையே பெரிதா எண்ணி
இடர்களைச் சுவைக்கு மேழை
தன்னையே தாபம் நீக்கித்
தகவுகொள் பாதங் காட்டி
நின்னையே எண்ணி நெஞ்சம்
நெகிழ்வுறு நிலையுந் தந்தே
அன்னையா யாண்டு கொண்ட
அருந்தவக் குருவே போற்றி. 8

ஓதியும் பிறர்க்கு ரைத்தும்
உளமடங் காம லோடும்
பேதையேன் உளம டக்கிப்
பேச்சறு நிலையில் வைத்தே
கோதறு பாதங் காட்டிக்
குறைவிலா நிறைவுங் கூட்டி
நாதனா யாண்டு கொண்ட
ஞானமெய்க் குருவே போற்றி. 9

காலனுங் கடுகி வந்து
கலங்கிட ஈர்க்கும் போதில்
ஓலமிட் டலறி யேயா
னுணர்வழி யாம லுன்னைச்
சீலமோ டுணரும் தெய்வச்
சீரிய உளமுந் தந்த
கோலநின் னருட்கீ டுண்டோ
குருபர குருவே போற்றி. 280 + 10 = 290

## 30. பிடித்த பத்து

(திருவாசகம்-'உம்பர்கட் கரசே')

இராகம்: மோகனம்

கந்தனே முக்கட் கடவுளார் களிக்கும்
கடம்பனே கன்னியர் கணவா
பந்தமீ தூறப் பவக்கட லாழும்
பாலனா மெனையுநீ பரிந்தே
சொந்தமா யெண்ணிச் சுடர்மிகு மோனச்
சுகநிலை தந்தெனை யாண்டாய்
எந்தையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 1

வடமலை சிலையா வளைத்தவன் மகிழ
மடியமர் தண்மதிக் குருந்தே
திடமறும் உலகில் திகைப்புற வீணே
திசைதடு மாறியே ஓடும்

அடமிகு மனத்தின் அயர்வினை நீக்கி
ஆண்டனை ஐயனே என்னுள்
இடம்பட உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 2

மாசிலா வேலாய் மறைபுக ழொளியே
மாதவ ரேத்திடும் உறவே
ஆசிலா மணியே அடியவ ருள்ளத்
தமர்ந்திடும் நின்னருட் டிறனைப்
பேசிடா எளியேன் பேதைமை நீக்கிப்
பெறற்கரும் பெருநிலை அளித்தாய்
ஈசனே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 3

பனிமலை மகளும் படர்சடைக் கங்கை
பரிவுடன் வைத்திடும் பரனும்
கனிவுடன் உன்னை வருகவென் றழைக்கக்
களிமயில் மிசைவரு குகனே
அனியமொன் றின்றி ஆண்டநின் கருணை
அபலையேன் செப்பவும் எளிதோ
இனியவ உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 4

கறையணி கண்டன் களித்திடுங் கனியே
கற்பகக் களிற்றினுக் கிளையோய்
நறையணி நீபத் தொடையனே ஞான
நாதனே எளியவ னென்றன்
குறைகளை எல்லாம் குணமெனக் கொண்டாய்
குரைகடற் றளியினிற் குலவும்
இறையவ உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 5

வளியினும் விரைவாய் உலகினை வலங்கொள்
மனப்பரி யதிலமர்ந் தடியேன்
களிமிக வாகிக் கந்தனே உன்றன்
கழலிணை மறந்தவிச் சிறியேன்
தெளிவுற ஞானத் திடமதை நல்கித்
தேசொளிப் பதத்தினில் வைத்தாய்

எளியவ னுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 6

குறுமுனி கேட்கத் தமிழ்மொழி பகர்ந்த
குருபர சண்முகக் கோவே
மறுகிடு மனத்தின் மயலினை மாய்த்தே
வறியவ னெதிர்படு நிதிபோல்
குறுநகை காட்டிக் குடிமுழு தாண்ட
குரவணி பாதனே என்னுள்
இறுகுற உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 7

கருத்திலே உன்னைக் கருதிடாத் தீயேன்
கசடெலாம் நீக்கியே என்னுள்
நிருத்தமே புரியும் நிமலனே வள்ளி
நேசனே நிகரிலா ஞான
விருத்தனே தேவர் விரும்பிடும் தேவே
விகசித மயிலனே விலகா
திருத்தியே என்னுட் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 8

தஞ்சமா யெண்ணிச் சார்ந்தமெய் யன்பர்
தடையெலாம் நீக்கியே உன்றன்
கஞ்சமா மலர்த்தாள் காட்டியே இன்பக்
கதிதரும் கந்தனே எனையும்
அஞ்சிடா யெனவே ஆண்டநின் னருளை
அடியனேன் புகலவுந் தரமோ
எஞ்சிடா துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 9

மின்னையே நிகர்வேல் மின்னிடுங் கரத்தோய்
மிச்சையே மிகுந்திடும் பேதை
என்னையே இனிதா வெடுத்தணைத் தாண்ட
ஏந்தலே எழில்மிகு குமரா
அன்னையே அருள்செய் அப்பனே அடியேன்
அறிவினி லறிவென உன்னை
என்னுளே இனிதாய்ச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 290 + 10 = 300

## 31. முருக கீதம்

('அரனை யுள்குவீர்' என்னும் தேவாரப் பண்)

பண்: குறிஞ்சி (சுருட்டி)

எண்ணம் நேர்வுற, வண்ண மாமயில்
அண்ணல் செம்பதம், நண்ணி வாழ்விரே. 1

சாடு தீவினை, வாடி யோடவே
நீடு வேலனைப், பாடி ஏத்துமே. 2

பந்தம் யாவுமே, சிந்தி மாயவே
எந்தை பாதமே, சிந்தை கொள்மினே. 3

மோன மென்னுமோர், மேனி லைதரும்
ஞான மூர்த்தியை, த்யானம் செய்மினே. 4

வாதை தீரவே, கோதை வள்ளியின்
நாத னாமமே, ஓதி உய்மினே. 5

மருளி லாநிலை, மருவி வாழவே
உருகி யுள்குவீர், முருகன் நாமமே. 6

குறையெ லாமற, நிறைவெ லாந்தரும்
சிறைம யிலமர், இறையை எண்ணுமே. 7

வேலை வற்றிட, வேலை ஏவிய
வேல னைத்தொழ, மேல தாகுமே. 8

அருவி போல்விழி, யருவி நீருக
முருகன் நாமமே, உருகி ஏத்துவீர். 9

சீர லைப்பதி, வீர வேலனின்
சீரை யோதவே, சேர வாருமே. 300 + 10 = 310

## 32. திருவெம்பாவை

(திருவாசகம்-'ஆதியும் அந்தமும்')

இராகம்: மோகனம்

ஞானமெய் வீடருளும் நற்செந்தில் மாமுருகன்
வானவர் வெந்துயர்தீர் வல்லமையான் தொல்புகழைக்

கானமாய்ப் பாடிடவே கார்க்குழலாய் கண்திறவாய்
ஈனமாம் வல்வினையை நீக்கிடுமோ ரேரகத்தோன்
தானவர் தாமழியச் சாடிய தாண்மலரின்
தேனமுதம் மாந்தியே தேக்கிக் கிடத்தியோ
ஊனமில் நல்லமு தூட்டுங் கடவுளருள்
மோனமாம் சிந்மயநீர் மூழ்கேலோ ரெம்பாவாய். 1

வேலைவெண் முத்தம் விளையாடுந் தண்செந்தில்
கோலமார் நற்குமரன் கோழிக் கொடியுடையோன்
மாலைகொள் மார்பினன் மன்னன் மயில்வீரன்
வேலைச்செங் கைக்கொண்ட வேளின் புகழ்த்திறனைச்
சோலைநற் கிள்ளைகள் சொல்வ தறியாயோ
சேலைநேர் கண்ணாய் தியங்கா தெழுந்திடுவாய்
மேலைநம் வல்வினைகள் வீழ்த்தியே நாமுய்யக்
கோலமாய்க் கோனவன்தாள் கூடேலோ ரெம்பாவாய். 2

செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து செவ்வல்லி கூம்பினகாண்
எங்குமே புட்கள் இயம்பின எல்லோரும்
உங்கள் மனைவாசல் உற்றோ முணராயோ
செங்கமல மென்கரத்தாய் சீர்க்கதவம் தாள்திறவாய்
சிங்கமுக சூரன் செருக்கழித்த செவ்வேளின்
பொங்குங் கருணைப் புகழ்பாடிப் போதகன்றாள்
சிங்கார மாகநம் சென்னியைச் சேர்விக்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். 3

தேனிகரும் மாதறுவர் சீராட்டும் செல்வனவன்
வானவர்தம் காவலன்தன் வண்ண மலரடியில்
தேனினம்போல் மொய்த்துத் தெவிட்டா வமுதருந்த
மானினங்கள் நாணிடும் மங்காய்நின் இல்வந்தோம்
பூநனையும் கூந்தலாய் போதாதோ நின்னுறக்கம்
கானவர்கோன் செல்வமகள் காந்தன் திறம்பாடி
யானய லின்றியே யாவரும் அன்னவன்கீழ்
மோனமாம் பாதநீர் மூழ்கேலோ ரெம்பாவாய். 4

முள்ளின் முளரி முகைமுகம் காட்டினகாண்
புள்ளும் பரவின பூம்பொழில் தேன்சொரிய
வெள்ளி யெழுந்தே விழுந்தது வல்லிருளும்
கள்ளத்தாற் கண்புதைத்த கள்வீ யெழுந்திராய்

வெள்ள மணைத்த விமலன் விறற்குமரன்
வள்ளிக் கொடிபடரும் வள்ளல்நம் வேலவனின்
அள்ளக் குறையா வருளமுதம் உண்போம்நாம்
தெள்ளும் புனலாடித் தேர்ந்தேலோ ரெம்பாவாய்.5

அந்திச்செம் மேனியன் அத்தன் தருகுமரன்
கந்தநற் கார்குழலாள் கௌரிதன் மைந்தன்நம்
பந்தவெம் பாவக் கடல்கடக்கத் தாட்புணையைத்
தந்தானைப் பாடித் தழுதழுத்துக் கண்கள்நீர்
சிந்தாமற் சிந்தை செருக்குற்றுக் கண்வளரும்
கொந்தவிழ் பூம்பள்ளி கோத்த கருங்குழலாய்
விந்தைமா மஞ்ஞைமிசை மேவுதிருச் செந்தூரன்
செந்தளிர்ப் பாதமே சேரேலோ ரெம்பாவாய். 6

கார்வெம் பிறவி கடிந்தருள வல்லானைத்
தேர்வரிய வீறுடைய சேமநிலை தானருளப்
பார்மிசைப் பங்கயத்தாள் சென்னியில் வைப்பானைச்
சீர்மிகுத்த செல்வங்கள் தந்தருளும் சேவலனைக்
கூர்வே லுடையவன் கோதில் குணம்பாடக்
கார்நிறை கண்ணினாய் கால்மறையின் தாள்திறவாய்
ஆர்கலி சூழ்செந்தி லண்ணல் அடிபோற்றி
மார்கழிநீ ராடியே வாழ்த்தேலோ ரெம்பாவாய். 7

விண்ணவர் கோன்பிடியும் வேடர் குலமானும்
கண்ணார் மணியென் றிருமருங் கெய்திடவே
வண்ணமார் மஞ்ஞைமேல் வந்திடும் வேலன்தாள்
புண்ணியர் போற்றிசைப்பப் பொய்யிருள்
மாய்த்தருளும்
தண்ணமர் தார்புனைந்த தேவன்தாள்
சென்னிவைத்து
உண்ணேர் ஒளிவிளக்கை ஓங்காரத் துட்பொருளை
நண்ணுதற் கில்லாமல் நாணா துறங்கும்நீ
திண்ணார் கதவந் திறவேலோ ரெம்பாவாய். 8

எங்குமிலா வின்பம் இனிதே நமக்கருளிப்
பங்கப் படவினையைப் பார்த்தருளும் கந்தன்சீர்
மங்கைய ரெல்லாம் மகிழ்ந்தாடி உள்ளுருகித்
தங்காய்நின் வாசலிற் சார்ந்த தறியாயோ

சிங்காரப் பூவணையிற் சித்தம்நீ வைத்தனையோ
கங்கா நதிச்சுதன்றன் கந்தமிகு தாண்மலரைச்
சங்கையற நம்சென்னி சார்வித்த செம்மலினை
அங்கங் குளிர்ந்துபுகழ்ந் தாடேலோ ரெம்பாவாய். 9

மண்ணாகி நீராகி வல்லெரியாய்க் கால்விண்ணாய்க்
கண்ணாகி என்னுளே காட்சியாய் நின்றொளிரும்
விண்ணாட் டவர்க்கின்பம் தந்தருளும் வேலன்சீர்
பண்ணார நாம்பாடிப் பாசக் கடல்கடப்பத்
தண்ணார் மதிமுகத்தாய் தாழா தெழுந்திராய்
வண்ண மலர்ப்பள்ளி வாளா வுறங்கிடநீ
எண்ணமுங் கொண்டனையோ ஏனிந்தப் பேதைமைதான்
திண்ணமா யன்பரகஞ் சேர்ந்தே சிறக்குஞ்சீர்
அண்ண லமுதநீ ராடேலோ ரெம்பாவாய். 10

கள்ளமிலா நெஞ்சிற் களிவெள்ளம் பொங்கிடவே
நள்ளிருளா மஞ்ஞானம் நாசமுற உள்ளமதில்
தெள்ளிய மெய்ஞ்ஞானத் தீபமாய் நின்றொளிரும்
புள்ளி மயில்வீரன் புண்ணியன் பொன்னடியை
உள்ளமே கொள்ளாமல் உன்னியல்பை நீமறந்து
பள்ளிமேற் பொற்பாவை போன்றுறங்கும் பான்மையாய்
வெள்ளி மலையீசன் செல்வன்றன் மெல்லடியைக்
கள்ளமெலாம் நீங்கக் கருதேலோ ரெம்பாவாய். 11

நாவலர் நற்றமிழ் மாலைகொள் மார்பினன்
யாவருந் தேரா வதீதபதம் ஈந்திடவே
மேவருட் கோலமாய் மேதினியில் வந்தருளும்
சேவலும் வேற்படையும் செங்கரங் கொண்டபிரான்
சேவையில் நாமுய்யச் செல்வன்சீர் பாடிடவே
காவியங் கண்ணாய் களங்கஞ்சே ரிப்புவியில்
மேவிடும் வெம்பிறவி மேவா தருட்சுனையில்
யாவரும் மார்கழிநீ ராடேலோ ரெம்பாவாய். 12

ஓதிம சாலங்கள் ஒண்கமலப் பள்ளிநின்றும்
தீதிலா வெண்மைச் சிறகுதறிக் கண்விழித்துத்
தாதவிழ் தேன்சொரியும் தண்டலை சேர்ந்தனகாண்
மாதவன் கேசவன் மால்மருகன் மாண்புமிகும்
பாதமாம் வேரிமலர் பண்பொடுநாம் சூடிடவே
காதணவுங் கண்ணினாய் காலத்தைப் போக்காதே

ஆதர வாகுமவன் அன்பருவி பாய்மடுவில்
கோதாய்நீ ராடிச் குளியேலோ ரெம்பாவாய். 13

திங்களஞ் சேய்கொன்றைசேர்சடையன் பாலுறையும்
சங்கரியாள் முத்தாடும் சண்முகன் வேல்முருகன்
வெங்கனல் வீர அவுணர் விறலழித்து
மங்கல நாண்சசி வாழ்வுறத் தந்தானின்
பொங்கருட் பூம்பதம் போற்றிநாம் மாண்புறவே
திங்கள்நேர் மாமுகத்தாய் தெய்வத் திருக்குமரன்
எங்குநிறை ஏரகத்தோன் எந்தை புகழ்பாடிப்
பொங்குமிப் பூம்புனல்பாய்ந் தாடேலோ
ரெம்பாவாய். 14

சங்கங் கரங்கொண்ட சாரங்கன் மால்மருகன்
மங்கா வரமுதவும் மாமுகமோ ராறுடையான்
சங்கத் தமிழின் தலைவன் தளிர்க்கரத்தான்
பொங்கா தரவோடு பொன்னடிதந் தாதரிக்கும்
சிங்கார வேலவனச் சீர்மயிலிற் சேருமவன்
பொங்கரளி பண்ணிசைத்துப் போற்றும் புரவலனாம்
மங்காச் சுடரயிலோன் மாண்சே வடிபாடி
அங்கங் குளிரப்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். 15

அளிபடர்ந்த கண்ணினான் அன்பர்க்கோ ரன்பன்
ஒளிபடைத்த வேற்படை ஓங்குஞ்சீர்க் கையன்
எளியவர்க் கென்றும் இரங்கும் கருணை
துளியேனும் ஓராது துன்பத்தில் தோயும்
அளியாடுங் கோதாய் அறியாமை யென்னே
வளியுண்ணும் பாம்பணையில் வாழ்மால் மருகன்
புளினஞ்சேர் நற்செந்தில் புண்ணியன் பாத
நளினஞ்சேர் நன்னீர் நயவேலோ ரெம்பாவாய். 16

அடியவர் துன்பமுறின் அன்னையெனத் தாவி
மிடியகற்ற வந்தருளும் மின்னனைய வேலன்
நடித்திடு தோகைமயில் நாயகன்நற் சீலன்
முடிவற்ற வாழ்வருளும் மூர்த்தியின் பாதம்
துடியிடைத் தோகையாய் நாம்துதித்து மேனி
பொடித்திட ரோமம் பொழியநீர் கண்கள்
கொடியவர்க்குத் தீயாம் குமரன்றன் ஞான
அடிக்கமல வாரிதிநீ ராடேலோ ரெம்பாவாய். 17

விடையேறு மீசன் விரும்பிடும் பாலன்
நடையேறு கொண்டன் நாணணி மாதர்
புடைசூழ வந்தருளும் புள்ளிமயில் வீரன்
கடையான காமங்கள் காய்ந்தருள்வோன் நீபத்
தொடையேந்து மார்பினன் தூயவர்க்காம் தோழன்
தடையுறு மாயையைச் சாய்த்தருளுந் தன்யன்
தடையிலா ஞானமாம் சம்பத்தை நல்கும்
முடிவிலா மோனநீர் மூழ்கேலோ ரெம்பாவாய். 18

கராவென்னும் ஐம்புலனும் கண்மயக்குங் காம
அராவென்றும் சேர்பவமாம் ஆழியிடை மூழ்கத்
தராதென்றும் தன்னடியில் தாங்குதயா மூர்த்தி
குராவென்னும் தேமலரைக் கொள்ளுபதம் போற்றி
வராதென்னும் பாழ்பிறவி நாமுய்ய வாழ்த்த
வராதின்னும் தாழ்வுறின் வாழ்வுறுவ தேது
புராரியும் சொல்கேட்ட போதகனின் பாத
நிராதிசய நின்மலநீ ராடேலோ ரெம்பாவாய். 19

தேறுமறை நாதமெனத் தேர்ந்தொளிரும் தேசிகனை
வீறுபெறு சூரர்குல வெங்கடலைச் செங்கடலாய்க்
கூறுகொளும் சீர்வேலைக் கையதனிற் கொண்டருளும்
ஆறுமுகப் பெம்மான் அடிக்கமலம் நாமிறைஞ்சிப்
பேறுபெற இன்னும் நினையாயோ பேதைமையாய்
மாறுபடு காமாதி வன்பகைகள் துஞ்சிடவே
ஆறுமதி சூடுமவன் அன்பிளவல் சீர்பாடி
ஆறுமுகத் தாமரைகள் பூத்த அருள்மடுவில்
பேறுபெற நாமாடிப் பேர்ந்தேலோ ரெம்பாவாய். 20

அலப்புநீ ராடைகொள் அம்புவியில் தோன்றி
மலப்புறு வெம்பிறவி மாய்த்திடஎந் நாளும்
கலப்பிலா மெய்ஞ்ஞானக் காட்சிதருங் கந்தன்
நலப்புகழ் பாடி நலம்பெறப் போற்றித்
தலப்புகழ் நற்செந்தில் சண்முகன்பொற் றாளைச்
சிலப்புறு சேவடியாய் சேர்ந்துசிந் தித்து
மலப்பரி பாகந் தரவல்ல மன்னன்
உலப்பிலா ஆன்மநீ ராடேலோ ரெம்பாவாய். 21

பொன்றாத பொன்னடியைப் போற்றினர்க்குத்
தண்ணருளைக்

குன்றாது தந்தருளும் குன்றுதோ றாடிவரும்
என்றாதை தாளிணையை ஏத்தித் தொழுதுநிதம்
நின்றாரை வாழ்விக்கும் நீள்வேலா எம்கந்தா
என்றாலும் போதும் இருவினையும் நீங்கிடவே
மன்றாதை மைந்தன் மலரடியில் என்றென்றும்
பொன்றாத இன்பம் புசித்துப் பொலிந்திடவே
நன்றான பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய் 22

விரைமா மலர்க்கண்ணாய் வேண்டித் துதித்தே
உரைமாலை சாற்றி உளமுருகிக் கந்தன்
வரைசிதறக் கூர்வேல் விடுத்திட்ட மன்னன்
விரைசெறி நீபமணி வேலன்விறல் வீரன்
புரையுறு வல்வினை போக்கியருள் தெய்வம்
வரைமகள் பாலன் வரமுதவும் வள்ளல்
வரையிலா நற்கருணை வாரியினில் மூழ்கித்
தரையுறு காமங்கள் சாயேலோ ரெம்பாவாய். 23

தக்கன்றன் வேள்வியைச் சாடித் தகர்த்திட்டோன்
அக்குவட மாலைகொள் அம்பலக் கூத்தனருள்
சிக்கலிற் சிற்சுடராம் சிங்கார வேலன்தாள்
தக்கவா றெம்சென்னி சூட்டுந் தயவுடையான்
முக்குண ஆட்சியை வீட்டிடும் மூர்த்திசீர்
இக்கெனும் இன்மொழி நங்கைமீர் நாம்பாடிச்
சிக்கெனப் பொன்னடி சேர்ந்து பழவினையைப்
பொக்கென நீக்கிப் பொலியேலோ ரெம்பாவாய். 24

பொருப்புச் சிலையான் புதல்வன்நற் கந்தன்
பருப்பதப் பாவைமகிழ் பைந்தமிழ்ப் பாலன்
கருப்புவில் லோன்நாணும் கட்டழகன் வேலன்
மருப்பதம் நாம்நாடி வல்வினையை நீக்கப்
பருப்பதந் தான்பிளந்த பன்னிருகை வீரன்
நெருப்புப் புயலாம் நிசிசரரை வீழ்த்தும்
திருப்புகழ் நாம்பாடித் தீந்தமிழாம் பாவால்
திருப்பதம் போற்றித் திகழேலோ ரெம்பாவாய். 25

**வானவ ராரணன் வந்து வணங்கிடச்சாம்**
பூனத நூபுரம் காலிற் பொலிந்திடுவோன்
**தானவர்** வேந்தனை வீழ்த்துந் தலைவனவன்
ஞானமார் சூரியன் ஞாலமிசை என்னுளத்தே

தானமர் நாயகன் தாழ்வெலாம் நீக்கியே
ஊனமர் வெவ்வினை ஓட்டும் பிரானின்பத்
தேனமர் தாளினைத் தேர்ந்துநாம் தஞ்சமாய்க்
கோனவன் சீர்பாடிக் கூடேலோ ரெம்பாவாய். 26

கடகநிரை ஆர்த்தாடக் காதணிக ளாடச்
சுடர்வீசும் மார்பணிகள் சுந்தரமா யாடக்
கடம்பமலர்த் தாராடக் காற்சிலம்பு மாடப்
படம்விரித்த பாம்பின்மேல் பச்சைமயி லாட
வடவரை பேர வலம்வரும் செவ்வேள்
அடர்பிறவி நோய்தீ ரருமருந்தாம் தெய்வம்
சுடர்விரி வேல்கொண்ட சுந்தரன்தாள் நாடி
இடரிலா இன்பநிலை எய்தேலோ ரெம்பாவாய்.27

வெளியுள் வெளியாகி வேதப் பொருளாய்
ஒளிகட் கொளியாகி உம்பர்க்கோர் தேவாய்
வளியில் வலிவாகி வற்றாக் கடலாய்
புளியம் பழத்தோடு போல்நிலை நெஞ்சத்
தளியில் வளர்கந்தத் தன்மயனின் தண்தாள்
களியில் கலந்திடநாம் காதலுற வேண்டித்
தெளியும் சுவைகமழுந் தீந்தமிழாற் பாடி
எளியயா மெல்லோரும் ஏத்தேலோ ரெம்பாவாய்.28

தெருள்தரு கோடுடைச் சிந்தூரன் தம்பி
அருள்திருத் தாட்கீழ் அசைவற நிற்க
ஒருபொரு ளோர்ந்தே உறவொடும் வேறாய்
இருபொரு ளின்றி ஒருவனாம் தன்னில்
ஒருபொரு ளாகியே ஒன்றிநீ உய்ய
மருவுறு கோதாய் மகிழ்வோ டினிதாய்
இருளூறு நெஞ்சினையும் ஈர்த்திடுங் காந்தன்
திருவுருச் சீர்பாடிச் சேரேலோ ரெம்பாவாய். 29

ஆர்கலி சூழ்செந்தில் ஐயன் அடிபோற்றி
பார்மிசை என்னையாட் கொண்ட பதம்போற்றி
சார்வுறு மன்பர்க் கருளும் சரண்போற்றி
சூர்குலம் வீட்டிய சுந்தர வேல்போற்றி
மார்பலங்க லான்சேவல் வண்ணக் கொடிபோற்றி
சீர்மிகு நீலச் சிறகார் மயில்போற்றி

பேர்மலி ஆறுபடைப் பெம்மான் அருள்போற்றி
மார்கழி நீராடி வாழ்த்தேலோ ரெம்பாவாய்.
310 + 30 = 340

## 33. திருப்பள்ளி யெழுச்சி

(திருவாசகம்-'போற்றியென் வாழ்முதல்')

**இராகம்:** பூபாளம்



பரவையின் முகடெழும் பரிதியி னுதயப்
பகரருஞ் சுடர்மிகப் பரவின வெங்கும்
சுரர்முனி யுரகரும் தூயகிம் புருடர்
சுந்தர கந்தர்வர் சூழ்சிவ கணமும்
தரளநன் மணிகளுந் தாமமும் துகிலும்
தாங்கிநின் சேவடி தனைவிழை கின்றார்
இரவியுந் தொழுதிருச் செந்திலெம் இறைவா
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 1

நன்மலர் விரிந்திட நறுமணங் கமழ
நளினப்பொற் றாமரை நகையுறக் குயிலும்
இன்னிசை எழுப்பின எழுந்தன புள்ளும்
எழின்மயில் நடமிட இளஞ்சுக மார்ப்பப்
பொன்னிறக் கதிர்க்கரம் போற்றிசெய் கதிரோன்
பொன்னடி வருடிடப் போந்தனன் புவியின்
இன்னலம் தருதிருச் செந்திலெம் இறைவா
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 2

வண்ணமா மதிமுகம் மங்கிட வான்மீன்
மறைந்திட விரிகதிர் வானிடை யெழுந்தான்
பண்ணிசை பாடிநின் பொன்னடி வாழ்த்திப்
பழவினை மாய்ந்திடப் பணிந்தனர் புலவோர்
விண்ணிடை வானவர் விரைப்பதம் வழுத்தி
விலையறு நவமணித் தாரொடும் விரைந்தார்
எண்ணிய தருதிருச் செந்திலெம் இறைவா
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 3

காலையின் கதிரொளி கதிரவன் பரப்பக்
கடிமலர் மலர்ந்திடக் கார்வண்டு முரலச்

சோலையிற் குயிலினம் சோபன மிசைக்கத்
தொகுத்தகுத் தொகுவெனத் துடிமயி லாடக்
கோலநற் குழன்மடக் கோதையர் வாழ்த்தக்
குழலிசை வாணருன் குணங்கள் பாடினரால்
ஏலவந் தாட்கொளும் செந்திலெம் இறைவா
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 4

தினகரன் துயிலெழத் தீதிரு ளகலத்
திகழடி யார்துயர் தீர்ந்துனைத் துதித்தார்
அனங்கனை நிகர்நில அரசரீங் கடைந்தார்
அருந்தமிழ் வாணர்சொல் லலர்த்தொடை
கொணர்ந்தார்
உனதருள் பருகிட உற்றனம் சிறியோம்
ஒளிர்வடி வேலனே நீயுண ராயோ
எனையடிக் கழைத்தருள் செந்திலெம் இறைவா
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 5

மறைபுக லந்தணர் மந்திர மோத
மதிமுக வனிதையர் மங்களம் பாடக்
கறைபடு மனதிருள் கடுகியே ஓடக்
கதிரவன் களித்துளங் கண்விழித் தெழுந்தான்
சிறைமயில் அமர்ந்திடும் செல்வனே அடியார்
சேவையில் நிற்கிறார் சிறப்புற வேண்டி
எறிமணி அலைதிருச் செந்திலெம் இறைவா
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 6

இந்திரன் அளகையோன் சித்தரும் எங்கும்
இணையிலாப் பிறதிசைப் பாலரும் வந்தார்
விந்தைகொள் நடம்பயில் விண்ணக மகளிர்
விரிமலர்த் தொடைகொடு வேண்டிநிற் கின்றார்
சிந்தையிற் குடிகொண்ட சிற்சுகக் கடலே
சிறியரா மெங்களைத் திருக்கரத் தணைப்பாய்
எந்தையே எழில்திருச் செந்திலெம் இறைவா
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 7

மந்திரங் கூறியே மறையவர் வாழ்த்த
மாதவ முனிவருன் மலரடி ஏத்த
நந்தமிழ்ச் சொன்மலர் நாவலர் புனைந்தே
நண்ணிநின் னருள்பெற நயந்துநிற் கின்றார்

கந்தநற் களபச்செங் கலவையும் கடம்பின்
களித்தொடை களும்அன்பர் கையுறை
கொணர்ந்தார்
எந்தமைக் காத்தருள் செந்திலெம் இறைவா
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 8

கங்குலும் அகன்றது கடைபடும் உலகக்
கவலைகள் கரைந்திடக் கதிரவன் எழுந்தான்
பங்கயம் மலர்ந்தன பனிமலர் அணிந்த
பாவையர் பதியொடும் பணிந்திட வந்தார்
சங்கமொ லித்தன தாளங்க ளதிரத்
தாரணி தாங்கிடும் தலைவர்கள் வந்தார்
எங்களை ஆட்கொளச் செந்திலெம் இறைவா
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. 9

விண்ணிடை வானவர் விரைந்தனர் ஒளிசேர்
வேல்நிகர் கண்ணியர் வேண்டிநிற் கின்றார்
மண்ணிடைப் பிறவியாம் மருட்கடல் ஒழிக்க
மன்னவ நினதடி வணங்கியிங் கடைந்தோம்
பண்ணிசை பாடியே பதியுனைக் காணப்
பாலரீங் குற்றனம் பன்னிரு கரத்தாய்
எண்ணிடக் கதிதரும் செந்திலெம் இறைவா
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே.
340 + 10 = 350

## 34. திருவம்மானை

(திருவாசகம்-'செங்கண் நெடுமால்')

நம்புமடி யார்க்குதவும் நாயகனை நம்பரனை
அம்புவியில் அல்லல் அறுத்தருளும் ஆதவனை
அம்பலக் கூத்தாடும் ஐயன் அருட்சுதனை
ஐம்புலவே ழத்தை யழித்திடும் கேசரியை
உம்பருங் காணாத ஒப்பிலாத் தன்பாத
அம்புயந் தந்தானைப் பாடுதுங்கா ணம்மானாய். 1

அங்கயற் கண்ணம்மை அன்பிளவல் ஆறுமுகன்
சங்கரன் முத்தாடும் சண்முகன்நம் வல்வினையைப்
பங்கப் படவோட்டும் பார்புகழும் பண்புமிகும்
பங்கயப் பூங்கழலைப் பாவையர்நாம் எல்லோரும்

மங்கள கீதத்தால் வாழ்த்தியருள் வாழ்வுறவே
ஐங்கரன் சோதரனைப் பாடுதுங்கா ணம்மானாய்.2

சீலமிகு மன்பர் சிறப்புறமெய் வீடருளும்
வேலதனைக் கைக்கொண்ட வேளை உமையுதவும்
பாலகனைப் பாரிற் பரிசெனவே பாதமலர்
கோலமுடன் நம்சென்னி சூட்டியருள் கோனவனை
நீலமயில் வாகனனை நேசமிகு நாயகனை
ஆலமுண் டோன்சுதனைப் பாடுதுங்கா ணம்மானாய்.3

உள்ளக் கவலையெலாம் ஓட்டியெனை உய்விக்கப்
புள்ளிக் குரகதமேற் போந்தன்பாய்த் தன்னடிக்கீழ்
அள்ளக் குறையாத ஆனந்தத் தெள்ளமுதம்
அள்ளிப் பருகிடவே ஆடிவரும் ஆறுமுகன்
வள்ளிக் கொடிபடரும் வள்ளல் வளமைதனைத்
தெள்ளித் திருப்புகழாற் பாடுதுங்கா ணம்மானாய்.4

கந்தன் கருணைமிகுங் காவலன் பாவலர்தம்
சந்தத் தமிழ்மாலை தாங்கிவரும் தண்புயத்தான்
முந்துந் தவப்பெரியார் மூவினையும் மூளாமே
பந்தம் பறித்தன்பர் பாரதனில் வாழ்வுறவே
கந்தங் கமழ்பாதம் காட்டியே ஆண்டருளும்
அந்தங் கடந்தானைப் பாடுதுங்கா ணம்மானாய். 5

தஞ்சமென் றோர்க்கபயந் தந்தருளும் தாயனையான்
நெஞ்சமதில் ஞான திவாகரனாய் நின்றொளிரும்
கஞ்சமலர்ப் பாதன் கடம்பணிந்த கந்தனவன்
வஞ்சமற என்னுள்ளம் வாழ்த்தி மகிழ்வுறவே
செஞ்சதங்கை கொஞ்சச் சிறைமயில்மேல் வந்தென்னை
அஞ்சலென ஆண்டவனைப் பாடுதுங்கா ணம்மானாய்.6

சிங்கமுக சூரன் திமிரக் குலமழித்த
சிங்கார வேலன் திரைசூழ்ந்த செந்திலிலே
மங்காத ஞான மறைச்சுடரான் மாதவருள்
பங்கயப் பூம்பதமே வைத்தருளும் பாவலனை
மங்கல நாண்சசிக்கு வான்புகழத் தந்தானை
அங்கம் புளகிக்கப் பாடுதுங்கா ணம்மானாய். 7

முக்கரணத் தாலும் முசியா தெளியேனைப்
பக்குவமா யாட்கொள்ளப் பாத கமலமதைத்

தக்கவா றென்சென்னி சூட்டும் தயவுடையான்
செக்கர்வான் மேனியன் செல்வன் சிறப்புடனே
மிக்கபணி கொண்டென்னை வீடளித்த வித்தகனை
அக்கமணி மாலையனைப் பாடுதுங்கா ணம்மானாய்.8

காமமெனும் சேறதனிற் காலமுந்தி வாழ்விழந்து
ஏமமிலாக் கோப எரியதனில் வீழாது
சேமமிகும் நன்னிலையிற் சேர்விக்கும் செம்மலவன்
நாமமதை நாம்பாடி நங்கைமீர் நற்றமிழால்
தாமமதைச் சூடித் தகவுறுந் தாள்சார்ந்து
யாமவனின் சீரதனை ஏத்துதுங்கா ணம்மானாய். 9

விண்ணாடர் வாழ்வுபெற வேண்டித் துதித்திடவே
மண்ணாட ருய்வான் மகிழ்ந்தவனைப் பாடிடவே
தண்ணா ரமுதளிக்கும் தண்சீ ரலைவாயில்
உண்ணா டொளிவிளக்கை ஒப்பிலா மாமணியை
நண்ணாதா ருள்ளம் நயவாத நாயகனைப்
பண்ணார நாம்பரவிப் பாடுதுங்கா ணம்மானாய்.10

கோழிக் கொடியுடையோன் கூர்வேல்
கரங்கொண்டோன்
ஊழிக் கனலாம் உரத்தவுணர் சீரழித்துக்
காழிப் பெருமானாய்க் காசினியில் வந்தமணர்
பாழிற் கலவாமே பக்தரையாட் கொண்டபரன்
தாழித் தயிருண்ட சாரங்கன் தன்மருகன்
ஆழிக் கருணையனைப் பாடுதுங்கா ணம்மானாய்.11

என்னைத் தனக்கே இனிதாக ஏன்றானை
தன்னைஎனக் கீந்தே தலைவனாய் வந்தானை
மின்னொத்த கூரியவேல் மின்னுங் கரத்தானை
அன்னையெனக் கூவுவோர்க் கன்பமுதம் ஈவானை
அன்னியமில் லாதெனையே ஆட்கொண்ட நாயகனை
அன்னையெனக் காவானைப் பாடுதுங்கா
ணம்மானாய். 12

இந்திர சாலநிகர் இப்புவியின் வாழ்வதனில்
மந்திர வாய்ப்பட்ட வாளரவாய்க் கட்டுண்டு
தந்திர மாயையால் தாக்குண்ட பேதையேன்
சிந்தையை மாய்வித்த சீரலைவாய்ச் சேவகனைச்

சந்திர சேகரனும் சங்கரியும் தந்தசக்திச்
சுந்தர வேலனைச் சொல்லுதுங்கா ணம்மானாய்.13

ஒன்றுமிலா நாயேனை உய்யவாட் கொண்டருளி
இன்றெனது தீவினையை இல்லா தொழித்தானைக்
குன்றனைய குற்றம் குறியாத கோமகனை
மன்றிலே ஆடுகின்றோன் மைந்தனை நான்மறைகள்
ஒன்றியே போற்றும் உவமையிலாத் தன்னடிக்கீழ்
அன்றென்னை ஆண்டானைப் பாடுதுங்கா
ணம்மானாய். 14

பார்வதியாள் பாலகனைப் பாலறா வாயானை
பார்மிசைப் பண்புடனே பக்தர்களை யாட்கொள்ளச்
சீர்மிகுந்த தோகைக் குரகதமேற் சேர்வானைப்
பேர்மலிந்த ஆறுபடைப் பேரொளியைச் செந்தமிழின்
தார்புனைந்த தோளானைத் தாயனைய வேலவனை
ஆர்கலிசூழ் செந்திலனைப் பாடுதுங்கா ணம்மானாய்.15

கங்கையுடன் திங்கள் கடிக்கொன்றை வேணியனும்
அங்கயற் கண்ணியும் ஆர்வமுடன் உள்ளமதில்
பொங்கிக் களிகூரப் பொன்னார் சிலம்பார்க்கத்
தங்கத் தனிமயில்மேல் தாவிவரும் பாலகனைச்
சங்கையற என்வினையைச் சாய்வித்த சண்முகனைப்
பங்கயக் கையானைப் பாடுதுங்கா ணம்மானாய்.16

அன்பர்க் கெளியானை ஆறுமுகப் பெம்மானை
அன்பர்க் கரணாகும் ஆறுபடை வீட்டிருந்தே
அன்பர்க் கமுதளிக்கும் ஆழிக் கருணையனை
அன்பர்க் கருள்புரியும் அன்னை அனையானை
அன்பர்க் குறுதுணையாம் ஐயனைத் தன்னடிசேர்
அன்பருக் கன்பனைப் பாடுதுங்கா ணம்மானாய்.17

ஆழமொடு நீளம் அளத்தற் கரிதாகும்
ஆழிநேர் வெம்பிறவி ஆழ்ந்து தடுமாறி
ஊழ்வினை யாம்புயலால் ஊறுகொள் நாயேனைத்
தாழ்வெலாம் நீக்கியறத் தன்னடிக்கீழ் வைத்தானை
ஆழிநஞ் சுண்டோன் அருஞ்சுதனை வாட்டமிலா
வாழ்வளித்த வள்ளலைநாம் வாழ்த்துதுங்கா
ணம்மானாய். 18

வேலைத் திரைவிசிறும் வெண்முத் தொளிவீசக்
காலைக் கதிரோன் களிப்புடனே வந்தணையும்
சீலத் திருச்சீ ரலைவாயிற் சீருடனே
வேலைக் கரமதிலே தாங்கிவரும் வேலவனைக்
கோலக் குழன்மடவீர் கூடிமேல் வீடுபெற
மாலைகொள் மார்பனைநாம் பாடுதுங்கா
ணம்மானாய். 19

கொஞ்சிடும் புன்சிரிப்பாற் கொள்ளையெனைக்
கொண்டானைக்
கொஞ்சிடும் சதங்கை குலுங்கிடவே என்னெதிரில்
கஞ்சமலர்த் தாளாற் களிப்புறவே வந்தவனை
அஞ்சலெனக் கூறியே அன்புதரும் பாலகனை
நெஞ்சகக் கோவில் நிலவுகின்ற பேரொளியை
அஞ்சலி செய்துநாம் பாடுதுங்கா ணம்மானாய்.
350 + 20 = 370

## 35. திருப்பல்லாண்டு (1)

(திருவாசகம்-'முத்திநெறி யறியாத')

இராகம்: மோகனம்

வானவர்க்காய் விடமுண்டு வரமுதவும் விடைப்பாகன்
தானவரைத் தடிந்திடவே தந்தருளும் வடிவேலன்
ஈனவுல கியல்பொழித்தே இறைத்தாகம்
கொண்டவர்க்கே
பானமதாம் பதத்துக்கே பல்லாண்டு பாடுதுமே. 1

வாரியிடைத் துயில்வோனும் மறையவனும்
நண்ணவொணா
நாரியிடப் பாகர்தரும் நன்மணியாம் நலந்திகழும்
போரியினிற் பொலிந்திடுநற் புகழ்வேலன்
எளியோர்க்கே
பாரிலருள் பதத்துக்கே பல்லாண்டு பாடுதுமே. 2

மதுவிரிந்த மலர்க்கொன்றை மதியரவும் நதியுமணி
மதுரைவளர் கயற்கண்ணி மணாளனருள் சிறுபாலன்
புதுமலர்த்தார் புயத்தணிந்து புள்ளிமயில் மீதமர்ந்த
பதுமமலர்ப் பதத்துக்கே பல்லாண்டு பாடுதுமே. 3

பிள்ளைமதி சூடுமவன் பேயுடனே ஆடுபவன்
வெள்ளைவிடை வரும்விமலன் வேய்த்தோளி
உமைபாலன்
கள்ளமிலா உளந்தனிலே களிப்புடனே தண்ணருளாற்
பள்ளிகொண்ட பதத்துக்கே பல்லாண்டு பாடுதுமே. 4

அக்கமணி வெண்ணீறும் ஆடரவும் புனைந்தபிரான்
தக்கனது தலையறுத்த தலைவனருள் தமிழ்த்தெய்வம்
சிக்கலுறை சிங்காரன் செம்மைநலம் சேர்விக்கும்
பக்தரிறை பதத்துக்கே பல்லாண்டு பாடுதுமே. 5

வரைப்பாவை வெருவிடவே மலையெடுத்தோன்
தோள்நெரிய
விரைமலர்த்தாள் விரலூன்றும் விடமுண்டோ
னருளழகன்
திரையார்க்கும் திருச்செந்தில் திருமுருகன் திடமுதவும்
பரைசுதனின் பதத்துக்கே பல்லாண்டு பாடுதுமே. 6

மகபதியும் மலரவனும் வந்திக்கும் புள்வேளூர்
சகலபிணி தீர்க்குமொரு வயித்தியநா தன்தனயன்
தகர்ப்பரியில் வந்தன்பர் சகமாயை நீக்கிடுமெய்ப்
பகலவனின் பதத்துக்கே பல்லாண்டு பாடுதுமே. 7

பொங்குநதி படர்சடையோன் பொன்வரையை
வளையீசன்
சங்குடையான் சோதரியோர் பங்குடையோன் தருபாலன்
சங்கெறியும் கடல்சூழ்ந்த திருச்செந்தில் சண்முகனின்
பங்கயமாம் பதத்துக்கே பல்லாண்டு பாடுதுமே. 8

குற்றமிலா மறைச்சிறுவன் குலவுமுயிர்
கொளுமெமனைச்
செற்றபெருந் திறலாளன் செவிபுகட்டும் குருநாதன்
நற்றவத்தோர் நாடுமுயர் பதமென்னுள் நாட்டிமயற்
பற்றறுத்த பதத்துக்கே பல்லாண்டு பாடுதுமே. 9

நிதந்தொழுதே கல்லெறிந்த நீதன்சாக் கியற்கருளும்
மதயானை யுரிபோர்த்த மால்விடையோன்
மகிழ்மைந்தன்
சதமற்ற புவிவாழ்வின் சழக்கொழித்தே அழிவில்லாப்
பதந்தந்த பதத்துக்கே பல்லாண்டு பாடுதுமே.

## 36. திருப்பல்லாண்டு (2)

(பண்: குறிஞ்சி: சுருட்டி)

பல்லாண்டு நீபத் தொடையணி
மார்பற்குப் பல்லாண்டு
பல்லாண்டு நீலவன் தோகை
மயிலுக்குப் பல்லாண்டு
பல்லாண்டு நாலுவே தந்தொழும்
பாதற்குப் பல்லாண்டு
பல்லாண்டு செந்தில் வளர்சண்
முகனுக்குப் பல்லாண்டே. 1

பல்லாண்டு குன்றுதோ றாடும்
குகனுக்குப் பல்லாண்டு
பல்லாண்டு தாதைக் குபதே
சிகனுக்குப் பல்லாண்டு
பல்லாண்டு கூர்வே லெடுத்த
கரத்துக்குப் பல்லாண்டு
பல்லாண்டு செந்தில் வளர்சண்
முகனுக்குப் பல்லாண்டே. 2

பல்லாண்டு வெண்பிறை வேணியன்
மைந்தற்குப் பல்லாண்டு
பல்லாண்டு வான்கோன் மருகன்
பதத்துக்குப் பல்லாண்டு
பல்லாண்டு குன்றைக் குடைந்த
குமரற்குப் பல்லாண்டு
பல்லாண்டு செந்தில் வளர்சண்
முகனுக்குப் பல்லாண்டே. 3

பல்லாண்டு பாவலர் போற்றும்
பரமற்குப் பல்லாண்டு
பல்லாண்டு பாழ்வினை மாய்க்கும்
பகவற்குப் பல்லாண்டு
பல்லாண்டு தேன்சொரி தார்புனை
வானுக்குப் பல்லாண்டு
பல்லாண்டு செந்தில் வளர்சண்
முகனுக்குப் பல்லாண்டே. 4

பல்லாண்டு பூரண ஞானப்
பொருளுக்குப் பல்லாண்டு
பல்லாண்டு மோன நிலையருள்
மூர்த்திக்குப் பல்லாண்டு
பல்லாண்டு மோகங் கெடுக்கும்
முருகற்குப் பல்லாண்டு
பல்லாண்டு செந்தில் வளர்சண்
முகனுக்குப் பல்லாண்டே. 5

பல்லாண்டு தார்புனை திண்புயத்
தானுக்குப் பல்லாண்டு
பல்லாண்டு சோர்வறு நற்பதம்
தந்தாற்குப் பல்லாண்டு
பல்லாண்டு சூர்மார் துளைத்திடும்
வேலற்குப் பல்லாண்டு
பல்லாண்டு செந்தில் வளர்சண்
முகனுக்குப் பல்லாண்டே. 6

பல்லாண்டு மும்மத வாரணன்
தம்பிக்குப் பல்லாண்டு
பல்லாண்டு தேவர் சிறைமீட்ட
செல்வற்குப் பல்லாண்டு
பல்லாண்டு மாயை யொழித்தருள்
மன்னற்குப் பல்லாண்டு
பல்லாண்டு செந்தில் வளர்சண்
முகனுக்குப் பல்லாண்டே. 7

பல்லாண்டு வள்ளல் வடிவேல்
வரதற்குப் பல்லாண்டு
பல்லாண்டு வானிறை யோன்கொடி
கேள்வற்குப் பல்லாண்டு
பல்லாண்டு வேடர் வனிதை
மணாளற்குப் பல்லாண்டு
பல்லாண்டு செந்தில் வளர்சண்
முகனுக்குப் பல்லாண்டே. 8

பல்லாண்டு பார்வதி தந்தருள்
பாலற்குப் பல்லாண்டு

பல்லாண்டு பக்தர் மகிழ்மால்
மருகற்குப் பல்லாண்டு
பல்லாண்டு முக்தி அருள்தாண்
மலருக்குப் பல்லாண்டு
பல்லாண்டு செந்தில் வளர்சண்
முகனுக்குப் பல்லாண்டே. 9

பல்லாண் டெனது குலந்தாங்கு
வானுக்குப் பல்லாண்டு
பல்லாண் டெனதுளம் நீங்கா
வடிவற்குப் பல்லாண்டு
பல்லாண் டவன்தாள் மறவா
அடியர்க்குப் பல்லாண்டு
பல்லாண்டு செந்தில் வளர்சண்
முகனுக்குப் பல்லாண்டே. 380 + 10 = 390

## 37. வாழ்த்து

பண்: செந்துருத்தி (மத்தியமாவதி)

சேய்மதி சூடிடும் செம்மற் சிவனருள்
சீர்மிகு செல்வன் கழல்வாழியே
தேய்மதி யென்னவே தீவினை மாய்த்திடும்
தேவன் கருணைத் திறம்வாழியே. 1

நதியும் மதியும் குடிகொளும் வார்சடை
நம்பன் குலநிதிக் கோன்வாழியே
கதியுந் திருவுந் தரவல்ல கந்தனாம்
கன்னியர் கேள்வன் கழல்வாழியே. 2

தோகை மயிற்பரி வந்தெனை ஆட்கொளத்
தோன்றும் துணைவன் திறல்வாழியே
வாகை புனைவடி வேலன் வரையிலா
வள்ளலெம் தெய்வ வரன்வாழியே. 3

வாரண மும்மத மாமுகன் சோதரன்
வானவர் சேனா பதிவாழியே
வாரண வெல்கொடி வேலும் வடித்த
வனச மலர்க்கரம் தான்வாழியே. 4

சரவண வாவியில் தானொளிர் தெய்வச்
சரவண நாதன் சரண்வாழியே
கரணமுங் காமமும் கன்மமுங் காய்ந்திடும்
கந்தன் கருணைக் கழல்வாழியே. 5

மராமர மேழுந் துளைத்த வரதன்
மருகன் வரந்தரு வான்வழியே
பராபரை பாலகன் பக்தர்க் கருள்குகன்
பாதாம் புயப்புகழ் பார்வாழியே. 6

கானந் திரிகுறக் கன்னியின் காந்தன்
கருணா சமுத்ரன் கழல்வாழியே
ஞானங் கமழ்பதம் நண்ணிட வைத்தருள்
ஞான குருபரன் தாள்வாழியே. 7

எண்ணிய யாவும் இனிதே முடிந்திட
எங்களுக் கீவோன் எழில்வாழியே
நண்ணிட வல்வினை ஓட்டும் நலந்திகழ்
நம்பனின் செந்தில் நகர்வாழியே. 8

காரென அன்பர்க் கருள்மழை பெய்திடும்
கந்தனின் பன்னிரு கண்வாழியே
பாரினி லென்றும் பதைத்திடா தன்பரைப்
பார்த்தருள் என்றன் பதிவாழியே. 9

வந்திக்கும் தேவர்க்கு வாழ்வுங் கதியும்
வழங்கி யுவக்கும் வரன்வாழியே
சிந்திக்கும் என்வினை சிந்திட வந்தருள்
சிந்மய தேவனின் சீர்வாழியே. 10

உரகத் தணையோன் வனசத் துறைவோனும்
ஓதுந் தலைவன் சுதன்வாழியே
புரணப் பரசுகம் பொன்றாது தந்தருள்
போத சொரூபன் புகல்வாழியே. 11

காவித் திருமலைக் கந்தன் கதிர்வேல்
கனகத் திருத்தண்டைக் கால்வாழியே
ஆவிக் குறுதுணை யாகு மவனடி
அண்டின அன்பர் கணம்வாழியே. 12

ஆக்கமெய்ஞ் ஞானம் அரனுக் குரைத்த
அருட்குரு நாதன் அடிவாழியே
தேக்குறும் இன்பமுந் தேனெனத் தந்திடும்
தெய்வ விசாகன் திறல்வாழியே. 13

அளியினம் என்னவே அன்பர் குழுநிறை
ஐயனின் அம்புயத் தாள்வாழியே
வளிசுதன் ஏத்திடும் மன்ன னிராகவன்
வாழ்த்தி மகிழ்மரு கன்வாழியே. 14

உடுநிரை போற்சிறை ஒண்சுடர்க் கேகயன்
உத்தம சக்திவே லன்வாழியே
கடுவிடக் கண்டனும் கண்டு களிக்கும்
கடம்பணி கந்தன் கழல்வாழியே. 15

சூர்குலம் சோர்ந்திடக் கூர்வேல் விடுத்திடும்
சுந்தர சோதித் திறன்வாழியே
தேர்கலை வாணரின் தீந்தமிழ் மாலைகொள்
தேசிகன் தேமலர்த் தாள்வாழியே. 16

மூபுரம் தீயெழ ஓர்நகை மூண்டவன்
முத்திடு மோன சுகன்வாழியே
நூபுரம் கொஞ்சிடக் கூர்நுனை வேலுடன்
நோக்கி யெனக்கருள் கோன்வாழியே. 17

நற்றமிழ்க் கீரனின் நற்றமிழ் கேட்டு
நனியருள் செய்த நலன்வாழியே
நற்றவர் கொற்றவர் நாடும் நலந்திகழ்
நாதன் நளினப் பதம்வாழியே. 18

கள்ளமில் நெஞ்சினிற் காட்சிதந் தாண்டிடும்
கன்னியர் காவலன் சீர்வாழியே
அள்ளக் குறையா அருளமு தாய்த்திகழ்
அன்புப் பெருமான் அடிவாழியே. 19

தாதையும் மைந்தனும் தாள்முடி காணாத்
தழலுரு வானோன் தளிர்வாழியே
பேதையென் நெஞ்சினிற் பேதமி லாதொளிர்
பேரரு ளான பிரான்வாழியே. 20

அருண கிரியன் றழைத்திடத் தூணினின்
றாடி வருமழ கன்வாழியே
தருண மறிந்தெனைத் தான்கொண் டருளும்
தலைவன் தகவுறு தாள்வாழியே. 21

மலைகவி கைக்கொளும் மாதவன் வாழ்த்தி
மகிழும் மருகன் மயில்வாழியே
சிலைவளை வேடர் செழுங்கொடி நாதன்
சிறப்புறு செங்கர வேல்வாழியே. 22

கஞ்சனும் வேளுடன் காலனும் தீண்டாக்
கதியரு ளுங்கட வுள்வாழியே
தஞ்சமென் றோர்வினை பஞ்செனத் தீயில்
தகித்திடத் தானருள் தாள்வாழியே. 23

பவவிருள் போக்கும் பகரரு ஞானமெயப்
பானுவாய் வந்த பரன்வாழியே
சிவன்றன் மடியிற் சிறந்து திகழ்ந்திடும்
செல்வன் திருவடிச் சீர்வாழியே. 24

காமுறு நெஞ்சினர் காணொணாக் காவலன்
கந்தன் கடம்பணி தோள்வாழியே
காமமும் கோபமும் காணாக் கருத்தரைக்
காத்தருள் செய்யும் கழல்வாழியே. 25

நானென தென்னுமஞ் ஞான வகங்கெட
நன்கருள் தந்த நலன்வாழியே
தான்நிக ரில்லாத் தலைவனின் தாண்மலர்
தஞ்சமாக் கொண்டோர் குலம்வாழியே. 26

மேதி வருங்கொடுங் காலன் வெருவிட
மேவி நமைக்கொள் விபுவாழியே
ஆதி பரையுமை அள்ளி அணைத்திட
ஆடி வருங்கும ரன்வாழியே. 27

ஆறு முகங்களும் ஆறிரு கண்களும்
ஆறிரு திண்டோள் களும்வாழியே
வீறு பரஞ்சுடர் வண்ணம் விளங்குறும்
வித்தகன் வேரித் தொடைவாழியே. 28

வேலும் கடம்பொடு வெற்றிக் கொடியும்
விளங்க வருவோன் விறல்வாழியே
கோலக் கலாபக் குரகத மேல்வரு
கோமகன் கோமளத் தாள்வாழியே. 29

பாடும் பணியே பணியெனத் தந்தெனைப்
பண்புடன் ஆண்ட பதிவாழியே
ஆடும் மயில்மீ தமர்வடி வேலன்
அருளமு துண்ட தவர்வாழியே. 390 + 30 = 420

## 38. திருச்செந்தில் விசாகவண்ணம்

('முத்து விதான' என்னும் தேவாரப் பண்)

**பண்:** குறிஞ்சி (சுருட்டி)

சரவண நாதன் தண்ணகர் செந்தில் சார்வாரும்
பரவை நீரிற் படிந்தே தூய்மை பெறுவாரும்
திரமாய்க் காவடி திண்தோள் சேர வருவாரும்
அரனுமை மைந்தன் விசாகத் திருநா ளதுவண்ணம். 1

கள்ள மிலாநற் சேய்போல் நெஞ்சிற் களியூட்டும்
தெள்ளிய நீராம் நாழிக் கிணற்றில் திளைப்பாரால்
வள்ளி மணாளன் வண்புகழ் ஓதி மகிழ்வாரால்
அள்ளிடும் நெஞ்சை விசாகத் திருநா ளதுவண்ணம். 2

பல்லா யிரவர் பாடிக் கூடிப் பரவிடுவார்
எல்லோ ருமவன் திருமுன் சென்றே இறைஞ்சிடுவார்
அல்லா டரவம் அணியும் பெம்மான் அருள்மைந்தன்
அல்லே அணுகா விசாகத் திருநா ளதுவண்ணம். 3

அன்பர் யாரும் ஐயன் அருள்திரு வடிதேடித்
துன்பம் துடைக்கத் துதித்தே தொழுது நிற்பாரால்
நன்மலர் மாலை நயந்தே சூடும் நகர்ச்செந்தில்
அன்புரு வேலன் விசாகத் திருநா ளதுவண்ணம். 4

பிணிகள் தீரப் பிரார்த்தனை செய்தே பணிவாரால்
அணிபணி தந்தே யருளமு தின்பத் தாழ்வாரால்
பணியும் பக்தர் பலரும் பரவித் தொழுவாரால்
அணிகொள் செந்தில் விசாகத் திருநா ளதுவண்ணம். 5

சிந்தையி லருளோன் திறத்தை வியந்து திரிவாரும்
கந்தா வென்றே கண்ணீர் பெருகக் கரைவாரும்
அந்தியி லலைகடல் அழகை ரமிக்கும் அடியாரும்
விந்தைச் செந்தில் விசாகத் திருநா ளதுவண்ணம்.6

சண்முகன் சந்நிதி சேவித் தின்பத் தருள்கொள்வார்
சண்முகத் திற்கும் அர்ச்சனை செய்யும் தவங்காண்பார்
தண்மதி கண்டே தாண்டவ மாடும் தரங்கஞ்சேர்
விண்புகழ் செந்தில் விசாகத் திருநா ளதுவண்ணம்.7

தந்தை தாய்பின் செல்வச் சிறார்கள் சார்ந்திடுவார்
எந்தை குமரன் எழில்கண் டுவகை எய்திடுவார்
முந்தை யூழ்வினை முடிதற் கேவழி மூள்விக்கும்
விந்தைச் செந்தில் விசாகத் திருநா ளதுவண்ணம்.8

அலைகடல் வீசும் சங்கொடு முத்தம் அளப்பாரும்
விலைகொள் வாரும் வாதுகள் பேசி விலைமுடிப்பார்
மலைபோல் அன்பர் கையுறை கொண்டே வருவாரும்
அலைகொள் செந்தில் விசாகத் திருநா ளதுவண்ணம்.9

சுந்தர வானவர் தூமலர் தூவித் தொழுவாரால்
மந்திர மோதி மாமறை யோர்தீ வளர்ப்பாரால்
செந்நிலை மேவித் திருவடி வேல்கை திகழ்கந்தன்
அந்த மிகுந்த விசாகத் திருநா ளதுவண்ணம். 10

சாத்திர மொப்பத் திருநீ றணிந்து தகைசான்ற
தோத்திரம் பாடி மெய்புள கிக்கத் துதித்திடுவார்
பாத்திர மாக்கித் தமையாட் கொள்ளப் பணிந்திடுவார்
சீர்த்திகொள் செந்தில் விசாகத் திருநா ளதுவண்ணம்.11

மஞ்சடை சிகரம் கண்டு வணங்கி மகிழ்கொள்வார்
செஞ்சடை ஈசன் செல்வக் குமரன் திருக்காண்பார்
அஞ்சொற் கூறி அன்பரை அன்பர் அழைத்திடுவார்
விஞ்சையர் போற்றும் விசாகத் திருநா ளதுவண்ணம்.12

பண்ணிசை பாவலர் பாமலர் சூட்டிப் பணிவாரால்
கண்ணின் மணியே கந்தா எனவுட் கனிவாரால்
வெண்ணுரை அலைகள் பண்ணுடன் பாடி விளையாடும்
விண்ணிகர் செந்தில் விசாகத் திருநா ளதுவண்ணம்.13

மின்னிகர் வேல்கொள் சண்முகன் சந்நிதி விரைவாரும்
பன்னிரு கரனே பரனே யென்றடி பணிவாரும்
என்னுயி ரனையாய் கந்தா வென்றே இசைப்பாரும்
அன்னை நிகர்த்தோன் விசாகத் திருநா ளதுவண்ணம். 14

ஆடவர் மாதரும் மைந்த ரொடுஞ்சென் றடைவாரும்
பாடவல் லார்களும் பண்ணிசை யாற்றுதி பகர்வாரும்
நாடவர் விண்ணின் நாடரும் சூழ்வார் நன்னெஞ்சில்
ஆடிடும் செந்தில் விசாகத் திருநா ளதுவண்ணம். 15

வள்ளி குகையைக் காணத் திரண்டு வழிகாண்பார்
புள்ளி மயிலோன் சீர்த்திமை கேட்டுப் புளகிப்பார்
உள்ளிற் சென்று வள்ளி யொளித்த இடங்காண்பார்
வெள்ளலைச் செந்தில் விசாகத் திருநா ளதுவண்ணம். 16

கந்திக் களத்துமை மைந்தன் அருள்பெறக் கரைவாரும்
செந்தி லாண்டவன் விடுதியி லன்பர் சேர்வாரும்
கந்தக் களபத் திருநீ றாட்டிக் களிப்பாரும்
விந்தைப் பெருமான் விசாகத் திருநா ளதுவண்ணம். 17

அந்தணர் மூட்டிய அகிற்புகை கமழ அளவில்லாக்
கந்த மலருடன் பூசனை செய்து கதிகாண்பார்
சந்தனம் வெண்ணீ றன்பர்க ளணியத் தருவாரால்
அந்தரர் போற்றும் விசாகத் திருநா ளதுவண்ணம். 18

வெள்ளி எழும்போ தாலயம் மேவி அடியார்கள்
வள்ளி அருட்சந் நிதிவலம் வந்தே வள்ளல்சீர்ப்
பள்ளி எழுச்சி பாடிடும் அன்பர் தமதுள்ளம்
அள்ளும் செந்தில் விசாகத் திருநா ளதுவண்ணம். 19

தண்கட லாடித் தம்பிணி தீர சந்நிதிமுன்
சண்முக சபையிற் சற்சனர் வசனத் தவங்கொள்வார்
கண்ணிமைப் போதும் கந்தன் கழலிணை மறவாரால்
விண்புகழ் செந்தில் விசாகத் திருநா ளதுவண்ணம். 20

ஆறுமு கங்கொள் அழகன் அருட்செம் பதம்வாழி
கூறுகொள் வேல்செங் கோலச் சேவற் கொடிவாழி
ஈறுகொ ளாக்கடற் செந்திற் றிருநகர் இசைவாழி
பேறுகொள் அவனடி யார்குழு பீடுகள் பெறவாழி.

420 + 21 = 441

## 39. திருவுருத்தாண்டகம்

('வடிவேறு திரிசூலம்' என்னும் தேவாரப் பண்)

பண்: திருத்தாண்டகம் (அரிகாம்போதி)

அடியவர்தம் அகத்தொளிரும் வதனம் தோன்றும்
அன்புடனே எனக்கருளும் வதனம் தோன்றும்
முடியணிந்த மகுடமொளிர் வதனம் தோன்றும்
முனிவர்குழாம் காணவரும் வதனம் தோன்றும்
கடியகுண வினைபோக்கும் வதனம் தோன்றும்
காதிலங்கு குழையாடும் வதனம் தோன்றும்
மிடியகலக் கருணைபொழி வதனம் தோன்றும்
வேலவன்தன் திருவடியே விரும்பு வோர்க்கே. 1

அருணனெனத் திகழுறுநல் வதனம் தோன்றும்
அகத்தளியில் ஒளிர்ஞான வதனம் தோன்றும்
கருணைமலர்ப் பன்னிருகண் வதனம் தோன்றும்
கறைமிடற்றன் கண்டுகளி வதனம் தோன்றும்
அருணகிரிக் கருள்செய்த வதனம் தோன்றும்
அன்னையென எனையாண்ட வதனம் தோன்றும்
தருணமெனைத் தடுத்தாண்ட வதனம் தோன்றும்
சரவணவுற் பவனடியே சார்ந்து ளோர்க்கே. 2

சுந்தரவேல் தாங்கிடுவோன் கரங்கள் தோன்றும்
சுரர்வேந்தன் கொடிமணந்தோன் கரங்கள் தோன்றும்
கந்தமலர்க் கடம்பணிந்தோன் கரங்கள் தோன்றும்
கந்தனெழி லீராறு கரங்கள் தோன்றும்
பந்தமிகும் பவநீக்கும் கரங்கள் தோன்றும்
பரவைசூழ் செந்தில்வேள் கரங்கள் தோன்றும்
எந்தையாய் இன்னருள்செய் கரங்கள் தோன்றும்
எழிற்குமரன் திருவடியே ஏத்தி னோர்க்கே. 3

வானவரின் குறைதீர்த்த கரங்கள் தோன்றும்
வரையதிர மயில்நடத்தும் கரங்கள் தோன்றும்
தானவரின் குலமழித்த கரங்கள் தோன்றும்
தாயெனவே தயைகூரும் கரங்கள் தோன்றும்
கானமகள் காந்தனவன் கரங்கள் தோன்றும்
காமமறக் கருணைசெயுங் கரங்கள் தோன்றும்

வானமதி நிகர்முகத்தன் கரங்கள் தோன்றும்
வடிவேலன் திருவடியே வணங்கி னோர்க்கே. 4

உமையருளும் பாலகனின் பதங்கள் தோன்றும்
உரகமிசை நடிமயிலோன் பதங்கள் தோன்றும்
எமக்கென்றும் துணையாகும் பதங்கள் தோன்றும்
எழிலுறுநற் கிண்கிணிசூழ் பதங்கள் தோன்றும்
சுமையாகும் உயிர்ப்பிணிதீர் பதங்கள் தோன்றும்
சுகிர்தமிகு வீடருளும் பதங்கள் தோன்றும்
குமரனெனக் குலவிடுவோன் பதங்கள் தோன்றும்
குருபரன்தன் திருவடியே குறிக்கொள் வோர்க்கே. 5

பன்னிருகண் மலர்கொண்டோன் பதங்கள் தோன்றும்
பரஞ்சுடராய் என்னிலொளிர் பதங்கள் தோன்றும்
கன்மனமுங் கனிவிக்கும் பதங்கள் தோன்றும்
கணக்கில்லாப் பிறவியொழி பதங்கள் தோன்றும்
என்னையுமாட் கொண்டருளும் பதங்கள் தோன்றும்
ஏரகத்தி லிருந்தொளிரும் பதங்கள் தோன்றும்
மன்றாடி மைந்தனருட் பதங்கள் தோன்றும்
மயில்வீரன் திருவடியே வந்தித் தோர்க்கே. 6

நெடியமலை பிளக்கவிடு நெடுவேல் தோன்றும்
நெஞ்சமதில் உற்றதுணை நெடுவேல் தோன்றும்
கொடியநிசி சரரழிக்கும் நெடுவேல் தோன்றும்
குரைகடலை வற்றுவிக்கும் நெடுவேல் தோன்றும்
முடிவிலா வினைமுடிக்கும் நெடுவேல் தோன்றும்
முகிலூர்தி சிறைதவிர்த்தோன் நெடுவேல்தோன்றும்
படியதனில் எனக்கருள்செய் துணைவேல் தோன்றும்
பரமகுரு திருவடியே பணிந்தோ ருக்கே. 7

கதிர்காமக் கந்தன்கைக் கதிர்வேல் தோன்றும்
கவலையிரு ளிரியஅருள் கதிர்வேல் தோன்றும்
மதியணிந்தோன் மைந்தனுடை வடிவேல் தோன்றும்
மதியற்ற அசுரனழி வடிவேல் தோன்றும்
பொதியமுனிக் கருளிறைவன் புகழ்வேல் தோன்றும்
பொருப்பதனைப் பொடித்திட்ட பொருவேல்
தோன்றும்
நிதியெல்லாந் தரவல்லோன் நெடுவேல் தோன்றும்
நிறைஞானத் திருவடியே நினைந்தோ ருக்கே. 8

கடுவரவில் நடமாடும் மயிலும் தோன்றும்
கருமுகிலைக் கண்டுகளி மயிலும் தோன்றும்
உடுநிரைபோல் ஒளிர்தோகை மயிலும் தோன்றும்
உலகனைத்தும் நொடிவலஞ்செய் மயிலும் தோன்றும்
முடுகிவரு வினைமுடிப்போன் மயிலும் தோன்றும்
முகில்வண்ணச் சிறகுடைய மயிலும் தோன்றும்
அடுதிறலோன் சூரனுறு மயிலும் தோன்றும்
அருட்குமரன் திருவடியே அண்டி னோர்க்கே. 9

ஆறுமுகன் அருளொழுகும் வதனம் தோன்றும்
அன்புடனே அஞ்சலெனும் கரங்கள் தோன்றும்
நாறுமலர்த் தொடையணிந்த தோளும் தோன்றும்
நலிவெல்லாம் நையவருள் வேலும் தோன்றும்
வீறுகொண்ட செஞ்சேவற் கொடியும் தோன்றும்
விரைக்கமல மெனத்திகழும் பதங்கள் தோன்றும்
கூறுமடி யார்க்குதவும் மயிலும் தோன்றும்
குமரனிரு திருவடியே குறுகி னோர்க்கே.
441 + 10 = 451

## 40. கீர்த்தித் திருத்தாண்டகம்

('தூண்டு சுடரனைய' என்னும் தேவாரப் பண்)

**பண்:** திருத்தாண்டகம் (அரிகாம்போதி)

அருமறையின் மெய்ப்பொருள்தான் ஆனான் கண்டாய்
அகிலமெலாம் புகழ்ந்துபணி அறவோன் கண்டாய்
சுருதிமுடி குறுமுனிக்குச் சொற்றான் கண்டாய்
சுத்தமன மாதவருட் சுடர்வான் கண்டாய்
செருவதனில் அசுரர்குலம் செற்றான் கண்டாய்
தேவர்கணம் சார்ந்துதொழும் தெய்வம் கண்டாய்
திருவடியென் சென்னிமிசை வைத்தான் கண்டாய்
திருச்செந்தில் வளர்முருகச் செல்வன் தானே. 1

அரவாடும் விரிசடையான் மைந்தன் கண்டாய்
அன்பருளம் நீங்காத அமலன் கண்டாய்
அரவணையிற் றுயில்மாலின் மருகன் கண்டாய்
அயிலதனைச்செங்கரத்தில் அணைத்தான் கண்டாய்

கரவாடும் நெஞ்சினரைக் கருதான் கண்டாய்
கருணைபொழி ஆறுமுகக் கடவுள் கண்டாய்
திரமுடைய பரநிலையிற் சேர்ப்பான் கண்டாய்
திருச்செந்தில் வளர்முருகச் செல்வன் தானே. 2

குன்றங்க ளாடிவரும் குமரன் கண்டாய்
குறையெல்லாம் நீக்கியெனைக் கொண்டான்
கண்டாய்
மன்றதனில் கூத்தாடி மைந்தன் கண்டாய்
வடிவேலை யணைத்தவலக் கரத்தான் கண்டாய்
அன்றமரர் இடர்தீர்த்த அழகன் கண்டாய்
அருமறைகள் புகழ்ஞான ஆசான் கண்டாய்
சென்றவுணர் திறலழித்த தேவன் கண்டாய்
திருச்செந்தில் வளர்முருகச் செல்வன் தானே. 3

கன்னியர்க ளிருவரெழிற் கணவன் கண்டாய்
கயல்விழிசேர் உமையவள்கண் மணியாம் கண்டாய்
அன்னியமில் லாமலெனை ஆண்டான் கண்டாய்
அணிதிகழ்சே வற்கொடிசேர் அத்தன் கண்டாய்
உன்னியநல் வினைமுடிக்கும் உறவோன் கண்டாய்
உயிர்தோறும் நின்றிலங்கும் ஒருவன் கண்டாய்
சென்னியில்தன் பதமெனக்குச் சேர்த்தான் கண்டாய்
திருச்செந்தில் வளர்முருகச் செல்வன் தானே. 4

கற்பகமாங் களிறதனுக் கிளையோன் கண்டாய்
களிமயில்மேல் நடமாடிக் களிப்பான் கண்டாய்
சொற்பதங்கள் கடந்தவருட் சோதி கண்டாய்
சொல்லருமென் வினைகளெலாந் துடைத்தான்
கண்டாய்
பொற்பதத்தே நூபுரங்கள் புனைவான் கண்டாய்
பொய்யிருளை நீக்கியருள் புனிதன் கண்டாய்
சிற்பதமென் சென்னிமிசைச் சேர்த்தான் கண்டாய்
திருச்செந்தில் வளர்முருகச் செல்வன் தானே. 5

உலகையொரு நொடியில்வலம் உறுவான் கண்டாய்
உம்பர்முடி தாழ்பதங்கொள் ஒருவன் கண்டாய்
மலங்கடிய வருநீல மயிலோன் கண்டாய்
மலர்ப்பதத்தில் வாழவழி வைப்பான் கண்டாய்

கலகமுறு மைம்புலனைக் கடிவான் கண்டாய்
கறையறுமெய் யடியவரைக் காப்பான் கண்டாய்
திலகமெனப் பழநியுறை தேவன் கண்டாய்
திருச்செந்தில் வளர்முருகச் செல்வன் தானே.6

தன்னையறிந் தோரிதயஞ் சார்வான் கண்டாய்
தவருறையுந் திருப்போரூர்த் தலைவன் கண்டாய்
முன்னைவினை முழுதுமற முடிப்பான் கண்டாய்
முனிந்தெழுந்த அவுணருரம் ஒழித்தான் கண்டாய்
என்னையுமாட் கொண்டருளும் எம்மான் கண்டாய்
எழில்மேவு பரங்குன்றின் இறைவன் கண்டாய்
சின்னமொரு மயிற்சேவல் திகழ்வான் கண்டாய்
திருச்செந்தில் வளர்முருகச் செல்வன் தானே.7

கண்ணினிய கருமணியே ஆவான் கண்டாய்
கவணெறியும் கானமகள் கணவன் கண்டாய்
தண்ணளியில் முகில்நாணும் சமர்த்தன் கண்டாய்
தளிர்கடப்பம் பூமலிந்த தாரான் கண்டாய்
விண்மணியின் முகத்தருள்கூர் விழியான் கண்டாய்
வியனொலிக்கிண் கிணியணியும் விமலன் கண்டாய்
திண்ணியமெய்த் தவர்பரவும் தேவன் கண்டாய்
திருச்செந்தில் வளர்முருகச் செல்வன் தானே.8

வாசமுறு செம்மலரின் வண்ணன் கண்டாய்
வரையதிர மயிலூர்ந்த வரதன் கண்டாய்
வீசுதென்ற லினிமையிலும் இனியன் கண்டாய்
வீரவேல் கொண்டொளிர்வி சாகன் கண்டாய்
மாசறுமா மாணிக்க வேலன் கண்டாய்
மறைபுகழும் ஆறுமுக மன்னன் கண்டாய்
தேசிகநா தற்குமுப தேசன் கண்டாய்
திருச்செந்தில் வளர்முருகச் செல்வன் தானே.9

என்னுயிர்க்கோ ருயிரான இறைவன் கண்டாய்
எழில்மிகுந்த குமரகுரு ஏந்தல் கண்டாய்
பொன்னகரி னமரர்தொழும் புனிதன் கண்டாய்
போதவழி அருள்கின்ற புலவோன் கண்டாய்
என்னப்ப னாகிநின்ற இனியன் கண்டாய்
என்னுளத்திற் குடிகொண்ட ஈசன் கண்டாய்

தென்னாழிக் கரையெழுந்த செகத்தின் சோதித்
திருச்செந்தில் வளர்முருகச் செல்வன் தானே.
451 + 10 = 461

## 41. திருத்தணிகைத் தாண்டகம்

('மூவிலைவேற் கையானை' என்னும் தேவாரப் பண்)

பண்: திருத்தாண்டகம் (அரிகாம்போதி)

தற்பரமேல் நிலையருளும் தலைவன் தன்னைத்
தஞ்சமெனத் தாளடைந்தார் தாயா வானை
வெற்பரையன் மகளீன்ற விசாகன் தன்னை
வினையாவும் வீழ்த்துவடி வேலன் தன்னை
நற்பரம ஈசனருள் நம்பன் தன்னை
நலந்திகழும் மாதிருவர் நாதன் தன்னைச்
சிற்பமென மனநிறுத்தும் தேவன் தன்னைத்
திருத்தணிகைச் செம்மலினைச் சிந்திப் போமே. 1

பந்தவிருள் நீக்கியருள் பகலோன் தன்னைப்
பசுந்தோகை மயிலேறும் பாலன் தன்னை
நந்தமிழின் தலையாய நாதன் தன்னை
நலிவெல்லாம் நலித்தருளும் நம்பன் தன்னை
அந்தரிதந் தருள்ஞான அமுதன் தன்னை
அகமலரில் அமர்ந்தன்பர்க் கருள்வான் தன்னைச்
சிந்தையினிற் குடிகொண்ட செல்வன் தன்னைத்
திருத்தணிகைச் செம்மலினைச் சிந்திப் போமே. 2

வற்றாத கடலமுத மாண்பி னானை
வரைபொடிய வடிவேலை விடுத்தான் தன்னைக்
கற்றாரும் மற்றாரும் விரும்பி ஏத்தும்
கலிதீர்க்கும் கலியுகத்தின் கடவுள் தன்னை
முற்றாத மதிசூடி மைந்தன் தன்னை
முகிழ்நீப மலரணியும் முருகன் தன்னைச்
செற்றாரின் திறலழித்த செவ்வேள் தன்னைத்
திருத்தணிகைச் செம்மலினைச் சிந்திப் போமே. 3

பொன்றாத பொன்னருளே புரிவான் தன்னைப்
புகழ்ஞான வீடளிக்கும் புனிதன் தன்னைக்

குன்றாத நிதியாவும் கொடுப்பான் தன்னைக்
குழவிமதி புனைஈசன் குமரன் தன்னை
நன்றாக நீபமணி நாதன் தன்னை
நளினச்செம் பதத்துணையே நயந்து நாடிச்
சென்றாரை வாழ்விக்கும் திறலோன் தன்னைத்
திருத்தணிகைச் செம்மலினைச் சிந்திப் போமே. 4

கொச்சைநகர் வருஞானக் குருந்தா வானைக்
கொழுகொம்பாய் நின்றெனையும் கொண்டான் தன்னைப்
பச்சைமயில் ஏறிவரும் பரமன் தன்னைப்
பற்றற்றார் மனத்துறையும் பகவன் தன்னை
மிச்சையிருள் அகல்விக்கும் மின்னா வானை
மெய்யடியார் விரும்பிடுமெய் யன்பன் தன்னைச்
செச்சைமலர்த் சேவடியிற் சேர்ப்பான் தன்னைத்
திருத்தணிகைச் செம்மலினைச் சிந்திப் போமே. 5

அமரரிறை சிறைதவிர்த்த அதிபன் தன்னை
அலங்கலணி பன்னிருதிண் புயத்தோன் தன்னைச்
சமரதனில் அசுரனுடல் சாய்த்தான் தன்னைச்
சக்கரம்மா லுக்களித்தோன் தனயன் தன்னைச்
சமரபுரி அமர்தெய்வத் தலைவன் தன்னைச்
சயிலமிரு கூறிடுவேற் சதுரன் தன்னைச்
சிமயமகள் முத்திடுநற் செல்வன் தன்னைத்
திருத்தணிகைச் செம்மலினைச் சிந்திப் போமே. 6

உத்தமரின் உறவாய ஒருவன் தன்னை
ஒழிவறவென் உள்ளத்தில் ஒளிர்வான் தன்னை
வித்தகமுத் தமிழ்ஞான விமலன் தன்னை
வினையாவும் வீழ்த்தியருள் விசாகன் தன்னைச்
சக்தியுமை மடிதவழும் தளிரா வானைத்
தத்தைமொழி வள்ளிமண வாளன் தன்னைச்
சித்தர்களும் முத்தர்களும் சிந்தித் தேத்தும்
திருத்தணிகைச் செம்மலினைச் சிந்திப் போமே. 7

நால்வேதந் தொழுதேத்தும் நாதன் தன்னை
நானற்றா ரிதயத்துள் நடிப்பான் தன்னைக்
கோலமிகு மயிலேறுங் குமரன் தன்னைக்
குஞ்சரியின் கொழுநனெனும் கோமான் தன்னை

வேலைதனைக் கைக்கொண்ட வேந்தன் தன்னை
விரிகடல்சூழ் திருச்செந்தில் விமலன் தன்னைச்
சீலமிகு நற்றவரின் செல்வன் தன்னைத்
திருத்தணிகைச் செம்மலினைச் சிந்திப் போமே. 8

குறுமுனிவற் குற்றகுரு நாதன் தன்னைக்
கோழியெனும் நல்விருது கொண்டான் தன்னை
மறுமைவழி அடைவிக்கும் மறையோன் தன்னை
மலரூடு மணமாகி மகிழ்விப் பானைக்
குறுநகையால் அடிமையெனைக் கொண்டான் தன்னைக்
குணமற்ற அசுரனுடல் குமைத்தான் தன்னைச்
சிறுநெறியிற் சேராமே சிறப்பிப் பானைத்
திருத்தணிகைச் செம்மலினைச் சிந்திப் போமே. 9

அருணைதளிக் கம்பமதில் அழகாய்த் தோன்றி
அருணகிரி மகிழ்வுறவே ஆடுந் தேனைக்
கருணைபொழி பன்னிரண்டு கண்ணன் தன்னைக்
கரும்பன்ன திருப்புகழாற் களிப்பான் தன்னைத்
திருக்குன்றம் மேவியொளிர் திருவி னானைத்
திருவோங்கு போரூரில் தேவன் தன்னைத்
திருச்செந்தில் திகழொளியைத் தேவர் போற்றும்
திருத்தணிகைச் செம்மலினைச் சிந்திப் போமே.
461 + 10 = 471

## 42. உய்ந்த திருத்தாண்டகம்

('மூவிலைநற் சூலம்' என்னும் தேவாரப் பண்)

பண்: திருத்தாண்டகம் (அரிகர்ம்போதி)

அடியவரின் உளக்கமலத் தமர்ந்தான் தன்னை
அழகுயரும் வேலணிந்த அமலன் தன்னை
விடியாத வினையாவும் விடுவித் தானை
விருப்பமொடு மெனையாண்ட வேந்தன் தன்னைக்
கொடியோடும் பிறவியொழி கோமான் தன்னைக்
கொடிச்சேவல் கரம்துலங்கும் குமரன் தன்னைக்
கடிமலர்த்தாள் கொண்டருளும் கந்தன் தன்னைக்
கறைநீக்கும் திருச்செந்தில் கண்டுய்ந் தேனே. 1

சீலமொடு சிந்திப்போர் செம்மல் தன்னைச்
சிறப்புறுவேற் பெருமானைச் சிக்கல் மேவும்
நீலமயில் வாகனனை நினைப்போர் நெஞ்சம்
நீங்காது குடிகொண்ட நிமலன் தன்னை
ஆலநிழ லாயடியார்க் கமைவான் தன்னை
ஆவலுடன் அரனணைக்கும் அழகன் தன்னைக்
காலன்றன் பயமறுத்துக் காப்பான் தன்னைக்
காவலனைத் திருச்செந்தில் கண்டுய்ந் தேனே. 2

கானலைநீ ரென்றெண்ணிக் கலங்கி னேனைக்
கருணையுடன் தடுத்தாண்ட கந்தன் தன்னை
ஞானவமு தளித்தருளும் நாதன் தன்னை
ஞானியரின் அகக்கதிராய் நடிப்பான் தன்னை
வானவர்கோன் மனத்துயரை மாய்த்தான் தன்னை
வாரியெனக் கருணைநிறை வள்ளல் தன்னைக்
கானவர்கள் குலமானின் கணவன் தன்னைக்
கனகதளித் திருச்செந்தில் கண்டுய்ந் தேனே. 3

பவவாரி சுவறிடச்செய் பரமன் தன்னைப்
படியதனிற் றுணையாகும் பாதன் தன்னைச்
சிவனுணரச் செவிபுகட்டும் திறத்தோன் தன்னைத்
திருவடிநம் சென்னிமிசைச் சேர்ப்பான் தன்னை
நவவீரர் தொழுதேத்தும் நாதன் தன்னை
நலந்திகழும் வேலணிந்த நம்பன் தன்னைக்
கவிவாணர் கருத்தொளிரும் கவிஞன் தன்னைக்
கவலையறு திருச்செந்தில் கண்டுய்ந் தேனே. 4

மருவார்ந்த நீபமணி மார்பன் தன்னை
மருள்நீக்கும் படியென்னுள் மலர்ந்தான் தன்னைத்
திருவேர கத்தொளிரும் தெய்வம் தன்னைத்
திருவடியால் தீவினைகள் தீர்ப்பான் தன்னை
இருளற்ற உள்ளத்தின் இறைவன் தன்னை
இமவரையின் பிடியீன்ற ஏந்தல் தன்னைக்
கருவணுகாக் கதியருளும் கந்தன் தன்னைக்
கனைகடல்சூழ் திருச்செந்தில் கண்டுய்ந் தேனே. 5

வண்ணஇற காடிவரும் மயிலோன் தன்னை
வாழ்வுறவே வந்தாண்ட வள்ளல் தன்னைப்

பண்ணதனில் இசைவடிவாய்ப் பரந்தான் தன்னைப்
பகரொண்ணா நிலையருளும் பகவன் தன்னை
மண்ணிலுறு மயல்நீக்கும் மருந்தா வானை
மனமன்றி லாடுகின்ற மன்னன் தன்னைக்
கண்ணெனவே காத்தருளும் கடவுள் தன்னைக்
கண்களிக்கத் திருச்செந்தில் கண்டுய்ந் தேனே. 6

என்னன்னை யாவானை எந்தை தன்னை
எழிலுறுசெம் பதங்கொண்ட எம்மான் தன்னை
மன்னுபர மேசனருள் மைந்தன் தன்னை
மகபதியின் சிறைவிடுத்த மன்னன் தன்னைத்
தன்னொப்பா ரில்லாத தலைவன் தன்னைத்
தன்னைத்தந் தென்னைக்கொள் சதுரன் தன்னைக்
கன்மனமுங் கனிவிக்கும் கந்தன் தன்னைக்
கதிகாட்டும் திருச்செந்தில் கண்டுய்ந் தேனே. 7

வெள்ளங்கொள் விரிசடையான் விரும்புந் தேனை
விறன்முனிவர் தொழுதேத்தும் விமலன் தன்னை
அள்ளிடினுங் குறையாத அமுதன் தன்னை
அளிபாடுங் கடம்பணிந்த அழகன் தன்னைப்
புள்ளமர்ந்து புவிவலங்கொள் புனிதன் தன்னைப்
புரைதீரத் திருவருளே பொழிவான் தன்னைக்
கள்ளமெலாம் நீக்கியெனுட் கலந்தே நின்ற
கடவுளையான் திருச்செந்தில் கண்டுய்ந் தேனே. 8

ஆறுபடை வீடமர்ந்த ஐயன் தன்னை
ஆடுமயி லமராறு முகவன் தன்னை
மாறுபடு சூரனுயிர் வதைத்தான் தன்னை
மாலவனின் மாண்புமிகு மருகன் தன்னைக்
கூறுபட மலைபிளந்த குழகன் தன்னைக்
கோலஇரு மாதருடைக் கோமான் தன்னைக்
காரெனவே கருணைபொழி கழலோன் தன்னைக்
கடலலையார் திருச்செந்தில் கண்டுய்ந் தேனே. 9

சீர்மருவுந் திருச்செந்திற் செல்வன் தன்னைச்
சீலர்நிதம் பணிந்தேத்தும் செம்மல் தன்னைப்
பார்புகழும் பரங்குன்றிற் பரமன் தன்னைக்
பகர்ஞானப் பழநியமர் பகவன் தன்னைக்

கார்வினைதீர் பன்னிரண்டு கரத்தோன் தன்னைக்
காவிரிசூழ் ஏரகத்துக் கடவுள் தன்னை
ஏர்நிறைகுன் றாடிவரும் ஏந்தல் தன்னை
எழிலுறவே கண்டுய்ந்தேன் என்னுள் ளத்தே.

471 + 10 = 481

## 43. போற்றித் திருத்தாண்டகம்

('கற்றவர்க ளுண்ணும்' என்னும் தேவாரப் பண்)

**பண்:** திருத்தாண்டகம் (அரிகாம்போதி)

உண்ணவரு ளமுதான உயர்வே போற்றி
உம்பர்தாம் தொழுந்தெய்வ உறவே போற்றி
எண்ணுபவர் எண்ணமதில் இனிப்பாய் போற்றி
என்னையுமோர் பொருளாக ஏற்றாய் போற்றி
கண்ணின்மணி யாகிஎனுட் களிப்பாய் போற்றி
கற்றவருண் நற்றமிழ்ச்செங் கனியே போற்றி
பண்ணினிசை யாய்க்கலந்த பரனே போற்றி
பரவுபரங் குன்றமர்ந்த பதியே போற்றி. 1

சிந்திப்பா ருள்ளத்தே சேர்வாய் போற்றி
சிகிப்பரிமேல் செகம்வலமாய்த் திகழ்வாய் போற்றி
வந்திப்போர் வல்வினையைக் களைவாய் போற்றி
வாரிசுவ றிடவடிவேல் விட்டாய் போற்றி
அந்தியிலென் வழித்துணையாய் வருவாய் போற்றி
அருந்தவர்கள் தொழுதேத்தும் அழகே போற்றி
சிந்தையறத் திருவடியிற் சேர்த்தாய் போற்றி
செந்தில்நகர் மேவுதிருச் செல்வா போற்றி. 2

அமரேசன் சிறைமீட்ட அரசே போற்றி
அலரோனைச் சிறையிட்ட அறிவே போற்றி
சமரசூர னுடலழியத் தடிந்தாய் போற்றி
சண்பையில்வந் தமர்ஞானச் சதுரா போற்றி
குமரகுரு பரமசிவக் கொழுந்தே போற்றி
குடிமுழுதாட் கொண்டருளும் குமரா போற்றி
சமரபுரித் தெய்வீகத் தருவே போற்றி
தவர்துதிக்கும் தென்பழநித் தலைவா போற்றி. 3

புயல்போலக் கருணைபொழி புனிதா போற்றி
பொய்நீக்கும் பொருட்டென்னைப் புணர்ந்தாய் போற்றி
மயல்போக்கும் மலைவாழும் மருந்தே போற்றி
மறைமுடிவைப் பகர்ந்தருளும் மணியே போற்றி
வயலூரில் வளர்ஞான வாழ்வே போற்றி
வரையதிர மயிலேறி வருவாய் போற்றி
கயல்விழியாள் உமையருளுங் கனியே போற்றி
காவிரிசூழ் ஏரகத்துக் கடவுள் போற்றி. 4

கருணைபொழி ஆறுமுகக் கதிரே போற்றி
கதிகாட்டும் மெய்ஞ்ஞானக் கடலே போற்றி
தருணமறிந் தாட்கொண்ட தாயே போற்றி
தன்னிகரொன் றில்லாத தலைவா போற்றி
அருணகிரிக் கருள்செய்த அப்பா போற்றி
அருமறைகள் பரவுமல ரடியாய் போற்றி
அருணிதியா மமுதளிக்கும் அத்தா போற்றி
அணிதிகழும் தணிகைவளர் அழகே போற்றி.5

மலைகள்தொறும் குடிகொண்ட மன்னா போற்றி
மலைமகளின் மடியமர்தண் மதியே போற்றி
இலைமுகங்கொள் வேலுடைய இறைவா போற்றி
இரப்பவருக் கீந்தருளும் எந்தாய் போற்றி
அலையெனவே வருபிறவி அறுப்பாய் போற்றி
அன்பருளத் தருள்நடஞ்செய் அரசே போற்றி
அலைவில்லா மனத்தமரும் அழகே போற்றி
அழகுமிகு சோலைமலை அத்தா போற்றி. 6

வஞ்சனைகள் அறியேன்முன் வருவாய் போற்றி
வரையதிர மயில்நடத்தும் வரதா போற்றி
அஞ்சலென அடியேனுக் கருள்வாய் போற்றி
அம்புயநற் றிருப்பாதம் அளிப்பாய் போற்றி
நெஞ்சகத்தே நீங்காமல் நிறைவாய் போற்றி
நிறைசெல்வம் தரவரூஉம் நிமலா போற்றி
தஞ்சமெனக் காத்தருளும் தாயே போற்றி
தண்மாடஞ் சூழ்போரூர்த் தலைவா போற்றி.7

உள்ளத்தின் திமிரமெலாம் ஒழிப்பாய் போற்றி
உயிர்கள்பிணி தீர்த்திடுமுத் தமனே போற்றி

அள்ளினுந்தான் குறையாத அமுதே போற்றி
அழகுயரும் நெடுவேற்கை அரசே போற்றி
வெள்ளமதாய்க் கருணைதரு விமலா போற்றி
வேடர்கொடி படர்ந்தணையும் வெற்பே போற்றி
தெள்ளுகவி புனைபுலவர் தேவா போற்றி
திருவளரும் வயலூரின் வாழ்வே போற்றி. 8

சிறைநீலத் தோகைமயில் திகழ்வாய் போற்றி
சிக்கெனநின் னடியென்னைச் சேர்த்தாய் போற்றி
நறைகமழும் கடம்பணிந்த நாதா போற்றி
நற்றவர்கள் நாடுகின்ற நலனே போற்றி
மறைமுடிவை மகிழ்ந்தருளும் மன்னே போற்றி
மறவாதா ருள்ளத்தின் மணியே போற்றி
பிறைமுடியிற் புனைந்தபிரான் பிள்ளாய் போற்றி
பேறுதரு கதிர்காமப் பெம்மான் போற்றி. 9

கடகநிரை அசைந்தாட வருவாய் போற்றி
கமலபதச் சிலம்பொலிக்க வருவாய் போற்றி
சுடர்மிகுந்த வேலுடனே வருவாய் போற்றி
சுந்தரச்செம் பதந்தரவே வருவாய் போற்றி
நடனமிடு மயூரமிசை வருவாய் போற்றி
நாயினேன் அகங்களிக்க வருவாய் போற்றி
அடர்பிறவிப் பிணிதீர்க்க வருவாய் போற்றி
ஆறுபடை வீடமரும் அரசே போற்றி.
481 + 10 = 491

## 44. தெய்வமாலை

(திருவருட்பா— 'அருட்ஜோதித் தெய்வமெனை')

கருணைபொழி ஆறுமுகக்
கண்கண்ட தெய்வம்
கவலையெலாம் களைந்தெனையே
காக்குமொரு தெய்வம்
தருணமெனைத் தன்னவனாய்த்
தான்கொண்ட தெய்வம்
தாயெனவே தனயனெனைத்
தாங்குகின்ற தெய்வம்

மரணபய மெனையணுகா
வகையருளும் தெய்வம்
மலையருவி எனக்கருணை
வழங்குகின்ற தெய்வம்
அருணகிரிக் கருள்செய்த
அழகுமிகு தெய்வம்
அடிமையெனை அடிமைகொண்ட
அலைநகர்வாழ் தெய்வம். 1

மாதவர்கள் பணிந்தேத்தும்
மாண்புமிகு தெய்வம்
மாமயில்மீ தமர்ந்துவந்து
மயக்கொழிக்கும் தெய்வம்
பாதமலர் சென்னிமிசை
பதித்தருளும் தெய்வம்
பற்றற்றார் மனத்துறையும்
பண்புமிகு தெய்வம்
வேதமுடி மெய்ப்பொருளாய்
விளங்குகின்ற தெய்வம்
வேண்டுமவர் வெந்துயர்தீர்
வேலணிந்த தெய்வம்
ஆதிபரா சக்தியுமை
அணைத்துவக்கும் தெய்வம்
அடிமையெனை அடிமைகொண்ட
அலைநகர்வாழ் தெய்வம். 2

மலைபிளக்க வேல்விடுத்த
மாமுருகத் தெய்வம்
மானீன்ற மகள்மகிழ
மணந்ததிருத் தெய்வம்
கலைமகள்கேள் வனைச்சிறையிற்
கட்டிவைத்த தெய்வம்
கருநீல கண்டனுளம்
களிக்கவரு தெய்வம்
தலைவனெனத் தரணிதனில்
தான்மிளிரும் தெய்வம்
தணிகைமலை வாழ்கின்ற
சஞ்சலந்தீர் தெய்வம்

அலைகடல்வாய் முத்திறைக்கும்
அரும்பதியின் தெய்வம்
அடிமையெனை அடிமைகொண்ட
அலைநகர்வாழ் தெய்வம். 3

கண்ணொளியாய் என்னிலொளிர்
கதிர்காமத் தெய்வம்
காற்றினிலுங் கலந்தெனக்கே
களிப்பூட்டும் தெய்வம்
பண்ணிசையில் தேனெனவே
பரிமளிக்கும் தெய்வம்
பாரனைத்தும் பேரொளியாய்ப்
பரந்துநிற்கும் தெய்வம்
மண்ணிலுறு மாண்பனைத்தின்
மயமாகும் தெய்வம்
மாமலரின் வாசமதாய்
மகிழ்வூட்டும் தெய்வம்
அண்டர்குழுச் சூழவரும்
ஆனந்தத் தெய்வம்
அடிமையெனை அடிமைகொண்ட
அலைநகர்வாழ் தெய்வம். 4

குருமணியாய்க் குடிமுழுதாட்
கொண்டருளும் தெய்வம்
குஞ்சரிதன் நேசனெனக்
குலவுமொரு தெய்வம்
குறையணுகா நிறைவாழ்வைக்
கொடுத்தருளும் தெய்வம்
குணமணியாய்த் திகழுறுசற்
குருநாதத் தெய்வம்
குறுமுனிவற் கருள்செய்த
குமரகுரு தெய்வம்
குற்றமெலாம் நீக்கியெனிற்
குடிகொண்ட தெய்வம்
அருணனென எனதிதயத்
தமர்கின்ற தெய்வம்
அடிமையெனை அடிமைகொண்ட
அலைநகர்வாழ் தெய்வம். 5

தோகைமயில் வாகனமேல்
தோன்றுகின்ற தெய்வம்
தொழுமடியார் தொழும்பரெனத்
தொண்டாற்றும் தெய்வம்
வாகைகடம் பணிந்ததிரு
வாகுடைய தெய்வம்
வாட்டமெலாம் நீக்கியின்பம்
வழங்குகின்ற தெய்வம்
பாகைநிகர் மொழிவள்ளி
படருமென்றன் தெய்வம்
பரவுமன்பர் துயர்நீக்கும்
பரிவுமிகுந் தெய்வம்
ஆகமங்கள் தொழுதேத்தும்
ஆனந்தத் தெய்வம்
அடிமையெனை அடிமைகொண்ட
அலைநகர்வாழ் தெய்வம். 6

அரிமுகவ னசுரனுடல்
அடர்த்திடுவேல் தெய்வம்
அகிலமெலாம் பணிந்திடவே
ஆடிவரும் தெய்வம்
கரிமுகங்கொள் கணபதியின்
கனிட்டனெனும் தெய்வம்
கருத்ததனிற் புகுந்துகதி
காட்டுமென்றன் தெய்வம்
பரிவுடனே பவக்கடலைக்
கடக்கவருள் தெய்வம்
பாம்பணிந்த பரமர்க்கும்
பரமகுரு தெய்வம்
அரிமருக னெனஒளிரும்
ஆனந்தத் தெய்வம்
அடிமையெனை அடிமைகொண்ட
அலைநகர்வாழ் தெய்வம். 7

மலையரையன் ஈன்றபிடி
மகிழ்ந்தணைக்கும் தெய்வம்
மறைஞான பானுவென
வந்தருளும் தெய்வம்

சிலைவளைத்துப் புரமெரித்த
சிவனருளும் தெய்வம்
சிறுமையெலாம் சிதறிடவே
செம்மையருள் தெய்வம்
தலைமைமக பதியமரர்
தலைவணங்கும் தெய்வம்
தவமுனிவர் மனிதிலுறை
தன்மயமாம் தெய்வம்
அலைமகளின் மருகனென
அவனிபுகழ் தெய்வம்
அடிமையெனை அடிமைகொண்ட
அலைநகர்வாழ் தெய்வம். 8

ஆடிநட மாடுமயில்
அமர்ந்துவரும் தெய்வம்
ஆறிரண்டு தோள்கடம்போ
டசையவரும் தெய்வம்
பீடுறுவேல் பிடித்தெனக்கே
பேறுதரும் தெய்வம்
பேரொளிசேர் நூபுரத்தாள்
பெயர்த்தாடும் தெய்வம்
வாடுமுயிர் தழைக்கவருள்
மாரிபெயும் தெய்வம்
வானவர்க்காத் தானவரை
மாய்த்திடுவேல் தெய்வம்
ஆடுமிறை யோனகத்தில்
ஆசைகொளும் தெய்வம்
அடிமையெனை அடிமைகொண்ட
அலைநகர்வாழ் தெய்வம். 9

பண்ணிசைசேர் பக்திவலைப்
படுகின்ற தெய்வம்
பார்க்குமிட மெங்குநிறை
பரவெளியாம் தெய்வம்
விண்ணிதயக் கண்மணியாய்
விளையாடுந் தெய்வம்
விண்ணவர்கோன் பிடியைமணம்
விழைந்ததொரு தெய்வம்

நண்ணுமெனை நயந்தாண்ட
நற்குருவாம் தெய்வம்
நாவலர்சொல் தமிழ்மாலை
நன்கணியும் தெய்வம்
அண்ணல்குரு பரகுமர
அழகனென்றன் தெய்வம்
அடிமையெனை அடிமைகொண்ட
அலைநகர்வாழ் தெய்வம். 491 + 10 = 501

## 45. திரு அங்கமாலை

('தலையே நீவணங்காய்' என்னும் தேவாரப் பண்)

பண்: சாதாரி (பந்துவராளி)

சிரமே நீவணங்காய் — சிவன்
செல்வக் குமரன்றனைப்
பரமே உய்ந்தெனை ஆளும் பரமனைச் —
சிரமே நீவணங்காய். 1

விழிகாள் கண்டிடுவீர் — விறல்
வேலன் எழிலுருவை
அழகார் மேனியன் அன்பன் முருகனை —
விழிகாள் கண்டிடுவீர். 2

செவிகாள் கேள்மின்களோ — திருக்
கந்தன் கருணைத்திறம்
சிவனார்க் கோர்பொருள் செப்பிய தொல்புகழ் —
செவிகாள் கேள்மின்களோ. 3

மூக்கே நீமுகராய் — மணம்
முற்றிய பூம்பதத்தை
நோக்கால் என்னையே ஆண்டவன் பொன்னடி —
மூக்கே நீமுகராய். 4

வாயே வாழ்த்திடுவாய் — மனம்
மாய்த்தருள் எந்தைதனைத்
தாயாய்ச் சேயெனைத் தாங்குந் தயாளனை —
வாயே வாழ்த்திடுவாய். 5

நெஞ்சே போற்றிமகிழ் — நின்னுள்
நின்றிடங் கொண்டவனை
அஞ்சே லென்றருள் ஆறுமு கன்றனை —
நெஞ்சே போற்றிமகிழ். 6

கைகாள் சேர்ந்துதொழீர் — கரம்
வேலணி கந்தன்பதம்
பைகொள் பாம்பணி ஈசன்நற் பாலனைக் —
கைகாள் சேர்ந்துதொழீர். 7

பிறவி யாற்பயனென் — பேதை
என்னுயிர் நாதன்தனைக்
குறவி தோள்புணர் குமரனென் னாதஇப் —
பிறவி யாற்பயனென். 8

கால்க ளாற்பயனென் — கடல்
சூழ்திருச் செந்தில்நகர்
வேலன் நற்றளி மேவி வலம் செய்யாக் —
கால்க ளாற்பயனென். 9

சுற்றம் யாதுளதோ — சுமை
யாகுமித் தேகம்விழில்
சிற்றம் பலவிறை செல்வன் துணையலால் —
சுற்றம் யாதுளதோ. 10

எனக்கோர் ஒப்புளதோ — என்றன்
பிறவித் துயர்களைந்து
மனக்கோ யில்சுடர் மன்னனைக் கொண்டபின் —
எனக்கோர் ஒப்புளதோ. 11

உள்ளத் தொளிரக் கண்டேன் — உயர்
ஓங்காரத் துட்பொருளைத்
தெள்ளத் தெளிந்திடத் தேற்றும் தலைவனை —
உள்ளத் தொளிரக் கண்டேன். 501 + 12 = 513

## 46. ஆனந்தக் களிப்பு (1)

(திருவருட்பா — 'நல்லம ருந்திம் மருந்து')

அன்புரு வான மருந்து — என்றும்
அருள்மிகும் ஆனந்த அமுத மருந்து (அன்பு)

அறுமுக மான மருந்து — அல்லல்
அறுத்திட வல்ல அருமை மருந்து
குறுமுனி போற்றும் மருந்து — மிளிர்
குறுநகை கொண்டெனைக் கொண்ட மருந்து(அன்பு) 1

பவவினை நீக்கும் மருந்து — உயர்
பதமலர் சென்னி பதித்த மருந்து
சிவகுரு வான மருந்து — ஞானத்
திருமலை வாழ்கின்ற திவ்ய மருந்து (அன்பு) 2

குன்றுதோ றாடும் மருந்து — புள்ளிக்
குரகதம் மேல்வரும் குமர மருந்து
தன்மய மான மருந்து — என்னுள்
தானா யொளிர்உப சாந்த மருந்து (அன்பு) 3

வீரவேல் தாங்கும் மருந்து — அன்பர்
வினைகளை நீக்கிடும் வேத மருந்து
கூரருட் பாத மருந்து — நொடிக்
குவலய மேவலம் கொண்ட மருந்து (அன்பு) 4

சூரனை மாய்த்த மருந்து — மிகு
சுந்தர மான சுகிர்த மருந்து
வாரம் நிறைந்த மருந்து — சுக
வாரிதி மூழ்கிட வைத்த மருந்து (அன்பு) 5

தணிகையிற் றங்கும் மருந்து — என்றன்
தலைவனாய் வந்தெனைத் தாங்கும் மருந்து
அணிதிகழ் போரூர் மருந்து — என்னை
அன்புட னாண்ட அருமை மருந்து (அன்பு) 6

கடம்பணி பூணும் மருந்து — உமை
கண்மணி யாகும் கருணை மருந்து
திடமருள் தெய்வ மருந்து — கடல்
திரையெழு செந்தில் சிறக்கும் மருந்து (அன்பு) 7

மருளினை மாற்றும் மருந்து — மன
மாயையை மாய்த்திட வல்ல மருந்து
அருளுரு வான மருந்து — மன
அம்பலத் தாடும் அழகு மருந்து (அன்பு) 8

வனசரர் கோன்மகள் வள்ளி — தனை
மணந்திட மாயங்கள் செய்த மருந்து
மனத்துயர் நீக்கும் மருந்து — தெய்வ
வாரண நங்கை மணாள மருந்து (அன்பு) 9

அன்புட னாண்ட மருந்து — எனக்
கம்மையும் அப்பனு மான மருந்து
சின்மய மீயும் மருந்து — தன்னைச்
சீருடன் தந்தெனைக் கொண்ட மருந்து(அன்பு)

513 + 10 = 523

## 47. ஆனந்தக்களிப்பு (2)

தாயுமானவர் — 'சங்கர சங்கர சம்போ'

ஆனந்த மென்சொல்வேன் தோழி — செந்தில்
ஆறு முகனன்பில் மூழ்கித் திளைத்த (ஆன)

உள்ளக் கபாடம் திறந்தே — இன்ப
ஒண்சுட ராயென்னில் ஒன்றிக் கலந்தே
தெள்ளிய தேனமு தென்ன — அருள்
தேக்கிச் சொரிந்தேயென் னாவி கலந்த(ஆன) 1

ஈன உலகின் இயல்பை — நானும்
இன்னதென் றேசற்றுந் தேறா வயதில்
தானேவந் தென்னுள் நிறைந்தான் — பின்பு
தலைவனும் யானுமொன் றாக விளைந்த(ஆன) 2

மூவாறு கொண்ட வயதில் — பேதை
முன்வினை யாலிவ் வுலகில் மயங்கித்
தேவாதி தேவை மறந்த — என்னைத்
தேற்றித் திகைப்பெலாம் நீக்கியாட் கொண்ட(ஆன) 3

தன்னிக ரில்லாத் தலைவன் — அன்பர்
தம்மகம் நாடிக் களிநடம் செய்வான்
முன்னம்யான் செய்தவத் தாலே — மயில்
மூர்த்தியும் என்னிற் கலந்து களித்த (ஆன) 4

கூற்றை உதைத்தவன் பாலன் — பேதை
கூடிக் களித்திடப் பேரரு ளீந்தான்
வேற்றுமை யின்றியே என்னை — வடி
வேலன் விருப்பொடு மேன்றுகொண் டாண்ட(ஆன) 5

அன்னைபோ லாறுதல் தந்தே — என்றன்
அன்பனாய் ஆனந்த இன்னமு தூட்டி
இன்பதுன் பம்யாவு மின்றி — அவன்
இணையிலாத் தன்மயத் தண்ணருள் தந்த(ஆன) 6

வானவர் போற்றுந் தலைவன் — என்றும்
வாழ்வரு ளும்உமை பால முருகன்
கானக் குறப்பெண் மணந்த — நாதன்
கந்தன் குருபரன் தானெனை யாண்ட (ஆன) 7

வேண்டாமை என்னுமோர் செல்வம் — தந்தே
வேண்ட லெனும்பிணி வேரற மாய்த்தே
ஆண்டா னடியிணை பற்றி — அன்பில்
ஆழ்ந்திடு மாறின்பந் தந்தெனை ஆண்ட(ஆன) 8



என்னுடல் என்னுயிர் யாவும் — அவன்
இறையெனக் கொண்டபின் யானென்ப தேது?
என்பிழை எல்லாம் பொறுத்தான் — இங்கு
யான்செய்த புண்ணியம் யாரே அறிவார்?(ஆன) 9

எண்ணிய எண்ணங்கள் யாவும் — யானும்
எண்ணிய வாறே யினிது முடித்துக்
கண்ணின் கருமணி யாகி — அவன்
காதல் மயமாக என்னிற் கலந்த (ஆன)

523 + 10 = 533

## 48. ஆனந்தக்களிப்பு (3)

தாயுமானவர் — 'சங்கர சங்கர சம்போ'

மாறாத பேரன்பு தந்தான் — எழில்
மாமயில் வந்தருள் வோன்சிவ பாலன்(மாறாத)

அன்னை அருள்தந்தை அவனே — என்னை
அன்புட னாண்ட அருளிறை அவனே
பொன்னும் பொருள்போகம் அவனே — என்னைப்
பொன்றா துயிராய்க் கலந்து நிலைத்தே(மாறாத) 1

சயிலேந்தி ரன்பெற்ற தேவி — தந்த
சண்முகன் செந்தில் சுடர்வடி வேலன்

உயிருக் குயிராயென் நெஞ்சில் — நின்றே
உவப்புட னென்னைத் தனதாக்கிக் கொண்டே
(மாறாத) 2

கந்தன் கருணா சமுத்ரன் — என்றன்
கடிய வினைகளைந் தன்புடன் என்னைச்
சொந்தமு டனேயாட் கொண்டான் — வாழ்வில்
சொல்லற் கரியபே ரின்பங்கள் நல்கி (மாறாத) 3

மாரனும் கண்டு வியக்கும் — எழில்
மன்னன் எனக்கருள் செய்சுகு மாரன்
சூரனை மாய்த்தநல் வீரன் — வாரி
சூழும் தனியமர் சுந்தரத் தெய்வம் (மாறாத) 4

மதுரை நகரர சாளும் — வாம
மங்கை மகிழ்வோ டணைத்துக் களிக்கும்
மதுமலர்த் தாரணி கந்தன் — என்றன்
மனதிற் குலாவிக் களிக்கு மொருவன் (மாறாத) 5

தணிகை மலைவளர் தெய்வம் — என்னுள்
தண்ணொளி வீசித் தருக்கோ டமர்ந்த
அணிதிகழ் வேலுடை அண்ணல் — அன்பர்க்
கன்பனாய்ப் பாரினில் இன்பங்கள் ஈந்தே(மாறாத) 6

சீலத் தவர்க்கருள் செய்யும் — சிவன்
செல்வன்மெய்ஞ் ஞான வரதன் முருகன்
சாலப் பரிந்தென துள்ளம் — துள்ளச்
சாயல் மயில்மிசை வந்த அழகன் (மாறாத) 7

காலைக் கதிரொளி தன்னில் — வண்ணக்
காமலர் மாமணம் சூழ்தென்ற லோடே
மாலை மதிசிந்து மின்பில் — ஒளி
வாகை யணிந்கவன் தண்ணருள் காட்டி(மாறாத) 8

ஐங்கர னுக்கோ ரிளையோன் — கைலை
ஐயன் அருள்வடி வேலுடைச் சீலன்
எங்கும் நிறைந்தவென் நாதன் — ஆழி
எற்றும் திரைமுத் தொளிர்செந்தில் வேலன்(மாறாத) 9

என்றனைக் கைப்பிடித் தாளும் — ஐயன்
இணையில்பே ரானந்தம் தந்தசெந் தூரன்

குன்றுதோ றாடுங் குகேசன் — என்னுள்
குன்றாத சோதிசொ ரூபமாய் நின்றே(மாறாத)
533 + 10 = 543

## 49. திருவுந்தியார்

திருவாசகம் — 'வளைந்தது வில்லு'

**இராகம்:** மோகனம்

வந்திக்கு மெய்யடி யார்துயர் மாய்த்தருள்
தந்திடும் தெய்வமென் றுந்தீபற
தயைமிகு வேலனென் றுந்தீபற. 1

நீயே துணையென நித்தந் துதித்திடத்
தாயருள் செய்குவ னுந்தீபற
தாபமும் நீங்கவே யுந்தீபற. 2

அரியயன் காணா தயர்ந்திட நின்ற
அரனுமை மைந்தனென் றுந்தீபற
அன்புக் கனியென்றே யுந்தீபற. 3

வெஞ்சினச் சூரனால் வெந்துயர் பட்டவர்
அஞ்சியே வந்தனர் உந்தீபற
அபய மபயமென் றுந்தீபற. 4

தஞ்சமென் றேபதம் சார்ந்திடும் தேவரை
அஞ்சலென் றான்குக னுந்தீபற
அபய மளித்தன னுந்தீபற. 5

சூராதி சூரனின் சூதுகள் மாய்ந்திட
வேரோடே வீழ்த்தின னுந்தீபற
வேற்படை மன்னனென் றுந்தீபற. 6

தீந்தமிழ் மாலையும் தேன்மலர் மாலையும்
ஏந்திடும் மார்பனென் றுந்தீபற
எங்கள் குமரனென் றுந்தீபற. 7

கூரயி லேந்தியே கோல மயில்வரும்
பேரரு ளாளனென் றுந்தீபற
பேதையென் நாதனென் றுந்தீபற. 8

காழியில் சம்பந்த னாகச்சேர் கந்தனை
வாழியென் றேத்தின ருந்தீபற
வள்ளல் முருகனை யுந்தீபற. 9

நன்மயி லாபுரி நங்கையாம் பூம்பாவை
என்பை உயிர்ப்பித்தா னுந்தீபற
எங்கள் குமரனென் றுந்தீபற. 10

வானவர் போற்றும் வரதன் முருகனும்
ஞானக் கிழவனென் றுந்தீபற
நங்கள் ரமணனென் றுந்தீபற. 11

சம்பந்த னாவந்த சண்முக நாதனும்
நம்பந்தம் மாய்த்திட்டா னுந்தீபற
நம்பன் ரமணனா யுந்தீபற. 12

அந்தரர் போற்ற அவதாரம் செய்தனன்
சுந்தரர் மைந்தனாய் உந்தீபற
சுழியற் பதியதி லுந்தீபற. 13

வேங்கட ராமனாம் பேர்கொள் ரமணனும்
பாங்குடன் வந்தன னுந்தீபற
பாரகம் போற்றிட உந்தீபற. 14

வான்புக ழுந்திரு வண்ணா மலையொளிர்
ஆன்மீக நாதனாய் உந்தீபற
அமர்ந்த ரமணனென் றுந்தீபற. 15

பக்தர்க ளுய்ந்திடப் பாடுகள் நீங்கிடத்
தக்கணா மூர்த்தியாய் உந்தீபற
தன்மய மீந்தன னுந்தீபற. 16

கருணைக் கடலா யெனக்கருள் கந்தன்
குருரம ணேசனென் றுந்தீபற
குகரம ணேசனென் றுந்தீபற. 17

விந்தை மயிலொடும் வேலொடும் வந்தென்றன்
சிந்தை நிறைந்தானென் றுந்தீபற
செந்தி லிறைவனென் றுந்தீபற. 18

யானறி யாமலே ஆண்டவ னென்னுடை
ஈன மொழித்தானென் றுந்தீபற
ஏந்தல் முருகனென் றுந்தீபற. 19

வேண்டிய யாவும் விருப்போ டருளுமென்
ஆண்டகை நாதனென் றுந்தீபற
ஆறு முகவனென் றுந்தீபற. 543 + 20 = 563

## 50. தாலாட்டு

(நீலாம்பரி)

ஆராரோ ஆரிரரோ ஆறணிவோன் பாலகனே
சீராரும் சீரலைவாய்த் தேசிகனே கண்வளராய். 1

ஆடுமயில் மீதிருந்தே அலுத்திருப்பாய் ஆர்வமுடன்
பாடிடுமென் உள்ளமெனும் பஞ்சணையிற்
கண்வளராய். 2

நாடிவரும் பக்தருடை நலிவெல்லாம் நீக்கிடவே
ஓடிமிகக் களைத்திருப்பாய் உத்தமனே கண்வளராய். 3

வேல்பிடித்தே வேண்டுமன்பர் வினைதீர்க்க
நின்றிருந்தால்
கால்கடுக்கும் கண்மணியே கந்தாநீ கண்வளராய். 4

பஞ்சவரை ஓட்டியென்னுட் பக்குவமாய் வந்தவனே
கொஞ்சியமு தூட்டிடுவேன் கோமளமே கண்வளராய். 5

அன்பெனும்பா லமுதருந்த ஆவலுடன் ஓடிவந்தே
என்மனமாம் தொட்டிலிலே எழிலுறவே கண்வளராய். 6

மறைபுகழும் மாமணியே மலைமகளின் மாதவமே
சிறைமயிலின் சேவகனே சிற்பரனே கண்வளராய். 7

விண்ணமரும் மாமதியே வேலவனே பேதையென்றன்
கண்ணமரும் கண்ணொளியே கற்பகமே கண்வளராய். 8

தென்னவனை வீழ்த்துசிவன் தேனமுதே எங்கள்குல
மன்னவனே வண்ணமணித் தொட்டிலிலே
கண்வளராய். 9

சரவணநற் பொய்கையதிற் சண்முகனா வந்தவனே
அரவணையான் மால்மருகா அருங்கனியே
கண்வளராய். 10

சூரனுடன் போர்புரிந்தே சுந்தரனே சோர்ந்திருப்பாய்
ஆரமுதே அன்னையென்றன் அகமதிலே
கண்வளராய். 11

உள்ளமதில் மாசகற்றி ஒப்பனைகள் செய்துவிட்டேன்
தெள்ளமுதே வந்திடுவாய் தேசிகனே கண்வளராய். 12

ஞானம்நிறை பாதமென்னுள் நண்ணவைதத நன்மணியே
மோனசுக முத்திதரும் மூர்த்தியே கண்வளராய். 13

ஓராறு மாமுகனே ஓடிவந்தே அம்மாவென்(று)
ஈராறு கரந்தழுவி என்மடியிற் கண்வளராய். 14

தன்மகவாய்த் தேவிவளர் சரவணனே என்தவத்தால்
என்மகவாய் வந்தவனே என்னுயிரே கண்வளராய். 15

காழிநகர் வந்தமணர் களைகளைந்தே சைவவளம்
வாழவைத்த வித்தகனே வான்மதியே கண்வளராய். 16

பூம்பாவை என்பில்உயிர் பொருந்தவைத்த புண்ணியனே
வான்பாவை மகிழும்மண வாளாநீ கண்வளராய். 17

அருணகிரி நாப்புனைந்த திருப்புகழா லகங்களித்தே
கருணையுடன் காட்சிதந்த கற்பகமே கண்வளராய். 18

சம்பந்தாண் டான்மனத்துத் தருக்கொழிய அருணைதளிக்
கம்பமதில் ஆடிவந்த கண்மணியே கண்வளராய். 19

கௌவைத் திரைமோது செந்திலமர் காவலனே
ஔவைக் கருள்புரிந்த அற்புதனே கண்வளராய். 20

மன்னுயிரில் நின்றிலங்கும் மாமறையே பேரொளியே
என்னுயிரிற் பேதமற இருப்பவனே கண்வளராய். 21

பொன்றாத பூரணமே பேசிடும்பொற் சித்திரமே
குன்றாத குலவிளக்கே கோகிலமே கண்வளராய். 22

நீலமயில் வாகனனே நித்திலமே நிர்மலனே
சீலமிகுஞ் செந்தில்வளர் செல்வாநீ கண்வளராய். 23

பந்தமெனும் தூசகற்றிப் பாவையென்றன் பாலகனாய்ச்
சொந்தமுடன் வந்தவனே சுந்தரனே கண்வளராய். 24

கனகவயில் கொண்டடியார் கவலைகடி காவலனே
சனகன்மகள் பதிமருகா சண்முகனே கண்வளராய். 25

கருணைஉமை முகக்கமலம் தனைமலர்த்தும்
கதிரொளியே
கருணைபொழி மாமுகிலே கந்தாநீ கண்வளராய். 26

கமலமலர் மாமிஉளம் களிக்கவரும் கண்மணியே
விமலசுகந் தந்தருளும் வித்தகனே கண்வளராய். 27

கோலமுடன் நீலமயில் கொஞ்சிவரும் கோமளமே
பாலமுதம் நான்தருவேன் பாலகனே கண்வளராய். 28

பன்னிருகண் மாமலரே பார்புகழும் பாவலனே
என்னிருகண் மாமணியே என்துரையே கண்வளராய். 29

இமயமலை உமையணைத்தே இன்பமுறும் தீங்கனியே
சமரபுரி நாயகனே சண்முகனே கண்வளராய். 30

ஞானமெனும் பாலருந்தும் நற்றவத்தோர் உள்ளமெனும்
மோனசுகத் தொட்டிலிலே முக்கனியே கண்வளராய்.

563 + 31 = 594

**(முத்தம் வேண்டல், பூச்சூட்டல் ஆகிய இரு பாடற்பகுதிகள் பக்.458-462இல் காண்க)**

**திருச்செந்தில் முருகன் சந்நிதிமுறை முதற்பாகம் முற்றிற்று**

# சந்நிதிக் கந்தன் சரிதை

ந. சுப்பிரமணியம்

### காப்பு

#### வெண்பா

சந்நிதியிற் கந்தன் சரித்திரத்தைப் பாடுதற்குத்
தன்னிகரில் ஈசன் தனிமகனே,—பன்னிருகை
எம்பெருமான் அண்ணா, எழில்சித்தன் கேணியுறை
தும்பிமுகன் நீயே துணை.

#### விருத்தம்

இந்துமா ஆழி தன்னில் இலங்கிடும் இலங்கை மீது
பந்தமில் முனிவர், தேவர் பாடியே பூசை செய்த
சுந்தர யாழ்ப்பா ணத்தின் தொண்டைமா னாறு தன்னில்
கந்தனும் உறைந்தான் மக்கள் கவலைகள் தொல்லை தீர்க்க. 1

புண்ணியன் ஒருவன் இங்குப் புரிந்தனன் பூசை, பின்னர்
நண்ணருஞ் சமாதி கொண்டான் நற்பெருந் தொண்டை யாற்றில்
விண்ணவர் தொழுது ஏத்தும் வேலனும் இதனைக் கண்டு
மண்ணிலே குதித்து வந்தான், மானிடர் மகிழ்ச்சி யெய்த. 2

ஆடினான் மக்க ளோடு ஆறிரு கரத்தன், அங்கு
பாடினான் மக்க ளோடு பரவசம் யாருங் கொள்ள
ஓடினான் துள்ளித் துள்ளி ஒப்பிலா வேலி னோடு
கூடியே காட்சி தந்தான் குஞ்சரி வள்ளி யோடே. 3

பாவுடன் சமாதி கொண்டோன் பண்ணிய பூசை மண்ணில்
பூவர சொன்று தோன்றப் புன்னகை முகத்தி னோடு
பூவர சின்கீழ் நின்று புரிந்தனன் புதுமை யெல்லாம்
பாவமும் பிழையும் செய்யும் பாமரர் தம்மைக் காக்க. 4

கடற்றொழில் புரியும் அன்பன் கதிர்காமப் பெயரி னானைக்
கடம்பனும் அழைத்து ஆங்கு, கதைபல சாற்றிப் பின்னர்
படைத்தனன் கறியுஞ் சோறும் பச்சைஆல் இலைகள் மீது
கொடுத்தனன் மயில்மேற் காட்சி குஞ்சரி வள்ளி யோடே. 5

காட்சியைக் கொடுத்த பின்னர் கடம்பனும் மறைந்த போது,
காட்சியை எண்ணி யெண்ணிக் கதிர்காமன் கலங்கி யேங்கி,
''மாட்சிமை யுடைய மாலின் மருகனே வாவா!'' என்று
ஆட்சிலை யாக நின்று அழுதனன் அலறி னானே. 6

தாய்ப்பசு தவற விட்டுத் தவித்திடும் கன்று போலத்
தாயினைத் தவற விட்டுத் தவித்திடும் சேய்போல், புற்று
நோயினால் வருந்தி வாடும் நோயினர் போல, அங்கு
வாயினால் அலறி நிற்க வந்தனன் கதிர்வேற் கந்தன். 7

''எம்மைநீ பிரியா திங்கு இருந்திடு'' வென்று வேண்ட;
''இம்மையிற் பூசை செய்து என்கழல் அடைவீ'' ரென்ன;
''எம்மரும் வேலா பூசை இயற்றுதல் அறியேன், மேலும்
உம்மிடம் ஓதும் மந்த்ரம் ஒன்றுமே தெரியேன்,'' என்றான். 8

மதிசடை யுடையோன் மைந்தன், ''வாய்கட்டி மௌன மாகக்
கதிர்காமப் பூசை போலக் கவினுறச் செய்வீர்,'' என்னக்
கதிர்காமன் இறையை நோக்கிக் ''கதிர்காமம் அறியேன்''
என்னக்
'கதிர்காமம் செல்வோம்', என்று கந்தனும் உரைத்திட் டானே. 9

கதிர்காமத் தலமுங் கண்டு, கதிர்காமப் பூசை கண்டு,
அதிர்வுடன் அங்கு நின்ற அன்பனைக் கந்தன் கூட்டிப்
புதியதோர் வேலை யீந்தான் பூவர சின்கீழ் வைத்துக்
கதிர்காமன் பூசை செய்து கந்தனை வணங்க மாதோ. 10

பொன்பதி தொண்டை யாற்றில், பூவர சின்கீழ் வேல்வைத்
தன்புடன் வாயைக் கட்டி அழகுறப் பூசை செய்து

அன்பனும் முருக னோடு அளாவியே வாழும் நாளில்,
மன்னிய வேலும் எங்கோ மறைந்துவிட் டதுவே அம்மா. 11

மறைந்தவேல் தன்னை யெண்ணி மனமுடைந் திருக்கும் வேளை,
''மறந்திடு வேலை,'' என்றான், வைத்தனன் அழுத்திப் பாதம்;
மறமது அழியத் தொண்டை மானாறு புகழை யெய்தத்
திறமுடன் செழிக்கச் செல்வச் சந்நிதித் தலமும் ஆங்கே! 12

கதிர்காம வேளும், செல்வக் கந்தனும் ஒன்றே யென்று
மதியுள மாந்தர்க் கெல்லாம் வண்ணமாய் எடுத்துக் காட்டக்
கதிர்காமக் கொடியி னன்று கந்தனும் அங்குச் செல்வான்,
கதிர்காமத் தீர்த்தத் தன்று கந்தனும் திரும்பு வானே. 13

பேர்வள்ளிக் கொடியு மொன்று பிரதமை ஆடித் திங்கள்
சீர்பெறத் தோன்ற, அந்தத் தினத்தினைக் கொடிநாள் ஆக்கி;
தீர்த்தநாள் சிங்க மாதம் பூரணைத் தினத்தை யாக்கிக்
கார்த்திகைக் குமர னார்க்குக் களங்கமில் விழாக்கள்
செய்தார். 14

**வேறு**

திருவடிக்கீழ்க் கதிர்காமன் சென்ற பின்னர்,
சிறப்புடனே அவர்வம்சச் செல்வர் அங்கு
அருமையுடன் வாய்கட்டி ஆற்றிப் பூசை,
அவ்விடத்தில் ஆயிரத்துத் தொளாயி ரத்து
இருபத்தோர் ஆண்டினிலே எவரும் மெச்சும்
எழில்மிக்க புதுக்கோயில் எழுப்பி னார்கள்,
தரணியுளார் வினைநீங்கத் தருமம் ஓங்கத்
தவமோங்கச் சரவணனின் தலமும் ஓங்க. 15

திரிசூலம் புஷ்கரணி தென்கீழ், ஆனைத்
திருமுகனார் திசைதெற்கு, திருமால் பெற்ற
திருமாது வடகிழக்கு, திண்ணை தன்னில்
திருஎருது முகநந்தி, தேவ தேவன்
திருநாக தம்பிரான் வடமேல் நிற்கத்
திருச்செல்வச் சந்நிதியின் செவ்வேள் ஆங்கு
திருநடனம் ஆடிவரத் தேர்மேற் காண்போர்
திருமுருகன் திருவடிக்கீழ்ச் சென்று வாழ்வார். 16

சந்நிதிக் கந்தன் சரிதை முற்றிற்று

உ

# செல்வச் சந்நிதி முருகன் காவடிச் சிந்து

## மு. செல்லையா

ஆடாடு பக்தாநீ ஆடாடுபக்தா
அன்போடு காவடி கொண்டாடுபக்தா
ஆடாடு பக்தாநீ ஆடாடு பக்தா
ஆனந்த சந்நிதிமுன் ஆடாடு பக்தா

வேலா வேலா வென்று ஆடாடுபக்தா
வேதா வேதா வென்று ஆடாடுபக்தா
பாலா பாலா வென்று ஆடாடுபக்தா
பன்னிருகை வேலா வென்றாடாடு பக்தா - ஆடாடு

கந்தா கடம்பா வென்றாடாடு பக்தா
கதிரை மலையானே யென்றாடாடு பக்தா
செந்தில் முருகாவென்று ஆடாடுபக்தா
சேவற் கொடியோனே யென்றாடாடு பக்தா - ஆடாடு

மயில் வாகனாவென்று ஆடாடு பக்தா
மாணிக்க மணியேயென் றாடாடு பக்தா
தயிர்திருடி மருகாவென் றாடாடு பக்தா
தாசர் விசுவாசனென் றாடாடுபக்தா - ஆடாடு

மாரிமழை பொழியவென் றாடாடு பக்தா
மாநதிகள் வழியவென்றாடாடு பக்தா
பாரினிலே பகைவன்மை மாவினைக ளெல்லாம்
பற்றறுத் தொழிய வென்றாடாடு பக்தா - ஆடாடு

செந்நெல் செழிக்க வென்றாடாடு பக்தா
செல்வங் கொழிக்க வென்றாடாடு பக்தா
பன்னிருகை வேலவனின் நல்லருள்களெல்லாம்
பாலர்க்களிக்க வென்றாடாடு பக்தா - ஆடாடு

வேலோடு வாவென்று ஆடாடுபக்தா
விருதோடு வாவென்று ஆடாடு பக்தா
பாலோடு சர்க்கரையு முக்கனிபடைத்து
பக்தி செய்வோமென்று ஆடாடுபக்தா - ஆடாடு

கற்பூரங் காட்டிநின்றாடாடு பக்தா
கையாட்டி யாட்டியே ஆடாடு பக்தா
அற்புதம் தாதவென்று ஆடாடு பக்தா
அன்பர்முன் வாவென்று ஆடாடுபக்தா - ஆடாடு

கூத்தாடி யாடியே ஆடாடு பக்தா
குரவையிட்டழுது ஆடாடு பக்தா
நேத்திரம் நீர்சொரிய ஆடாடு பக்தா
நெஞ்சில் நேசம்செறிய ஆடாடுபக்தா – ஆடாடு

வேண்டுவன வேண்டி நின்றாடாடு பக்தா
வேதங்களோதி நின்றாடாடு பக்தா
ஆண்டு தோறும் வந்து ஆடாடுபக்தா
ஆனந்த சந்நிதிமுன் ஆடாடுபக்தா - ஆடாடு

செல்வச் சந்நிதி முருகன் காவடிச் சிந்து முற்றிற்று

உ

# நல்லூர் முருகன்

# காவடிச் சிந்து

## சோ. பத்மநாதன்

### வெயிலுகந்த விநாயகா!

மயிலை வள்ளி தெய்வ யானை
ஒயிலை முருகேசன் கையில்
அயிலைநல்லை ஊரைச்சிந்து பாட-கூடும்
அன்பர்தோளில் காவடியோ டாட

வெயிலுகந்த பிள்ளையார்சந்
நிதியில்நின்று கைகளால்என்
தலையிற் குட்டிக் கும்பிடுவேன் நம்பி-கந்தன்
தந்திமுக னுக்கினிய தம்பி!

அவலும் வன்னித் தேனும் பாலும்
சுவைகொள் மோதகம் கதலி வாழைப்
பழமும்எள்ளுப் பொரியும் கொண்டு போனேன்-சந்தம்
பயிலும் சிந்தில் கவிசெய்திடல் ஆனேன்!

புவனம் யாவும் வலம்வந்தாலும்
சிவனும் தாயும் முழுதும் என்றான்
அவனைக் கண்டேன் நல்லையூரின் எல்லை-அந்த
ஆனைமுகன் போல்துணைவே றில்லை! 1

### பாவிலூறிய நாவினான்

நிலவும் அரவும்கொன்றை மலரும் சடையில்அணி
நிமலர் அருளும்கந்த வேளையே-அன்பால்
நிதமும் பணிவர் எந்த வேளையும்-வெண்

நீறுபூசுவர் ஆறுமாமுகன் நீலமாமயில் ஏறுகோலமே
நினைவர் கசிந்துருகி ஆடுவார் - பாப்
புனைவர் இசைகலந்து பாடுவார்!

பலகுன் றுகளுவந்த முருகன் மறையை முன்பு
பரமன் செவியில்அருள் பாலனாம்-சூரன்
பணியும் குழந்தைவடி வேலனாம்-தமிழ்ப்

பாவிலூறிய நாவினான் என தாவியானவன்
தேவிமாரொடு
பதியிற் சிறந்தநல்லை மேவினான்-என்
பனுவற் குகந்த பெரும் பேரினான்! 2

**சரிதானோ?**

சங்கிலி ஆண்டதிந் நல்லூர்-செந்
தமிழர சோச்சிய தொல்லூர்-புகழ்
யமுனாரியும் அடியார்திரு
மடம்மாளிகை குளம்வீதிகள்
பலவும்-புகழ்-நிலவும்!

எங்கணும் நின்னருள் ஆட்சி-மயில்
என்பதும் வேலென்றும் பேச்சு-அரு(கு)
இருதேவியர் உளராகவும்
ஒருபாலனென் றுனையேசொல்லல்
ஏனோ-சரி-தானோ?

சங்கமும் கண்டது நல்லூர்-செந்
தமிழை வளர்த்ததும் நல்லூர்-புகழ்
சகராசனும் பரராசன்அ
ரசகேசரி முதலானவர்
தாமே-புலவர்-ஆமே! 3

**தீயுங் கொடுங்கோலும் என்ன செய்யும்?**

கோயில்மணி ஓசையிதோ வேளைதவ றாதுநம்மைக்
கூப்பிடு(து) அன்பரெலாங் கூடுவீர்-புகழ்ப்
பாக்களை இசையமைத்துப் பாடுவீர்

தீயுங்கொடுங் கோலும்சிறை வாழ்வும்பசி நோயுமென்ன
செய்யும்-வடிவேலைத்துணைக் கொண்டபின்-முரு
கையன் நல்லைக் கோயில்வலம் வந்தபின்?

தாய ரேந்து கின்றகருப் பூரதீப ஜோதிகாண
சஞ்சலங்கள் தூரஓடிப் போகுமே-நம்
நெஞ்சகங்கள் நின்றன் கோயி லாகுமே!

நேயமென்ற நெய்சொரிந்து வாய்மையாளர் செய்யும்பூசை
நித்த நித்தம் நிகழ்வதுநல் லூரிலே-பெருந்
தத்து வங்கள் காணலாம்நல் லூரிலே! 4

## நல்லைக்(கு) இணையில்லை!

வீதியெங்கும் வெண்மணற் பரப்பு-நீல
விதானம் அதில் நித்திலப் பதிப்பு
நாதசுர கானமெழும் வேதவொலி காதில் விழும்
நல்லைக்(கு)-இணை-இல்லை!

காதலொடு பாடுமொரு கூட்டம்-பூசை
காணவிரை யும்பிறிதொர் கூட்டம்-குல
மாதர்வய தானவர்கள் பாலர்இள வாலைகள்எம்
மருங்கும்-வந்து-நெருங்கும்!

நாவலனார் தொண்டுபற்றி ஆயும்-மா
நாடு நடக்கும், இருந்து கேளும்!
பாவலர்கள் பாடுதமிழ் பண்ணிசைவிற் பன்னர்தமிழ்
பருகு-நெஞ்சம்-உருகு!

காவல் எல்லை நாலினிலும் புரிவான்-எங்கள்
கணபதியே பெருமைகளுக் குரியான்
தேவர்முனி வோர்அரிய யோகியர்கள் கூடிஉண்மை
தெளிவார்-அருள்-பொழிவார்! 5

## ஓவியமாகவே நின்றாள்!

அண்ட மாமுக டுந்தகர்ந் தேவிழ
ஆயிரம் அம்புகள் எய்தான்-பதின்
ஆயிரம் மாயங்கள் செய்தான்-சூரன்
அன்ப னாகினன் கண்க ளூடுபேர்
இன்ப மாநதி பொங்கி யேவர
என்பெ லாம்மெழு காகிய சேதிகள்
காவிய மாகவே சொல்வார்-அன்பர்
காலனை மோதியே வெல்வார்!

சங்க மேறிய சங்கர னாரையும்
சாடிய கீரனுன் அன்பன்-குறு
மாமுனி தானுமுன் அன்பன்-நல்லைக்
கந்த செந்தமிழ் கொண்டு தென்றலும்
வந்து வந்தும யங்கு மாலையில்
உன்பொ லாநினை வாலொரு பூங்கொடி
ஓவிய மாகவே நின்றாள்-மாரன்
தூவுகி றான்பாணம் என்றாள்! 6

## தமிழ்மணக்கும் பன்னிரண்டு தோளன்

சேவலாம் கொடியும் மயில் நீலவா கனமுங்கொண்ட
தீரமிக்க கந்தன்அரு ளாளன்-நல்லூர்
ஆலயத்தைத் தேடிவந்த தாளன்-அவன்
வேலும் முகம் ஆறும்திரு நீறும்முது சூரன்குடி
வெற்றிகொண்ட தோள்வலியும் பாடு!-வினை
முற்றுமணு காதுபறந் தோடும்!

பாவலார் தொடுக்குந்தமிழ் மாலையே மணக்குந்திரள்
பன்னிரண்டு தோளன்முரு கேசன்-அவன்
என்னிரண்டு கண்களுக்குள் வாசன்-துதி
பாடுமன்ப ரோடுகலந் தாடுவதும் பாடுவதும்
பாவவினை போக்குமிது திண்ணம்-உனைத்
தேவனென ஆக்குமருள் வண்ணம்! 7

## வினை தீரப்பா பழநி வேலப்பா!

நல்லை மாநகரை நண்ணு-வீதி
நாலும்ப்ர தக்ஷணம் பண்ணு!-முழு
நாளும் பொழுதும் கந்த வேளின் பெருமை
சொல்ல
ஞானம்-வரும்-மோனம்!

செல்லப் பாவென்னும் ஞானி-தவம்
செய்த தேரடிக்குப் போநீ!-வினை
தீரப்பா பழநி வேலப்பா எனவே
சேவி-உய்யும்-ஆவி!

கண்கள் நீர்பெருக நில்லு-முரு
கையன் திருப்பெயர்கள் சொல்லு-அந்தக்
காலன் வந்தாலென்ன வேலின் துணையிருக்குக்
காணும்-அன்பு-பூணும்!

அன்னம் மயில் இடபம் மீதும்-கடா
ஆடு கிளி குதிரை மீதும்-எங்கள்
ஆறு முகன்தினமும் ஏறி வரும்பவனி
அழகு-நெஞ்சம்-இளகு 8

## வடிவேலன் வரும் நேரம்

ஏறுமயில் ஏறிவிளை யாடும் — காண
எங்கள்வினை நீறுபடும் இன்பநிலை கூடும்
ஆறுமுகன் தேரில்வரும் அழகு — வெள்ளி
அன்னமதில் வள்ளிவரும் அழகென்ன அழகு!
காவடி எடுப்பவர்கள் கோடி — நல்லைக்
கந்தனடி சிந்தனைசெய் அன்பர்பல கோடி!
சேவல்மயில் காவலுக்கு நிற்கும் — நாங்கள்
செய்தவினை நல்லைநகர் எய்தவிரைந் தோடும்!
ஞானவடி வேலன்வரும் நேரம் — இள
ஞாயிறவன் பாதமலர் சூழவரும் நேரம்!
ஆனகுறை யாவும்தொழத் தீரும் — எங்கள்
ஐயன்புகழ் பாடநல்லை வீதிவந்து சேரும்!
கோபுரங்கள் காணஉள்ளம் துள்ளும் — கை
குவியும்முரு கேசனது கோலம்நெஞ்சை அள்ளும்!
தீபஒளி கண்களை நிறைக்கும் — இளந்
தென்றல் மணம்கொண்டுவரும் எங்கணும் இறைக்கும்!
9

## ஞானம் வரும்!

மல்லிகை முல்லை மணங்கொள் கடம்பணி
மாலையான் — மலர் — மாலையான் — ஒளி
மஞ்சம், மயில், அன்பர், நெஞ்சம் கயிலாய
வாகனன் — பூத — வாகனன்
நல்லையின் வேலனைப் பாடவந் தால்வரும்
ஞானமே — மெய்ஞ் — ஞானமே — தன்னை
நம்பிய வானவர் வெஞ்சிறை நீக்கிய
நாயகன் — சேனை — நாயகன்
எல்லைகள் நாலும் விநாயகனே காவல்
ஏற்றுளான் — மகிழ்ந் — தேற்றுளான் — உறும்
எங்கள் துயரங்கள் சிந்தும்படி கந்தன்
ஏவுவான் — வேலை — ஏவுவான்!

சொல்லினை ஆள்வதில் வல்லவன் நாவலன்
தூயவன் — நெஞ்சம் — தூயவன் — அருந்
தொண்டுகள் ஆயிரம் கண்டநல் லூர்புகழ்
சொல்லவா? — இன்னும் — சொல்லவா? 10

## 'ஓம்' எனும் மந்திர ரூபம்

'ஓம்' எனும் மந்திர ரூபம் — மயில்
ஓங்கி விரிக்கும்க லாபம்! — 'கொக்
கறுகோ' துயில் எழுவீர், இறை
வழிபாடுசெய் அதிகாலையென்(று)
ஊரை அழைக்குது சேவல் — முருகன்
பேரை முழக்குது சேவல்!
சாமி புறப்படும் நேரம் — வண்ணச்
சாத்தப் படியலங் காரம்! — சந்தத்
தமிழோசைநம் செவியூடுதெள்
அமுதாகவே குதிபாயுது
தாளைப் பிடித்திட வாரீர்! — கந்த
வேளைத் துதித்திட வாரீர்! 11

## தினைமாவும் சுனைநீரும் தெளிதேனும்...

செந்தமிழ் இன்பம் நுகர்ந்து — வள்ளி
செவ்விதழ் ஈரம் பகிர்ந்து — தந்த
தினைமாவிலும் சுனைநீரிலும் தெளிதேனிலும் உளமாரவே
திளைக்கும் — உண்டு — களிக்கும்!

கந்தனின் வெற்றிகள் பேசும் — நல்லூர்க்
காற்றிலும் தமிழ்மணம் வீசும்! — பக்திக்
கவிபாடுவர் உரைகூறுவர் கலையோடவர் வழிபாடுசெய்
காலம் — விழாக் — கோலம்!

சஞ்சலம் தீர்க்கும் மருந்து — தில்லைத்
தாண்டவன் தந்த மருந்து — திசை
தடுமாறியிவ் வுலகாகிய படுமாயையில் முழுகாதுதன்
தாளே — தந்த — வேளே!

பஞ்சமும் நோயும் பறக்கும் — இந்தப்
பாரில் அறங்கள் சிறக்கும் — இங்கு
படுபாதகர் செயும்வாதைகள் அடியோடறப் புரியாய்அருள்
பாலா — வடி — வேலா! 12

நல்லூர் முருகன் காவடிச் சிந்து முற்றிற்று

உ

## பினாங்கு
## தண்ணீர்மலை வேல் முருகன்
# காவடிச் சிந்து

கந்தன்மேல் காவடிச் சிந்து - பாடக்
காத்திடும் வேழத்தைப் போற்றியே வேல்வேல்
சுந்தரத் தீந்தமிழ் தன்னில் - நலம்
சூழ்ந்திடக் காதலால் சொல்லுவோம் வேல்வேல். 1

கொக்கர கோவெனும் சேவல் - புவி
கூவியெ முப்பக் கொடிகொண்டாய் வேல்வேல்
எக்கண முந்துணை நின்றே - அருள்
ஈந்திடும் பன்னிரு கையனே வேல்வேல்! 2

காவடி தூக்கியே வேல்வேல் - எங்கள்
காணிக்கை சேர்க்கவே நாடினோம் வேல்வேல்
பூவடி மீததை ஏற்றே - அருள்
பூரித்து நல்கிட வேண்டினோம் வேல்வேல். 3

உன்புகழ் பாடிப்ப ணிந்தே - பரம்
உற்றிட வேதுணை தேடினோம் வேல்வேல்
தென்தமிழ் தந்தருள் செய்தே - மலைத்
தெய்வமே பக்கலில் நின்றிட வாவா. 4

கார்த்திகைப் பெண்டிர் அறுவர் - நல்ல
கானமு டன்சுவைத் தாலாட்டுப் பாட
நேர்த்தியாய்ப் பூந்துயில் கொண்டாய் - அன்னை
நேசமு டன்சேர்க்க சண்முகம் ஆனாய்! 5

நெற்றிக் கனல்வழி ஈந்த - திரு
நீறணி ஈசருக் கோம்பொருள் சொல்லி
உற்ற பெருந்துயர் தீர்த்தே - சுரர்
ஓம்பிடக் காத்திட்ட சேந்தனே வேல்வேல். 6

கொவ்வை இதழ்வள்ளி நேசா - தேவ
குஞ்சரி நல்லுளக் கோவிலின் வாசா
செவ்வைப் பொருளுப தேசா - தமிழ்
செப்புமடியர்பால் சென்றிடும் தாசா. 7

என்றுந் துணைசெய்வாய் வேல்வேல் - கலை
ஏற்றம் வழங்கிடத் தோன்றுவாய் வேல்வேல்
குன்றுக் குடையசெவ் வேள்வேல் - குலம்
கோத்திரம் சாத்திரம் காப்பாயே வேல்வேல். 8

ஏறும யில்தனில் ஏறி - இந்த
ஞாலம்வ லம்வந்த சீலனே வேல்வேல்
ஆறுப டைவீ டமர்ந்தே - உல
காண்டிடக் கோலமும் பூண்டவா வேல்வேல். 9

ஓம்பொருள் தேராப் பிரமன் - தலை
உச்சியில் குட்டிச்சி றைசெய்த பாலன்
பூம்பொழில் சூழ்மலை எங்கும் - நலம்
பூத்திடக் காத்திடும் புண்ணிய சீலன். 10

தென்திசைக் குள்ளமு னிக்கு - தமிழ்
செப்பியி லக்கணச் சீர்செய்தாய் வேல்வேல்
அன்போ டருணகி ரிக்கும் - புகழ்
அண்டிவந் தாக்கினாய் ஆனந்தம் வேல்வேல். 11

குற்றம் சிவனது பாட்டில் - அன்று
கூறிய கீரனுக் குற்றதோர் துன்பம்
முற்றக் குறைத்தருள் செய்த - இரு
மூன்றுமு கத்தனே காத்திட வாவா. 12

சுட்டப ழக்கதை காட்டி - அவ்வை
சொற்பொருள் துய்த்திடச் செய்தனை வேல்வேல்
மட்டிலா நல்லின்ப வாழ்வை - தினம்
மன்பதைக் கீந்திடும் மன்னவா வேல்வேல். 13

அண்ணலே பன்னிரு கையால் - எமை
ஆண்டருள் செய்திட வேண்டினோம் வாவா
கண்ணருள் சிந்தியே வாவா - எந்தக்
காலத்தி லுந்துணை யாகநீ வாவா. 14

பினாங்கு தண்ணீர்மலை வேல் முருகன் காவடிச் சிந்து முற்றிற்று

உ

# திருப்புகழ்
## அருணகிரிநாதர்

**(1 — 1326 பாடல்கள் பக்.498 — 1344)**

### அருணாசலம்

### 1327

கேசர வாச முற்ற கீதவி நோத முற்ற
தேனளி சூழ மொய்த்த மலராலே
சீறும ராவெ யிற்றி லூறிய காள மிட்ட
சீதநி லாவெ றிக்கும் அனலாலே
போதனை நீதி யற்ற வேதனை வாளி தொட்ட
போர்மத ராஜ னுக்கும் அழியாதே
போகமெ லாநி ரைத்த மோகவி டாய்மி குத்த
பூவையை நீய ணைக்க வரவேணும்

மாதினை வேணி வைத்த நாதனு மோது பச்சை
மாயனு மாச ரிக்கு மயில்வீரா
வானவர் சேனை முற்றும் வாழம ராப திக்குள்
வாரண மான தத்தை மணவாளா
மேதினி யோர்த ழைக்க வேயரு ணாச லத்து
வீதியில் மேவி நிற்கு முருகோனே
மேருவை நீறெ ழுப்பி நான்முகன் மார்ப கத்துள்
வேலடை யாள மிட்ட பெருமாளே.

### 1328

சொரியுங்கணை யின்கணைத் தொகையாலே
துளையமிடுஞ் சந்தனத் தழலாலே
விரியுநில வின்(கதிர்ச்) சுடராலே
மெழுகிலம ருந்தனத் துயரானீர்

கரியதுரி யம்பிகை யணிவாரே
கருணை பெருகுங்கடைக் கண்ணாரே
அரியதொரு (வெ)ந்தொழிற் கரியாரே
அருணைய திரங்கழற் பெருமாளே.

## ஏரகம்

## 1329

மலடி வயிற்று மகன்போ லேஒரு
புதைய லெடுத்த தனம்போ லேஒளிர்
வயிர மடித்த சளம்போ லேஇள முலைமாதர்
வலிய அணைத்த சுகம்போ லேகதிர்
ஒளிவி டுரத்ன வடம்போ லேஎழு
பரிம ளபுஷ்ப வனம்போ லேசுர நதிபோலே

அலைகடல் பெற்றருள் பெண்போ லேவரு
புதல்வர் தமக்கிரு கண்போ லேகரை
அருகி லெடுத்த சலம்போ லேஉன தழகாமோ
அமுது பொசித்த ரசம்போ லேதிரை
கடல்மடை விட்ட சலம்போ லேதினம்
அதிசய முத்தமிழ் அன்பா யோதவுன் அருள்தாராய்

கலக லெனச்சொல் சிலம்பா சீர்பெறு
மலைமகள் பெற்ற குழந்தாய் மாமத
கரிமு கனுக் கொருதம்பீ கானவர் மகளாமோர்
கடிமலர் மொய்த்த சுரும்பே ஞானிகள்
மனதில் ருசித்த கரும்பே வானவர்
கவலை தணித்தருள் பண்பே மாயவன் மருகோனே

குலிசன் மகட்கொரு நண்பே ஏழிசை
உரைகள் சுவைத்த கடம்பா போய்வரு
குரைகட லுக்கொரு சம்பா னாய்வரு வடிவேலா
கொடிய பிணிக்கு மருந்தே தாள்பணி
அடியர் தமக்கு விருந்தே கான்மயில்
குதிரை நடத்து துரங்கா ஏரக முருகோனே.

## 1330

வறுமைப் பாழ்பிணி ஆற்றப்ப டாதுளம்
உருகிப் போனது தேற்றப்ப டாதினி
மகிமைக் கேடுகள் பார்க்கப்ப டாதென அழையாயோ
வலியப் போயுடல் கூச்சப்ப டாமையும்
இடியப் பேசிய நாச்சிக்க லாமையும்
மறுசொற் காதுகள் கேட்கப்ப டாமையும் வரலாமோ

கறுவிப் பாய்புலி வேட்டைக்கு ளேவரு
பசுவைப் போல்மிடி யாற்பட்ட பாடொரு
கதையைப் பாரினி லார்க்குச்சொல் வேனினிஅறியாயோ
கவலைச் சாகர நீச்சுக்கு ளேயுயிர்
தவறிப் போமென ஓட்டத்தி லோடியே
கருணைத் தோணியி லேற்றிக்கொள்வாயினிஅலையாதே

குறைபட் டேனுயிர் காத்துக்கொ ளாயென
முறையிட் டோர்கரி கூப்பிட்ட நாளொரு
குரலிற் போயுயிர் மீட்டுக் கொள்வோர்திருமருகோனே
குளிர்முத் தாலணி மூக்குத்தி யோடணி
களபப் பூண்முலை பார்த்துப்பெண் மோகினி
குவளைப் பார்வையில் மாட்டிக் கொணாதருள்குருநாதா

நிறையத் தேனுமிழ் பூக்கொத்தி லேகனி
கிழியத் தான்விழுங் காய்க்கொத்தி லேமயில்
நடனக் கால்படு தோப்புக்கு ளேகயல் வயலூடே
நதியிற் காவிரி யாற்றுக்கு ளேபயில்
வளமைச் சோழநன் னாட்டுக்கு ளேரக
நகரிற் சீர்பெறு மோக்ஷத்தை யேதரு பெருமாளே.

### கதிர்காமம்

## 1331

கலையிலே மைக்கண் விழியிலே பெற்ற
குருதிநே ரிட்ட விதழ்மானார்
குழையிலே தெற்று நடையிலே நெய்க்கொள்
குழலிலே பற்கள் தனிலேமா

முலையிலே அற்ப இடையிலே பத்ம
முழுநிலா வட்ட முகமீதே
முதுகிலே சுட்டி நுதலிலே இக்கு
மொழியிலே சிக்கி விடலாமோ
தலைவனே முத்தி முதல்வனே துட்டர்
இகலனே நித்தம் இளையோனே
சதுரனே பித்தர் புதல்வனே மெச்சு
சரவணா செச்சை முருகோனே
உலகனே மிக்க கதிருகா மத்தில்
ஒருவனே விஷ்ணு மருகோனே
ஒயிலனே பச்சை மயிலனே சித்ர
உருவனே பத்தர் பெருமாளே.

## 1332

சரியையிதுவீறு கிரியையிது யோக
தவசுமிகுஞான மெனவோதுஞ்
சதுருவிதமான நெறிகள் தவறாத
தலைமையடியார்கள் அடிபேணி
உரியதவரேவல் மனதுவிசுவாச
மொடுசெயடியார்கள் பதசேவை
ஒருபொழுதுதானு மிடைவிடலிலாம
லுவகையுடனே செய் திடுவேனோ
திரிபுரமும்நீறு படநகைசெயாதி
திருமுருகனான குமரேசா
செகதலமொரேழு மடையஉணுமாயர்
திகழ்மருகனாக வருவோனே
கரமுமிருநாலு முகமுமொருநாலு
கமலர்சிறையாக முனிவோனே
கழனிநெடுவாளை கமுகொடியமோது
கரபுரியில்வீறு பெருமாளே.

## கரபுரி

## 1333

அடிமையிது மாடு மனையெனது மாது
அனைமகவி தாமென் றகலாதே
அணியலற வீறு பொருள்களிது வாசை
அரிவையர்க ளீது வெனுமாசை

உடலைநிச மாக வழிவிலெனை நாடி
உழலுமடி யேனை நரகூடே
யுவியவிடொ ணாத படியுனது தாளில்
உருகுதலை வாழ்வை அருள்வாயே

அடையவுள தேவர் கடல்கடையு நாளில்
அரவுவிட வாலம் அதனாலே
அயனமரர் மாலும் அபயமென வோட
அவர்களுடல் பேரில் அருளாயே
கடுவையமு தாக அமுதுசெய்த பால
கபதவிச காயர் புதல்வோனே
கழனிநெடு வாளை கமுகொடிய மோதுங்
கரபுரியில் வீறும் பெருமாளே.

## 1334

அழகுபெறு மோலை மருவுமிரு காதை
அடருமய லான விழியாலே
அவனியிட ராகு மனதுதடு மாறி
அலையவிடு மாதர் மயலாலே
உழலைபடு நானு மழலில்மெழு காகி
உருகிவிடொ ணாத படிதானே
உனதுபத மான கமலமலர் நாளு
முறையுமிட மாக அருள்வாயே

பொழியுமழை யாக மனமுருகு வார்கள்
புகழ்கவிதை மாலை புனைவோனே
புரதகன ராதி கயிலைமலை யாளர்
புதல்வகும ரேச வடிவேலா
கழையினிசை ஊது மரிமருக மேனி
கதிரனைய சோதி உடையோனே
கழனிநெடு வாளை கமுகொடிய மோது
கரபுரியில் வீறு பெருமாளே.

## 1335

அழலைபடு காய்தல் தலைவலிகண் ணோவு
வதையல்கடி கூனல் செவிடூமை
அடியில்வெடி யீளை குருடுமுட மூளை
அழுவைசெறி சூலை தொடைவாழை
சுழல்குரும னோடு முரைகழலை காசத்
தொகைவலிசு வாச வகைநாவால்
சொலவரிய நோய்க ளிவைகளில்வி ழாமல்
துணையுனது தாளை அருள்வாயே

உழுவையுரி நாதர் தரவருகு மார
உமைகவுரி பால வடிவேலா
உனைமனதில் நாடும் அடியன்மிடி நோயை
ஒருநொடியில் வெல்ல அருள்தாராய்
கழுவிலமண் மூகர் மருவவிசை பாடு
கவுணியசு வேத மறையோனே
கழனிநெடு வாளை கமுகொடிய மோதுங்
கரபுரியில் வீறும் பெருமாளே.

## 1336

உதிரவுரு ளாகிஅ துகருவ தாகி
உவகையுற வாரும் நிலமீதே
ஒரு... இருவயது மாகி
உயர்பெரிய ராகி நரையோராய்
முதியவுட லாகி யுடலையுயிர் போட
முசியுறவி னோர்கள் கொடுபோயே
முளரியி....வு நீரின்
முழுகியறு மாசை வினைதீராய்
மதியறுகு சூடி மரகதிபி நாகி
வடவயினி லேதென் றிடமாவாள்
மதனையெரி நாதர் அழகினு....
....ன வீறு முருகோனே
கதமுடைய ஆனை முகனையுடல் காது
கயமுகவ னேரி ளையோனே
கழனிநெடு வாளை கமுகொடிய மோதுங்
கரபுரியில் வீறும் பெருமாளே.

## 1337

ஒருகை யுறவாட ஒருகை யுரநாட
உருகி யிடுபாயல் அணைமீதே
ஒருவ ரிதழூறல் ஒருவர் பசியாற
உடலு யிர்கள்வேறு தெரியாதே
குருகி னிருநாலு குரலி சைகுலாவல்
குமுகு மெனவாக மறியாதே
குலவி மனவாசை யமையு மினியீறில்
குரைக ழலையோதல் தருவாயே

சுரரு முனிவோரும் நிசநி லையதான
சுகமு டையவாழ்வு பெறவேதான்
சுதபெ ரிதுகாணும் நிருதர் களிலான
சுரதி பறமாறும் நெறியோனே
கரனை யறுமாறு வொருக ணையையேவு
கரிய திருமாலின் மருகோனே
கழனி நெடுவாளை கமுகொ டியமோதுங்
கரபு ரியில்வீறும் பெருமாளே.

## 1338

ஒருவ ரொருசேலை தருவ ரெனநாடி
உருகி யவரோடு மயலார் போல்
உலகி லுளலீலை அறுபதுடனாலும்
உளவகை கள்சேரும் அணைமீதே
தருபொரு ளைநாடி அவதியி லிலாத
தகைமை யைவினாவி முனிவாயே
தனிவிடு பொய்மாதர் அரைமடுவில் மூழ்கும்
தமிய னெனையாள நினைவாயே
அரிபிரமர் தேடி யறிய வரிதாய
அடிமுடிய ரோமென் றதனாலே
அடியின் முடிதாழ அதுபொருள் வழாமல்
அவர்செவி யினோது குருநாதா
கரைநிறைய வார மணிநிறைய வீசு
கனதிரைகொள் பாலி நதியூடே
கழனி நெடுவாளை கமுகொடிய மோதும்
கரபுரியில் வீறும் பெருமாளே.

## 1339

பவனியுள போது குருவைநினை யார்கள்
பர * * ரையாரே
பணிபவரை வாரு மெனவுமுரை யார்கள்
பழிகளணை கோடி கொலைசேர்வார்
தவசிகளை நூறு பழிமொழிசொல் வார்கள்
தருமவழி மா * * ர்
தமதிதம தான கவடுசொலி வாடு
தலையொழிய நானும் அருள்தாராய்

அவநெறிந டாத தவநெறிவி டாத
அருமுனிவ ராசு நொடிபோதே
அமரர்சிறை மீள அசுரர்கிளை மாள
அழகுபெற வேலை விடுவோனே
கவுரிதரு பால கருணையுள சீல
கபடர்குல கால மயிலோனே
கழனிநெடு வாளை கமுகொடிய மோதும்
கரபுரியில் வீறும் பெருமாளே.

## 1340

மிகுகொடியதான குடியின்மகவாகி
வினைபழமைகோவ வதனாலே
மிடியனெனவாகு முடனை * *
வளிதகலசோறு மரிதாயே
இகமறியவாழ்வை யுடையவர் கொடார்கள்
எனமன துநாணி இரவாதே
இடரிலடியேனு மிடைபடு * *
* யுனதுதாளை * அருள்வாயே
குகசரவணேச முருகவடிவேல
குமரவருணேச செயவீரா
குறிமயிலொடானை யுஙகபரியசூலி
குமரிகு * * வாழ்வே
ககனபரிவால விருவர்மணவாள
கருணையவிசாக பரநாதா
கழனிநெடுவாளை கமுகொடியமோதுங்
கரபுரியில்வீறும் பெருமாளே.

## கானப்பேர்

### 1341

அனத்தோடொப்பா மெனுநடை மடவியர் அநுராகம்
அதற்கேசிச்சீ இனமென துயர்கெடல் அழகாமோ
உனைப்பாடிப்பே றுறுமொரு வரமினி உதவாயோ
உவப்பாகத்தே வர்கள்சிறை விடவிடும் அயிலோனே
முனைப்பாடிக்கே திரிதரும் அரிதிரு மருகோனே
முகிற்கேநத்தா விரிதரு கலபநன் மயிலோனே
தினைக்காவற்கே உரியவள் மனமகிழ் மணவாளா
திருக்கானப்பேர் நகர்தனி லினிதுறை பெருமாளே.

### 1342

கோலக்காதிற் குழையாலே கோதிச்சேர்மைக் குழலாலே
ஞாலத்தாரைத் துயரேசெய் நாரிக்காசைப் படலாமோ
மேலைத்தேவர்க் கரியோனே வீரச்சேவற் கொடியோனே
காலப்பாசத் துயர்தீராய் கானப்பேரிற் பெருமாளே.

## குராவடி

### 1343

மருக்கு லாவிய மலரணை கொதியாதே
வளர்த்த தாய்தமர் வசையது மொழியாதே
சருக்கு லாவிய அயலவர் பழியாதே
கடப்ப மாலையை யினிவர விடவேணும்
தருக்கு லாவிய கொடியிடை மணவாளா
சமர்த்தனே மணி மரகத மயில்வீரா
திருக்கு ராவடி நிழல்தனில் உறைவோனே
திருக்கை வேல்வடி வழகிய பெருமாளே.

## குருகிரி

## 1344

கலியைய லைத்துக் குலைத்து விட்டுறு
பிணியைய டித்துத் துரத்தி விட்டெழு
கவலைநெ ருப்பைத் தணித்து விட்டற நெறியாமோ
கடினக சப்புக் கினிப்பை விட்டென
துயிரில ழுக்கைத் துடைத்து விட்டெழு
கருணைம ழைக்குட் குளிக்க விட்டினி அலையாதே

அலையும னத்தைப் பிடித்து வைத்ததில்
உறையுமி ருட்டுக் கருக்க லுக்குநின்
அழகுவி ளக்கைப் பதித்து வைத்ததும் அவியாதே
அறிவையு ருட்டித் திரட்டி வைத்ததின்
அமிர்தகு ணத்தைத் துதிக்க வைத்தெனை
அடிமைப டைக்கக் கருத்தில் முற்றிலும் நினையாயோ

மனைகல கப்பட் டொளிப்ப தற்கொரு
புகலிட மற்றுத் தவித்து நிற்கவும்
வடவரை மெத்தச் சலித்தி ருக்கவும் இதனாலே
மலையர சற்குப் பழிப்பெ னச்சொலி
உறவின்மு றைப்பற் றெனக்கு றித்தபின்
மனதிலி ரக்கக் குறிப்பை வைத்தமர் விளையாதே

குலகிரி யெட்டுத் திசைக்க ளிற்றினை
உடலைமி தித்துக் கிழித்தெ டுத்தெழு
குருதிகு டித்துப் பெருத்த செப்பிள முலையாளோர்
குறமக ளைக்கைப் பிடித்து மற்றொரு
குலமக ளைக்கைப் பிடித்து மிக்குள
குருகிரி யைக்கைப் பிடித்தி ருக்குமென் முருகோனே.

## செந்தில்

## 1345

இன்பமுந் துன்பமுஞ் சந்ததங் கொண்டுசென்
றிங்குமங் குஞ்சுழன் றிடுமாயத்
துன்பவெண் கும்பியங் கந்தவிர்ந் துன்பெருந்
தொண்டனென் றுய்ந்துளங் களியேனோ

புன்குருந் துந்தியஞ் சந்தனஞ் சிந்திமுன்
பொங்கிவெண் சங்கெறிந் தலைவீசும்
தன்பொருந் தம்பசும் பொன்சொரிந் தெங்கணுந்
தந்திடுஞ் செந்திலம் பெருமாளே.

## திரிசிரகிரி

## 1346

அரிவைய ரெனுமிரு தங்கக் கட்டியும்
இருபுறம் வருமிரு சிங்கக் குட்டியும்
அறுமுக மதிபுனை செம்பொற் சுட்டியும் முகமீதே
அழகொழு கியமது வின்றிற் சிப்பையும்
அவளிவள் விழிதுயில் தும்பிப் பக்ஷியும்
அதுவிது வெனுமொரு சண்டைப் பட்டதும் எழுநூறா

இரவில் ஒளிவிடு மின்பப் புட்களும்
இமையவ ரவரவர் சந்திப் புக்களும்
இருள்படு மகபதி இந்த்ரப் பட்டமும் அழியாதே
இசையெழு கனகச தங்கைக் கொத்துகள்
கலகல வெனுமொரு விந்தைப் புட்பமும்
இருவிழி குளிரவும் என்றைக் கிப்படி வருவாயே

குரைகட லெனுமொரு தம்பட் டத்தொனி
கிழிபட மதனனு டம்பைச் சுட்டதும்
குளிர்தர வருள்மழை சிந்தத் தக்கவர் குருநாதா
குறமகள் கிளிமொழி கண்டிச் சைப்படு
பரிமள களபசு கந்தத் தைப்புனை
குவிமுலை முகடும ழுந்தத் தைத்திடு மணிமார்பா

திரைகட லமுதொரு பெண்பெற் றிட்டது
தெரிசனை பெறவிரு கண்பெற் றிட்டனு
தினம்விழி துயில்பவர் தங்கச் சிக்கொரு புதல்வோனே
திமிரப டலமுறு துன்பத் துக்கெழு
தினகர னெனவரு மன்பைப் பெற்றுயர்
திரிசிர கிரியினி லின்பத் தைத்தரு முருகோனே.

## திருத்தணி

### 1347

தித்தித்த மொழிச்சிகள் மாவரை
ஒத்தொத்த தனத்திகள் காமிய
சித்ரத்தை நிகர்த்திகள் காசுள பலபேர்கள்
சித்தத்தை மயக்கிகள் யாரையு
மிச்சித்து முயக்கிகள் மோகமெ
சிச்சிச்சி சிறுக்கிகள் தோதக வசமாகி

முத்தத்து முயற்சிக ளாடிய
பித்தத்து மெனக்குநி நீடிய
முத்துய்த்த பதத்திணை யேதர வருவாயே
முற்பட்ட இலக்கண நூலிடை
தப்புற்ற கவிக்கென வேஅவை
முற்பட்டு புதுத்துறை மாறிய புலவோனே

சத்தித்த சமுத்திர மேயென
யுத்தத்து ளரக்கர்கள் மாளவெ
தத்வத்து மிகுத்தயி லேவிடு புயவீரா
தத்தித்தொ மெனப்புரி மாநட
னத்தத்த னருட்செவி ஓதிய
தற்கித்த வயற்சிர மோதிய குருநாதா

பத்தெத்து முடித்தலை ராவணன்
வத்தித்து நிலத்தி லிராவணம்
பத்தத்து வதைத்திடு ராகவன் மருகோனே
பக்கத்து பதத்தர்க ணாடவெ
சொக்கத்து சுயப்பொரு ளாகவெ
பட்சத்து திருத்தணி மேவிய பெருமாளே.

## திருப்பெருந்துறை

### 1348

தவப்ரியங் கொளுமுனி வரர்வானோர்
தழைக்கவந் தருள்புரி முருகோனே
உவப்புறுங் குறமகள் மணவாளா
ஒருத்தலின் சுதைபுணர் திருமார்பா

அவத்தனென் றெனைவிட லழகாமோ
அசட்டுமங் கையர்மயல் தவிராயோ
சிவப்பரம் பொருளுத வியபாலா
திருப்பெருந் துறையுறை பெருமாளே.

### திருமலை

## 1349

படுகொலை யேமிகுந்து ம்ருகமத பாளிதங்கொள்
பணைமுலை மாதர்தங்கள் மயலாலே
பழியொடு பாவமென்ப தறிவுகொ ளாதுயங்கு
பதகனை யாளவின்று வரவேணும்
கடுவர வேயுளஞ்சி அடிதொழு தோதும்பர்
கவலைகொ ளாதிருண்ட களநாதர்
கயிலையில் மேவுகின்ற பரமத யாளநம்பர்
கருதவொர் வாசகஞ்சொல் குருநாதா

கொடுமுடி மேருவஞ்சி அலரிட வேயொர்செண்டு
கொடுபுடை யாவெகுண்ட கரமாறா
குடநிரை வாடல்கண்டு குலகிரி யேவிரிந்த
குடையென மேவுகொண்டல் மருகோனே
திடுதிடெ னாமுழங்கும் அருவிக ளேமிகுந்த
திருமலை வாழ்வுகந்த முருகோனே
திறல்மிகு சூரனஞ்ச வடியயி லாலெறிந்து
செயவணி மார்பணிந்த பெருமாளே.

## 1350

வனசமொத் தபதக் குருநாதா
மலைமடப் பிடியுத் தமிபாலா
அனகதத் துவமெய்ப் பொருளானே
அடியனுக் குனபொற் கழல்தாராய்
எனதுயிர்க் குயிரொத் தவதீதா
இபமுகப் பரமற் கிளையானே
தினவனத் தெரிவைக் குரியோனே
திருமலைக் குமரப் பெருமாளே

## தேவர்குடி

## 1351

காதின்மணி ஓலையிட்டு வருமானார்
காமவலை ஊடுபுக்கு மதிமாழ்கி
நீதிநெறி யேவிடுத்து மலையாதே
நீயுனிரு தாளளிக்க வரவேணும்
ஆதிமக மாயிபெற்ற குமரேசா
ஆறுமுக மேபடைத்த குருநாதா
தீதிலடி யார்மனத்தில் உறைவோனே
தேவர்குடி வாழவைத்த பெருமாளே.

## நாகாபுரம்

## 1352

மாதவ னப்பிளமை வீணாய ழித்தவனை
வாணாள்சி றுத்தவனை இடர்தீரா
வாழ்வோத ரித்தவனை ஊனோபெ ருத்தவனை.
வாயோவ சத்தியனை நிலைபேறாம்
ஆதார மற்றவனை ஆசாரம் விட்டவனை
ஆபாச முற்றவனை யறுபானோ
டாறாறு தத்துவனை ஆகாத குத்திரனை
ஆளாக நற்கருணை புரிவாயே
வேதாள முட்டவெழு பாதாள முட்டவெழு
மேலாக முட்டவொரு திரையாக
வேதானி றுத்துபடை சூர்மாள விட்டகையில்
வேலாயு தப்பிரபு மறைதேடு
நாதாசி வப்பொழுகு பாதாபொ ருப்பிலுறை
ஞானாந டத்துமொரு மயில்வீரா
நாராய ணற்கரிய காரோண ருக்கினிய
நாகாபு ரத்தில்வரு பெருமாளே

## நெருவைநகர்

### 1353

மருவு மடியவ ரடியவ ரடிமையு
மருண மணியணி கணபண விதகர
குடில செடிலினு நிகரென வழிபடு குணசீலா
குழுவி லொழுகுதல் தொழுகுதல் விழுகுத
லழுகு தலமிலி நலமிலி பொறையிலி
குசல கலையிலி தலையிலி நிலையிலி விலைமமாதர்
மருவு முலையெனு மலையினி லிடரியு
மளக மெனவள ரடவியில் மறுகியு
மகர மெறியிருகடல்தனில் முழுகியு முழலாமே
வயலி நகரியி லருள்பெற மயில்மிசை
உதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே
உருவு பெருகயல் கரியதொர் முகிலெனு
மருது நெறிபட முறைபட வரைதனி
லூரலி னொடுதவழ் விரகுள விளமையு மிகமாறி
உமிழ நிரைகளி னிடர்கெட வடர்கிரி
கவிகை யிடவல மதுகையு நிலைகெட
உலவில் நிலவறை உருவிய வருமையு மொருநூறு
நிருப ரணமுக வரசர்கள் வலிதப
விசயன் ரதமுதல் நடவிய வெளிமையு
நிகில செகதல முரைசெயு மரிதிரு மருகோனே
நிலவு சொரிவளை வயல்களு நெடுகிய
குடக தமனியு நளினமு மருவிய
நெருவை நகருறை திருவுரு வழகிய பெருமாளே

## பழமுதிர்சோலை

### 1354

இலகிதழ் கோதி நேதி மதகலை ஆர வார
இளநகை ஆட வாடி மிகவாதுற்
றெதிர்பொரு கோர பார ம்ருகமத கோல கால
இணைமுலை மார்பி லேற மதராஜன்

கலவியி லோடி நீடு வெகுவித ராக போக
கரணப்ர தாப லீலை மடமாதர்
கலவியின் மூழ்கி யாழு மிழிதொழி லேனுன் மீது
கருதிய ஞான போதம் அடைவேனோ

கொலைபுரி காளி சூலி வயிரவி நீலி மோடி
குலிசகு டாரி ஆயி மகமாயி
குமரிவ ராகி மோகி பகவதி ஆதி சோதி
குணவதி ஆல மூணி அபிராமி
பலிகொள்க பாலி யோகி பரமகல் யாணி லோக
பதிவ்ரதை வேத ஞானி புதல்வோனே
படையொடு சூரன் மாள முடுகிய சூர வீர
பழமுதிர் சோலை மேவு பெருமாளே.

## பழநி

## 1355

நாலி லங்கதின் மேல்வி நாயகன்
மூவி ரண்டினில் மேவு பூமக
னாத னுந்தச மீது மாலிரு சடமீதே
நாம சங்கர னார்து வாதச
நாலி லிங்கதி சேரனே ★
★ கண்டமிலாட மாயதி நெறிபோய
..............................
..............................
................
மூது ணர்ந்ததி யான பூரண
ஞான முண்டக மீதி லேறிய
மோன சுந்தர யோக நாயக எனையாள்வாய்
கால கண்டக லோக பாரண
தாரு கன்பொடி யாக மால்வரை
கால றுந்திட வீறு மாகள முதுபேய்கள்
காக ளங்கட டாரி பேரிகை
தாரை பம்பைம லாரி யாகுளி
காய வண்டமெ லாமு லாவிட விளையாடி

ஆல சுந்தரி காளி யோகினி
பூத சங்கமொ டாட மாதிரை
ஆழி வெந்திட நீடு வேல்விடு முருகோனே
ஆசை கொண்டொரு வேட மோகினி
பாத பங்கய மீது வீழ்தரு
ஆவி னன்குடி மேவுதேவர்கள் பெருமாளே

## 1356

நீலநி றத்தொடு நிற்பா ராமதி
ராநிரு பத்தையெ டுப்பா ராமதை
நீளவி ரிப்பது ரைப்பா ராமுரை பகர்வாராம்
நீதிநி கழ்த்தியு ரைப்பா ராமுயி
ராதனை யுட்புக விற்பா ராமதை
நீள்கென வெற்றிய ழைப்பா ராமெழு நடைமேலே

சாலய ளாற்றிலெ டுப்பா ராம்வடி
வாளைவி ரித்துவ ளைப்பா ராமிருள்
சாருமெ னத்திலொ ளிப்பா ராமய லெமலோகஞ்
சார்புரு வத்துநெ ரிப்பா ராமதி
லேபுக லிட்டுது ணிப்பா ராமது
தாமது விட்டது தப்பா தேபடர் கொடுபோனாற்

காலனொ ருத்தனி ருப்பா னாமிரு
பேருயி ரெட்டைவ ளைப்பா ராமவர்
காணும்வ ழக்கையு ரைப்பா ராமிவன் வெகுபாவி
தானென மெத்தந டப்பா ராமொரு
சூலமெ டுத்துபி டிப்பா ராமிரு
காலைமு றித்துவ டிப்பா ராமழு கைக்கூடே

ஓலமெ னக்கத மிட்டே பாதகன்
ஆவிப தைக்கவ ருத்தா தேதமிழ்
ஓதிம முத்தியு னக்கா ளாகநின் அருள்தாராய்

ஓதிம மெத்தவ னத்தால் மோதிய
தாமரை யொத்தக ரத்தார் வாழ்வளை
யூர்பழ நிப்பதி பெற்றா னேதிரு முருகோனே.

## பூவணம்

## 1357

அறப்பாவை அத்தற் கருள்பாலா
அளித்தாது வெட்சித் திருமார்பா
குறப்பாவை அற்பிற் புணர்வோனே
குலத்தேவ வர்க்கப் பரிபாலா
மறப்பாத கத்துற் றுழல்வேனோ
மலர்த்தாள்வ ழுத்தக் க்ருபையீவாய்
சிறப்பான முத்திக் கொருவாழ்வே
திருப்பூவ ணத்திற் பெருமாளே.

## 1358

வானவராதி யோர்சிறைமேவ
மாவலியேசெய் திடுசூரன்
மார்பிருகூற தாய்விடவாரி
வாய்விடவேலை விடுதீரா
கானவர்பாவை காதலனான
காசணிபார தனமார்பா
காலனைமோது காலகபால
காளகளேசர் தருபாலா

தேனமர்நீப மாலைவிடாத
சேவகஞான முதல்வோனே
தீயகுணாதி பாவிநினாது
சேவடிகாண அருள்வாயே
போனகசாலை யாதுலர்வாழ
வீதிகடோறும் நனிமேவு
பூவணமான மாநகர்வாழு
நாதகுகேச பெருமாளே.

### மதுரை

### 1359

சைவமுதற் குருவாயே சமணர்களைத் தெறுவோனே
பொய்யருளத் தணுகானே புனிதஅருட் புரிவாயே
கையின்மிசைக் கதிர்வேலா கடிகமழற் புதநீபா
தெய்வதசற் குருநாதா திருமதுரைப் பெருமாளே.

### 1360

வள்ளமுலைப் பொதுமானார்
மயலதனிற் படியாதே
கள்ளம்விடுத் துனதாளே
கருதவருட் பெறுவேனோ
உள்ளமறைப் பொருளோனே
உமைமகிழ்நற் புதல்வோனே
தெள்ளுதமிழ்க் குரியோனே
திருமதுரைப் பெருமாளே.

### மயிலை

### 1361

அளகபாரம லைந்துச ரிந்திட
வதனவேர்வுது லங்கீந லங்கமழ்
அதிக மோகம்வி ளைந்துக லந்துறை குயில்காடை
அளிபுறாமயி லொன் றுசொ லுங்குரல்
மிடறதாதுதி பங்கவி தஞ்செயு
மகளிர்தோதக வன்பினி னின்றுள மறுகாதே

உளம்விடாதுபு கழ்ந்துப ணிந்திட
அறிவிலாதம னங்கொடு நின்றினி
அலையுறாமலு வந்தெனை நண்பொடு சிவயோகத்
துருகுஞானப ரம்பர மந்திரம்
அணுகொணாதப தந்தரு சிந்துர
உபயசீதள பங்கய நின்கழல் அருள்வாயே

இளகிடாவகை சந்தன குங்கும
களபபூரண கொங்கைந லம்புனை
இரதிவேள்பணி தந்தையு கந்தருள் இளையோனே
இனியதாயெதி ரிந்திர ரண்டரும்
அரகராசிவ சங்கர சங்கர
எனமிகாவரு நஞ்சினை யுண்டவர் அருள்பாலா

வளவியோதையி டுங்கன வம்பர
மகரவாரிக டைந்தவ சஞ்சல
மரமொரேழுரு வுங்கணை சிந்துவன் மருகோனே
வனிதைநாயக வம்பவி ழும்பொழில்
அசுரர்சேனைய டங்கம டிந்திட
மயிலைமீதினில் வந்துறை யிந்திரர் பெருமாளே.

## வடமலை

## 1362

நெய்ச்சிற் றுற்று மைக்கொப் புற்று
நித்தச் சிக்கத் துச்செப் பொத்து
நெறிதரு குழல்மலர் சொருகிடு பரிமள
நிரைநிரை மதுகர நெடிதாடி
நெற்றிச் சுட்டிப் பொட்டுப் பற்றித்
தொட்டுக் கட்டிக் கைக்கட் டிட்டு
நிரைவளை கலகல வெனவரு தெரிவையர்
நெறிதனை மனதினின் மிகநாடி

இச்சைப் பட்டுக் கைக்குட் சிக்கி
எச்சிற் பட்டப் பைக்குட் டொக்கி
இரவொடு பகலொடு இலவிதழ் பருகியும்
இதுதொழி லெனவெதிர் திரிவேனை
எத்திப் புத்திப் பத்திச் சொக்கிட்
டிட்டுக் கட்டிக் கட்டித் தெட்டித்
தெளியிது படியிது வுதவிய குருவென
மருமல ரடியிணை அருள்வாயே

நச்சுக் கட்டித் துப்பக் கொத்து
நச்சுத் தத்தைக் கற்பித் திட்டு
நககண தககண செகக்கண செகக்கண
நககண எனவே நடமாடி
நத்தைச் சக்ரத் தைக்கைப் பற்றி
நட்புப் பெற்றுக் கொட்புற் றுற்று
நரகிரி யரகிரி சிவகிரி யெனுமவர்
நறைபெலி யிடவே நலவாசி

வச்ரப் பச்சைக் கற்கூட் டிட்டு
வட்டப் பொட்டுக் குட்பொட் டிட்டு
வகைவகை சிலசில மறுவறு துகில்கொடு
வளமது பெறவே நெடுமாடை
வட்டிக் கிட்டுக் கட்டித் தக்க
மக்கட் பெற்றுக் கைக்குட் பற்றி
வரவர வரவர மிகவர மருளிய
வடமலை மருவிய பெருமாளே.

## வயலூர்

## 1363

மணத்துக் கடம்பு புனைதோளா
வலத்துற் றெதிர்ந்து பொருசூரர்
நிணத்திற் றுளைந்த வடிவேலா
நிலத்திற் பொலிந்த வயலூரா
வணத்திற் கிளந்த மயில்வாகா
மனத்திற் புகுந்து க்ருபையீவாய்
குணத்திற் சிறந்த மகராசி
குறத்திக் கிசைந்த பெருமாளே

## வேதிகுடி

## 1364

அருளொளி யாகிய வடிவே யடியவர்
மனதிமி ராமிரு ளரிமா பருதியி
னணைவரு மா(முக) வசுரர்கள் பொடிபட அயிலேவும்
அழகிய ஆறிரு கரனே குறமகள்
மகுண பராபர வெளியே யுயர்பெரு
வெளியினில் வீறிய வெளியே வெளியொளி எனவேதான்

ஒருவரு மேயறி ய(றிவே) யாவரு
மறிவரி தாகிய பெருமா னேயென
திருவினை தீரவெ வருவா யேகுரு பரனாகி
ஒருபொரு ளாமதை யறையா யோவென
திருசெவி யாரவெ விரவா யோவிதை
யறியவி னாவின தறியா யோவரு ளொருநாளே

கருதரி தாகிய மறையோ னாமரி
யரிகரி யாவரு மறியா நாதன்
வருள்சுத வாயின் மணவே திகுடி உறைவோனே
கனதன மாதுமை யிமவா னேதரு
வருசிவ னாரணி மகவா னேபணி
கமலவு லோசன செகமா தாசுத முருகோனே

செருவளர் மாபுய விரனே பரிபுர
கமலப தாம்புய பரனே சரவண
பவகுக சாம்பவி குமரா திகழொளி சுகராச
செயசெய மாதவ தவரா ராதவ
செயசெய வாதவ நிபறா தூதிவ
செயசெய நாதவி னோதா தாபரர் பெருமாளே.

## 1365

### பொது

அணையினி லிருத்தி உரைமிசைக் கிடத்தி
இருகையொ டணைத்து முகமும ழுத்தி
அதரமு மழுத்தி அறுசுவை யளித்து நகரேகை
அடைவுபட வைத்து விழிதுயி லகத்து
மிடறதிர வெட்டும் நிறைகுர லெழுப்பி
அவசமற விட்டு வெகுவித மறுத்தும் வகைசேரத்

துணிவினிட விட்டு மடிசுரு ளளித்து
மருவிய முயக்கில் மொழிபல மிழற்று
சுகமென வுரைத்து மதியிரதி யொத்து விளையாடித்

துணைமுலை பகைப்ப மயிர்முக மறைப்ப
உபரிசுர தத்தில் உயிர்களை யுருக்கும்
உரமகளிர் நட்பை இதமென நினைப்ப தொழியாதோ

முனையற வெதிர்த்த பிணையவர்கள் பட்ட
பொழுதுசுர னுக்ர னொடுகொடிய வெற்றி
சுரனென வெடுத்து நொடிதமர் விளைப்ப அவனேயும்
எரிகணை விலக்கி யரதமு மொழித்து
இருவர்மிசை யுற்ற கவசமு மறுத்தும்
உணர்மிசை வெளுத்துக் ககனமுற விட்டு விரகோடே

மணிமுடி யறுப்ப நணியவ னடுத்த
ஒருகணை யெடுத்த செவியளவில் நிற்கும்
மதியென வளைத்த தழல்சிலை யிரத்த விடலோடும்
வருணனை நினைத்து முதுகர மெடுத்த
இனியவ னளித்த வரிசிலை குனித்த
மழையென மிகுத்த சரமெனத் தொடுத்த பெருமாளே.

## 1366

அருளே அருட்கிருபை அருளே அருட்கருணை
அருளே அளித்தருளின் வடிவான
அறுமா முகத்தினிடம் அறுமா முகத்தமிகும்
அறுமா முகத்தளழில் அழகாயே

பொருளே பொருட்பொருளின் பொருளே பொருட்கடலின்
பொருளே பொருட்டெவையும் பொருளாக
புகழே புகழ்ப்பெருகு புகழே புகழ்ப்புகழின்
புகழே புகட்டருவ புகழாள

இருளே இருட்பரும இருளே விளித்திலகு
இருளே விசிட்டவிட இருள்தீர
விழிநீர் கொழித்தவழி
விழிநீர குற்றமழி விழிநீ ருகுத்தஅடி யவருடே

மருளே துடைத்தமர மருளே யளித்திமிர
மருளே யொளித்தமத அநுபூதி
மனமே உதித்தபடி மனமே தரித்ததிரு
மனமே திருத்தமிகு பெருமாளே.

## 1367

ஓயாத பிறவி யாய மாயாத கடல தாய
ஓரோரு சனன மாய கருவூடே
ஓடோடி அலைவ தான கேடாவல் பெறுவ தான
ஓராத முகுட னான எனையாள

சேயாநி மயுர மேற நாயேனெ னடுமை மாற
தேமாரு கருணை கூர வரவேணும்
தேவாதி அமரர் வாழ மூவாதி முனிவர் சூழ
தீயாதி அசுரர் தாழ முனிவோனே

தாயான மதுரை மீன ளாயாட னமுத பான
தாராடு சமர ஞான குமரேசா
தானான பிரம னான வானான வடியு மான
தாதாவெ னொருவ னான பரனான

கோயாத வகுல ஞானி வேயூதி முகில மேனி
கோபால சகல தானி மருகோனே
கோலாக லவம யூர வேலாயு தவவ தார
கூறாறு வரைய கார பெருமாளே.

## 1368

கருத்தினால் விரகுசெய் மடமாதர்
கனத்தமோ கனமதில் மருளாதே
ஒருத்தனா னுனதிரு வருளாலே
உனக்குநா னடிமைகள் புகுவேனோ

பருத்ததோ கையில்வரு முருகோனே
பரக்கவே அயிலெறி வயலூரா
திருத்தமா தவர்பணி குருநாதா
திருக்கைவே லழகிய பெருமாளே.

## 1369

கவளகன மாவு மிரதமும றாத
கவணகள சேனைத் திரளாலுங்
கதிரவனு மேரு கிரியுமக லாத
களபமிடு நூணிற் பணிமாற

இவனமது மேவ விறுகவணை யாமல்
இருமலமு மாசிற் புகுதாதே
இசைபொசிய வாடி இதயம்வழு வாமல்
இருகழல்வி டாமல் தருவோனே

சிவனுருவ மான சதுமறையு மோது
சிலகலையு மாயப் பொருளோனே
தினையளவு நீடு பனையளவ னேக
சிலவுருவ மாகப் புணர்வோனே

அவனிமற வாமல் அமுதகவி பாடும்
அருணகிரி நாதற் கிறையோனே
அவள்வெருவி வீழ அகிலடவி மோதி
அதிரவரும் வேள்விப் பெருமாளே.

## 1370

சாகர மாதவ சா்கர மாபிறவி
யாகிய சாகர மதின்மூழ்கி
சாவது மேபிற சாவது மாமிவை
சாதக மானவை ஒழியாமல்
ஆகர மாய்உழல் ஆகர மாகர
ராவச மாமன மருளாதே
* * * *
* * * *
சேகர சேவித போதவி தாகர
சேடச யாபதி மருகோனே
சேய சராசெக சேவல தாகர
சேடவ னாபதி உறைவோனே
லோக தயாநிதி லோகப யோததி
லோகவ னாபதி உறைவோனே
லோல சராசர லோகமி யாவையு
லோதிக மாயருள் பெருமாளே.

## 1371

தனத்துக் காக விலைபேசும்
சமர்த்துக் கார மடமாதர்
இனத்துக் காக மதிமாறி
இரக்கத் தாவி அலைவேனோ
சினத்துக் கால னணுகாமுன்
திருத்திப் பாத மருள்வாயே
வனத்துக் ராத குலமாது
மணத்துக் கான பெருமாளே.

## 1372

திடமுடை யசுரர் மணிமுடி சிதற
அயில்தனை முடுகி விடுவோனே
திரிபுர மதனை ஒருநொடி யதனில்
எரியெழ நகைசெய் சிவன்வாழ்வே

படவரை யதனை உருவிட எரியும்
அறுமுக முடைய வடிவேலா
பசலைகொ டணையும் இளமுலை மகளிர்
படர்விழி யதனில் இடலாமோ
கடகரி முகமோ டிடவயி றுடைய
கணபதி பிறகு வருவோனே
கனதன முடைய குறவர்கள் சிறுமி
கருணை யொ டணையும் மணிமார்பா
அரவணை யுடைய அரிதிரு மருக
அவனியை முழுதும் உடையோனே
அடியவர் வினையும் அமரர்கள் துயரும்
அறமன முடைய பெருமாளே.

## 1373

தேனைவ டித்துச் சொரிந்த தோகொதி
பாலுடன் ஒக்கக் கலந்த தோநல
சீனியில் விட்டுப் பிசைந்த தோபல கனிதானோ
தேடியெ டுத்துப் பிழிந்த தோநிறை
பாகுப தத்திற் சமைந்த தோஇவை
சேரவு ருட்டித் திரண்ட தோநவ ரசமீதோ

ஞானமு ளைத்துப் படர்ந்த தோஅதி
லேயெழு புட்பச் சுகந்த மோஇது
நாமகள் வித்தைப் ரசங்க மோவென உரைநாவால்
நாவலர் மெச்சிப் பணிந்து தாழவும்
நீயது மெச்சித் தணிந்து பேசவும்
நானுனை மெச்சிப் புகழ்ந்து பாடவும் அருள்தாராய்

யானைம தப்பட் டெழுந்த தாமென
வேயிரு பத்மச் சதங்கை யோலிட
ஆறுமு கத்துக் குழந்தை யாயருள் அணையார்பால்
ஆறுமு கற்குச் சொரிந்த பாற்குளம்
ஆறுமு லைக்குப் பிரிந்த பால்நிறை
வாரம லைக்குச் சிறைந்த போதிலும் அமையாதோ

சோனைம லைக்குட் திரிந்து லாவிய
சூஷீரச முத்ரத் தரங்க மேலெழு
சூரிய னொக்கத் திரிந்து லாவிய புதல்வோனே
சோலைம லைக்குக் கடம்பு போல்வளர்
விராலிம லைக்குக் கொழுந்து போலுயர்
சுவாமிம லைக்குக் கரும்பு போல்வரு முருகோனே.

## 1374

மதப்பட்ட காதல் மடவார்தம்
வசப்பட்டு நாளுந் தடுமாறி
பதப்பட்டி டாமல் அலையாது
பதிக்கெட்டு ஞானம் அருள்வாயே
மிதப்பட்ட சூரர் குலகாலா
மிகப்பெற்ற மூவர் முதலோனே
இதப்பட்ட கான மயிலேறி
எனக்குற்ற நாத பெருமாளே.

## 1375

மருவுமு கீலான வளக நீடு வளையிலே
புருவவி லாலான விழிக ளாடு மலையிலே
மதிமுக மாலான இணைய கோடு முலையிலேதடுமாறி
வதனம தாயாடை நொடிவ தான இடையிலே
விதவித மாபேடை அனமு நாண நடையிலே
வனிதைய ராமோடை உறவ தான கடையிலேமயலாகி
கருவினி லாபாச சனன மான நரகிலே
உருவெடு யானீச மனைய ரீன விரகிலே
கவலையி னானாச வடிமை மான மரபிலேஉழல்வேனோ
கலைமக ளாதார கருணை யான நிலையிலே
நிலையக மாதார வருண ஞான வழியிலே
கவிபுனை ஆதார திறமை பானு மொழியிலேஅருள்வாயே
பிரமனை ஓதாத வகையி லோரு சிறையிலே
இடுபவ னேதாத சிவனு மோரு நிறையிலே
பிரணவ மேதாத குருவ தாகு முறையிலே புகல்வோனே
பிணையுற மாமோடி குறவி ஈயு தினையிலே
துணைபெற நீரோடி அருவி பாயு சுனையிலே
பெருமையி லேகூடி மருவு பூய நினையிலே வரவேணும்

தருமமு மேசீல மலியு மாயர் மரபினே
ரொருமனு வாஎலி மிலகு சேயர் கயமுனே
தயைபுரி கோபால தனத மாயர் மருகனே மயில்வீரா
தகுமென வேநீடி வளரு மாறு முககுகா
மிகுவடி யாராடி மகிமை கூறு மரகரா
தமிழுட னேகோடி வரைக டோறு முறைபவாபெருமாளே.

## 1376

முப்பழ மொடுபொரி யப்பமொ டவல்பல
மொக்கிய கரிமுகன் அடிபேணி
முப்பத மடியவர் புத்தியி லுறைதரு
முக்கண னெனவினை கடிதேகும்
மைப்படர் குழலியு மத்தமு மதியமும்
வைத்திடு மரமகன் மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா
முற்படு கிரிதனில் முத்தமி ழடைவுடன்
முற்பட வெழுதிய முதல்வாநீ
அற்புத மகிழ்வொடு சுப்பிர மணியுடன்
அச்சர வணைதனில் அரிதாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே

## 1377

வரையற வற்ற மடமாதர்
மயலுற உற்று வசமாகி
நிரையைவி டுத்து நிதிதேடி
நினைவுதொ டுத்து நிகழ்வேனோ
பரையுமை பெற்ற பரிபாலா
பரமரு கக்கும் பெரியோனே
உரையது செப்ப வருவாயே
உலகும தித்த பெருமாளே.

## 1378

விந்தொடும யங்கிநாளும் வந்தும றந்துபேசி
வெந்துடலி றந்துபோன தளவேதோ
வெண்கலமு டைந்துகூடும் மண்கலமு டைந்துதாளும்
என்கலமு டைந்துபோகில் உதவாதென்
றந்தரமெ றிந்துபோவ ரென்பதைய றிந்துநாயென்
அண்டினெனு ணர்ந்துபாருன் னடியாரோ
டம்பலமு றைந்துவாழ்க உன்சரண்ம கிழ்ந்துவேக
மண்டர்கள்பு கழ்ந்துபாட வரவேணும்

திந்திமிதி மிந்தி-ச-தும்பசூரர்
திண்கடலெ ரிந்துபோக விடும்வேலா
செந்திருவ னந்தகோடி பங்கயம ரங்கள்போட
செஞ்சடைய சைந்துஆடும் உமைபாகன்
எந்தையச வுந்தரீக சுந்தரம கிழ்ந்துஞான
எம்புலிச ரங்கண்மேவு முருகோனே
எண்டிசைசசு ழன்றுளாட சந்திரமு தைந்தபாதம்
எண்கணில்ந டங்கொள்ஞானப் பெருமாளே.

திருப்புகழ் முற்றிற்று

உ

# குன்றக்குடிப் படைவீட்டுத் திருப்புகழ்

## தண்டபாணி சுவாமிகள்

*தந்தத்தன தானன - தனதானா*

என்றைக்கும்உன் ஆளென -
நம்பித்திரி வேணையும்
இந்தப்படி நீதுயர் - செயல்ஏனோ
இன்றைக்கிது நாளையி(து) -
என்றுட்குறி யாதெழும்
இன்பக்கட லார்அமு - தருளாயோ
அன்றைக்(கு)உரு மாமலை -
யின்கட்கன வூ(டு)எனை
அங்கைக்கிளி யேஎனல் - பிழைதானோ
அந்தச்சொலை நாடிய -
தெம்புற்றும்என் ஆருயிர்
அஞ்சத்திரி ஏடணை - வரலாமோ
கன்றைக்கனி மீதெறி -
யுங்கைத்திரு மால்பல
கண்பெற்றவர் பால்நுவல் புகழோனே
கண்டுக்கிணை யாகிய -
மென்சொற்குற மாதெழில்
கண்டுட்களி கூர்மயல் - உடையோனே
கொன்றைச்சடை யார்உமை -
பங்கிற்றிகழ் காரணர்
கொஞ்சச்சிறு பாலனில் - வருதேவே
கொம்புக்களி றாடிய -
சந்தப்பொழில் சூழ்தரு
குன்றக்குடி மேவிய - பெருமாளே.

மேற்படி வண்ணத்தின் தொங்கற்றாழிசை
இந்த வண்ணமுழுமையின் கருத்தைத்தொகுத்துரைப்பது.

அமலனது தவமீற வந்தசேய்
அறிவரிய விளையாடல் கொண்டவேள்
விமலமன தினர்தேட நின்றகோ
விடலைதிரு வருள்போலு மங்கையாள்
குமரியர்கள் அரசான பண்பினாள்
கொடுமைதவிர் எனநான் நெருங்கலால்
இமயநிகர் முலைமார் பழுந்தவே
இனிதுபெறும் அநுபோகம் இன்பமே.

**குன்றக்குடிப் படைவீட்டுத் திருப்புகழ் முற்றிற்று**

உ

# குன்றக்குடி முருகன் திருப்புகழ்ப் பதிகம்

## தண்டபாணி சுவாமிகள்



### காப்பு

வெண்பா

தென்றற் கிரித்தமிழாற் செய்ய திருப்புகழ்ப்பாக்
குன்றக் குடிக்குகன்மேற் கூறுதற்கு—மின்றயங்கும்
வேலுமயில் வாகனமும், வெண்சேவற் கேதனமும்,
பாலுறழ்சொற் கிள்ளையும்காப் பாம்.

### நூல்

*தந்தத் தனதன தானன-தனதானா*

தங்கக் குடம்நிகர் மாமுலை - மங்கைப் படைநடு வேவரு
சண்டிக் குணமத வேள்கணை - பொழியாதே
தண்டக் கரமொடு தீநிகர் - செங்கட் பகடதன் மேல்இவர்
சண்டற் கிரையென வீணினில் - மடியாதே
புங்கச் சதுமுக வானவன் - எண்கைத் தொழில்வலி யாயவிர்
பொங்கத்(து) உடல்களில் மேவியும் - மருளாதே
பொன்பிற் பினள்இம வான்மகள் - என்கத் திகழ்பவள்
சூர்கிளை
பொன்றப் பொரும்அயில் வேலுடன் -வருவாயே!

திங்கட் சடைமுடி யோடொரு - மங்கைக் கெதிர்அழ காகிய
செம்பொற் சபைநடு ஆடிடும் - அவர்பாலா!
செண்டைக் கொடுமக மேருவும் - அஞ்சப் பொருதுல
கோர்மிடி
சிந்திப் புகழ்புனை வான்எனில் - மகிழ்வோனே!
கொங்கைக் கிரிநிகர் பேய்மகள் - வஞ்சத் தொடுகெட
மோதிய
கொன்பெற் றுளதமிழ் மாலிகை - புனைவோனே!
கொங்குத் துணர்விடு தேனது - மிஞ்சிப் பலநதி யாவரு
குன்றக் குடிமலை மேல்வளர் - பெருமாளே. 1

*தனதன தந்தத் தனத்த தானன-தனதானா*

வறுமைமி குந்திட் டிரக்கம் ஏதுமில் - கொடியவர் முன்பிற்
றுதித்து நாடொறும்
மனதுத ளர்ந்தெய்த் துழைக்கு மாறெனை - விடலாமோ
வலிதினில் வந்தப் படிச்சொல் ஆயிர - மொழிகளும்
வம்பிற் கிடக்க, மாயையில்
மறுகிஉன் அன்பற் றவர்க்கும் நாணிடல் - முறைதானோ
பொறுமையில் வஞ்சக் குணத்தர் கூடிய - பரசம யங்கட்
குவப்பும் நான்மறை
புகல்சம யங்கட் கிளப்ப மானதும் - மிகலாமோ
பொருவறு சந்தத் தமிழ்ச்சொ லோடளி-நறைநுக
ரும்பொற் கடப்ப மாலிகை
புனைதரு துங்கப் புயத்து வேலொடு - திகழ்வாயே!
அறுமுகன் உம்பர்த் தலத்தின்ஆடக - நகரியில் அண்டர்க்
கிடுக்க ணேசெயும்
அவுணரை வென்றக் கணத்தில் வாகையும் -
அணிவோன்வேள்
அழகிய பைம்பொற் சிகிக்க ணேறிய - குருபரன்
அங்கித் தகர்க்கும் ஆவலன்
அடல்மலி யுங்கைக் கயத்து லாவரு - குகன்,மானேர்
சிறுமிவ னம்புக் கிருக்கும் நாள்முதல் - மனைவிவ ருந்தித்
துதிக்க ஏகிய
திருடனெ னும்பத் தருக்கு நேர்வரு - முருகோனே!
செறிபொழி லின்கட் கெடுத்த வானரம் - மதுவெறி
மிஞ்சிப் பழத்தை வீசிய
திருவளர் குன்றக் குடிக்கண் மேவிய - பெருமாளே. 2

*தானன தந்தத் தனதன தனதன - தனதானா*

ஆசறு செஞ்சொற் றமிழ்கொடு பலகவி
பாடியுன் வென்றிப் புயமிசை அணிபவர்
ஆளென நின்றெப் பொழுதினும் அவர்பணி - புரியேனோ
ஆரண விஞ்சைப் பொருளுடன் அரனுவல்
ஆகம அந்தத் துறும்நலம் மருவிய
தாகிய விந்தைச் சமரச அநுபவம் - அடையேனோ
தேசவி ருஞ்சத் தியைமிகு மலர்கொடு
பூசைபு ரிந்தொப் பறுதிரு வருள்பெறு
சீரியர் கொஞ்சிக் கொளுமொரு மதலையில் - அவிரேனோ
சேவல்மு ழங்கச் சிகியினில் இருமட
மாதர்ம ருங்கிற் றிகழ்தர எனதெதிர்
சேவைவி ரைந்தித் ததியினில் ஒருதரம் - அருள்வாயே
பாசம்ள றிந்தத் தினமொரு சிறுமுனி
மீதுபொ ருந்துட் டனைவதை செயும்அவர்
பார்வையில் அங்கிப் பொறிஎன உதிர்தரு - புதல்வோனே!
பார்வதி கொங்கைக் குடமதில், அழிவறும்
ஞானமு டன்சித் தியுமென வழிதரு
பாலைநு கர்ந்தெக் கலைகளு முழுதுணர் - புலவோனே
வாசவன் அன்பிற் றொழுதெழ, அருள்கொடு
கோசலை தன்கைச் சிசுவென வரும்நெடு
மாயன்ம கிழ்ந்தெப் பொழுதினும் மொழிதரு -
புகழோனே!
வானள வும்பொற் கொடியொடு நிலவிய
மேடைநெ ருங்கத் தகுபல மறுகொளிர்
வாழ்வுறு குன்றக் குடிமலை தனில்வளர் - பெருமாளே. 3

*தனனத் தந்தத் தனனத் தனதன - தனதானா*

மயிலொக் கும்பொற் பிலகப் பெறுமவர்
கயலைக், கஞ்சத் துணையைப், பிணையினை
வடுவைப், பங்கப் படவிட் டெமனிகர் - விழிமானார்
வலியக் கொஞ்சிச் சருவித் துகில்பொதி
களபக் கொங்கைக் கிரிசற் றொளிர்தர
வரும்இத் துன்பக் கடலிற் சுழல்வது - தவிரேனோ
வெயில்கக் குஞ்சத் தியைமுத் தலையினை
வயிரத் துங்கப் படையைக் கரமதின்

மிசைவைத் தம்பொற் சிகியிற் சிறுதுவர் - மலைபோலே
விழைவுற் றின்சொற் கிளியைச் சதமகன்
அருமைக் கொம்பைத் தழுவித் தினமுமென்
விழிமுற் கொஞ்சித் திகழச் சிறிதுளம் - இசைவாயே!
கயிலைக் குன்றத் தினர்சிற் சபைநடு
நடமிட் டும்பர்க் கருளைப் பொழிபவர்
கனலைச் செங்கைக் கமலத் தணிபவர் - தருபாலா
கடினக் கும்பத் தனஉத் தமிபரை
இமயத் தின்புத் திரிபெற் றருளிய
கரடத் தந்திக் கடவுட் குடன்வரு - துணைவோனே!
சயிலத் தொன்றைக் குடையிற் கொளுமவன்
வருமச் சிந்தைத் தகுவர்க் கொருபகை
தவளப் பொங்கக் கடலைக் கடைபவன் - மருகோனே
தரளக் கும்பற் கழனித் துழனியில்
வளைகட் கெண்டைத் திரள்மற் பொரமிளிர்
தருநற் குன்றக் குடியிற் குலவிய - பெருமாளே. 4

*தந்த தானன தானன - தனதானா*

ஐந்து பூதம தால்மிளிர் - கின்ற லோகமெ லாம்உன(து)
அங்க மாமென நாடுதல் - பிழைதானோ
அன்று கூறிய வாய்மையை - நம்பி ஊர்தொறும் ஏகுமென்
அன்பு பாழ்படு மாறுசெய் - திடலாமோ
வெந்து போகிய மாரனும், வந்து போர்பொர வீணினில்
வெம்பி மாதர்கள் மேல்மயல் - கொளலாமோ
வென்றி வேலொடு தோகையில் - முன்பு தோணி மனோலய
விஞ்சை யாமுயர் தாரகம் - அருள்வாயே
பந்து நேர்முலை மாதுமை - தந்த பால்மணம் வீசிய
பந்தி யாமிளிர் மூவிரு - கனிவாயா!
பங்க யாசன வேதியன் - அஞ்சி வாய்விட மோதிய
பண்பு தோய்தரும் ஆறிரு - புயவேளே!
கொந்து லாவிய நீபம - ணிந்த மார்பினில் ஓரிரு
கொம்ப னார்முலை போர்பொரும் - இளையோனே!
குன்றி டாவள மேலிடு - பொங்கர் சூழ்தர லாலுயர்
குன்றை மாநகர் மேவிய - பெருமாளே. 5

*தனனதன தனனதன தனனதன தனனதன*
*தந்தத் தனத்ததன தந்தத் தனத்ததன - தனதானா.*

கணையனைய விழிவலையில் மறுகிமட மகளிரொடு
சென்றெய்த் தவர்க்குவகை பொங்கத் துதித்துமலர்
அடியின்மிசை விழலும்இள முறுவலொடு கருணைசெயல்
கண்டெடக் களிப்பினொடு கொஞ்சிக் குடத்தைநிகர்
கழறுமுலை நெருடிமத கலைவழியில் முயல்கலவி
மிஞ்சிப் பிணிக்குழுவில் நைந்திட் டிறக்கும்வினை -
தொடராதே

கடுகிலொரு பிளவளவும் ஒருவர்பெற உதவுநலம்
இன்றிப் பணக்குவிய லின்பக்க லூற்(று) உருமும்
அலகையென உலகிகழ மகிழ்கயவர் மிசையளவில்
சந்தத் தமிழ்த்தொடைய லுஞ்செப்பி மெச்சியுழல்
கவிஞருடன் அநுதினமும் இகலிமன மெலிவடையும்
வன்மைப் பெருக்கிஅரு ளன்மைச் சுருக்குமருள் -
அணுகாதே

இணையில்மர கதமலையை அணையமயில் முதுகில்மறை
முன்செப்பு சட்சமய மும்பற்றும் மெய்ப்பொருளென்
அறுமுகமும், அபயவர தமும்வயிர முதல்நுவலும்
வென்றிப்ப டைக்குழுநி றைந்துற்ற கைத்தொகையும்,
இமையவரும் முனிவரரும் அனையபல வகையினரும்
நெஞ்சிற்கு றித்துருகு தண்டைப் பதத்துணையும் -
முதலாயே

இசையும்அவ யவமுழுதும் இலகஒரு களிறுகொடு
வந்திட்ட சித்திரமும், நஞ்சிற் றுவைத்தகணை
மறவரிடும் இதணிலுறு சிறுகுயிலும் அருகிலுற
மின்பெற்ற சத்திமரு மந்துற் றிடத்தினமும்
இனியதெரி சனைஉதவி மலையமலை முனிவனுடன்
அன்றைக் குரைத்தபொருள் ஒன்றைக் கொடுத்தருள -
நினைவாயே

பிணையினொடு பரசுதிகழ் கரவரதன் அமலன்உமை
பங்கிற் களிக்கும்அரன் நஞ்சைக் குடித்தமரர்
துயர்களையும் முதல்வன்ஒரு மதலைமிசை வரும்எமனை
வென்றெட் டிரட்டிவய தென்றிட்ட சித்தன்ஒரு

பிறைநிலவு சடிலன்அலர் இதழிஅறு கணிகடவுள்
அங்கிக் கணிற்பொறிகள் என்றுற் பவித்துவளர் -
முருகோனே!

பெரியநில முழுதுதவு குமரிபக வதிவிமலை
செஞ்சொற் கவிப்புலவர் தங்கட் குரித்துமிகு
தவளநிற மகளும்அவிர் கனகநிற முறுதிருவும்
வந்திக்கும் உத்தமிஇ மஞ்சுற்று மைக்குவடு
பெறுமருமை மயிலனைய அனகைஅபி நயபுனிதை
தன்பொற் றனத்தமுத ருந்திக் கலைத்தொகுதி -
உணர்வோனே!

அணையதென அரவரசின் மிசைதுயிலும் முரகரிஉள்
வெம்பித் துதித்தழுத மங்கைக் களப்பரிய
கலையுதவு கருணைமுகில் இமையவர்கள் அமுதயில
வஞ்சத் தொழிற்றகுவர் சிந்தச் செயற்குரிய
அரிஅலகை தருவிடமொ(டு) அதனுயிரும் நுகர்புனிதன்
அன்புற் றெடுத்துமொழி துங்கப் புகழ்ச்சிமிக -
உடையோனே

அருவிகளும் மதகரியொ டுளமிருக வகையும்முழ
வங்கொட்ட நட்டமிடும் மங்கைப் பெருக்கும்மது
ஒழுகுமலர் விரிபொழிலில் அளியுமயில் கிளிமுதல
வுஞ்சத்த மிட்டிடுதல் அண்டத்தில் முட்டிடினும்
அருணகிரி அனையபலர் கவியொலிகள் உயர்தலுறு
குன்றக் குடிக்கிரியில் என்றைக்கும் உற்றுமகிழ் -
பெருமாளே. 6

***தந்தத்தனத் தானன தாந்தன - தனதானா***

நன்றைக்கருத் தூடும்ள ணேன்,பொருள் - மயலாலே
நஞ்சொத்தகட் பாவையர் தீங்கனி - இதழார்வேன்
ஒன்றைக்குறித் தோரொடு வீண்பல - பகர்தீயேன்
உன்பொற்பதச் சேவையை வேண்டுதல் - உறுவேனோ
கன்றைக்கனிக் காஎறி வான்திரு - மருகோனே
கஞ்சப்பொகுட் டான்அழ மூண்டெரி - சினவேளே
கொன்றைச்சடைத் தேசிகர் ஈன்றருள் - புதல்வோனே
குன்றக்குடிக் கோயிலில் வாழ்ந்துள - பெருமாளே. 7

*தந்தத்தன தாத்தன - தனதானா*

அம்புக்கெதிர் தோற்றிய - கண்பெற்றவர் பாற்பெரி(து)
அன்புற்(று)அவர் சேர்க்கையில் - மெலியாதே
அங்கைக்கரி போற்றிகழ் - சந்தத்தமிழ் வாக்கினர்
அந்தக்கவி யாப்பினை - இகழாதே
வெம்புற்றெழு மூர்க்கரை - உம்பர்க்கிடர் தீர்த்திட
வென்றிட்டுயர் வேற்புகழ் - மறவாதே
வெண்பொற்புறு நீற்றினை - மிஞ்சப்புனை வார்க்குளம்
வெந்தெய்ப்புறல் மாற்றிட - அறியாயோ
சம்புக்கொரு நாட்சிறு - கஞ்சத்தலர் பூப்பொரு
தண்டைக்கழல் சூட்டிய - குருநாதா!
சங்கத்துறும் வாழ்க்கையர் - தங்கட்கிடை கூட்டிய
சண்டைத்துயர் போக்கிய - புலவோனே!
கொம்புத்தக ராற்றளர் - விஞ்சைத்தவ மூர்த்திகள்
கும்பிட்டழல் கேட்டருள் - புதல்வோனே!
கொங்குத்துணர் பூத்துவிர் - பைம்பொற்பொழில் வாய்த்துள
குன்றக்குடி காத்தருள் - பெருமாளே. 8

*தந்ததன தானதந்த - தனதானா*

வஞ்சமிகு தீயநெஞ்சர் - தங்களர சாய்விளங்கும்
வம்பர்மனை வாசலின்கண் - அலையாதே
வண்டுபடு நீபம்என்ற - தொங்கல்நிகர் பாடல்விண்டுன்
வண்கழலின் மீதணிந்து - மகிழ்வேனோ(டு)
அஞ்சலென நீமொழிந்த - நன்றியறி யாமல்உன்றன்
அன்பையிகழ் தீமைதுன்றல் - அறியாயோ
அங்கைவடி வேலிலங்க - வந்துசிவ னார்விரும்பும்
அந்தஅநு பூதியின்பம் - அருள்வாயே
கஞ்சமலர் மீதிருந்த - அந்தணனை வாதில்வென்று
கந்தவரை யூடிரங்க - விடுவோனே
கங்கைஅபி ராமிநங்கை - கொங்கையமு தேறவுண்டு
கம்பமத வேழம்ஒன்றொ(டு) இகல்வோனே
குஞ்சரமு காசுரன்,பல் - சிங்கமுக மீளிதிண்கை
கொண்டமுது சூருணர்ந்த - விறலோனே
குஞ்சரியும் வேடர்தந்த - பைங்கிளியும் வாழவென்று
குன்றைநக ரூடமர்ந்த - பெருமாளே. 9

*தந்தத் தனதன தனனன - தனதானா*

நஞ்சக் கணைபொரு கண்ணவிர் - செம்பொற் குடம்நிகர்
வெம்முலை
நங்கைப் படைநடு மன்னிய - மதனாலே
நன்றிற் சிறிதுமுள் எண்ணமும் - இன்றிப் பிணிகொடு
மண்ணிசை
நந்தித் தொலைதரு முன்னெழில் - மயில்மேலே
செஞ்சத் தியும்உயர் விண்ணவர் - மன்பெற் றருளிய
மின்னொடு
தெம்புக் குறவர்கள் கன்னியும் - உறவாராய்!
சிந்தைக் கனிவொடு பண்ணிய - நின்சொற் றவறிடில்
என்வினை
சிந்திக் கதிதரும் நன்மையின் - முயல்வோர்ஆர்?
அஞ்சக் கரமிக எண்ணிய - தொண்டர்க் கெமபடர்
வண்மையும்
அஞ்சச் செயவல முன்னவன் - அருள்பாலா!
அண்டர்க் கிடர்புரி திண்ணிய - பண்புத் தகுவர்கள்
வென்னிட
அன்றைக் கமர்புரி சண்முக - முருகோனே
கொஞ்சத் தனமிகும் அம்மணர் - வஞ்சத் தொடுகழு வின்மிசை
குந்துற் றழிதரு பண்ணுவல் - புலவோனே
கொண்டற் றிரளொடு செம்மிய - பொங்கர்த்
தொகைமலி வண்மைகொள்
குன்றக் குடிமலை நண்ணிய - பெருமாளே. 10

*தனனதன தானதனத் - தனதானா*

கமலமலர் வேதன்எழுத் - தினைவலிய தேயெனவுட்
கருதிஅருள் வாழ்வைமறப் - பதனாலே
கனகநில மாதரெனக் - குலவுதிரி யேடணையிற்
கனவெயிலில் வீழ்புழுஒத் - துழலாதே
சமரசவி னோதம்உடைப் - பெரியவர்கள் வாய்மொழியைத்
தழுவிஅவர் போம்வழியிற் - புகலாலே
தவளநிற நீறுமிகப் - புனையும்நல மாதியமெய்த்
தவமருவு யோகிஎனத் - திகழ்வேனோ
குமரகுரு நாதன்எனக் - கணமுமற வாதுசொலிக்
கொளும்அறிவு ளார்பிறகிற் - றிரிவோனே!

கொடியதவ நாதன்முதற் - பகர்முனிவர் ஓலமிடக்
குதிரையென ஆடதனைக் - கொளும்வீரா!
அமரரொடு போர்புரியத் - தகுமவுணக் கோனைவதைத்(து)
அயிலதனில் வாகையிடற்(கு) - உரியோனே!
அசலம்ஒரு கோடிகளுட் - பெரியதென நீடும்வளத்(து)
அழகியம யூரகிரிப் - பெருமாளே. 11

***தய்யதன தந்த தானனத் - தனதானா***

புள்ளுணம லர்ந்த தாமரைக் - கள்விரவு கின்ற நீர்வளப்
பொய்கைமுன் இரங்கி னானெனத் - தகுமேலோர்
பொய்யரைமு னிந்து பாடிடச் - சைவமுதல் நின்ற ஆறினிற்
புல்லுமவர் இன்பம் ஆர்தரப் - பெறுமாறே
உள்ளுருகி நொந்து நான்மிகப்-பல்விதமு யன்று பாடுபட்(டு)
ஒல்குவத றிந்தி லாயெனிற் - சரியாமோ
ஒள்வளைஅ ணிந்த பாவையிற்(கு) - ஒவ்விருவர்
பங்கில் வேல்பிடித்(து)
ஒல்லையினில் வந்து தோகையிற் - றிகழ்வாயே
துள்ளுமறி என்ற வாகனத்(து) - எவ்வுலகி னும்செல்
வேளெனச்
சொல்லிமகிழ் பண்பு ளார்கள்பிற் - றிரிவோனே
தொய்யிலணி கொங்கை யாள்களிப் - பெய்தநட
னஞ்செய் வார்தொழத்
துய்யபொரு ளொன்றை ஓதுமெய்க் - குருநாதா
தெள்ளுதமிழ் கொண்டு பாடுநற் - கிள்ளையுறு மொய்ம்பு
ளான்முதற்
தெய்வமென நம்பு வார்களுக் - கெளியோனே!
செவ்வரிப டர்ந்தகூர்விழித் - தையலர்பெ ருங்கு ழாம்உடைச்
செல்வமலி குன்றை மாநகர்ப் - பெருமாளே. 12

**நூற்பயன் — வெண்பா**

குன்றைப் பதியிற் குமரன் திருப்புகழை
என்றைக்கும் கூறும் இயல்புள்ளார்—நன்றைமுற்றும்
கொள்வார், பிறவிமுதற் கூற்றீறாம் தீமைமுற்றும்
தள்வார்என் றோதத் தகும்.

**குன்றக்குடிப் படைவீட்டுத் திருப்புகழ் முற்றிற்று**

உ

# மயிலம் சுப்பிரமணியர் துதியமுது

## கனக. சுப்புரத்தினம் (பாரதிதாசன்)

### விநாயகர் காப்பு வெண்பா

சீர்மணக்குந் தென்மயில வெற்பிற் றிருமுருகன்
பேர்மணக்கும் பாட்டிற் பிழையகல - ஓர்மணக்கு
ளத்தனப்பன் நற்களிற்றி ணைப்பதத்தி னைத்துதிப்பன்
எத்தனப்ப டிக்குவெற்றி யெற்கு. 1

விநாயகர் துதி

**வண்ணம்**

**இராகம்:** நாட்டை **தாளம்:** ரூபகம்

உல குதி னமு னெழில் மல ரடி
உள மதி னினை குவ தெனி லவர்
உறு வினை எவை களு மிலை யென இனிதாமால்

உமை யவள் தரு முதன் மக னுனை
உள மொழி மெய்க ளினி லடி யவன்
உவ கையொ டுதொ ழுகு வதை யினி மறவேனே

மலி யவல் பொரி யொடு பய றுகள்
மது நிகர் கனி வகை யனு தினம்
வரை யென நிறை யவு னது திரு வடிவேலே

மன மகி ழஇ டுவ னருள் கசு
மர னழ ஒரு கனி யைய ரனை
வல மிடு வதி லுனு மரி மகிழ் மருகோனே

மலை மத கரி இடர் புரி யுமொர்
மதி யிலி அசு ரனை ஒரு நொடி
மடி யவ மரர் துயர் களை யுமொர் அடல்வீரா

வரு புதை யலி னிதி யென மலை
வழி யரு வியெ னவெ னது கவி
வள மொடு புதி யன வென விரி புவிமேலே

பொலி தர அவை புகழ் பெற மிகு
புல வரே வரு மினி தென நனி
புவி யினர் உள மதி லொளி தர அருள்வாயே

புரை தவிர் தெரு வரி சையொ டமர்
புனி தமொ ழிய ரிவை யர்க ளுறை
புது வையி லமர் கய முக முறு பெருமாளே 2

## சிவபெருமான் துதி

### வண்ணம்

இராகம்: தேசிகம் தாளம்: ஆதி

நதியொடும் பிறையணிந் திடுபரம் பொருளெனுஞ்
சிவனைவந் தனைபுரிந் தாலே - உயர்
நலமரு விடுநிறை கலைகுடிபுகருவம்
அறிவுபெருகிவிடும் உலகுபுகழ்பரவும்

ஆருமெச்சு வார்பகைவர்
பேர்நினைத்தி டார்நிதிகு
பேரனுக்கு மேல்நிறையும்
வாழ்வளிக்கு மேமனித

ரேயுமக்கெ லாமளிக்க வேவிருப்ப மாயிருக்கி றானிருக்கு
மாலையத்தி லேமிதித்த காலடிக்கு நேரிலுற்று வாழ்வளிக்க
வேணுமப்ப னேயெனச்சொ னால்நொடிக்கு ளேயளிப்பன்

இப்புவிக்கு மெப்புவிக்கும் எப்பொருட்கு மப்பன்வித்து
தோலுடையா னாடரவே தானணிவான் மாமுடிமேல்(ந)

உலகமுஞ் சடவுடம் பெவைகளுங் கணமறைந்
தழிவுறுஞ் சிறிதும்நம் பாதீர்—தொகை
நகையுடை பொருள்நிலம், மனைமகளுறவினர்,
பரி கரிமுதலிவை களிலொரு பயனிலை

காலன்விட்ட பாசமதை
நேர்விலக்கு மோஇவைகள்
போமுயிர்க்கு வீதிவரை
தான்வரச்சொ னால்வருவ
தேதுசற்று நீரிழைத்த ஓர்அறந்தொ டேபெருத்த பாவமொக்க
வேவழிக்கு நாடிநிற்ப தாலதற்கு ளேயெனப்ப னாணைசற்று
மேமறுத்தி டாதுநற்ற போதனர்க்கு நேசம்வைத்து
நித்த நித்த மெய்த்த வத்தொ டுற்றபத்தி பெற்றிருப்பீர்
ஈதலவோ மானிடரே பூதலமே லாதரவே (ந)

அமரர்தம் பகைகெடும் திரிபுரம் பொரிபடும்
பரமனம் பகம்விரிந் தாலே - நிறை
அருளினி லுலகமு நிலைபெறு வனமறை
முடிவினில்நடமிடு பொருளென அறைகுவர்
ஆசைவிட்டு நாடுமன
தோரிடத்தி லேவிடுத
போதனர்க்கு மாமுனிவர்
ஆனவர்க்கு மாமலரி
லேயிருக்கும் வேதனுக்கும் மாயனுக்கு மேகிடக்கி லாதவஸ்து
மாமலைக்கு ளேமுளைத்த ஓர்கொடிக்கு நேயவஸ்து மாபுவிக்கு
தாரவஸ்து யாவினுக்கு மூலவஸ்து தேனையொத்த
சுப்பு ரத்தி னத்தி னற்ப தத்தி னுக்கி னித்த வஸ்து
வாதலினீ ரேபுவிமேலீ துணர்வீர் வாழ்குவிரே 3

## உமை துதி

### வண்ணம்

**இராகம்:** தேசிகம் **தாளம்:** ஏகம்

வாய் திறந்தழு மோர் குழந்தையின்
மேலிரங்கிடு வாய் தினம் படு
வாதை கொஞ்சம தோமுனஞ் சிறு
பாலனங்கழ வேகறந்தமு
தேதருங்கரு ணாலையந் தனி
லேவணங்கிடு பேதையுங்கடு

காகிலும்பெற வேறினைந்தனன் யாதையுங்கரு தாமலின்றெனை
ஆளலுனது பாதமலது வேறுகதியு லோக மதனில்
ஏதுபுவன நாயகியுமை பார்வதியுப காரிய மலி
அட்டதிக்குவிண் யாவுமீன்ற அன்னை காமாக்ஷியே,

பேயெனுமபடி தாரணிந்தெழி
லாய் நடந்திடு தோளொடுங் கனி
வாயொடுந் தளிர் மேனியெங்குமொ
ரேமணந்தர வாரிடுங் குழல்
காரெனும்படி மார்பில் வெண்துகில்
ஊரறிந்திட வேதிறந்தெனை
மாதெனும்பெறு மேதி வந்தினி
மேலும் வஞ்சனை யால் நெருங்குமுன்

வாசிவபெரு மானிடையினி லேபடர்கொடி யேஇமமலை
மாதவமணி சோதனைபுரி யாதுனதிரு மாமலரடி
மந்றுவப்புடன் ஈதல் வேண்டும் வல்லி காமாக்ஷியே,

சாதியுஞ்சம யாதியுந்தணி
யாதசண்டையி லேமுயன்றன
நீதியுங்கிடையா தறங்கிடை
யாதினம்பரி காசமும்பட
வே பணந்தனை யே நினைந்ததி
காரமும்பெற நீசதந்திர
மே புரிந்திடு மானிடந்தனி
லேகிடத்தலை யாது வந்தெனை

யாவருமொரு சோதரரென மாசமாச ஞானமுதய
மாகிடும்வண மேமிகுதிற னாயறுதின மேயினிமையின்
மெய்க்குழைத்திடும் வீரமாண்பு செய்ய மீனாக்ஷியே.

நோய்களும்பல கோடியுண்டதி
னால் வருந்திடு போதுவந்தவு
ஷாதிதந்துமொர் சோதிடன் குண
மாகுமென்றதி லே பணங்குறை
யாது தந்தொரு நாள் கடந்தபின்
ஓலை வந்தது மேலிருந் தென
ஓடி வந்தெம தூதருந் தம
தூர் வரும்படி கூவு முன்பெனை

ஆதரிமுன மோர்நொடியினி லேய சுரரின் வேரழிவுற
வேயெழில்மயில் வாகனனிடம் வேலுதவிய தாய்நிருமலி
சுப்புரத்தினம் நாளும் வேண்டும் அம்மை மீனாக்ஷியே.
4

## திருமால் துதி

### வண்ணம்

இராகம்: சகானா தாளம்: ஆதி

பாலாழி மேலினிது கண்துயிலும் மாதவனே
மாலேயுன் மார்பிலணி வண்துளப மாலையிலே
வந்து மொய்த்தி டுஞ்சி றைப்பொன் வண்டினுக்கி ருந்த மெய்த்த
வந்தனிற்று ரும்பிடைக்கி சைந்தெனக்கி டும்படிக்கு
மட்டினிக்கு மெய்ப்பதத்தி னைத்துதித்தி ளைத்து நிற்கும்
மகன்மேலே

மூலாவி லாசவிழி யின்கடையி னாலெனையே
ஏலாதெ னாதருள்க மங்களகு ணாலையனே
எண்டிசைக்கு ளங்கணுற்ற உம்பருக்கு ளெங்கெனக்குன்
அம்புயப்ப தந்தனக்கி ணைந்த நற்சு கங்கிடைக்கும்
இச்சகத்தி னைக்களிப்பி னிற்படைத்த ளித்தழிக்கும்
எழிலோனே!

மேனாளிலே முதலை தின்றிடுமு னேயரியே
கோனேயு னாதரவு தந்தருளு வாயெனுமோர்
குன்றையொத்த வெஞ்சினப்பெ ருங்கரிக்கி ரங்கியக்கண்
அந்தரத்தி ருந்துவப்பொ டும்புவிக்கு வந்தடுத்த
ரைக்கணத்தி லக்கரிக்கு மெய்ப்பதத்தி னைக்கொடுத்த
அருளாளா!

தேனாறு பாய்குவது கண்டுருகி னேனதையே
நானார வேயுணுத லென்றுனது கோயிலிலே
மன்றில் விட்டி கழ்ந்து துட்ட னன் றிழுக்க மங்கை விக்கி
னந்த விர்த்து வஞ்சமற்ற பஞ்சவர்க்கு ரங்கொடுத்து
வித்தை கற்கு மிச்சை சுப்பு ரத்தி னத்தி னுக்களித்த
பெருமாளே! 5

## சரஸ்வதி துதி

### பக்ஷமிருக்கவேணும் மன்னனே என்ற மெட்டு

இராகம்: இந்துஸ்தான் காப்பி　　　　தாளம்: ஆதி

ஞானந் தரும் இறைவி கவிராணி-என்றன்
நாவில்வந் தருள்புரி கலை வாணி
　கானுறை மயிலே கவிதையின் உருவே　　(ஞான)
வானமிருந் திழியும் மழைபோலே-கொட்டும்
வாக்குத் தருக மலர்க் குழலாளே
　நான் முகன் மனையே நாடினேன் உனையே　　(ஞான)
வெள்ளைக் கமலமிசை நடிப்பவளே-இசை
வீணைதனி லமுதம் வடிப்பவளே
　அள்ளித் தருவதால் ஆர்ந்திடுந் தேனே　　(ஞான)
தெள்ளு தமிழ்ச் சுப்புரத் தினம் பாடும்-கலைத்
தெய் வீகமே வருக அருளோடும்.　　(ஞான)

6

## அவையடக்கம்

### வெண்பா

திருமயிலம் வாழ்கந்த வேள்மேல் சிலசொல்
பெரியார் மணிவாக்கின் பீடு-தெரிவதற்குச்
செப்புகின்றேன் ஆதல் சிறுமை புதல்வரின்பால்
ஒப்புதல்போல் ஒப்ப உவந்து.　　7



## நாட்டுச் சிறப்பு

**இராகம்:** தேசிகதோடி　　　　**தாளம்:** அடசாப்பு

சீர்கொண்ட தென்மயி லாசல நாடென்ற
பேர் கண்டு நாடிப் பெருங்கடல் நீர்மொண்டு
வார் கொண்டல் விண்ணடுத்துப்-புவி
யோரஞ்ச மின்னல் விடுத்-ததி
ராக இடி இடித்து — மிக்க
மழை முத்து மாலை விழவைத்ததாலே வழியற்றுஞாலம்
　　　　　குழிவுற்றுமேலே

வருநதியின் காட்சிசொலும் வகையறியேனே
மலைவிட்டு நீங்கிப்பொன் னலைகொட்டி மூங்கிலின்
குலமுற்றும் வாங்கிப்பன் மலரிட்டு வேங்கையின்
தலைமுட்டு நதி வெள்ளமே — ஏரி
குளங்குட்டை யவையுள்ளுமே — இரு
நில முற்றும் குதி கொள்ளுமே — எங்கும்
உழவர்கள் ஓடி விழவு கொண்டாடித் தொழுதெய்வம்
நாடிக் கழனிகள் தேடிக்
கன எருதின் ஏர்பூட்டி நிலமுழுவாரே
பதனிட்ட நிலமுற்றும் விதை நட்ட தயல் நட்டுக்
களைவெட்ட வருமாதர் மதியொத்த முகம்நாண
மறை மொட்டு விரிவெய்தலும் — அவர்
விழியொத்த கருநெய்தலும் — நத்தை
தருமுத்து நகை செய்தலும் — கண்டு
காலால் மிதித்ததன் மேலே பகைத்தவர் போலே
எடுத்தரி வாளால் அறுத்தெறி
கரைசேர்ந்த களைக்குலத்தில் வண்டு பண்பாட

எருவைத்து வரநித்தம் பிறையொத்து வளரப்பின்
கதிர்விட்டு முதிரத்தன் தலைநட்டு வளையக்கண்
டகமுற்ற மிகுமாசையால் — நிலம்
விளைவுற்ற தொகைபேசுவார் — அறு
வடைசெய்ய விடைசெய்குவார் — பின்னர்க்
குப்பல்செய் ததுமோதி நெற்பதர் கெடத்தூவிச் சுப்பு
ரத்தினம் ஓதும் நற்கவிப் பொருள் போலும்
மலைபோல் நெல் வீடுவர இனிது நுகர் நாடே. 8

## நகரச் சிறப்பு

**இராகம்:** தேசிகதோடி **தாளம்:** ஆதி

கொட்டுமது சீதளக்க டப்பமலர் தோளுறத்தரித்த முரு
கோனமர்ப்ர
சித்த மயிலாசலந கர்ப்புகழை யோதிடற்கு
நற்றிற மில்லை சேடனி னைக்கினுந் தொல்லை

அட்டதிசை யோடிவிண்மு கட்டினையு மோதிரவி
வட்டமுமி டாதுயுக முற்றினும் விழாதபடி இட்ட நகர்
மாலையெனக்

கட்டு மதிலும் அதனைச் சுற்றியகழும்
மின்னுமணிக் கோபுரங்க ளின்சிகர மீதணிந்த
பொன்னுடைநி கேதனங்கள் விண்ணகரின் மாதர்தமை
இந்நகரில் வாருமென ஆடியழைக்கும் அவரை ஓடி
யிழுக்கும்

வெள்ளிமலை போலுயர முள்ளபல மாளிகையிற்
புள்ளுலவு நேரமதில் அள்ளிமணி யாலெறியும்
பிள்ளைகள் உலவுமந்த வீதிப்பெருமை அதனை ஓதலருமை
சித்திரங்கொள் ஆலயத்தில் உற்றமுரு கேசனுக்கு
நற்றிருவி ழாவைபவ மெத்தவுறு நாலுவரு
ணத்தவரின் வீதிதனில் கீதமுழக்கம் அதிக வேதஒழுக்கம்

பூரண கும்பங்கள் வைத்துத் தோரண மலங்கரித்து
நாரின் விளக்கங் கொளுத்து வாரிலக் கிழத்தியர்க்கு
நாரணன் கொளுந்திருவை ஒப்புரைத்தனன் கனக சுப்பு
ரத்தினம் 9

## மயில மலைச் சிறப்பு

**இராகம்:** ஆனந்த பைரவி **தாளம்:** அடசாப்பு

### கஜல்

அறு பொரியின் வடிவாகி யங்கையிலே பரைதந்த
சக்திவாங்கி
அமரர் படுந் துயர் நீங்கச் சயமோங்க அசுரர்குல
மூலந்தன்னை

### துரிதம்

அடிகொண்டு களைகின்ற இளமைந்த னமர்கின்ற
அசலங்கொள் புகழ்தன்னை அறைகின்ற முறைகொண்மின்

அங்கண் ஞாலத் திருப்பவர் வானவர் அங்ஙனே நின்று
கண்டு துதித்திடத்
திங்கள் சூடும் சிகரமும் நாற்றிசைச் சேருஞ் சாரலும்
சீதளத் தூற்றலும்

துரிதம்

திரிகின்ற புயல் வேழம் அரிகண்ட உடனோடச்
சரிகின்ற மலையென்று நரிகண்டங் ககம்வாட (1)

கஜல்

மலர்க்குலங்கள் பொழிதேனும் மஞ்சுமொழி பனியும்
சந்திரதாரையும்
மஞ்சனநீராய்த் தவத்தர்செஞ்சடையில் சோர மங்களப்
பண்பாடி வண்டு

துரிதம்

மகரந்தப் பொடிவாரித் துகள்மிஞ்சப் புவிவீச
வதிகின்ற குறமாதர் இருகெண்டை விழிகூச

மல்லிகைப் புதர் வெண்ணகை யாடவும் மாதுளங்கினி
ஆலிலை போர்த்தவும்
நல்லதென் றலணைத்திடக் கன்னிமா நாணி மேனி
சிலிர்த்துக் குலைந்திடும்

துரிதம்

நளிருற்ற குரவஞ்சந் தனமற்றத் தருவுந்தம்
நறைகொட்ட நிறையுஞ்செங் கமலப்பொற் றடமுற்றும்(2)

கஜல்

அரவுதரு மாணிக்கம் மரைமுத்தம் வரையீன்ற வச்சிரம்
பொற்சன்ன ராசி
அற்புதங்கொள் ஜோதி வல்லி யிற்கலந்த போது வல்ல

துரிதம்

இருள் முற்றும் ஒளியாகும் மிகுரத்ந மணிமாலை
எழிலுற்ற மலைமாது மிலைவுற்ற தென வோத

எங்கு நோக்கினும் புள்ளினத் தின்னொலி இடையில்
　　　　　　வேடர்செய் ஆட்டங்கள் பாட்டுகள்
தொங்கு மாலையின் வெள்ளருவிக்குலம் தூர நின்றிழி
　　　　　　போதொரு சந்தப்பண்

துரிதம்

தொழுபத்தர் முருகா என் றழுகைக்கண் ணெழு மோசை
சுர மொத்த கரதாளம் நிரை யொத்த திடிமேளம் (3)

சஜல்

குஞ்சரி யோர்பாகம் குறவள்ளி யோர்பாகம்
　　　　　　கொஞ்சக்கைவேல் கொட்டொளியும்
தழைத்தொளிரும் கருணைநோக்கும் குளிர்வதன மீராறும்
　　　　　　நளிர்பதமும் கொண்டகோயில்

துரிதம்

குறைதீர விரைவாக வருவார்கள் ஒருகோடி
　　　　　　குகனேஷண்முகனேஎன் றடிசோர நடமாடிக்
குப்பலாகப் பொற்காவடி தோள் தூக்கிக் கொள்கையாவுங்
　　　　　　குமாரன் தன் மேலாக்கிச்
சுப்புரத்தினம் சொற்றமிழ்ப்பா வாக்கில் சூழத்தென்
　　　　　　மயிலாசனமே நோக்கிச்

முடிவு

சுராதிபனை வாழ்த்தி நலம் துய்ப்பரதி சோபிதமே. 10

நூல்

பாலசந்த்ர சேகரா என்ற மெட்டு

**இராகம்:** சங்கராபரணம் **தாளம்:** ரூபகம்

**பல்லவி**

பாலசுப்ர மண்யனே
　　　　நீலமாமயில் மேலுலாவிடும் பால

**அனுபல்லவி**

ஞாலமீதினில் அமுதச் செந்தமிழ்
நலமுதவிய பொதிகையிலமர் குறுமுனிவ னுக்கினி
தருள்செயும் (பால)

**சரணம்**

வேலு மயிலும் கோழிக் கொடியும்
விரவிய அன்பர் உளமார் வாழ்த்தும்
கோல வாயிதழ்க் கொடி யிடையினர்
குலவு பாங்கும் கண் டின்பங் கொளக்
கோரிடுமிப் பாலன்மனத் தாவல் கெடச் சேவை தர
நேரிடுமோ நாளுமிமை யோர்பணியுங் காவலனே
நித்தமு னைப்பணி பத்தியெ னக்கிலை
எனவிடுவாயோ
நித்தா சுத்தா அத்தா முத்தா
நினதொருபுகழ் தனைமொழிந்த
அருணகிரிக் கருள் புரிந்த (பால)

கீரன் துயரம் நீக்கத் தண்ணிய
கேடில் பூம்பதம் தந்த புண்ணிய
பூரணா புவனாதி யண்டம்
புரந்திடுங் கந்தா சிந்தாகுலம்
போக்கிடுதல் உனக்கரிதோ தாய்க்குமகன் முழுப்பகையோ
யார்க்கிதில் நீ பயப்படுவாய் ஆக்கியழித்தருள் முதலே
அக்கணி முக்கண னுக்கினி திற்ப்ரண வப்பொருள் ஓதும்
நாதி ஆதி சோதி யாதிங்
கடிமல ரினைவிட ஒருகதிபடி மிசையுளதோ உரைததி

தேவரைச் சிறைமீட்க ஆங்குச்
சென்றுமை யிடம் சக்தி வாங்கித்
தாவிச் சூரனூர் வீர வாகுவைத்
தூது போக்கிப் போர்க்குண் டாகிய
சயமுர சடிபட அமரர்கள் சயசய வெனுமொலி திசையுறப்
புயவலி யசுரரை எதிர்கொடு புகையொடு கனலெழ இருபுடை
புக்கவ ரிற்புய மொக்கள திர்த்துடல் வெட்டின ரிடையே
சூரன் மார்பின் மேலுன் வேலைத்

தொடுத்தவன் குலத்தொடு மடித்திடு
சுரர்க்கதி பதியுனக் கடைக்கலம் (பால)

நாழிகை அரை யேனும் சகியேன்
நச்சுப் பொய்கையன் றோ இப் பூமி
தாழ்குழல் தன மாதர் கண் எனும்
தடுக்கொணாக் கூர் வாள் என் மீ தினில்
தாக்க நலிந்தேன் பிணிகள் மாய்க்க நினைந்தன பொருள்கள்
போர்க்கு வளைந்தன மனிதர் போக்கி லிழிந்தார் எதிரே
புறப்பட் டிருட்டில் திருட்டில் கயிற்றைக் கழுத்திற் கருநமன்
வீசா முன்னை ஈசா என்னை
விரைந்து வந்திடு சுப்புரத்தினம் சொல்
நறுங்கவிக் கிரங்கி யருள் புரியும் (பால)

11

## தலைவி தூதுபோக்கல்

தேவகி மைந்த னான கண்ணனைத் தேடுவோம் என்ற மெட்டு

**இராகம்:** இந்துஸ்தான் பியாக் **தாளம்:** ஏகம்

**பல்லவி**

வானவர் போற்றும் வேலவனிடம்
மாது நீ ஓதடி (வா)

**அநுபல்லவி**

மா மயில நன் மலையிற் சென்று வஞ்சிஎன்னிலை
தன்னை இன்று (வா)

**சரணம்**

நானவனுக்கும் அவனெனக்குங் கட
னாவதென உண்டு—சாசனம்—அதற்
கேனில்லை இன்னும்வி மோசனம்—என (வா)

தாள முடிவதில்லை முருகன்மேல்
ஹதய லெனக்குள்ள காதலை—மத
வேளின் கணைபட்டுச் சாதலை—அந்த (வா)

ஆதியிலே செட்டி வீதியிலே சொன்ன
சேதி யெல்லாம் உள்ளம் மறந்ததோ—உன்
சாதியில் இக்குணம் பிறந்ததோ—என்று (வா)

பாசி மயில்மிசை மாசி மகத்தன்று
நேசியருடன் நீ வந்தனை—நின்று
பேசிடில் நேருமோ—நிந்தனை—என (வா)

வாதனை தீர மணப்பதின்றி யின்னும்
சோதனை செய்திட வேண்டுமோ—இந்த
மாதுபிறன் கையைத் தீண்டுமோ—என (வா)

கைப்பிடியிற் கொண்டுவர குகனை—நயம்
காட்டியோமையல் கூட்டியோ
சுப்புரத்தினம் சொல் நீட்டியோ—அடி (வா)

12

## வண்ணம்

மருவே செறித்த என்று மெட்டு

மயிலா சலத்து முருகா எனக்கு
வரமே யளிக்க நினையாயோ
மயலார் தடக்கண் மடவார் தனத்தில்
மனதே செலுத்தி யழியாமே
வெயிலே துடித்த புழுகாகி நித்தம்
விஷயாதி கட்குள் உழலாமே
விரைவே சுழற்று நமனார் கயிற்றை
யுடலோ டுசுற்றி யழையாமே
மயில்மே லினிக்க வருவாய் சுரர்க்கி
னமுதே பரைக்கு மகனே நீ
மலரே நிகர்த்த பதநீழ லுக்குள்
வகையே சுகிக்க அருள்தாராய்
வயவே லெடுத்த அறுமா முகத்து
வலனார் புயத்து மகிபா சீர்
வனமார் கொடிக்கண் மகவான் மகட்கண்
விளையா டியிக்கண் வருவாயே 13

## மனதுக் கினிதுரைத்தல்

**இராகம்:** அடாணா **தாளம்:** ரூபகம்

**பல்லவி**

குமரனை நினை கோலமாமயில் (கும)

**அநுபல்லவி**

உமையவள் தரும் பாலசுப்ரமண்யன்
உலகத் தெதிரிற் றரிசித் தருளைப் பெறவுற் றிடுமக் (கும)

**சரணம்**

மணியும் துகிலும் கரியும் பரிவும் சுவையும் புவியிங்
கெவையும் தினையும் தனியுன் கூடவராவாம்
வளமிக் குளநற் களியும் இளமைப் பருவப் பயனும்
வளர்கட் டுடல்மட் கலமும் வீடுதராவாம்
துணைபோ லணியா பரணா தியினால் மயலே தருமா
தரைநீ யடைவா யெனிலோ அதனால்
துயர் துயர் துயர் (கும)

குளிமதி அறுமுகம் ஒழுகிய அருளினைத் தெளிதமி
ழினிலொரு
துதிகவி உரைசெயச் சொரிபவன் ஆன பெருமான்
கோரிய கீரனி னார்துயர் தீரமுன் ஓடியவேலவ
னாமுனை ஆளவு நேரினில் ஓடிவருவான்
குகன் கடம் பணிந் தவன் பதம் பணிந் ததும் பவம்
பறந்திடுமே பறந்திடுமே பறந்திடுமே (கும)

போதன்தனை ஓதுஞ்சிறை போகும்படி ஏவுங்குரு
நாதன்வடி வேலன்புகழ் பாடுநெஞ்சே
பொய்ப் பகட்டை விட்டுச் சுப்பு ரத்தினத்தி
னற்றமிழ்ப்பண் செப்பியப்பன் மெய்ப்பதத்தைத்
தேடுநெஞ்சே
புலப்படும் பொருள் நசித்திடு மதில்
கலப்புற இனித் தலைப்படுவதைத் தொலை

தகியடைந்தி டப்பனைத்
தகியடைந்தி டப்பனைத்
தகியடைந்தி டப்பனைக் (கும)

14

தினந் துதிப்பாய் நெஞ்சே என்ற மெட்டு

**இராகம்:** செஞ்சுருட்டி **தாளம்:** ஆதி

பிரமனை ஜயித்தகந் தர வரம் தந்தாள்
அரனருள் மகனே அரியின்ம ருகனே (சரண)

சரணமல்லால் துணை ஏது மண் மீது
ஷண்முக வடிவே சதுர்மறை முடிவே (தாயும்)

தாயுந்தந் தையுமென வந்துள்ளு வந்து
தாவினோம் வாராய் சஞ்சலம் தீராய் (சாயும்)

சாயும் கிழவனென வனத்திலோர் தினத்தில்
தனி வள்ளி தோளே தரச்செய்யும் வேளே (கீர)

கீரனுக் கருளிய வீரா மயூரா
கீர்த்திகொள் வேலா காத்தருள் மூலா (சூர)

சூரன்கி ளையோடன்று தீர்த்தருள் மூர்த்தி
சுப்புரத்தினம் தரு ஒப்பிடும் சிவகுரு (பிர)

15

தலைவி பாங்கியிடம் கூறல்

**இராகம்:** சங்கராபரணம் **தாளம்:** ஆதி

**பல்லவி**

மனமிருந்தால் வரலாம் மயில்வாகனன்
வந்தெனக்கின்பம் தரலாம்—என்

**அநுபல்லவி**

இனமே நம்பினேன் இல்லை
எல்லாம் மறந்தேன் தில்லை
வனநாதன் மகன் மேலே
வைத்தேன் மோகமக் காலே (மனமி)

சரணம்

புனையுங் கடப்பந் தாரும்
புன்னகை செய்யும் சீரும்
நனையும் மலர்க்கண் ணோரம்
நல்லரு ளோ அ பாரம்
எனையாளத் தகுமென்றே இவனை நம்பினேன் அன்றே
மனைமாருந் தானுமாகி மறைந்தான் மயிலமேகி (மனமி)

அன்று வந்தாற்போல் வந்தான்
அரைநொடியில் மறைந்தான்
நன்றோ அவன் செயல் தான்
நாலா விதத்தும் கந்தன்
குன்றென்று நினைத்தென்னைக் கொடுமை புரிந்தான்
முன்னைச்
சென்று குறப்பெண் ஈயும் தேன்மாவுண்ட தோஞாயம்(மனமி)

அந்நாள் முதலிந் நாளாய்
அவன் மோகமே கூர் வாளாய்
மின்ன லிடையைத் தூளாய்
வீசுதென் குறை கேளாய்
கன்னியவன் தெரிந்தே கருவில்வைத்தான் மருந்தே
அன்பன் சுப்புரத் நம்பண் இன்றேல் தேற்றுவார் ஆர்பின்
(மனமி) 16

## பாரத நாட்டின் விடுதலை வேண்டல்

காவடிச்சிந்தில் பாளைவாய்க்கமுகில் என்ற மெட்டு

வீழ்தலும் யாம் வாழ்தலுமே வேலவா உன் கையி லுண்டு
வீணில் நாங்கள் பட்ட தெல்லாம் சொல்லவோ — நின்பால்
வேண்டி நிற்ப தெல்லாம் இன்ப மல்லவோ — இந்த
ஆழ்கடல் புவிமே லெமக்கினி
தான பாரத பூமியை நீ
அட்ட திக்கும் போற்றும் வண்ணம் ஆக்குவாய் — வானில்
எட்டவே உரிமைக்கொடி தூக்குவாய்
பாழ்படச்செய் தாரிந்நாட்டை ஊழ்வினைதானோ அறியேம்
பாரதத்தார் கொத்தடிமை ஆயினார் — சிலர்
பசி தொலைக்க வேறு தேசம் போயினார் — அந்தோ

ஏழ்கடல்செலும் கீர்த்தி போயின
தீனர் யாமெனும் பேருமாயின
திக்கணம் கடைக்கண் பார்த்தால் ஓர்நொடி — தனில்
எங்குலப் பகையனைத்தும் மண்பொடி
மாக்கடல் நீர் தீப்படக்கை வேல்விடுங் கந்தனே உன்னை
வழிபடும்போதும் குறை நேர்வதோ — வீரர்
மனதிலும் பொல்லாத சோர்வு சேர்வதோ — கெட்ட
வறுமை நோய்கள் அச்ச முதலாம்
வழிமறிக்கு மிக் கலி தவிர்த்தினி
வர விடாதே எமது நாட்டிற் கெடுதலை — ஈக
வாழ்க்கையில் நல் வாழ்க்கையாகும் விடுதலை

**இராகம்:** செஞ்சுருட்டி **தாளம்:** ஆதி

சூரர்குலம் வேரறுக்க ஒரு வேலும் நான்
துணையெனப் பிடித்திட இரு காலும் எண்ணும்
காரியத்தை முன்னிட்டுவிற் கோலெடுத்து வேடர்புனம்
மானைவிட்டுன் மெய்யுருவம் வேறுபட்டு நீமணந்த
ஏர்குறத்தி யணைத்திட அறுதோளும் தெய்வ
யானையும் அணைத்திடமற் றறுதோளும் எண்ண
எந்த நாளும் என்
துயர் மாளும்!
ஓர்குடிமற் றோர்குடியைக் கெடப்பார்க்கும் இந்த
உலகத்தை நினைத்திடில் உளம் வேர்க்கும் கொடு
மாரன்விடும் பாணமதி லேமனது நோகஇள
மாதர்வச மாகியலை யாதுசுகமே பெருகச்
சீர் கடப்பந் தார் குலுங்க மயில் மேலே அலை
சீறு கடல் மேலுதித்த வெயில்போலே வர
இது வேளை குகப்
பெரு மாளே.
கற்பகப் பொதும்பரிடைக் குயில்பாடும் க
லாபமயி லோடிஅங்கு நட மாடும் உயர்
நற்றருக்கள் வாசமலர் உட்குடைந்து தேனினங்கள்
பொற்பொடியைச் சூறையிடும் அற்புதங்கொள் வான்மயிலம்
சுற்றிவரு வார்குடியி லுதிப்பேனோ உனைச்
சுப்புரத்தினம் தமிழில் துதிப்பேனோ எக்
கதி தானோ அருள்
முரு கோனே.

## நெஞ்சுக் குறுதி கூறல்

**இராகம்:** இந்துஸ்தான் பியாக் **தாளம்:** ஏகம்

கெடுதலைச் செய்யும் அசுரர்கள் தம்மைப் படுகொலை
செய்யும் வயிரவேல்
கீர்த்திகொள் புயம் தூக்கியபடி குகன் எழுந்தனன்
மயிலின்மேல்
சுடுமணற்பொரி யறுமுகனைத்
திரிபுர மெரித்தவன் மகனைத்
தொடுகழற் பணிவாய் மனமே
விடுதலை இனி விடுதலை எங்கும் (கெடு)

நிதம் தரும் சுகம் அவன் மலர்ப்பதம் எனநினைத்திடு
நெஞ்சமே
நிசத்தினி லந்தச் சுரர்க்கதிபதி தனக்கு நீயென்றும் தஞ்சமே
சதுர்முகத்தனைத் தோற்கடிக்கும்
ஷண்முகனே காப்புனக்கே
அதர்ம மிங்கினித் தலையெடாது
சுதந்தரம் இனிச் சுதந்தரம் எங்கும் (கெடு)

சமயம் வருதல்மெய் எனதுறவினர் சரவணபவ ஓம் எனச்
சாற்றினர் பகை நாற்புறம் வளைத்தே நொறுக்கிடு
வோமினிக்
கையில் அவனருள் உண்டு கண்டாய்
கந்தன் படைச்செங் குந்தர் களாய்த்
துயர் ஒழித் தெழுவோ மினிமேல்
பயமிலை குலம் உய்யும் உய்யும் உய்யும் (கெடு)

மலையெனப்பெரு முடலெடுத்திடு கிரவுஞ்சனுயிர்
மாய்ப்பவன்
மயில நற்றல மதிலிருந்துநம் குலமுழுவதுங் காப்பவன்
தலையணிந்தவன் குருவுமவன்
சகல உயிர்க்கும் வேருமவன்
நிலையெனது சொல் பார்மனமே
புலையும் மறமும் தொலையும் தொலையும்(கெடு)

## நெஞ்சுக்கு நீதி கூறல்

**இராகம்:** தேசிகதோடி **தாளம்:** ரூபகம்

**பல்லவி**

ஒன்று கேள் மனமே

**அநுபல்லவி**

இன்றுதொட்டு நீ ஒருவழி நின்று நல்ல சுகமணுகிட
(ஒன்று)

**சரணம்**

சென்று சென்று பழி பாவத்தில் வீழாதே
செல்வாக்கை யெண்ணிப் பிறர் கையில் தாழாதே
வென் றிகொள் மாமயி லேறிய வேலனை
விகசித மலரடி இணைகளை உனதொரு புகலிட
மெனநினை (ஒன்று)

அந்நிய மாதரைத் தாய் என்பாயே கண்டு
அந்தகனை வாட்டக் குமரன்கை வேலுண்டு
சின்ன மிழைத்திடு நோய்களும் பாசமும்
சிதறக் குமரக் குரிசிற் பெயரைத் தினமுச் சரியினி (ஒன்று)

கானக் குறத்தியிடம் கெஞ்சிப் பேசுவான்
கட்டொடு சூர்குலம் வேல்கொண்டு வீசுவான்
ஞானக் குறுமுனிக் கின்னருள் செய்தவனை
நத்திச் சுப்பு ரத்தி னத்தி னற்ப தத்தி னைப்பு கலுவை (ஒன்று)

19

## வாழி தலைவி வண்டினைத் தூதுபோக்கல்

ஐயா கணபதி யுன்றன் அடிமலர் துதிசெய்தேனே

என்ற மெட்டு

**இராகம்:** உசேனி **தாளம்:** ஆதி

**பல்லவி**

மயிலேறி வரச் செய்குவாய் எழில்
மதுகரமே குமரனை நீ (மயி)

அநுபல்லவி

வெயிலில் வாடும் புழுவாய் மிகவும் துடிக்கிறேனே
விரைவில் முருகன் வரா விடிலோ பிழைக்கிலேனே (மயி)

சரணம்

தொல்லை யடைகின்றதைச் சொல்லிக் குமரன்மனக் கல்லைக்
கரைத்துனது நல்லிசையின் வல்லமையினால்
பல்லக்கில் ஏறிவரிற் பலநாழிகை கழியும்
வில்லிற் றொடுசரம்போல் விரைந்து பறந்துவரும் (மயி)

வள்ளி தந்திரம்கற்ற கள்ளி வனத்திலன்று புள்ளி
மயில் வாகனன் நள்ளிருளில் உள்ள மயங்கித்
துள்ளி வரமருந்தே உள்ளிச்செய் தாளதுபோல்
எள்ளத் தனையிருந்தால் சள்ளைக்கு வழியுண்டோ (மயி)

சாரும் குகனைச்சென்ற வாரம் தழுவி வெகு தூரம்
சொல்லியுமந்த நேரமே யதனை மறந்தான்
ஆரம்ப நாள்முதல்கு மாரன் செயலிதுவே
அடுத்திரண்டு மூன்றுநாள் அகத்தினிற் றங்குகிலான் (மயி)

நாட்டி லிருந்திடுசீ மாட்டிகள் என்றனைப்போல்
வீட்டி னதிபதியைக் கோட்டுமலை மங்கையரிடம்
கூட்டி யனுப்பி விட்டுக் கூகூவென் றழுவாரோ
கேட்டிலிருந் தென்றனை மீட்டிட விரைந்துபோய் (மயி)

ஏதுகுகன் நினைத்தபோது வருவதெனல் தீது
நொடிக்கு நொடிமாது கந்தன் மீது மயலாய்த்
தாது கலங்குவதால் தாஸன் சுப்பு ரத்தினம்
ஓதும் பண்பாடியகமீதே நிலைத்திருக்க (மயி) 20

**இராகம்:** சஹானா **தாளம்:** ஆதி

பொன்னடியைத் தந்தருளப்பா இப்போ தொப்பாய் நான்
உன்னடிமை யல்லவோ செப்பாய் செப்பாய் செப்பாய்
சின்ன மங்கையர்செய் மனப்பே திப்பால் இப்பால் நான்
செய்வ தறியேன் மனக்கொ திப்பால் அப்பால் எனாதுனது
(பொ)

பூதலத்தை எண்ண இதயம் பயம் செயும் இதிற்
புலை நடை கொள்விலை நயம் நயம் நயம்
ஆதலினின் சீதவிழியம் புயம் பெயும் நல்
அருள்தர வேண்டுமிச்ச மயம் உயும் வயந்தெரிந்து (பொ)

ஏறுமயில் கார்கடல் என்னும் வன்னம் துன்னும் அதில்
இலங்குகண் மீனென மின்னும் மின்னும் மின்னும்
ஆறுகதிர் போல்முகம் மன்னும் என்னெஞ் சின்னும் அதில்
ஆவல்கெடச் சேவைசெய உன்னும் பின்னும் உன்
அன்பனுக்குப் (பொ)

சுந்தரி பராபரி மைந்தா எந்தாய் கந்தா அர
விந்தனை ஜயித்தவா வந்தாள் வந்தாள் வந்தாள்
தந்தைக்கு மந்திர மூவந்தே தந்தோய் அந்தோ இங்குத்
தாஸன் சுப்பு ரத்தினம் நலிந்தேன் சிந்தா குலந்தவிர்க்கப்
(பொ)

21

பாலாபிஷேகம் பழநிமலையப்பன் என்ற மெட்டு

**இராகம்:** இந்துஸ்தான் பியாக் **தாளம்:** சாப்பு

மாசி மகோத்ஸவ மாமிந்த நாள் எங்கள்
மயிலாசன னேவந்தனன்
பாசாதி பந்தம் கடந்தோம் கனிந்தோமவ்
வீசன் தரிசனம் பெற்ற தினால்
பராபரன் மயூரன் பார்வதி குமாரன்
தரா தலா தாரன் ஜெயவீரன் உதாரன்
பரிந்த குஞ்சரிவள்ளிக் கதிப ஒய்யாரன்
பகையசு ரரை வெல்லும் சுரரதிகாரன்
பாலன் வடிவேலன் ஞாலம்புகழ் மேலோன்
பகரும் சதுர்மறை யுறையுநன் மூலன் (மாசி)

மயில்வாகனன் கருணைப்ரவாகவி லோசனன்
மகாசீலன் அனுகூலன் ஸாஜ்வல்யன் மிகுகோலன்
மதியணிந் தவன்மகன் அதிக வைபோகன்
அதிகுண நிதிபதி கதிதரும் ஏகன்
அத்தன்பரி சுத்தன்மிகு வித்தைப்ரசித்தன்
நித்தம் புகழ் சுப்பு ரத்தின மிஷ்டன் (மாசி) 22

நன்னபியா ராமா என்ற மெட்டு

**இராகம்:** தேசிக தோடி **தாளம்:** ஏகம்

கந்தப்பா வந்திப்போ தர
விந்தபா தங்கள் நீ தர
எந்தப்போ தாகுமென் றே
ஏங்கிமனம் வாடுகின் றேன்
சந்தப்பண் ஓதி நின் றேன்
சாருமயூர கெம்பீர உதார குண (கந்த)

உலகம் கனவெனில் அதிலும்
கலகம் மலையெனப் பயிலும்
தொலையா விசார முற்றேன்
தூயநிலைக் காசை வைத்தேன்
தலைமேல் கரங்குவித்தேன்
சரவணபவ குகநினதுச முகமிக உரைத்தேன் (கந்த)

மனமே குரங்கெனத் திரியும்
தினமே பவத்தொழில் புரியும்
தனமாதைச் சேர்க்க எண்ணும்
தாய்க்கிழவி வீட்டின் கண்ணும்
இனிமேற் புகாத வண்ணம்
ஈகநற் போதம் உற்சாகம் ஐயா விரைவாய் (கந்த)

வள்ளிமேல் சிந்தைகொண் டன்பாய்ப்
புள்ளிமான் வந்ததோ என்பாய்
கள்ளத்தன மாக வஞ்சி
காதடைக்கு தென்று கெஞ்சி
அள்ளித் தருமாவைக் கொஞ்சி
அத்தனையிற் சுப்பு ரத்தின நற்கவி மட்டுக் கலந்துண்ணுவாய்

23

நெஞ்சுக்குத் தெளிவு கூறல்

**இராகம்:** நாட்டை **தாளம்:** ரூபகம்

வனிதையர் தரு சுகமது பெரிதா நெஞ்சேயுரைசெய்
தினமடியரை யடை வது பெரிதா
கனமையல் தன்னில் அழுந்தல் சுகமா
கலைகொண்டவிவே கமதைத் தொலையப் புரிவது சுகமா
(வனிதையர்)

மகளிர் ஊட வருந்தல் இனிதோ?
மயிலவன் கழல் வாழ்த்தல் இனிதோ?
தொகைப் பொருள் நிலம் உடன் வருமோ?
தூய்மைப் படவே நீ செயும் ஓர் நற்றவமே வருமோ?
கற்பக நீழற் குளிர் ஓர் பால் — அரம்பையாதி
பொற்புடையார் நற் களி ஓர் பால் — சுரர் மனிதர்
ஒத்தெவரும் சொற்புகழ் ஓர் பால் — தினம் புசிக்கும்
புத்தமுதத் திற்சுவை ஓர் பால் — மிகவேதுலங்க
ஐரா வதமதன் பிடர்தனில் அமர்வுற அமரரும் முனிவரும்
கைதாம் தொழுதிட ஒருகுடை அழகுடன் நிழலிட
அனையதோர்
இந்திர போகம் தரிலோர் முந்திரிநே ரந்தனில் வீ
ழுந்தரமாம் சொந்தமுள தோ? — அந்தங்கடைதீர்
கந்தனையே சிந்தைசெயின் எந்தவித முந்தனியா
நந்தமிதிற் சங்கையுளதோ? — அருளாலென் அப்பன்
உலகத்தினை உண்டாக்கிடல்
உலகத்தையிர க்ஷித்திடல்
உலகத்தை மறைத்திடல்இப்
பலபற் பல அற்புதமிடு
கங்கைவைத்த வான்சடைமேல் திங்கள்வைத்து
மங்கையையோர்
பங்கில்வைத்தவன் மகனைக் — குற
நங்கையணை மார் பகனை — ஷண்
முகனைக் — குகனை
இப்பவத்தினைத் தொலைத்திட இமையளவும் உளமலைவறச்
சுப்புரத்தி னத்தி னற்ப தத்தினிற்று திப்பதைவிட (வனிதையர்)
24

குமாரா குருபரா சிவனே என்ற மெட்டு

(எனினும் அதன் முன் கஜலும் துரிதமும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.)

**இராகம்:** தேசிகம் **தாளம்:** ஆதி

உளமொத்த ஒருவனிடம் ஒருத்தி போகம்
விளைவித்த விந்துசுரோ ணிதமேற் பாயக்
களிமொய்க்க அவள்வயிற்றில் கருநிறைந்து
வளர்பத்து மாதத்தில் மதலையாகி

துரிதம்

மலர்புவி தனிற் பிறந் தனுதினம் பிணிகளில்
உலவியைந் துவயதை யடையுமிச் சிறுவனைத்
திருவுளத் தெண்ணா — திருந்தால்
செய்வ தேதெண்ணா! — உமையாம்
பரை தருந் தேனே — மயில்மேல்
பவனிவரு வோனே — என்கோனே

கஜல்

குருவையடைந் துயர்கலைகள் கற்றுத் தக்க
பருவமுறு மங்கையர்கள் மோகம் கொள்ளும்
உருவமொடு திருவனையாள் தனைமணந்து
மருவிடுசு கோததியில் ஆழ்ந்து பின்பு

துரிதம்

வளநிதி வருவித மதில்மன தினைவிட
விளைவன கெடுதி கள் பலபல வாகுமிந்
நலியினாலுருகா — திருக்கும்
நிலையருள் முருகா! — தமிழ்த்தேன்
குலவுமலர் வாயா! — என்நேயா!
குளிர்செய் காங்கேயா! — நற்றூயா!



கஜல்

வாலிபம்போய் வலிவெலாம்போய் நரைமிகுத்துக்
காலிருந்த இடநோக்கித் தலையும்சாய
மூலைவிட்டு நகர்வதெனில் முனைந்துகையிற்
கோலையெடுத் தூன்றநடை கோணிவீழச்

துரிதம்

சிறுவய தினரிதை நகைபுரி கையில்மன
முறுசின மதில்வசை மொழிவர் இவை பலவும்
வருவதன் முன்னே — நின்பார்வை
வசத்திலாக் கென்னை — கயிலா

புரியினோன் பாலா! — நன்மூலா
பூணுங் கதிர்வேலா! — நற்சீலா

கஜல்

நாச் சற்றும் நிலைநிற்க மாட்டாது நனிகுழறப்
பேச்சற்று விழியினிலே ஒளியற்றுப் பிரக்ஞையற்றுப்
போச்சுதுயிர் எனஉற்றார் பிடிப்பற்று வாடுமுடல்
மூச்சற்றுப் போகுமுன்னே இவ்வேழை மகனுக்கு

துரிதம்

முழுமதி நிகரறு முகமொடு விழி மலர்
அழகொடு பெருகிய அருளொடு விரைவிலென்
அப்பனே வந்தாள் — இப்போதே
மெய்ப்பதந் தந்தாள் — உன் தாஸன்
சுப்புரத்நந் தான் — தருந்தேன்
ஒப்புமாறே நான் — சொரிந்தேன் (அப்பனே)

25

**இராகம்:** அசாவேரி **தாளம்:** ஆதி

பச்சைமயி லேறிவருவான் — அன்பர்கள் குறை
அத்தருண மேகளைகுவான் — ஷண்முகனொரு (பச்சை)

நிச்சயமி தேததியி
னிற்சரண மேயடைவிர்
அச்சமிலை வேலவனி
னிச்சையினை நீர்பெறிலோர் (பச்சை)

நச்சுவடி வேலுமுடையான் — வெம்பகைவரைப்
புய்த்துடலை வாரியெறிவான் ஷண்முக னொரு (நச்சு)

மெச்சுகவிக் கீரனது
பத்தியினி லேயிளகி
மொய்த்தொரரக் கன் சிரநி
லத்தினில்வி ழச்செய்யுமொர் (நச்சு)

தொத்துகிளி போல் விரைகுவான் — உண்மையிலவன்
பத்தருளமே யுறைகுவான் — ஷண்முகனொரு (தொத்)

முத்துநிகர் வாய்க்குறவர்
பெற்றகுற மாது தரும்
அத்தினைதே னோடுமவள்
பொற்றனமு மேயுணவொர் (தொத்)

கொத்தடிமை யாய் நலிகுவார் — விண்ணவர் சிறை
முற்றுமவர் மீள அருள்வான் — ஷண்முகனொரு (கொ)

பொய்த்த ஒரு சூரர்குலம்
அத்தனைஓ ரேநொடிவி
டுத்துநிரு மூலமிடு
சுப்புரத்தி னம் புகலும் (பச்சை)

26

## வேல்

### வண்ணம்

**இராகம்:** இந்துஸ்தான் பியாக் **தாளம்:** ஏகம்

தருமங் குனறுந் தருணங் கண்டன் றே நே ரே
தவிரென் கந்தன் பகைகண் டஞ்சும் கூர் வேல் வேல்
எரியஞ் சுங்கண் புவியஞ் சுந்திண் சூர் மார் பே
இருதுண் டங்கண் டுயிர்சிந் தும்பைந் தார் வேல் வேல்
கிரவுஞ் சன்றன் பெருமங் கந்துண் டா மா றே
கெடவும் பண்டங் குமைதந் தின்பங் கூர் வேல் வேல்
திருவும் பண்புங் கலையுந் தந்திங் கே வாழ் வே
செயவென் றன்பங் கினில்வந் தண்டுஞ் சீர் வே லே
வரைதங் குஞ்செங் கதிரும் பொங்கும் பா ரீ ரோ
வளரண் டங்கண் டுயருஞ் செம்பொன் தோய் வேல் வேல்
அரிதென் றண்டும் கருமம் பஞ்சென் றோ டா தோ
அலைபொங் குந்தண் கடலுண் குந்திண் கூர் வேல் வேல்
பரைமைந் தன்கந் தனுரந் தங்குந் தோள் மே லே
பழகுஞ் செஞ்சந் தனமிஞ் சுந்தண் சீர் வேல் வேல்
மறையென் குங்கஞ் சமுகந் தங்கும் தூ யோர் வாழ்
மயிலந் தங்கும் சுரர்தம் பங்கம் தீர் வே லே

27

## மயில்

**இராகம்:** அசாவேரி **தாளம்:** சாப்பு

குகனேறும் மாமயிலே — ஷண்
முகனேறும் மாமயிலே

குளிர்வா னிடையே குவிதா ரகைபோ
லொளிர் தோ கையிலே சுடர்கா சுக ளார் (குக)

இறகின் விரிவிங் ககிலம் ககனம்
பிறவும் புகஅங் கிடமின் றெனுமென் (குக)

நவரத் தினமுற் றிடுபொற் பணிபெற்
றுயர் நர்த் தனமிட் டபதத் துடனற் (குக)

கொந்திடும் சஞ்சலம் கண்டதும் சென்றிடும்
கந்தரம் தன்வணம் சுந்தரம் சிந்துறும் (குக)

அணி வயி ரவலகு தலைமிசை எழில் முடி
மணியென ஒளிவிழி மரகத மலைநிகர் (குக)

மணிமா முடிமீ தினி னீள் உலகே
அணிசே டனைஓர் புழுவா யெணுவாய் (குக)

மயிலமே உரைசுரா திப எனாதெ திரில்வா
வெயிலிலே புழுவெனா உருகினே னருளவா (குக)

சுப்புரத் நத்தினற் சொற்குவப் புற்றெனக்
கிக்கணத் திற்சுகத் தைக்கொடுத் துக்கொணற் (குக) 28

## வாழி

வாழ்கககுகன் பாத மலர்வேல் மயில்சேவல்
சூழ்க நனி யின்பம் தொல்புவிவான் — வீழ்கபுனல்
மல்கவளஞ் செந்நெல் வளர்க அறம்வேள்வி
வெல்கஇனி மைத்தமிழின் வீறு 29

**மயிலம் சுப்பிரமணியர் துதியமுது முற்றிற்று**

உ

# பழனியாண்டவர் மயில்விடு தூது

கு. நடேச கவுண்டர்

## காப்பு

### விநாயகர்

அளிபயிலுந் தென்பழனி யாண்டவனை வேண்டிக்
களிமயில்சேர் தூதுக்குக் காப்பாம்-தெளிநறுந்தேன்
தேங்குஞ் சரத்தாமச் செஞ்சடைமுக் கட்கருணை
ஓங்குஞ் சரத்தா னுவந்து.

### சற்குருநாதர் வணக்கம்

தஞ்சமென வஞ்சலெனுஞ் சாதுகுரு நாதனிரு
செஞ்சரண நெஞ்சதனில் சேர்தலினால்-விஞ்சும்
அயில்விடலை தென்பழனி யாண்டவன்பா லன்பாய்
மயில்விடுதூ தாகு மகிழ்ந்து.

### வித்யாகுரு துதி

கந்தச் சுவாமி கருணா கரச்சாமி
சந்தச் சுவாமிதமப் பச்சாமி-மந்தத்
துயில்விடு மாறருளுந் தூயகழல் போற்ற
மயில்விடு தூது வரும்.

## நூல்

### கலிவெண்பா

### சுப்பிரமணியன் ஒப்பறு பெருமை

பூமேவு மாது புணரும் புயல்வணனு
நாமேவு மாதுபுணர் நாயகனும் - கோமேவும்
யாக்கைத்தே வேந்திரனும் இன்னிசைய நான்மறையும்
ஆக்கத்தே வாதியர்கள் யாவர்களும் - நோக்கி
யறிதற் கரிய வநாதியா யாதோர்
குறியுங் குணமுமிலாக் கோமான் - நெறியால்
அறிவை யறியு மறிவ ரகத்துட்
செறியும் பரம சிவமாய் - அறியும்
அறிவி னறிவாகி யவ்வறிவி லூறும்
பிறிவருபே ரின்பப் பெருக்காய் - தெருமுமல 5

நோய்நீங்கி யாருயிர்கள் நோன்மையுற நோன்றெடுத்த
தாய்போல வைத்த தயாவினால் - ஏயும்
உருவு மருவு முருவருவு மாகப்
பருவ வடிவங்கொள் பண்பான் - மருவு
முலகுயிர்கள் யாவுமாய் வேறா யுடனாய்க்
கலவிக் கலவாத காட்சி - யிலகும்
அவனருளால் அல்லாமல் ஆர்க்கு மெவைக்கு
மிவனின்ன னென்னவொண்ணா ஏந்தல் - நவையறுமா
றெப்பிரமா ணத்தாலு மெச்சமய மும்பரவு
சுப்பிரமண் யப்பெயர்சேர் தொன்மையான் - எப்போதும்

ஏசுத லில்லாப் பிரமம்இது வென்றுமறை
பேசுஞ் சிவசுப் பிரமணியன் - தேசமெலாம்
ஆக்கி அளித்தழிக்கு மாற்றலவர் போற்றுபுகழ்
தூக்குஞ் சதாசிவவோஞ் சுப்ரமண்யன் - ஆக்காத
ஆக்கை யிளமை யழியாத தெய்வமணம்
பூக்கும் அழியாப் புகழ்முருகன் - தேக்கரும்பர்
எண்ணா யிரங்கோடி யீண்டிடினுங் காலழகு
நண்ணா வெழின்மிகுந்த நன்முருகன் - எண்ணாமல்
ஓங்காரத் தின்பொருளை யோதாத வேதாவைத்
தாங்காச் சிறைவைத்த தாடாளன் - பூங்காலிற் 15

றெண்டனிடு தந்தைக்குச் செம்பொருளைச் செப்பியாட்
கொண்ட பரம குருசாமி - விண்டுவையோர்
கையாற் குறுக்குங் கலசமுனிக் கின்னருளைப்
பொய்யா தளித்த புகழ்ச்சாமி - வையமெலாம்
தன்னுடைமை யாகத் தனையுடையார் வேறில்லாக்
கொன்னுடைய சாமி குகசாமி - முன்னர்மதன்
வெந்ததுநன் றென்றுள் வியக்கவவற் குற்சிதஞ்செய்
அந்த மிகுங்குமர னாஞ்சாமி - பந்தமலக்
குற்சிதங்கள் போக்குங் குமாரபர மேசனுயிர்
நற்குகையில் மேயகுக நாயகன் - சிற்பொருள்கள் 20

அத்தனைக்குந் தம்பெருமா னாளுஞ்சே னாபதிபேர்
எத்தனையோ கோடி இசையியவுள் - பத்தித்

**அறுமுகப்பரமன் அமர்படை வீடுகள்**

தரங்குன்ற லில்லார்க்குச் சன்மவிடாய் தீர்க்கும்
பரங்குன் றொடுஞ்செம் பவளம் - தரளமொடு
நந்தூ ரலைவாயில் நண்ணி முழங்குதிருச்
செந்தூ ரலைவாயுஞ் சித்தர்குழாம் - வந்தித்
தொருவாவி னங்குடிலி லுய்க்காது காவென்
திருவாவி னன்குடியும் தெய்வத் - திருமறையோர்
நீரகத்தா லாறெழுத்து நெஞ்சமுத்தி யஞ்சலிசெய்
ஏரகமும் பூம்புனந்தோ றேனல்விளை - நீரருவி 25

முன்றிறொறு மோடி யொளிர் முத்திறைக்குந் தண்சாரற்
குன்றுதொறுஞ் சூனிறைந்து கொண்டலினம் - துன்றி
முழமுதிரு மோசை முழங்கமயி லாடும்
பழமுதிருஞ் சோலையும் பல்சீர் - விழவுமலி
நன்னகரம் இன்னும் பலவு நயந்திருந்து
மன்னுயிர்கட் கின்பம் வழங்குகினு - மின்னும்

**பழனி மலையின் பலபெருஞ் சிறப்புக்கள்**

முடியுடைய வேந்தரொரு மூவரினு முன்னாம்
தொடியுடைய தோட்சேரர்-தோன்றல் - கடிபொழில்சூழ்
தில்லைச்சிற் றம்பலத்துள் தேவர்பிரான் காற்சிலம்பின்
மல்லலொளி யார்ந்துமகிழ் வார்செவியான் -
தொல்லுயிர்கள் 30

உள்ளங் கழறியவை யுள்ளபடி நன்குணர்ந்து
தெள்ளிமனு நீதிசெயுஞ் செங்கோலான் - வள்ளல்
முதலைவாய்ப் பாலனுயிர் மீட்டமுனைப் பாடி
முதலைவாய்ப் பன்பாக்கி மூவா - முதலார்வாழ்
அண்ணற் கயிலைக்கவ் வாரூர ரோடாடற்
பண்ணற் பரிமேற் படர்ந்துசுவை - உண்ணமுதல்
தெய்வவுலா வோதுபுகழ்ச் சேர னணிகொங்கில்
நய்தலிலா வைகாவூர் நாடதனில் - சய்யம்வளர்
மாதிவ ராக மலைவில்லி வாழ்நெடிய
ஆதிவ ராகமலைக் கண்ணிதாய்ச் - சோதிமிக 35

வோங்குபசும் பொற்கிண்ண மொத்தமலர் மெத்தமலர்
கோங்குவனம் பச்சைக் கொடியுமையாள் - பாங்கிலுறை
தாவிளஞ்சே வேறி தனைநோக்கி நோற்றநறுங்
கூவிளஞ்சேர் தண்காடு கொண்டல்வணன் -
மேவியெனைத்
தண்டுளவத் தார்மாற்பிற் றாங்குகவென் றோங்குமவாக்
கொண்டுதிரு நோற்ற குளிர்பொழிலும் - அண்டருண

நல்லினிய வுண்டிவகை நல்குமெழிற் றேனுவுடன்
எல்லியவுள் நோற்றசுவை யேற்றமிகு - நெல்லிவளர்
சோலைநிறை சூழ்ந்திலங்கு தொன்னகரம் செந்நெல்சுவை
ஆலைநிறை யோங்கு மணிவயலும் - நீலநிறப் 40

பட்டுக் குடைகள் பலவுநிறுத் தாலொத்த
மட்டுப்பூம் பாளை மலிகமுகும் - நெட்டைமடற்
பொன்னங் குடம்பொதிந்தாற் போலமுதிர் நெற்றிளநீர்த்
தென்னம் பொழிலும் சினவேழத் - தின்கைமுகம்
காட்டுங் குலைக்கதலிக் காடும்தே மாம்பொழில்கள்
கூட்டங்கொண் டோங்குங் குராமருத - மீட்டளிகள்
பாடுஞ் செருந்திமகிழ் பாதிரிக டம்புவழை
தாடிமங் கூதாளம் தண்காயா - ஏடவிழுங்
கொன்றை குருந்தங் குருக்கத்தி சண்பகம்
மன்றல் மலிமவ்வல் மல்லிகை - துன்று 45

மருக்கொழுந்து பச்சை மலியவளர் பூங்காத்
திருக்கிளருந் தாமரைசேர் தெண்ணீர்ப் - பெருக்குமலி
வாவிகளு நாற்றிசையு மல்கிமணி மாடங்கள்
தூவியனஞ் சேக்கும்பல் சூளிகைகள் - நீவியணி

மாதரெழில் மைந்தர் மகிழு நிலாமுற்றம்
சோதிமணி மாடநிறை தொன்னகராம் - கோதில்
திருவாவி னன்குடியே செவ்வேட் பிரானுக்
கொருவா வுவகையுட னுற்ற - திருநகரென்
றான்றோர் பலரு மறையக்கேட் டேனுளத்தில்
தோன்றாத பேருவகை தோன்றியதால் ஆன்றபிறப் 50

பெண்ணிலவை தம்மி லியற்றுந் தவப்பயனு
நண்ணியதா லூக்க நனியுந்தத் - திண்ணியபே
ராவலொடு மப்பதியை யண்ணினேன் முன்செய்த
தீவினைகள் தீர்ந்தவெனத் தேறினேன் - ஆவிக்
கிரவணமா மாசையொழித் தீடிலொளி யீயுஞ்
சரவணமாப் பொய்கைதனைச் சார்ந்து - பரவுந்தண்
பூம்புனலிற் றோய்ந்துவெண் பூதியணிந் தாறெழுத்துந்
தோம்பறியச் சிந்தித்துச் சுத்தியொடும் - பூம்புகர்சேர்
துங்கக் கரிமுகத்துத் தூமணியைத் தாள்பணிந்து
சங்கத் தமிழ்வளர்த்த சண்முகனை - யெங்குருவாம் 55

நீதானே கோதேது நேராத தீங்கனியாம்
வாதாநே ரிற்பவள வாய்முத்தென் - றோதும்
மருவாவி நன்குடிகொள் மாதேவன் சேயைத்
திருவாவி னன்குடியிற் சேவித் - துருகியுளம்
சூழ்வந்து கும்பிட்டுத் தோத்திரித்துப் பேரின்பம்
மூழ்கி விடைபெற்று முன்னெமது - தாழ்குடியைக்

அருண்மிகு நந்தி யாச்சிரமச்சீர்

கொத்தடிமை கொண்ட குருசாது நந்தியமர்
வித்தகமே லோங்குமட மேவினேன் - நித்த
நிகமாக மாதிகலை நேர்மையுட னாய்ந்து
சகமாயை விட்டொழிந்து சார்ந்தார்க் - கிகபரங்கள் 60

என்று மழியாத வின்ப முடனருள்வ
பொன்ற லிலாதசிவன் பொன்னடியே - யென்று
துணிந்து சரியை கிரியைசெய் தொண்டர்
உணர்ந்த சிவயோகர் உண்மை - மணந்தசிவ
ஞானியர்கள் மோனியர்கள் நாதாந்தர் - போதாந்தர்
மேனிலைய சித்தாந்தர் வேதாந்தர் - ஏனையவாம்

பல்வகைய கொள்கையரும் பண்போ டுறவாகி
நல்வகைய நூற்பொருளை நாடுநரும் - கல்கனியத்
தேவார மாதித் திருமுறைக ளன்போடு
நாவாரப் பாடுநரும் நம்மருணைப் - பாவாண 65

னோதுந் திருப்புகழ்த்தேன் ஓங்கு மிசைவகுப்பு
யாதுந் தருவோ னலங்காரம் - நாதன்
அநுபூதி யாதி யருந்தமிழ்ப்பா வோதி
மனுபூதி பெற்று மகிழ்வோர் - கனிவாய்
வடமொழியில் மார்க்கண்டன் மன்னுமுப மன்னு
திடமன்னு புட்பதந்தன் சீர்த்த - சடைமுனிவர்
ஏத்தும் புகழ்த்துதிக ளின்னிசையிற் பாடுநரும்
கூத்த னடியார் குழாங்கள்தமக் - கார்த்தவெ்ன
ஆறுசுவை நாலுவகை யுண்டி யடுவாரும்
வீறுவீ றுண்ண விளம்புநரும் - வேறுபல 70

கைத்தொண் டியற்றல் கடனாகக் கொண்டவரும்
சித்தமகிழ் வோடிருந்து சேவிப்பப் - பத்தர்தமக்
கேதுகுறை வும்வாரா தின்னருளால் வீற்றிருக்கும்
சாதுகுரு நாதன்மலர்த் தாள்வணங்கிப் - போதம்
பெருகு கடைக்கணருள் பெற்று மகிழ்ந்தே
திருவனுஞை பெற்றபின் செங்கை - யொருகால்

**பவவினை யொழிக்கும் சிவமலை மாண்பு**

கவித்து வரையும் குழித்துக் கடலும்
அவித்த குறுமுனிவ னன்பால் - சவிக்கயிலை
சென்று சிவனடிகள் சேவித்துப் பின்னங்கு
நின்ற விருசிகர நேர்நோக்கி - உன்றன் 75

ஒளிவடிவுஞ் சத்தி யுயர்வடிவு மாய
நளிமுடிக ளின்னவற்றை நாளும் - அளிமலர் தூய்த்
தென்பொதிய வெற்பினிடைச் சேர்த்துத் தொழவெனக்கு
நின்கருணை நேர்ந்தளித்தி நின்மலா - என்பதாய்ப்
போற்றிக் கொணர்ந்தோங்கு பூர்ச்சவனத் தேவைத்துத்
தூற்றிமலர் தாழ்ந்து தொழுதபினர் ஆற்றல்
மிகுமிடும்பற் கண்டவற்றை மேன்மைபொலி தென்பாற்
தகுமுறையிற் கொண்டுவரச் சாற்ற - நெகிழுமனத்

தன்போடு மவ்வாறே யவ்வரையைக் காவடியிற்
றென்பாற் கொடுசெல்வான் செவ்வேளின் - றன்செயலால்

ஓங்கு வராககிரி யுத்தரதிக் கிற்பழனிப்
பாங்கரிடை வைத்துப் பசியாற்றி - யோங்கறமை
மீண்டு மெடுக்க முயல்காலை வேலன்மிடுக்
கீண்டு மிளஞ்சிறுவ னென்றெய்தி - யாண்டவ்
வசல மசலமே யாகச் சிவப்பேர்
அசல முடிமே லமர - முசலமொரு
கைக்கொண்ட வல்லிடும்பன் கண்டுசினங் கொண்டெதிர்க்கப்
பொய்க்கொண்ட போர்செய்து பொன்றுவித்து -
மைக்கொண்டல்

மேனி யிடும்பனுக்கு மீண்டும் உயிருதவி
ஆனியறு தொண்டனென ஆண்டருளிப் - பானிறுவி 85

இட்டமுட னம்மலைமே லீசன் மகனிருந்தான்
சிட்டர் தொழும்பழனிச் சீர்ப்பெயரான் - நட்டதனால்
பார்மீது நின்ற பழனி மலைகதிரோன்
தேர்மீது செல்லத் திகைக்குமலை - போர்மதனன்
வல்லமைகள் செல்லா வலிமைத் தவமுனிவர்
நல்லமனம் போற்பெருமை நண்ணுமலை - தொல்லையுயர்
விந்த மலையடக்கு மேன்மைக் குறுமுனிவன்
வந்து தெரிசித்து வாழ்த்துமலை - இந்திரனும்
மாலயனும் வானோர்க ளேனோரும் வந்தன்பால்
சாலவலம் வந்துமுடி தாழ்த்துமலை - காலன்வலிக் 90

கஞ்சியவர்க் கெல்லா மரணாக நின்றமலை
செஞ்சொற் புலவர்கவி சேர்ந்தமலை - தஞ்சமென
வந்தார் விரும்பும் வரங்க ளவையுமுடன்
இந்தா வெனவளிக்கு மின்பமலை - மந்தாரம்
பாரிசா தங்கற் பகமெங்கு நாறுமலை
வேரிசால் சோலை விளங்குமலை - மூரிமத
வெற்புவிளை யாடும் வியன்சுனைகள் மேவுமலை
கற்புக் கொடிகள் கஞலுமலை - சற்பமொடு
திங்கள்புனல் தண்புயல்கள் சேரு முடியதனால்
செங்கனக மேனி திகழ்தலால் - பொங்குமத 95

யானைசின வேங்கைபயி லாகத்தால் பாலோடு
தேனெய்புரிந் தாடுந் திறத்தினால் - மானையிடத்

தேந்திமயி லாகத் திருத்திச் சிறப்புக்கண்
ணார்ந்துசிவ ரூபந்தா னாவதனைத் - தேர்ந்துலக
முய்ய வுருவா லுரைக்குஞ் சிவமலைநற்
செய்ய கமலைஅருள் சேர்க்குமலை - துய்ய
பரமமயச் சோதி மயமாம் பழனி
பிரமனெடு மால்போற்றப் பேறு - தருபழனி
கங்கை நதியின் கரைமேவுங் காசியினும்
துங்க மிகுபழனித் தொன்மைமலை - மங்காது 100

பொங்கு மதிசயங்கள் பூத்த பழனிமலை
எங்கு முளவுலகம் ஈரேழும் - தங்காதல்
கொண்டு புகழக் குலவு பழனிமலை
தொண்ட ன்ருணகிரித் தோன்றலெனை - யண்டும்
செனனம் விடவொருகாற் சேவித்தி லேன்பேர்
கனிவினொடு மென்றும் கரையேன் - தினமுமதன்
பேர்மொழியும் பேர்களடி பேணித் தலைக்கணியும்
சீர்பெறுகி லேனென்று சிந்தையொடும் - ஆர்வம்
பெருகப் புகழும் பெரிய பழனித்
திருமலையின் றாழ்வரையைச் சேர்ந்தேன் - பெருகு 105

## அன்பர் குழாத்தோடு அணிவரை யிவரல்

மருவியென ஞானமத மார்த்திழியுஞ் சோதிக்
கரிமுகவொற் றைக்கொம்பர்க் கண்டு - திருவடியில்
தெண்டனிட்டுக் குட்டிட்டுத் தொப்பணமிட் டுச்சிரசிற்
கொண்டுகரங் கும்பிட்டுக் கோதில்பல - தொண்டர்குழு
மொட்டையிட்டு மேனி முழுதுந்தூ நீறணிந்து
சிட்டமுடன் காவடிதோட் சேர்த்தியியங் - கொட்ட
உருகா தரத்தா லுடல்புளக மெய்தி
முருகா முருகா முருகா - அருள்பொழியும்
ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் யாவரினும்
வீறுசிவ சுப்பிரமண்ய வேலவா - தேறுமவர் 110

அஞ்சுதலை நீக்கியுளத் தாறுதலை யீயவென
மஞ்சுதலை சூழ்பழனி மாமலைவாழ் - விஞ்சுபுகழ்
ஆண்டவா வோமரஹ ராவென்று வான்பரவ
நீண்டபே ரோசை நிகழ்த்திடவும் - ஈண்டுசிலர்
தங்கள் வறுமைச் சலதி கடத்தினதும்
பொங்கு துயர்நோயைப் போக்கியதும் - மங்கலஞ்சேர்

இல்லாட் புணர்த்தியது மின்மகவை ஈந்ததுவும்
பொல்லா எதிரிகளைப் போக்கியதும் - நல்ல
கலைஞானங் கைகூடக் காட்டியதுஞ் சிந்தை
யலையாத நிட்டை யளித்துத் - தொலையாத 115

பேரின்ப மூட்டியதும் பின்னும் பலபலவாம்
சீரருள்கள் பேசியன்பாற் செல்வாரும் பாரின்கண்
எண்ணரிய கேத்திரங்க ளெத்தனையோ மூர்த்தங்கள்
புண்ணியநற் றீர்த்தம் பொருந்திடினும் - உண்மையினில்
தென்பழனி மாமலைக்கும் தெண்டா யுதக்குகற்கும்
நன்புனல்சேர் ஷண்முகப்பேர் நன்னதிக்கும் - பன்னிடவோர்
ஒப்பில்லை யில்லையென வோதிப் புகழ்வாரும்
கப்பூரந் தேங்காய் கதலிபலம் - திப்பியமாம்
பஞ்சாமிர் தங்கூட்டுப் பண்டங்கள் ஆனைந்து
விஞ்சுமுழுக் காட்டவுள வேறுபொருள் - நெஞ்சினில்முன்
நேர்ந்த கடன்கள் நிரைநிரையாய்க் கொண்டுசெல்வோர்
ஆர்ந்தபதி னெண்டேயத் தன்பர்குழாம் - சேர்ந்துநிறைந்
தெண்ணு ளடங்காதார் ஏறிமலை மீதுசெலக்
கண்ணு மனமுங் களிகூர - நண்ணி
இடும்பன் றிருமுன்னின் றேத்தியருள் பெற்று
நடந்து மலையுச்சி நண்ணி - இடம்பரவு
கோயில்வலம் வந்து கொடிமரமுன் றண்டனிட்டு
வாயில் நுழைந்தேன் மகிழ்வோடும் - ஆயிடைச்செஞ்

### குமரன் கோயில் குலவுஞ் சிறப்பு

சந்தனச்சாந் தின்மணமோ தண்பனிநீர் வாசனையோ
மந்திரமாம் வெண்ணீற்றின் மாமணமோ - பந்தமுறு 125
மாலைகளின் தூமணமோ மட்டற்ற தேனறுநெய்
ஆலைதரு பூங்கழைச்சா றைந்தமிர்தம் - கோலக்
கலயரிடு குங்கலியம் காரகிலின் றூப
மலையு மணமோ வகுத்துச் - சொலவொண்ணா
தோதுந் திருப்புகழ் தேவார மோங்கிசையோ
கீதங்க ளின்முழக்கோ கேடில்லா - நாதசுர
வாசினையோ கண்டா மணிமுழக்கோ தொண்டர்குழாம்
ஆசி லரஹரவென் னார்ப்பொலியோ - பேசுங்கால்
ஏது பெரிதென் றியம்ப லெளிதன்று
சோதிதிரு வாலயத்துட் தொண்டர்குழாம் - கோதில் 130

ஒருவர் திருமார்பி லுற்றதிரு வெண்ணீ
றொருவர் முதுகிலுற வீண்டித் - திருமுன்னர்ச்
சேவித்து நிற்கும் திறங்கண் டவர்போலப்
பாவித்து நின்று பரவினேன் கூவுதிறற்
செஞ்சேவ லோங்குகொடிச் செவ்வேற் குமரகுரு
மஞ்சாரு முற்கோல மாற்றியபின் - நெஞ்சார

### அபிராமி மைந்தன் அபிடேக மாடல்

எண்ணெய் சுவைநெல்லி யேரா ரரிசனநல்
புண்ணியவா னைந்துபால் போந்தயிர்நெய் - திண்கழைநீர்
ஐந்தமுதம் தேனிளநீ ராசில்பழச் சாறுநறுங்
கந்தமிகு சந்தனத்தின் தண்கலவை - நந்தும் 135

பரிமளப் பன்னீர் தபனம் பரவி
விரிகடலில் மொண்டெழுந்து மேகம் - சொரிவதென
ஆராத காதலுட னன்பர் முகந்துதவ
நேராரு மில்லாதா னேர்ந்தாடி - நீரீரம்

### தண்டபாணி கொண்ட மெய்க்கோலம்

போகநன் கொற்றிப் பொலனா ணரைப்பூட்டி
சாகைமறைக் கோவணமுந் தற்றுமிக - மோகமுறும்
பல்லுயிரை வாட்டும் பகையான மும்மலத்தைக்
கொல்லுதற்குக் கொண்டபோர்க் கோலம்போல் - கல்லாடை
சிற்றிடையிற் சேர்த்துத் திகழுத்த ராசங்கம்
வெற்றியமர் திண்தோளின் மேலணிந்து நெற்றிமுதல் 140

அங்கமெலாம் வெண்ணீ றளைந்துநுதற் பொன்பொட்டிட்
டங்கண்மணி மாலை யணிந்துநறுந் - தொங்கலும்
இண்டையுங் கண்ணியு மேரார்ந்த வாசிகையும்
கண்டிகையு மேனைக் கலன்களும் - கொண்டணிந்து
தண்டமொரு செங்கைமலர்த் தாங்கிச்சூர் வேரையறுத்
தண்டர்குடி காத்தமுனை யாரயிலைத் - திண்டோளிற்
சேர்த்தருளி யோர்கை திருவரையில் வைத்தெம்மை
ஆர்த்தபிறப் போடிறப்பும் அன்றயனார் - கூர்த்தெமது
புன்றலையின் மேலெழுதும் பொல்லா எழுத்தினையும்
ஒன்றவழி நோன்புதிறல் உற்றடியார் - நன்றறிந்த 145

சித்தத்தும் வேத சிரத்தும் அருணகிரி
யத்தன் புகழ்பாட் டடிதோறும் - நித்தனுமை
கண்ணகத்தும் விட்டகலாக் காமர் திருவடியில்
வண்ணச் சிலம்பும் வனைந்தெதிரில் - நண்ணு

### தேசமர் வேலவன் பூசனைச் சிறப்பு

நிலையாடி கண்டு நிலமதிர ஆர்க்கும்
பலவாச் சியங்கள் பரவப் - பலவகைய
இன்னடிசில் பண்ணியங்கள் இன்கனிகள் தெங்கங்காய்
நன்மைமிகு பானீய நல்கியவை - தன்னருளாற்
கைதொட்டு நீக்கிக் கரநீவிச் செங்கனிவாய்
ஐவகைய வாசங்க ளார்ந்ததற்பின் - செய்ய 150

திருமுகத்தின் வேர்வொற்றித் தீபநறுந் தூபம்
அருவிலைய நீறுதெளி யாடி - விரிகவிகை
சாமரை தால விருத்தஞ்சாந் தாற்றிமுத
லாமவைக ளெல்லா மமர்ந்தேற்றுத் - தோமகலும்
சந்தச் சதுர்மறையும் தன்புகழ்சொல் செந்தமிழும்
கந்த புராணக் கவிதையும் - முந்தும்
இசையும் இயமும் எதிர்முரலக் கேட்டு
வசையில் நடன மகிழ்ந்தே - இசைவாகக்
கற்பூர தீபமெதிர் கண்டு மகிழ்ந்தோர்க்கு
நற்பூதி வேண்டும்வரம் நல்கியபின் - விற்பருதி 155



### முருகப்பெருமான் திருவுலாக் காட்சி

நீலக் கடன்முகட்டின் நேரே எழுந்தென்னக்
கோலக் கலாபக் குதிரையின் - மேலமர்ந்து
பேரழகுக் கீடழிந்த பெற்றிமையாற் றன்குடையை
மாரன் றிறைகொடுத்தால் மானவொளி - சேரழகார்
முத்துக் குடைநிழற்ற முன்னந்தன் பால்வளர்ந்த
அத்தன்பாற் கங்கை அடைந்தென்னப் - பத்திமணிச்
சாமரைகள் வீசநிறைத் தாலவட்டங் காற்றசைப்பப்
பூமலிந்த பொய்கைப் புனல்படிந்து - காமருவு
பூந்தாதுந் தேனும் பொருந்த வளைந்தசைந்து
தேந்தென்றல் முன்னடந்து சேவிப்பத் - தாந்தாமென் 160

றோசைத் தவில்முழங்க உற்றபல தூரியங்கள்
ஆசை தொறும்பரவி ஆர்ப்பெடுப்பத் - தேசுமலீ
கோயில் புடைசூழக் குன்றத்தின் மீதினுலாத்
தாயி லினியன்வரச் சந்நிதிமுன் - நேயமொடு

### விசாகப்பெருமான் தசாங்கச் சிறப்பு

சாமமறை யோதுஞ் சதாசிவவோம் சுப்ரமண்ய
நாமமுட னாயிரநன் னாமத்தான் - ஏமமலை
தன்னைச் சிலையாய்த் தரித்துப் புரமெரித்த
முன்னவன் வைத்த முழுக்கருணை - தன்னால்
திருவுருவாய் நின்ற சிவகிரியா னன்பு
பெருகுளத்திற் றன்கருணை பெட்பப் - பெருகிவரு 165

விண்முகத்தார் மண்ணோர் வியனாகர் மூழ்குபுனற்
சண்முகத்தா றோங்கு தவப்பயன்போல் - மண்ணின்மேல்
வேண்டு நலமீயும் மேன்மைவரத் தாறுடையான்
ஈண்டுபுகழ் நல்லா வினன்குடியான் - மண்டபுகழ்க்
கன்மாப் பலகை கவினுறமேல் வீற்றிருந்த
பன்மாப் புலவர்சொல் பாமாலை - தன்னோடு
பண்கடப் பின்றிப் பமர வினமுரலுந்
தண்கடப்ப மார்பணிந்த தாரினான் - விண்கடந்து
நாகருல கங்கடந்து நாடிநொடிப் போதில்வருந்
தோகைமயில் வேகத் துரகத்தான் - மாகம் 170

அளவுங் கயிலை யணிநடைபெற் றென்ன
வளர்மும் மதகரியான் வையம் - தளருமல
ஆரிருளி னீங்கி யருட்சோதி பெற்றுய்யச்
சீரினொடு கூவுகொடிச் சேவலான் - யாரெனினும்
தன்னடைந்தார்க் கின்பங்கள் தந்தருளுங் கந்தனிவன்
முன்னடைவிர் என்றறையு மும்முரசான் - மென்மலர்வாழ்
முந்தை மறையோன் முதலோராற் றோற்றமுதல்
ஐந்தொழிலுஞ் செய்விக்கு மாணையான் - எந்தை
இவனென் றொருசிலர்க ளேத்த வொருபால்·

### நீபத் தாரோன் கோபப்பிரசாதம்

புவனங் கடந்தோற் புடைத்துக் - கவலைமிகு 175
வன்சிறையி லிட்டதூஉ மாமுனிவன் வேள்விவரு

கொன்றகரை யூர்ந்தடக்கிக் கொண்டதூஉம் - பன்றியினைக்
கோட்டை முரித்துக் குழகனுக்கன் றீந்ததூஉம்
கேட்டை மிகுகவுஞ்சஞ் செற்றதூஉம் - கோட்டுமத
மாமுகனை மாட்டியதூஉம் வன்சிங்கற் கொன்றதூஉம்
தீமைமிகு சூர்மாச் சிதைத்ததூஉம் - ஆமிவைபோற்
சேவகங்க ளெல்லாம் தெரிந்தொருபா லேத்திவரத்
தேவர்துயர் தீரவரன் சேயாகி - வாவிதனில்
மாத ரறுவர் மகிழவிளை யாடியதூஉம்
தாதை மனங்குளிரத் தக்கமறை - யோதியதூஉங் 180

கும்ப முனிக்குக் குருவாக் கருளியதூஉம்
உம்பர் சிறையை ஒழித்ததூஉம் - இம்பர்
மலையிற் சிறைப்பட்ட மாப்புலவன் பாட்டிற்
குலையின் மெழுகா யுருகிக் - கொலைகருதும்
பூதத்தைக் கொன்று புலவனுயிர் காத்ததூஉம்
மாதத்தம் வெட்ட வளர்த்ததூஉம் - மேதக்க
கோழியினைப் பாடும்வாய் குஞ்சினைப்பா டாதென்று
பாழிமொழி சொன்னபெரும் பாவலன்வாய்க் - கேழில்வெண்
முட்டைக்கும் பாட்டு மொழிவித்தாட் கொண்டதூஉம்
சிட்டர் புகழருணைத் தேசிகனை - மட்டற்ற 185

பேரருளா லாண்டு பிணிநீக்கி யின்பளித்துத்
தாரணியோ ருய்யவெனத் தன்புகழை - ஈரநறுந்
தேன்மாரி யுண்ணத் தெவிட்டாத புத்தமுது
போன்மாறி லாதுபுகல் வித்ததூஉம் - வான்மாரி
போல வரையாது போற்றுவார் யாவர்க்குஞ்
சால வருள்வழங்குந் தன்மையெலாம் - ஏல
எடுத்திசைத்துள் ளன்போ டொருபாலா ரேத்த
வடுத்தவரை யாதரிப்பான் வந்தான் - கடுக்கவின்ற
கண்டன் றிருமகனாங் கந்தன்வந் தான்மூவர்
அண்டர் முதல்வனா வான்வந்தான் - கொண்டல்வணன் 190

சிந்தைக் கினிய திருமருகன் வந்தான்போர்
விந்தைக் கினிய விடலைவந்தான் - முந்துஞ்
சிவஞான பண்டிதனாம் செக்கர்வேள் வந்தான்
பவரோக நீக்குபவன் வந்தான் - தவறாமல்
இம்மையிலே முத்திநல மீந்தருள்வோன் வந்தானென்
சும்மைமிகு சின்னங்கள் சொல்லெடுப்ப - நல்லதவ

ஞானமுனி வோர்அமரர் நானிலத்தோ ரேனையரும்
வானமதி கண்டவலை வாரிதிபோல் - ஆனபே
ரானந்த வெள்ள மலைவீசி ஆர்ப்பெடுப்ப
ஆனந்த மாம்பழனி யாண்டவன் - ஆனந்த 195

அண்டர்கோன் திருவைத் தொண்டன் கண்டார்தல்

மாகத் திருவுலா வாகவரக் கண்டேன்என்
ஆகத்தி லூனெலும்பு மானந்த - போகவெள்ளம்
பாய்ந்துநிறைந் துள்ளிடம் பற்றா தெழுந்துபுறம்
பாய்ந்ததெனக் கண்ணருவி பாய்ந்திழியத் - தோய்ந்தபே
ரின்பமெனைத் தென்றுநான் எவ்வண்ணம் பேசுகேன்
இன்பமய வீடதனை யிம்மையிலே - அன்பரினம்
ஆனபய பத்திவழி பாடதனி லார்வரெனு
ஞானமொழி யின்வலிமை நானறிந்தேன் - ஊன
உடலை மறந்தே னுயிரை மறந்தேன்
நடலை மனத்தையு நானென் - றிடலையும் 200
எல்லா மறந்தேன்மற் றிந்த வநுபவம்
வல்லே மறைந்து வருந்தினேன் - பல்காலம்
இன்றளவுஞ் சென்றதுபின் னென்றுவரு மோவென்றென்
றன்றுமுத லின்றளவு மாவலுளேன் - ஒன்றும்

அன்பன் இன்பவநுபவம் விழைதல்

அறியாதே னுள்ளம் அனல்மெழுகாச் செய்தான்
சிறிதேனு நாயினேன் சிந்தை - வறிதாயும்
மீண்டு மொருகாலு மேவிலன்மற் றாதலினால்
ஈண்டென் மனத்துயர மென்சொல்கேன் - காண்டகைய
காத லிளங்காளை கன்னிக்கு மாலையிட்டு
மாதவளை நோக்காமை மாண்பாமோ - பேதையரோ 205
டாடு மிளம்பருவத் தன்பருளித் தன்னுணர்ந்து
நாடுகின்ற செவ்வியினி னல்காமை - பீடுடைமைக்
கேற்றதல எம்பரம னின்பக் கலவியுளம்
தற்றஇனி வந்தொருகாற் சேர்க்குமோ - ஆற்றவுளத்
தாசை யளித்த அருளாளன் ஆளாமல்
மோசஞ் செயவுளத்து முன்னுமோ - நேசமுடன்

### தொண்டன்தன் துயரைத் தோகைக் குரைத்தல்

அத்த னவனருளே அல்லும் பகலுநினைத்
தித்தரையோர் பித்த னெனவிருந்தேன் - சித்தம்
ஒருங்கப் பெறுகிலேன் உள்ளேயென் னாதன்
அருங்கமலச் சேவடிகண் டன்பின் - வரும்பெரிய 210

இன்பப் பெருக்கி னிடைதோயேன் மாயைசெயும்
துன்பப் பெருக்கிற் சுழல்கின்றேன் - முன்பு
மகமாயை நீக்குவதில் வல்லபிரான் றிங்கள்
முகமாறு மோதியுமேன் மோன - சுகமின்னும்
வந்தபா டில்லை வலிய வினைமிடுக்குச்
சிந்தியபா டில்லையுளந் தேறவிலை - அந்தகனை
வென்றகடு வஞ்ச விழிமாத ராசைவலை
நின்று குதிக்கவிலை யாடுகொடி- வீடுவய

---

லாசைப்பை சாச மகலவிலை - நீசர்தமைப் 215

பின்செல்கை வேண்டுபெரும் பீழை யொழியவிலை
என்னதியா னென்செருக்கு மேகவிலை - பின்னல்படு
பன்னூலிற் சிக்குப் படுமதியுந் தேறவிலை
அன்னோ இதுவோநான் ஆவதுதான் - வென்வேலோன்
சேவடியி னன்பரையுந் தீவினைகள் சேருமெனில்
யாவரினி யுய்குநர்க ளெம்பெருமான் - பாவியுளம்
வாரா திருந்திடவும் வந்து கருணைக்கண்
பாரா திருந்திடவும் பாதமலர் - சீராக
என்புன் றலைமே லிருத்தா திருந்திடவும்
வன்பின் பெரிய வழக்குண்டோ - முன்பரனார் 220

ஓங்கு குளமுளரிக் கண்ணுதித்தான் நீள்கவலை
யோங்கு குளமுளரிக் கண்ணுதியான் - வீங்குபுனற்
கங்கைக்குங் காதன்மை கண்ணினான் நாயேன
கங்கைக்குங் காதன்மை கண்ணிலான் - அங்கமலப்
பொய்கை பொறுக்கப் பொருந்தியிருந் தானடியேன்
பொய்கை பொறுக்கப் பொருந்திடான் - மைகைசூழ்
வன்னகமேன் மைக்கோயில் மன்னினா னென்னகமாம்
வன்னகமேன் கோயிலா மன்னிலனோ - அன்னை
வளைக்குளாய்க் கந்த வடிவானான் நெஞ்ச
வளைகுளாய்க் கந்தாகி வாரான் - துளக்கமறச் 225

சொப்பனத்தி லிந்திரன்றன் சேய்க்குறுதி சொல்லினான்
சொப்பனத்தி லும்எனக்கேன் சொல்லிலான் - ஒப்பறுதன்
தந்தைக் குவகை தழைக்கவொரு சொற்றந்தான்
சிந்தைக் குவகையென்பாற் செப்பிலான் - முந்தை
யலையாழி வற்ற வயில்விடுத்தா னுட்க
வலையாழி வற்றவுளம் வையான் - மலையதனை
நெஞ்சம் பிளந்துசிறை நீக்கினா னென்வினையின்
வஞ்சம் பிளந்துசிறை மாற்றிலான் - தஞ்சம்
அடைந்தேனுக் கென்னே அருளா திருந்தான்
உடைந்தே னுளம்கவலை யுற்றேன் - மிடைந்தெதிர்ந்த 230

**ஐயனருள்வனென் றடியான் தேறல்**

வானோரை வைவேலால் மாட்டியுயி ரீந்தபிரான்
ஏனோரை யாளா திருப்பானோ - வானோர்க்கு
விச்சுவரூ பங்காட்டி மெய்ம்மை யுணர்த்துபரன்
நச்சுமெமக் கின்காட்சி நல்கானோ - அச்சுதற்குச்
செம்மேனி தந்தளித்த செவ்வேள்நம் மாசழித்திட்
டிம்மையிலே செம்மைகனிந் தீயானோ - உம்மையில்
தீயரக்கன் பாசத்திற் சிக்கினரை மீட்டான்நம்
தீயவினைச் சிக்கைச் சிதையானோ - நோயினொடும்
தென்னவனார் கூனிமிர்ந்த சீராள னம்பிறப்பின்
இன்னலுறு கூனிமிர்த்த வேலானோ முன்னொருத்தி 235

தன்றுயரை நீக்கிக்கை தந்துகரை யேற்றினவன்
என்றுயரை நீக்கிக்கை யீயானோ - அன்றோர்
வணிகன் உளத்துயர மாற்றினான் தன்னைப்
பணிவேன் உளத்துயர்பாற் றானோ - அணியிழையாய்
வெந்தவெலும் பைக்கண்ட வெங்குருவேந் தன்னெமது
வெந்தமனந் தேற்ற விரகிலனோ - சிந்துபல
வென்பிழைபொ றுத்தருளும் எம்பெருமா னின்புதல்வன்
என்பிழைபொ றுத்தருள வேனியையான் - தன்றொழும்பர்
செய்தபிழை பாராத தீரனென வுந்தமிழால்
வைதவரை வாழ்த்துபெரும் வள்ளலென்றும் - பொய்யாமல்

ஏழைக் கிரங்கும் பெருமா னிவனென்றும்
மோனழமை நீக்கு முதலென்றும் - ஏழைப்
புலவர்க் குசாத்துணையாம் புண்ணியவா னென்றும்
கலவினரைக் காத்தருள்வா னென்றும் - குலவி

யொருகான் முருகாவென் றோதுவார் சென்னி
யிருகாலும் வைத்தருள்வான் என்றும் - பெருகு
கலியில் வரதனருட் கந்தனினி யெம்மை
நலியில் விடானெனவும் நம்பி - மெலிவில்
பெரியாரை யின்றுணையாப் பேணியுளத் துன்பம்
தெரிவாகச் சொல்லிநமைத் தேற்ற - உரியான்பால் 245
தூது விடுக்கத் துணிந்தேன் களிமயிலே

### கலபமயிலின் பலபெயர்ப் பெருமை

மாதர்நடை கற்ற மயூரமே - சீதவளம்
மிக்கமுகில் கண்டுவகை மேவித் தழைபரப்பிப்
பக்கமவிர் செக்கர்பொன் பச்சைமுதல் - மிக்கநிறம்
ஓங்கி யொளிவீச வொண்வா னகந்தழுவி
ஓங்குமரன் மேலிருக்க வுற்றழகு - தாங்கும்
நவிரமே நெய்யுந் நறும்பூவு மின்றி
தவிரா தழகுதழை கூந்த - லவிருஞ்
சிகாவளமே யாண்மை சிதையாச் சிகண்டீ
சுகாரம்ப மாமினிய தோகாய் - ஓகரமே 250

சேர்ந்தாரைக் கொல்லாது தீப்புகையு மேவாது
சார்ந்தாரைக் காத்தளிக்கும் தண்சிகியே - வார்ந்தவிசை
யின்னரம்புக் கட்டி லியையாமற் பேரன்பர்
கின்னமுள தீர்த்தருளுங் கேதாரம் - வென்வேலின்
மின்னலெழச் சேவல் மிடற்றி னொலிமுழங்க
மன்னிதய வானத்து வந்துநிறைந் - தின்னருளைக்
கந்தனெனு நன்மேகங் காலத்திற் பெய்வதனால்
பந்தமிகு பல்லுயிராம் பைங்கூழ்கள் - சந்ததமும்
கேடின்றி யோங்கச்செய் கேதார மேயெளியேன்
நாடும் பெருந்துணையே நாயகமே - வாடும்புன் 255

### ஏனைய தூதுக்கிவையிவை குறையெனல்

நெஞ்சத்தைத் தூது நிகழ்த்தவெனில் அன்னதுநீள்
வஞ்சத்திற் றேர்ந்ததுவேல் மன்னனெதிர் - கொஞ்சத்தில்
சேராது சேர்ந்தாலும் செம்மை பெறநிலைமை
யோராது மேலோர்ந் துரையாது - சீராகக்
கந்தனுருக் காணிற் கரைந்தழிந்து தன்னிலைமை
சிந்திமறந் தென்குறையைச் செப்பாது - முந்திப்

பலகாலு மேகுகெனப் பன்னி முயன்றும்
விலகா முயற்சியினை விட்ட - தலகைநிகர்
வன்பொறிகள் செய்யு மயக்கா லுரனழிந்து
புன்செயலின் வீண்பொழுது போக்கிற்றால் - வன்பனைவாழ்

அன்றிலினை யுய்க்கி னதுதன் பெயர்மலையை
யன்றெறிந்த துண்ணினைந்தே யஞ்சாதோ - அன்றியுநீள்
புல்லினத்தைச் சேர்ந்து புணர்ச்சிக்கே யுள்ளழியும்
ஒல்லுவதோ நாயகன்முன் னுய்ப்பதற்கே - மெல்லிறகின்
அன்னத்தை யேவி னதுதன்னை யாள்பிரமன்
முன்னத்த னாற்சிறையின் முன்னியதை - முன்னித்
திருமுன்னர்ச் செல்லாது செம்மையிலா வெள்ளை
பெருமான்முன் சென்றுணர்ந்து பேசா - தருமைமிகு
கிள்ளைதனை யுய்த்தாற் கிளர்பூசை யென்னிலுயிர்
விள்ளுமுயர் கோயிலினுள் மேவுமோ - தெள்ளுதமிழ் 265

வண்ணப்பா வல்ல மலர்க்கையமர் பைங்கிளிமுன்
நண்ணத்தா னுள்ளத்தே நாணாதோ - எண்ணரிய
தத்தை வழிதன்னிற் சாருந் திரும்பலரி
தத்தை யெணித்தத்தை யஃதென்பர் - நத்துமொரு
நாகணவாய் தன்னைவிடின் நண்ணுமோ சென்றுரைத்துப்
பாகணவாய்ச் சொல்லியர்கைப் பட்டிடுமே - யேகுகெனத்
தூதுண்டு வாழ்புறவைச் சொல்லுவதோ காரியத்திற்
றீதுண்டு பண்ணும்பின் தேரிடிற்க - போதியது
மாங்குயிலைப் போக்கவெனில் மாதா வுடன்செவிலி
தாங்கரிய கூக்குரல்யார் தாமகிழ்வர் - ஓங்குமறை 270

முன்னப்பட் டாண்கண் முனியப்பட் டான்உடலம்
பின்னப்பட் டான்முன் பிடிபட்டே - பின்னலொடு
சின்னப்பட் டெம்மான் சினத்திற் படுமாவிற்
பின்னப் படும்பிகம்போய்ப் பேசுவதென் - இன்னிசைய
வண்டினையு மானினையும் வள்ளல்பாற் செல்கவெனில்
அண்டுபவோ வேங்கையுரு வானானை - மண்டுசுவைச்
செந்தமிழைச் செம்பொன்னைச் செப்பிவிடு
வோமென்னில்
தந்தமுரை யும்பிறரே சாற்றுபவே - அந்தில்பல
பந்தப் படலும் படைத்தமையா லெம்முரையை
எந்த வகையி னெடுத்தியம்பும் - கந்தமிக 275

உண்டெனினும் வேற்றுமையு மல்வழியு மோர்வரிய
வண்டிறல்சேர் பஃறிரியும் வாய்ந்தனவே - மண்டுநறுந்
தென்ற லுனதெச்சிற் செங்கணரா வாயெச்சில்
நன்றலவே நாயகன்பா னாமுய்த்தல் - சென்றுவர
மேகத்தைத் தூண்டவெனில் வெய்ய விடிக்குரலும்
ஆகக் கறுப்பும்வா யங்காந்தால் - வேகத்தீக்
காலுதலு முண்டினிய காலமறி யாதழகு
சாலுமொரு பாடினிதான் சார்கவெனில் - மாலாகும்
கள்ளும் கடியூனும் காதலித்துண் பேதையரை
வள்ள லெதிர்விடுத்தல் மாண்பாமோ - எள்ளப் 280

படுமிவைகள் தூதிற்குப் பண்புடைய வல்ல
நடுவறிந்து தூது நவிலத் - திடமறிவு

**மயிலின் தூதே வாய்ப்புடைத்தென்றல்**

பேரழகு கண்ணோட்டம் பேணுதிற லின்னவெலாம்
கூருமயி லேயுன்பாற் கூடியுள - வீரன்மேல்
ஏறி யமர்ந்தகுறிப் பேவுஞ்சொல் லிங்கிதங்கள்
வீறு திருவடிமேல் மேவுநிலை - தேறியருள்
எம்மான் றிருவுளத்துக் கேற்றநடை பெற்றனைமற்
றம்மானு நின்குறிப்பை யாதரிப்பான் - தம்மான்
தயவினிலுந் தன்னடியார் தந்தயவே மிக்க
நயமுடைய தென்று நவில்வர் - வயமிகுந்த 285

**அண்டர்கோன் மயிலின் திண்டிறன் மாண்பு**

மாமயிலே நின்பெருமை நீமதிக்க மாட்டாய்கேள்
தாமறியார் சான்றோர்கள் தம்பெருமை பூமிதனில்
வாழ்வோரில் வானகத்தில் வாழ்வோரிற் பாதலத்தில்
வாழ்வோரி லுன்புகழை வாழ்த்தாரார் - கேழ்கிளரும்
நீலக் கலாபியே நின்றோகை மேல்விரிந்தால்
ஞால முழுதுநிழல் நல்குமே - ஆலித்துன்
தோகை யுதறினதிற் றோன்றுஞ் சுழல்காற்றின்
வேகம் பொறாதிமயம் வேர்பறியும் - மாகமமர்
அண்டங்க ளத்தனையு மாராயி னோர்சிறைக்குள்
அண்டங்கள் போலடக்கு மாற்றலுளை - மண்டலைகொள்

பாந்தளினைப் பற்றிப் பதைக்க உதறியதால்
காந்து மணியின் கணஞ்சிதறிப் - போந்த

நெடுவான நின்றிறங்கின் நீயிறுங்கென் றெண்ணிக்
கொடுவாயிற் கொத்துதலுட் கொண்டே - யுடுவாகி
இன்னங்கீழ் வாரா திருக்கின் றனவீசன்
மின்னங்கேழ் வில்லான மேருமலை - தன்னிலவன்
பூட்டுநெடு நாண்டலையைப் பொள்ளெனநீ கொத்தியதால்
பூட்டுவிட நீண்டு பொலியுமால் - ஈட்டுவலி
மிக்கசிறை நீயுதற மேவுவளிக் காற்றாது
நெக்குரகன் சென்னி நெளிப்பதனைத் - திக்கதிரும் 295

பூகம்ப மென்று புகல்வார் பரிதிமதி
சோகங் கொளத்தொடர்ந்த சூளரவம் - மாகனக
மாயூர மென்றுன்பேர் வாழ்த்தக்கேட் டஞ்சிநீர்
வாயூற விட்டு வளைபுகுமால் - பாயான
சேடனை நீகொத்திச் சென்றதனால் மாலந்தோ
நாடறிய வாலமளி நண்ணினான் - ஆடல்விடங்
கண்டத்துள் வைத்தருளுங் கண்ணுதலார் செஞ்சடைமேற்
கொண்டத்தா லஞ்சாத கோளரவம் - அண்டத்தே
ஏகுங் கருடற்கண் டேண்டா சுகமாவென்
றாகுங் கருவத் தழைக்குமே - வேகமிகு 300

தோகையே நீநெடிய தூரம்வரக் கண்டாலும்
போகுமே வெண்டலையின் பொந்தினுளே - மாகருடன்
நின்னாற் புடைப்புண்டு நெக்கழுத காரணத்தால்
அன்னான் கலுழனென லாயினான் - மன்னுமலர்க்
கஞ்சத்தான் ஊர்தியுனைக் கண்டுமிக அஞ்சியதால்
அஞ்சப்பேர் பெற்றதனை யாரறியார் - விஞ்சப்பேர்
பெற்றநின தாற்றலெவர் பேச்சுக் கடங்குமது
நிற்கநின தேர்க்கு நிகருண்டோ - பொற்கலபம்

**மணிநிற மயிலின் அணிநடம் புகழ்தல்**

வட்ட வடிவாக வளைந்துநீ யாடுங்கால்
கட்டழகுக் குள்ளங் கரையாரார் - இட்டமுடன் 305

நீல முகிலெழினி நேர்வீழ்த்தி நீநடிக்கும்
கோல முளநெகிழ்க்கக் கோவிமையோர் - சாலமலர்க்
கண்மாரி பெய்வதனைக் காசினியோர் தேற்றாது
விண்மாரி யென்றே விளம்புவரால் - கண்ணுதலார்
தாமே நினக்கொப்புத் தாண்டவத்தில் ஈண்டுமெழில்
வாமே கலையார்கள் வாஞ்சித்துத் - தாமேக்கற்

றெத்தனைநாள் கற்றாலு மின்னங்கை வாராமல்
இத்தரையில் மெல்லியரென் றேச்சுற்றார் - மெத்துசினக்
காளிநட மாடியொரு காலெடுக்க மாட்டாமல்
வாளிமுகந் தாழ்த்தவையில் வைகினாள் - நீளிமயப் 310

பூம்பாவை நாடறியப் பொன்மன்ற மேறிடினும்
கூம்பாதெம் மானடமே கும்பிட்டுத் - தாம்பார்வை
வாங்காமல் நோக்கியினும் வைகினாந் தானடிக்கப்
பாங்கான வாற்றலினும் பற்றாமல் - பூங்கமலை
எய்யாமல் மாறிப்பல் இல்லந்தோ றாடியுமென்
செய்யா ளெனும்பெயரே சேர்ந்தாளால் ஒய்யாரத்
துன்னைப்போ லாட லுஞற்ற முடியாமல்
அன்னத்தைப் போல்வெளுத்தா ளக்கலைமான் - நின்னேர்
நடையே பயின்றும் நடைகைகூ டாமல்
இடையே யரம்பை யிளைத்தாள் - தொடைவேலோன் 315

மேலாக நீவிளங்கும் மேம்பாட்டுக் கொப்பாகு
மாலாக நாட்காலை மாலைதொறும் - மாலாழி
செங்கதிரை யோங்குந் திரைமேற் சுமந்தியலா
தங்கம்வெதுப் புற்றே யரற்றுமே - பங்கமிலா
மாதையன் மானாருன் சாயல்தாம் வாஞ்சித்தும்
பேதையரென் றெள்ளத்தான் பெற்றாரே - மேதைமிகு

**கண்ணெழின் மயிலின் புண்ணியப் பெருமை**

கேகயமே யுன்போலக் கேடில்லா மாதவமெவ்
யோகருக்கு மெய்துவதோ வொண்சுவைய - பாகுமொழி
மாலிமய வெற்பன் மடமயிலு முன்னுருவாய்
ஏலியம மாதிதவ மீங்கியற்றி - மேலினிய 320

சங்கரனார் பொங்கினருள் சார்ந்தனள்பின் னும்மவர்தம்
பங்ககலா மேலாம் பதம்பெற்றாள் - பொங்குமலர்ச்
சாகை பரப்பிநெடுந் தண்முகில்சூழ்ந் துன்வடிவ
மாகையொடுன் பேர்படைத்த வாதரவால் - மாகமுயர்
குன்றமெலாங் கோயிலாக் கொண்டான் குமரனுனை
யன்றி யவற்கினியார் யார்மயிலே - குன்றருவி
யார்ப்ப நடந்தனைய யானை தகர்முதலாப்
போர்ப்பரிகள் பெற்றிருந்தும் புண்ணியன் - காப்பதற்கு
மெய்யன்பர் முன்னர்வரும் வேளைமெலா நின்மேலாக்
கையின்வடி வேலோடும் காட்சிதரும் - செய்ய 325

மணிநாவில் வேலு மயிலு மெனுஞ்சொற்
கிணையான மந்திரந்தா னேதோ - பணிவோடு
மாமுருகன் பேரை மறந்தாலு முன்பெயரைச்
சேமநினை வார்மறவார் செஞ்சொல்லின் - பாமகிழ்வா
லாடும் பரிவே லணிசேவ லென்றுருகிப்
பாடும் பணியிற் பணிக்கவென - நாடும்
அருணகிரி பாடும் அநுபூதி முன்னர்
வருமகிமை யுன்றனக்கே வாய்த்த - துருவாய்
அருவாய் உளதா யிலதான கந்தன்
குருவாகி வந்து குறைகள் - ஒருவிப்பேர் 330

அன்பருடான் நல்கிமூ வாசைத் தொடரறுத்துப்
பின்பநு பூதி பெறுவித்த - துன்பெயரைக்
காதலுடன் பாடியதோர் காரணமே கேகயமே
ஓதலுள னுன்பெயர்நா னுள்ளுருகி - யாதலினால்
என்குறைக்கு நீயிரங்கி எம்மா னிடந்தூது
சென்றுவரல் வேண்டுமுனைச் சேர்ந்தோரை - என்றும்

**பணிபவர்க் கருள லணிமயிலியல்பு**

பரிந்தளித்தல் நின்னுடைய பண்பன்றோ வேந்தன்
தெரிந்தசபை முன்னருணைச் செம்மல் - வருந்தலறத்
தேவர் பெருமாளைச் செவ்வியுறக் கொண்டுவந்து
தாவில் புகழ்படைத்த தாளாள - ஆவலினால் 335

கொண்டுவா விங்கு குமாரகம் பீரனையென்
றண்டமிழ்கேட் டவ்வண்ணம் சாதித்துக் - கண்டெரியா
முத்து வயிரவன்றன் முன்காட்சி தந்தருளும்
சத்தி படைத்தவனீ தானன்றோ - அத்தனுன்
மாற்றந் தனைத்தள்ள மாட்டானிஃ தியாவர்க்கும்
தேற்ற மினிய சிகாவளமே - ஆற்றவும்
தானே தயவுடைய சண்முகன்பாற் காலத்துன்
போனேயர் என்குறையைப் போய்ப்புகன்றால் - நானேயம்
வைத்தளியே னென்று மறுப்பானோ தொண்டர்தமைத்
தத்தளிக்க விட்டுச் சகிப்பானோ - மெத்துசின 340

மாயைதன் சேய்க்குந்தன் மாட்சியுருக் காட்டியவன்
நேயருக்குத் தன்காட்சி நேரானோ - மாயைக்

கொடுமை களையவல கொற்றவனென் பாசக்
கொடுமை களையவருள் கூர்வான் - நெடுமொழிசொற்
றேசும் புலவர்பா லின்னலுறுத் தன்னவர்தம்
மாசில்கவி பெற்றருளும் வண்மையான் - கூசுமுளத்
தன்போ டியான்புனைய லானதமிழ் மாலையையும்
இன்போடு தன்றோளி லேலானோ - முன்பு
குழறிக் குழறிக் குமரனைப்பா டென்னும்
பழமொழியுங் காயாகற் பாற்றோ - குழகனித் 345

தள்ளா தெளியனையுந் தாங்குவான் நீகுறிப்பின்
கொள்ளே ளிதிலையம் கோன்முன்னர்த் - தெள்ளும்
உருவகதா ளத்தினீ யாடி லுருகி
உருவகத்தி லுன்ன லுணர்வான் - பெருமான்முன்
ஆதியெனுந் தாளத்தி லாடினா லின்றுணைநீ
யாதியென வேண்டு மதையறிவான் - தீதிலாச்
சம்பையினி லாடிற் சனனப்பை மேவுமொரு
வம்பைத் தவிர்க்கும் வழியருள்வான் - நம்பும்
திரிபுடையி லாடிற் றிரிபுடைய மாயைத்
திரிபுடையச் சீரருள்கள் செய்வான் - திரிவின்றி 350

மட்டிமத்தி லாடினால் மட்டிமையை நீக்கியருட்
சிட்டர் குழுநடுவே சேர்ந்திடுவான் - நட்டம்
துருவத்தி லாடினால் றொல்லைவினை தீர்த்துப்
பெருநிலையில் வைத்தெம்மைப் பேணிக் - குருவாகி
வந்தருளி வாழ்விப்பன் மாமயிலே நீயுவந்து
சந்தமொடு முன்நடித்துச் சண்முகனை - முந்தி
மகிழ்வித்து நல்லமயம் வாய்த்தென் குறையைப்
புகழ்வித் தகத்திற் புகன்றால் - துகிரனைய

### நன்றிமறவேனெனத் தொண்டன் நவிலல்

செஞ்சிறிய கால்விரிந்த தோகை மயிலேறே
நெஞ்சிதனி லிவ்வுதவி நேர்நினைவேன் - தஞ்சாய் 355

உயிருதவி செய்தாரை உள்ளளவும் போற்றல்
மயர்வறுநன் மேலோர் வழக்காம் - இயலிசைதேர்
அண்ணா மலைப்புலவ னாராமை யாற்புகன்ற
பண்ணார் மயில்விருத்தம் பாடுவேன் - எண்ணார

ஆதவனு மம்புலியு மாதிவரு சீர்வகுப்பும்
ஆதரவிற் பாடிமகிழ்ந் தாடிடுவேன் - கோதறுசீர்
வண்ணச் சரபன் மயிலலங்கா ரஞ்சொல்லி
யுண்ணெக் குருகி யுனைப்புகழ்வேன் - உண்மைப்
பரிபூர ணானந்த போதம் பகர்ந்த
பரிபூர ணானந்த பவ்வம் - அரிதாம் 360

தகரா லயத்தின்சீர் சாற்றுமுழு ஞானி
குகனார்க்கே யுள்ளங் கொடுத்தோன் - அகமார்
திமிரவிருள் நீக்கியருள் சித்தாந்த பானு
குமரகுரு தாசனுனைக் கூறும் - தமிழ்நலஞ்சால்
கன்மனமு நீராக்கும் கற்கண் டினைப்பழிக்கும்
பொன்மயிலின் கண்ணிசொலிப் போற்றுவேன் - கன்மவினைக்
கட்டறுக்கு ஞானக் கதிர்வேற் பெருமாற்குத்
திட்டமுற என்கருத்தைச் செப்புவாய் - தட்டறவே
பல்லுயிர்க்கு நல்லுயிராய்ப் பாங்குபயின் றுள்ளமர்ந்த
தொல்பரமற் கியாம்விரித்துச் சொல்வதெவன் -
மெல்லவெம 365
துள்ளத் திருந்து மொழித்தபெருங் கள்வனுக்கு
வெள்ளை மதியேன் விளம்புவதென் - வள்ளலே

**தொண்டன் தன் குறைசொல்லி விடுத்தல்**

வாழையடி வாழை எனவாழ் வழியடிமை
ஏழைத் தொழும்ப னிவனொருவன் - மோழைமையாற்
குற்றமொரு கோடி குயிற்றிடினு நின்னடிக்குக்
குற்றங் குயிற்றக் குறித்தறியான் - கொற்றவனே
உன்னை யொழிய வொருவரையு நம்புகிலான்
பின்னை யொருவரையும் பின்செல்லான் - உன்னடியார்
பொன்னடிகட் கென்றும் பிழைசெய்யான் அன்னவர்கள்
சொன்ன பணிபுரியச் சோர்வடையான் - முன்னைப் 370

பரம்பொருளும் பல்லுயிரும் பண்ணும் வினையும்
நிரந்த கதிவகையு நேரார் - அரந்தைதரு
கூட்டத்துட் கால்வையான் கோதில்சரி யாதியிகழ்
ஏட்டைக் குறும்பர்குழு வெய்திடான் - வீட்டினைப்
பொன்னை மணியினைப் பொற்றொடியார் பொய்ம்முயக்கை
அன்னத்தை யாடை யணிகலனை - என்னவெனத்

தேடித் திரிந்து திரட்டித் தொகுத்துவைத்
தீடழியுந் தாம்பிரம மென்றுரைக்கும் - கேடர்மொழி
கொள்ளான் இரண்டொன்று கூறிக்கைக் குத்திடுவார்
நள்ளான் பொய்ஞ் ஞான நயந்திடான் - கள்ளமாய்த் 375

தன்னை மறைத்த தமமான வாணவமும்
கன்மத் தளையும் கழன்றுபெரும் - வன்மாயைப்
பேயைத் துரத்திப்பின் பேசா வநுபூதி
ஏயப் பெரிதுநசை யெய்தினான் - நீயான
ஞான விநோத நலமே விரும்பினான்
ஊனந் தவிர்த்தாளல் உன்கடன்காண் - தீனர்பால்
ஓங்குங் கருணை யுடையானே அவ்வடியான்
தீங்கெவையு மோர்பொருட்டாச் சிந்தைகொளேல் - ஈங்குவா
என்னடிமை நீயென் றிசைத்தவனை யாட்கொண்டுன்
பொன்னடிகள் சென்னிக்குப் பூவாக்கி - முன்னை 380

வினைமாசு நீக்கியடி மெய்ஞ்ஞான மாக்கி
யெனதியான் எனுஞ்செருக் கின்றி - நினையே
யுணர்ந்துணர்ந் தெல்லா மொருங்கிமெய் யின்பம்
புணர்ந்து பிரிவு புணரா - திணங்குமலர்த்
தாடலைபோ லோவாத தத்துவசுத் தாத்துவித
நீடனுப வத்தி னிலைநிறுத்தி - யாடகத்தின்
மாடுமனை மக்கடமின் வாழ்வின் மயங்காமற்
கேடுவிளை நல்குரவு கிட்டாமல் - ஏடவிழுங்
கூந்தலினார் காமக் குழியில்வீழ்ந் தாழாமல்
தீந்தமிழ்ப்பா விற்றுத் திரியாமல் - சேந்தநின 385

தின்புகழ் நூலன்றி யேனைப்புன் னூலோதிப்
புன்பொழுது போக்காமற் பூசனையு - மன்புமிக
நல்லசெபஞ் சேவடியி னாட்டமுத லாயநலம்
வல்லைபெற வந்து வுரமருளி - யெல்லையில்பே
ரானந்த வீடு மவனுக் கருள்புரிக
ஆனந்த ரூபமுரு கையனே - ஊனமிலாச்
சித்தேசித் தேயாஞ் சதாசிவமே யென்றுரைத்துச்
சித்தேசன் நல்லருளைச் சேர்ப்பிக்கச் - சித்திரநீள்
தோகைக் குடைவிரித்துத் தோமில் நிழல்பரப்பிப்
பாகுமொழி யன்னையர்கள் பக்கமுற - வாகைபுனை 390

ஞானவடி வேல்வலக்கை நண்ணமுரு கேசனைப்
பானல்வாய் ஞானம் பரிமளிக்கும் - மோன
பரமகுரு நாதனைப் பண்ணவர்தம் கோவை
வரதனைமெய் யன்பர்தமை வாழ்த்தும் - விரதனை
மாணிக்க வண்ணனை வண்பவளத் தின்றிரளை
ஆணிக் கனகத்தை யாரொளியைப் - பேணுநரைப்
பேணிப் பிறப்பிறப்புப் பேராழி நீக்கியருள்
தோணியை முத்தியினைத் துய்க்கவிடும் ஏணியை
அன்பர்க் கிருநிதியை யாரமுதை யோர்முக்கண்
இன்பக் கரும்பி லெழுஞ்சாற்றைத் - துன்பமற 395
வேததரு மீது விளையு நறுந்தேனைத்
தீதகலு மெய்ஞ்ஞானத் தீங்கனியைச் - சோதி
யயில்வே லருட்பழனி யாண்டவனை யென்பால்
மயிலே விரைந்தழைத்து வா.

வெண்பா

வேண்டவனைத் துங்கொடுக்கும் வேலவனைச் சீலருளத்
தாண்டவனைத் துங்கமிகு தண்பழனி - யாண்டவனைச்
சின்மயனை யின்றுணையைச் செவ்வேளை யிவ்வேளை
பொன்மயிலே கொண்டன்பாற் போது.

தோகைமயி லேறியிரு தோகையர்கள் பாலமர
வாகைபுனை வேலை வலத்தேந்தி - யோகையொடும்
வந்தடிமை சிந்தைகுடி வாழ்பழனி யாண்டவர்
பந்தவினை தீரருட்கண் பார்.

பழனியாண்டவர் மயில்விடுதூது முற்றிற்று

உ

# முருகக் கடவுள் மீது கிளித் தூது

## சுப்பிரமணிய பாரதியார்

**பல்லவி**

சொல்ல வல்லாயோ?-கிளியே
சொல்லநீ வல்லாயோ?

**அனுபல்லவி**

வல்லவேல் முருகன்-தனையிங்கு
வந்து கலந்து மகிழ்ந்து குலாவென்று (சொல்ல)

**சரணங்கள்**

தில்லை யம்பலத்தே-நடனம்
செய்யும் அமரர்பிரான்-அவன்
செல்வத் திருமகனை-இங்கு வந்து
சேர்ந்து கலந்து மகிழ்ந்திடு வாயென்று (சொல்ல) 1

அல்லிக் குளத்தருகே-ஒரு நாள்
அந்திப் பொழுதினிலே-அங்கொர்
முல்லைச் செடியதன்பாற்-செய்த வினை
முற்று மறந்திடக் கற்றதென் னேயென்று (சொல்ல) 2

பாலை வனத்திடையே-தனைக்கைப்
பற்றி நடக்கையிலே-தன் கை
வேலின் மிசையாணை-வைத்துச் சொன்ன
விந்தை மொழிகளைச் சிந்தைசெய்வா யென்று(சொல்ல) 3

**முருகக் கடவுள் மீது கிளித் தூது முற்றிற்று**

உ

# நல்லூர் நாற்பது

## வி. கந்தவனம்

### விநாயகர் காப்பு

ஐயா திருஞான மெய்யா அணைத்தருளுங்
கையா கணபதியே காத்தருள்வாய் — பொய்தீர்வேல்
நல்லூர் முருகன்றாள் நாற்பதுபா நான்படைக்க
எல்லா நலங்களுமிங் கீந்து.

### கலைமகள் வணக்கம்

நல்லூரருட் கந்தன்கழல் நானும்நலப் பாட்டால்
எல்லோர்முனும் பாடத்துணிந் தேன்நின்னருள் தேனிங்
கில்லையெனில் இந்நாற்பதை ஏலான்எழில் வேலன்
நல்லாயிருந் தென்னாவினில் நல்காயருள் வாணீ.

### 1

### போற்றிப்பத்து

அனபாகி அருளாகி அறிவாய் நல்ல
அமிழ்தாகி அழகாகி அனைத்து மாகி
இன்பாகி இருந்துள்ள இருளைப் போக்கி
எமையாளும் உமையாளன் இறைவன் இந்தத்
துன்பாகுங் குமிழ்வாழ்வில் துவள்வார் தொல்லை
துடைத்தாள அருள்செய்யக் கிடைத்த செல்வா
உன்பாதம் உன்பார்வை உன்வேற் கைநல்
லூருண்டே உறுநோய்கள் உண்டோ போற்றி! 1

உளனாளும் உயிராயெம் உள்ளம் உள்ளான்
உலகண்ட வெளியுள்ள உலகக் கோமான்
வளனாகும் வாழ்வுக்கு வழியாய் மாயை
மலம்போக்கும் மணியான மருந்தாய் மாதை
அளவான அரைமார்பில் அணைத்தா னுக்கோர்
அழகாறு முகமான ஆற்றல் ஊற்றாய்
வளமார்நல் லூர்போற்றி வாழும் எங்கள்
மனம்பற்றி மகிழ்வூட்டும் மயிலா போற்றி! 2

வல்லாரின் வல்லானாய் வடிவே லாயுள்
வளமாக்கி யாய்நல்ல வற்றா வூற்றாய்
எல்லாரின் உள்ளத்தும் என்றும் நின்றே
இயல்பாக இனிக்கின்ற இன்ப மாகி
இல்லாரின் உள்ளாரின் இன்னல் யாவும்
இல்லாமற் செய்கின்ற எழிலார் தூய
நல்லூரிற் பெருமானாய் நாளும் நம்மை
நன்றாகக் காக்கின்ற நாதா போற்றி! 3

மெய்யான பொருள்மேனிச் சிவனார் தாமும்
மேலாக வளர்த்தஎழில் மென்பொன் மானும்
மெய்ஞ்ஞானக் கலையாவும் மிக்கான் ஐந்து
கையானும் தம்பியரும் களிப்பாற் பூக்க
உய்வான கருமங்கள் உண்மை ஓங்க
உலகாளும் உனதூறும் உள்ளம் கொள்ளத்
தெய்வானை வள்ளிமயில் செய்வேல் நல்லூர்
செய்துள்ள தவமென்ன செந்தாள் போற்றி! 4

கொடிதீர்த்த இடைக்காலங் கோடி கோடி
கொண்டுன்னை உள்ளத்திற் கொடுமை மாண்டு
விடிவாகும் வாழ்வென்று விம்மிப் பொங்கி
விழியாறு பாய்ந்தோட விட்டே யாவும்
அடிதீர்ந்த மரமாகி அண்டிக் கண்டே
அணுவாக வணுவாக வனுப விக்கும்
அடியார்கட் கருள்பாலித் தல்லல் தீர்க்கும்
அழகான நல்லூரின் அறிவே போற்றி! 5

வேறேது பேறெது வேலே போதும்
வேண்டாத தொல்லைகளும் வீழ்ந்தே தீரும்

மாறாத இளமைஎழில் மணமுஞ் செய்ய
மலரடியும் மயக்கிவிடும் முகங்க ளாறுஞ்
சீறாத பாம்புமயில் சீர்வேல் சேவல்
திருவள்ளி தெய்வானை தருநற் காட்சி
ஆறாத அடியவருக் கமிழ்தே யாக
அருள்வாயே நல்லூரின் அறிவே போற்றி! 6

முனைப்பொழிய முருகுதரும் முருகன் நீயே
மூண்டதுயர் முடித்துவரும் முனிவன் நீயே
நினைப்பவர்கள் நின்னடியை நீங்கா இன்ப
நீர்வழிய நெக்குருகி நீந்தா நிற்பார்
உனைப்புரியின் உண்மைநல ஒளிசேர் வாழ்க்கை
உண்டுபல கண்டுவழி உலகம் உய்யும்
தினைப்புலநல் மயில்பின்னர் சென்ற நல்லூர்த்
திருமேனி நம்பின்னர் வருமே போற்றி! 7

ஆண்டுபல ஆரியர்கள் ஆண்ட நல்லூர்
ஆடிஒரு வேட்டைதனிற் பெருமாள் ஆண்டே
மீண்டுமுயிர் ஊட்டிஎழில் மிகுநல் லூராய்ப்
பூண்டுபுகழ் ஆண்டரசு புரிந்தே நின்னை
வேண்டிஅரி தானவொரு வேலை செய்தான்
வெற்றிஎழில் வேலருளின் பெற்றி போற்ற
நீண்டபுகழ்க் கோயிலவன் நிறுவித் தந்தான்
நின்னடிகள் நாம்காண நின்றாய் போற்றி! 8

வரலாற்றுப் புகழ்கொண்ட வளநல் லூரில்
வன்கனக சூரியனும் மாடப் பொன்னார்
நிரலான வீடுநெடுஞ் சாலை நீள
நிலையாகக் கலையாக நிறுவப் பின்னாள்
பரராச சேகரனும் பக்கம் எல்லாம்
பலகோயில் கண்டானே பாரோர் நாளும்
கரமேந்திக் கடலாகக் கண்ணீர் கொட்டக்
கலைக்கோயில் நீகொண்டு களித்தாய் போற்றி! 9

ஆடிமயில் ஏறிவரின் அடியார் கூட்டம்
ஆடியுற வாடிவரும் அருளில் இன்பம்
கூடிவரப் பாடிடுவர் கூர்வேல் போற்றி
குலவுமெழில் நிலவுபுகழ் கூட்ட வீதி

மாடிமனை மலர்ப்பொழில்கள் மலியும் நல்லூர்
வாழ்ந்துமகிழ் வெய்திவரும் மயிலா நம்மைத்
தேடியிடர் தீர்க்கவருந் திருத்தா ளுண்டே
தேவையிவண் ஒன்றுமிலைத் தேவர் நாமே! 10

## 2

### சிறப்பீர் பத்து

வீடுநலத் தூய்மைமிக விளங்கு மெங்கும்
விண்ணவரின் தன்மையுடன் விரதங் கொள்ளக்
கூடுமடி யார்களது குமரா வுள்ளக்
குன்றிலருள் பெய்துதவக் குடிகொள் வாயே
நாடுகொடும் போக்குகளை நன்றே தள்ளி
நன்மைதரும் நல்வழியை நாளும் உன்னி
நாடிவிடுந் தொல்லைகளை நாசஞ் செய்யும்
நல்லூரான் கொடியேற்றம் நாளை என்றே! 1

விண்ணவரும் வியக்கின்ற வீதிப் பந்தல்
மிகுதோர ணங்களெழில் விளக்குக் கும்பம்
கண்ணைஅட கட்டிவிடுங் கலைக ளூறும்
காட்சிபல கலைஞர்களின் மாட்சி கூறும்
தண்ணெனவே கதிரவனுந் தன்மை மாறும்
தக்கவழி காட்டிநலத் தன்மை யூட்டி
மண்ணுலகி லடியவரின் வாழ்வை யாக்கும்
மயிலோனின் கொடியேற்றம் மறுநாள் என்றே! 2

கூடிடுவர் மண்வீழாக் கும்பல் வெள்ளம்
கூற்றாகிக் கொடுமைகளைக் கொல்லும் நின்னைப்
பாடிடுவர் பண்ணோடு பைந்தாள் தேனைப்
பருகிடுவர் பதறிடுவர் பத்தி முத்தி
ஆடிடுவர் அப்பாஓ! ஆட்கொள் என்பார்
அலறிடுவர் குளறிடுவர் ஆவல் மீறி
வாடிடுவர் வலியபிடி வாதம் நூறால்
வாழ்வுநலம் நல்லூரான் வைப்பா னென்றே! 3

தங்கும்பல் கோடிதவத் தண்ணூர் நல்லூர்
தன்னாலே ஊரோங்கத் தரணி யோங்க

எங்கும்பல் இன்பங்கள் இலங்க என்றும்
இருள்மாளும் ஒளிவீச ஏற வென்றே
செங்குந்த செம்முள்ளச் சீலர் கோலத்
தேர்வைத்துக் கொடிக்கான சேலை ஈய
பொங்கும்நல் வேதமுடன் மங்க ளங்கள்
பொருந்தவுயர் பொழுதுகொடி போற்றி ஏறும்! 4

தித்திக்கும் மருந்தாகித் திறந்து கண்ணைச்
சிறந்துய்யும் வழிதன்னைத் தெரிக வென்றே
பத்தர்க்கு வழிகாட்டிப் பசியும் போக்கிப்
பார்த்துள்ளம் பழுத்தூறப் பத்தாம் நாளில்
முத்தொக்கு மஞ்சத்தில் முற்பி றப்பில்
மூண்டுள்ள தீவினைகள் முடித்தே நன்றாய்
எத்திக்கும் இடங்கூடி இருகை ஏந்தி
ஏற்றவே போற்றவே எழுவாய் நீயே! 5

மயிலேறி மனங்கொண்ட வள்ளி யோடு
வாழ்வாங்கு வாழ்கென்று வாழ்த்தி நல்ல
சுயமான அறிவேற்றித் துணிவு தந்து
துன்பங்கள் துன்புற்றுத் துவண்டே மாள
நயமூறு சிரிப்போடு நற்கண் ணோடு
நல்லூரி னருள்திக்கு நாலும் பாயப்
பயனூறு நீதந்து பதினே ழாம்நாள்
பனிப்பூச்சப் பரம்மீது பவனி கொள்வாய்! 6

திசையாவும் வென்றாங்கு திரும்பும் வேளை
திடங்கொண்ட செயல்வீரன் திறமை காட்ட
அசைவெய்தக் கைலாய வழகுக் குன்றம்
அடித்தோடிப் பெருக்காகி யழித்த கங்கை
விசைகண்ட அருளுள்ளம் விரலாற் சற்றே
மிதித்துள்ள திறமைக்கு விதித்தே யெல்லை
இசைகேட்டு மகிழ்ந்துள்ளம் இளகுங் காட்சி
ஈர்க்கும்பத் தொன்பதினில் எங்கள் நெஞ்சே! 7

ஆலால முண்டமரர் அல்லல் தீர்த்தோன்
ஆள்கின்ற அடியாரின் அமிழ்தக் குன்றம்
மேலேறி வருங்கோல வேளை பத்தர்
மேல்வாங்கும் கண்ணோடு மெய்ம றந்தே

பாலாகத் தேனாகப் பழங்க ளாகப்
பார்த்தொன்றிப் பருகிடுவர் பாரி லோங்க
வேலோடு விளைக்கின்ற மெய்வி ருந்தாம்
மேலான எழிற்காட்சி வேறெங் குண்டோ? 8

தங்கமயில் மீதிலொரு தண்ட பாணித்
தனியழகுக் கோலமதைத் தாங்கி வந்தே
பொங்குபுகழ் ஊர்த்தெருவைப் போர்த்தே ஆர்த்துப்
போற்றியுனைப் பாடியுளம் பொலிவார்
பொன்னாய்
மங்கிவரும் மாலையிலே மாம்ப ழத்தின்
மாண்கதையின் உட்பொருளை மனத்தே
கொள்ள
வெங்குமுயி ரிருந்துமிக வினிப்பா யென்றே
இருபத்தி ரண்டதனி லியம்பா நிற்பாய்! 9

நீண்டவுயர் கோபுரமுன் நின்றே யென்றும்
நீங்காத பேரன்பில் நீந்த மக்கள்
வேண்டவருள் ஆனைமுகன் மாம்ப ழத்தை
வேலான மேலான மெய்நாங் காண
ஆண்டியென மாண்டவெழி லணிக லன்கள்
ஆடைகளும் நீக்கிநிலை அழகைக் காட்டிப்
பூண்டுகலைக் கோவணமும் புகுவை கோயில்
புரியாத பொருளுக்குப் புதல்வ னென்றே! 10

தேரென்றாற் கருமகவுஞ் சிறந்தே யார்த்துத்
தெரிந்தின்பப் பயனூறித் திளைத்தே பூக்கும்
பேரொன்று பேச்சொன்று மூச்சு மொன்றே
பேசாத வாயெல்லாம் பேசும் நாளை
தேரென்று தேரென்று திருநாள் முன்னாள்
தேங்கிவந் தடியார்கள் திரள்வா ரன்றே
ஊரொன்றாம் நல்லூரும் உலக மாகும்
ஊகூடும் வெள்ளத்துக் குவமை யுண்டோ? 11

மாடங்கள் மடங்கள்பேர் மண்ட பங்கள்
மன்றங்கள் பந்தல்கள் மாடி வீடு
ஆடுங்காற் பந்தல்கள் அப்போ தொன்றும்
அந்தரக் குடிசைகள் அண்டி யுள்ள

வீடெல்லாம் விரிந்தோடி விளங்கும் நற்பேர்
வீதிகள் பாதைகள் மிஞ்சி யுள்ள
ஊடெல்லாம் கோடியோ டோடை பக்க
ஊரெல்லாம் உறைவரே உருகி மக்கள்! 12

விடிகாலை பெருக்காற்று வீதி யாவும்
விரைந்தோடிக் கடல்நல்லூர் விம்மிக் கூடும்
பிடிவாதம் பலவாறு பிடித்தே கீற்றுப்
பிறைகொண்ட சடையானின் பிள்ளை யன்புக்
கடியார்கள் ஆளாகி யாறாய்க் கண்ணீர்
அலைமோத அழிவாக வலைக்கும் அல்லல்
விடியாத வாழ்நாளின் விடிவைக் காண
விரைந்துண்மை விளக்கத்தில் வியர்த்தே
வீழ்வார்! 13

அசையாத மணியோசை யாறு மார்க்க
அடிக்கமணி எட்டழகி லாறு கூடும்
திசையாவும் பழிதீர்ந்து சிறப்பி லோங்கத்
தீபங்கள் சின்னங்கள் சீராய்ச் சூழ
இசைவாயும் கருவிகளும் இசைப்பப் பத்தர்
இருகைகள் தலைக்கேற இணையி லின்ப
விசைமீற விண்ணார்க்கச் சிலிர்க்கத் திக்கு
வெல்லழகிற் பல்லழகிற் சொல்ல
வொண்ணாப் - 14

பேரழகிற் சீரணியிற் பெற்ற நல்ல
ஊர்மயிலிற் சேர்கொடியு முற்ற வேலும்
ஈரழகி மார்களிரு பக்க மேற்க
வார்கருணை முறுவலுடன் வடிவி லோங்குந்
தேரெனவே பேரொளியுந் திகைத்து நிற்கச்
செல்லுகையிற் கொல்லுதுயர் வெல்லு கின்ற
ஆர்கழலும் அடியவருக் காகுங் காட்சி
அரகரவோ அரகரவோ அமிழ்தக் காட்சி! 15

பார்ப்பார்கள் பார்ப்பார்கள் பத்தர் கைகள்
பன்னியெழுந் துச்சிகொளப் பாங்கர் நீங்க
ஆர்ப்பார்கள் முருகான அமிழ்தை யுண்டே
யருமையோ வருமையென் றாடிப் பாடி

வார்ப்பார்கள் கண்ணீரை வற்றா ஊற்றாய்
வடிவேலன் வழங்கவே வாழ்வின் பேற்றை
வேர்ப்பார்கள் வேலாஓ வேலா என்பார்
வேண்டுவன வேண்டாது வேண்டிக்
கொள்வார்! 16

கார்கண்ட மயில்போலக் களிப்பார் பல்லோர்
கண்பெற்ற முகம்போல ஒளிப்பார் பல்லோர்
நீர்கண்ட நிலம்போல நிறைவார் பல்லோர்
நிகரற்ற நூல்செய்து நிலைப்பார் பல்லோர்
பார்கண்ட பொருள்பெற்ற பசியோர் பல்லோர்
பைந்தமிழைச் சுவைத்தினிது பயின்றோர்
பல்லோர்
ஊர்கண்டு தேர்கொண்ட உருவத் தேனை
உண்டிங்கு பெற்றுள்ள உரிமை உய்வார்! 17

வாராத பேரில்லை வந்தே தீர்வார்
வாழ்நாளை வளமாக்கும் மனங்கொள் காட்சி
பாராத பேரில்லைப் பார்த்தே தீர்வார்
பயனொன்று வேறில்லைப் பன்னீர்க் காட்சி
நேராத பேரின்பம் நேர்ந்தே தீரும்
நெஞ்சம்நெக் குருகிவிழும் நீர்க்கண் காட்சி
தீராத வினையாவும் தீர்ந்தே தீரும்
தீர்த்தம்வேல் ஆடவரும் திருப்பொற் காட்சி! 18

அடியார்கள் ஆளாகும் அருட்பாற் காட்சி
அல்லலுமட் டூழியமும் அழியுங் காட்சி
விடியாத வாழ்வங்கு விடியுங் காட்சி
விண்டமிழின் அமுதமணம் வீசுங் காட்சி
முடியாத முயற்சிகளும் முடியுங் காட்சி
முத்தமிழர் ஆட்சியினை முகருங் காட்சி
அடியார்கள் படிமீதில் ஆடிப் பாட
ஐவர்களும் தூநீரில் ஆடுங் காட்சி! 19

உடையாத உள்ளங்கள் உடையுங் காட்சி
உண்மையினை உணர்ந்தவர்கள் உருகுங் காட்சி
அடையாத அருமுரிமை அடையுங் காட்சி
அடியவர்கள் வீட்டுப்பே றடையுங் காட்சி

படையாக நெடுநேரம் படிகள் மீதில்
புடைசூழ்ந்த அடியார்கள் பூக்க முக்கண்
உடையானும் வேலோருஞ் சுரரு மொன்றாய்
உளமாடி நீராட உலகம் உய்யும்! 20

## 3

### வேண்டும் பத்து

ஆண்டவர்கள் அன்றுபுவி ஆற்றல் கொண்டோர்
ஆக்கமறி வூக்கமுடன் அறத்தில் வல்லோர்
நீண்டபுகழ் பூண்டவர்கள் நிகரில் லாதோர்
நீதிமுறை மாறுபட நீர்க்கண் ணோடே
ஈண்டவர்கள் இருள்படர இன்னல் சூழ
இருதலையிற் கொள்ளிஎறும் பானார் இங்கே
மீண்டவர்கள் மேன்மையுடன் நல்லூர் வேலா
விளங்கிவர நீஅருளல் வேண்டும் வேண்டும்! 1

இனிமையிலே ஏற்றமுடன் என்றும் வாழும்
இளமையிலே முழுமையிலே இளகுஞ் செம்மைத்
தனிமையிலே வன்மையிலே சங்கங் கண்ட
தகைமையிலே தாய்மையிலே சான்றோர்
போற்றும்
கனிமையிலே கருத்தினிலே கடவுள் தன்மைக்
கருணையிலே கவர்வதிலே கற்றோர் தம்மைப்
பனிமையிலே பதுமையிலே பால்வாய்ப் பண்பில்
பழைமையிலே வழமையிலே அழகுக் காமோர்— 2

மொழியினிலே அரியதமிழ் மொழியைப்
போன்றோர்
மொழிவேறொன் றில்லையென மொழிந்தார்
சான்றோர்
விழியினிலே பெருமூச்சில் விழும்நீ ரோடு
வீரமொழி தீரமொழி வீழ்ந்தாள் தாழ்ந்தாள்
வழியெதுவு மில்லாத வறியோர் போல
வந்தகுறை எச்சமதில் வாழும் ஈனப்

பழியழிய நல்லூரிற் படைவேற் கந்தா
பார்த்தருள வேண்டுமவள் பார்மேல் ஓங்க! 3

துள்ளிவிழும் தொடர்அருவிக் கொடிபோல் அன்புத்
தூயவுயர் குழல்வீணை மதிபோல் பண்புப்
புள்ளிஎழில் மான்நடன மயில்போல் வெல்லும்
புலிவில்லு மீன்தென்றல் புயற்காற் றைப்போல்
உள்ளதமிழ் நம்முடலின் உயிரின் மேலாள்
உலகமுவந் துயர்த்திவரும் ஒப்பில் லாதோர்
வள்ளுவனைக் கம்பனிளங் கோவை வானோர்
வருந்தியருஞ் செயல்பெற்ற மருந்தை மிக்க— 4

அள்ளிவருங் காப்பியங்கள் ஐந்துங் கொண்டாள்
ஆழமறி யாதகடல் ஆனாள் மேனாள்
உள்ளிவரு வோர்உலைவு தீர அள்ளிக்
கொள்ளைவளங் கொடுத்தவுயர் கோன்மை
கொண்டாள்
தள்ளியவள் வான்புகழைத் தரணி கொள்ளும்
தன்மையறி யாதவர்கள் தாழ்த்தி விட்டார்
கொள்ளமனங் கூடவிலைக் கொற்ற நல்லூர்
வள்ளிமயி லாஅவளை வாழ வைப்பாய்! 5

நன்றாகும் வாழ்விங்கு நாளை நம்மோர்
நடிப்பின்றி நஞ்சின்றி நல்லோர் வல்லோர்
நின்றேகும் நிலைப்பாதை நின்றே நேர்மை
நீங்காது துயர்சற்று நீடித் தாலும்
ஒன்றாகும் உயிர்ப்பண்பு நன்றாய் ஊறி
உருவாகும் எதிர்காலம் உணர்விற் கொண்டு
வென்றாகும் வரைமுந்திச் சென்றால் நல்லூர்
வேலாநம் மவருணர வருளல் வேண்டும்! 6

வெள்ளாட்டு வேலைகளில் வேண்டாப் பேச்சில்
வெறும்வாயைச் சப்புவதில் விற்பார் நேரம்
முள்ளூட்டில் முள்நீக்க முன்னே மூச்சாய்
முன்னேற முயல்வார்கள் முயற்கொம் பாகும்
கொள்ளாட்டில் அதுசூழல் கோயில் மேளம்
கொக்கொக்க ரக்கென்று குதிப்பார் பின்னர்

தள்ளாட்டம் தலைமீறத் தாமே தாழ்வார்
    தண்ணல்லூ ரோயின்னார் தழைத்தல்
        வேண்டும்! 7

எடுப்பார்கள் இருப்போர்கள் தடுப்பார் தாங்கார்
    ஏனென்றால் ஏனென்பார் எண்ணார் ஏதும்
முடிப்பார்கள் முயல்வோர்கள் முயலார் முந்தி
    முற்றாகச் சிந்தனைகள் முன்பின் இன்றிக்
கெடுப்பார்கள் கேட்டாலோ கேளாக் காது
    குடிப்பார்கள் குதர்க்கங்கள் உளறிச் சும்மா
நடிப்பார்கள் இவர்போக்கை நல்லூர்த் தேவா
    நாமுய்ய அறிவுவழி நாட்டல் வேண்டும்! 8

ஒட்டார்பின் சென்றாங்கே ஓமாம் என்றே
    ஓடேந்திப் பலபக்கம் ஓடி ஆடி
விட்டார்கள் பலபேர்கள் வீரம் மானம்
    விற்றார்கள் இனப்பண்பு வீணே தாமாய்க்
கெட்டார்கள் முப்பாலைக் கேட்டார் இல்லைக்
    கிளித்தட்டு விளையாட்டுக் கீச்சு மாச்சுத்
தட்டாது நல்லறிவைத் தனிநல் லூரோய்
    தாமாக இவர்மாறத் தரல்நீ வேண்டும்! 9

நம்மவர்கள் நல்லவர்கள் நல்லூர் வேலா
    நற்செயலில் வல்லவர்கள் நன்றே ஆனால்
தம்மையறி யாதவர்கள் தமிழின் பண்பின்
    தன்மைதெரி யாதவர்கள் அதனால் தாழ்ந்தார்
வெம்மையர சாட்சிமிக வெந்தார் நொந்தார்
    வேறுபட நின்றுரிமை விட்டார் கெட்டார்
செம்மையுடன் செந்தமிழர் சிறப்பாய் ஓங்கச்
    செய்தருள வேண்டுமெழில் தேர்நல் லூரோய்! 10

நல்லூர் நாற்பது முற்றிற்று

உ

# செல்வச் சந்நிதி
# சுப்பிரமணியசுவாமி நிந்தாஸ்துதி

மூ. செல்லையா

பெருகுந் திருவருள்போற் பேராநீர்க் கேணி
அருகமரு மானைமுகத் தையன் — மருமலர்த்தாள்
சித்தை பணிந்து செல்வச் சந்நிதிவாழ் சேய்மீது
நிந்தாஸ் துதியுரைக்க நேர். 1

### நிந்தாஸ்துதி

பொன்னமருந் தொண்டைமா னாற்றிற் பொலிந்த செல்வச்
சந்நிதியில் மேவுந்த யாநிதியே — நின்னப்பன்
எப்பொழுதும் நட்டமுற எம்மவர்க்கி லாபம்நீ
தப்பாது செய்குவையோ தான். 2

நங்கையர்க்கு நான்குவிழி நாதனுக்கீ ராறுவிழி
தங்குமயிற் காயிரங்கண் தானமைந்தும் — எங்குறைகள்
கண்டொழிக்க வன்மையிலாக் கந்தாநின் சந்நிதிசேர்
தொண்டருக்கு யாதோ சுகம். 3

வாழும் பதிசெல்வச் சந்நிதியாய் மன்னுமன்பர்
ஆளும் பெயர்செட்டி என்றமைந்தும் — நாளுமுனை
வாழ்த்து மடியார் வறுமையுறக் காரணமென்
சூழ்த்தமங்கை மார்தடையோ சொல். 4

சட்டியிலே கொக்கவித்துச் சாறாக்கி நீ தரலால்
பெட்டியிலே அன்னம் பெருகினதென் — றிட்டமுடன்
சிந்தைகளித் தார்வழியார் சேர்ந்துபசித் தாரடியார்
முந்துந் துலாமதியில் முன். 5

ஓங்குங் கடைமகனாய் உன்தந்தைக் கோதுவித்து
வீங்குசிறை நான்முகனை நீ விடுத்த — தீங்கையெண்ணிப்
பெண்தருவா ரின்றியோ பேசும்பர் யானையொடு
மண்தருமா னைமணந்தாய் மன். 6

செட்டியெனும் பேருடைநீ செல்வர்களே. உன்பாதங்
கிட்டி யுரைப்பவற்றைக் கேட்பதன்றி — எட்டிநின்றே
ஏழை உரைப்பதனை ஏற்காயென் றெண்ணாமல்
நாளைவீ ணாக்கினனே நான். 7

அஞ்சுதலை நானுடையேன் ஆறுதலை நீயளித்தால்
விஞ்சுதலை பாரமெனை மேவாதோ — துஞ்சுதலை
விட்டளிகள் மூசுமலர் மேவுசெல்வச் சந்நிதியில்
இட்டசித்தி ஈஎந்தை யே. 8

பன்னிருகைச் செல்வன்நீ பாழும் பிணிவருத்தும்
என்னொருதைத் துன்பத்தை யெண்ணாயேல் — சந்நிதிவாழ்
கந்தா அபய வரதக் கரமுடைய
மைந்தா எனல்வீண் மதி. 9

அக்கினியி லேயுருவாம் ஆனவன்றன் மேனியிலே
இக்குநிக ரரன்பால் இறைத்தாலும் — மிக்க அனல்
ஆறிநெஞ்சு நீகுளிராய் ஆனதினால் என்துயரம்
மாறமனம் கொள்ளாய் மதி. 10

வன்மைமிகு சூர்முதலை வாட்டியநீ கானம்வாழ்
மென்மைமிகு வள்ளிக்குத் தோற்றதுமேன் — உன்னிடத்தில்
நம்பிக்கை கொள்ளவொரு ஞாயமுண்டோ சந்நிதிவாழ்
தும்பிக்கை யான்தம்பி சொல். 11

செல்வச் சந்நிதி சுப்பிரமணியசுவாமி நிந்தாஸ்துதி முற்றிற்று

உ

# செல்வச் சந்நிதி ஒருபா வொருபஃது

## த.பொ. கார்த்திகேசு

### கட்டளைக்கலித்துறை

சொல்லாருந் தொல்பதி யாகிய தொண்டைமா னாறதனில்
நல்லாரும் நாடிடுங் கற்றாரும் நாடொறும் நானிலத்தில்
எல்லாரு மேத்த வெழில்வே லுடனே யிலங்குமையா
பொல்லாத பாவியென் துன்பங்கள் நீங்கப் புரிந்தருளே 1

அருவே வடிவுடை யத்தனே நற்செல்வச் சந்நிதிவாழ்
குருவே குழாத்தொடு முன்னைக் குலாவநான் கூட்டுகண்டாய்
திருவே திகழ்ந்திடுஞ் சைவந் தழைத்திடச் செய்தவனே
மருவே செறிந்த மரகதக் காவுடையச் சிற்பரனே. 2

முதலே யெனவும் மொழியுங் குழகனே முன்னிடுநின்
பதமே கொடுத்துப் பரம்பொருள் நீயெனைப் பார்பதமே
சதமே கதியெனச் சொல்லும் முருகநான் சாற்றுவது
இதமே செவிக்கே றலையோ கலோடையா யேதுசொல்லே 3

### வெண்பா

துய்யா முருகா தொண்டைமா னாறதனில்
மெய்யாய பேர்க்கெலா மெய்யவனே — ஐயா
அடியேன் படுந்துயரம் ஆனமட்டும் சொன்னேன்
வடிவாருங் கந்தாநீ வா. 4

தினமுந் தொழுவார் தீவினைகள் தீர்க்கும்
கனவடிவேல் ஏந்தும் கடம்பா — மனமுள்ள
காவடிகள் அன்னதானக் காட்சிநிறை சந்நிதியாய்
சேவடியாய் என்வருத்தம் தீர். 5

தீரா சிவன்மைந்தா செப்புசெல்வச் சந்நிதியாய்
நேராய் உனையே நினைக்கின்றேன் — சீராய்ப்
பதித்தேனே நெஞ்சினிலே பன்னிருகை வேலா
துதித்தேன்நீ யெற்குத் துணை. 6

ஒருபா வொருபஃது முற்றிற்று

உ

# ஸ்ரீ முருகக்கடவுள்
# அலங்கார பஞ்சகம்

## எம். எஸ். சுந்தரேச ஐயர்

### காப்பு

அலங்கார பஞ்சகத்தை ஆசாற்குப் பாட
கலங்காமல் முன்வந்து காக்கும்-பொலங்காலும்
ஆம்பல் வதனத் தருட்பரையா ரன்றீந்த
ஆம்பல் வதனத் தரசு.

### நூல்

#### நேரிசை வெண்பா

பூவார் தடமல்கு போற்றுதிரு வேரகத்தின்
மாவாழ் நெடியோற்கு மால்மருகன்-மேவார்
அவந்திருப்பா னாயேனை ஆதரிக்க வெண்ணி
உவந்திருப்பா னெந்த னுளத்து. 1

#### கட்டளைக் கலித்துறை

துணிகொண்ட திங்களுங் கங்கையும் வேணியிற் சூடிறைக்கு
அணிகொண்ட தெய்வப் பொருளாகி யோரயி லாயுதத்தால்
திணிகொண்ட சூருரங் கண்ட வனற்பதச் சீர்பரவார்
பணிகொண்ட தேரையிற் றுன்படை வாரிந்தப் பார்தனிலே. 2

#### நேரிசை ஆசிரியப்பா

பார்மிசை யதனிற் கார்மிசைத் தோன்றும்
மின்னென விளங்கும் பொன்னனணங் கனையார்
தண்டலை யின்கண் வண்டலைப் பயிலும்
ஆன்றோர் மனமென வாலந் துலங்கும்

மலர்செறி வாவியில் மடவனந் துஞ்ச
அலகுடை சேவ லண்மையி லிருந்து
சிறகரைப் பரப்பிச் சிவிறியைக் கடுப்ப
இளங்கால் வீசும் வளங்கொள் தணிகையை
இடங்கொண் டிருக்கு மிமையவர் பெரும!
நின்னைத் தொழூஉம் நின்னடி யார்க்கு
இல்லை பிறப்பென என்றே விளிக்கும்
வாரணக் கொடியாய்! ஆரணக் குருவே!
முத்தி யளிக்கும் முத்தமிழ்ப் புலவா!
பத்தர்க் கருளும் பன்னிரு விழியாய்
உன்பெருஞ் சீர்த்தியை உவப்புடன் புலவர்
உச்சிமேற் கொள்ளும் ஒருபெரு
கச்சியப்ப னேநன்கு கழறவல் லானே. 3

**அறுசீராசிரிய விருத்தம்**

வல்லிய மெனுவெஞ் சீயம் மாடுறு முழையிற் றாவ
ஒல்லையிற் கவியி னீட்டம் ஓடியே மரத்தி லேற
கல்லென அருவி வீழுங் கவினொளிர் திருச்செங் கோட்டை
இல்லெனக் கொண்டு வாழு மீறிலா யெந்தன் வாழ்வே. 4

**சந்த விருத்தம்**

வேதமுடன்பல வாயசுருதிக ளியாவு
முழுதறி வேதனும்
சீதமுறுபுன மீதுவளர்வன மாலைத்
திகழ்திரு நாதனும்
காதலொடுவுனை நாளுந்தொழுதிடுங் காவி
செறிவயல் மீதிலே
நாதமிகுதரு நாகினினந்திரி சீறு
மலையொலி வாயனே. 5

**நேரிசை வெண்பா**

வாயுரை நிற்காமுன் வண்ணமுகம் வாடாமுன்
தேயுகக்குங் கண்ணரும்மைத் தேடாமுன்-சேய
திருவாவி னன்குடிவாழ் சீர்வரைசே ரையன்
திருவாவி னன்குடியைச் செப்பு. 6

### கட்டளைக் கலித்துறை

செப்பை நிகர்த்தநற் சேக்கையா ரன்பினைத் தேடிச்சென்று
இப்பெரும் பாரி லிழுக்குற வாழு மியல்புடையீர்!
துப்புறழ் மேனிக் கடம்பவிழ் மார்புடைத் தூயனது
ஒப்புமை யில்லாப் பெருஞ்சீர்க் கழல்போற்றி உய்யுமினே. 7.

### நேரிசை ஆசிரியப்பா

மின்னிடை மாதர் வலமிட மிருக்க
பொன்னிற வொகரம் பொலிவொடு மருங்கே
பீலியைத் திறந்து சாமர மிரட்ட
நீலமும் வைரமும் நிறையொளி முத்தும்
பவளமுங் குயிற்றிய பன்மணி யாரம்
நவிலரு மொய்ம்புசே ருரத்திடை நால
நுண்மைய தாகிய உண்மைப் பொருளாம்
பதிபசு பாசப் பான்மையை யுணர்ந்து
அருளொளி பெற்ற திருவர் ளர்க்கு
ஆவியே அமுதே ஆறெழுத் தரசே
பாவி யேனைப் பற்றித் தொடர்ந்த
மும்மலத் திமிரினை முடித்தல்
நின்மலா உந்தன் நெறியது தானே. 8

### அறுசீராசிரிய விருத்தம்

தானம்புகழ் கல்வி தகைமை சேர்வேத மாறங்கந் தாவில்
மானம்பொறை செல்வ மாதியிற் றிகழுமாண் புடையா ரேனு
ஊனமில்கந் தனடிமலர் போற்று முத்தம ரல்லா ராயின்
நானிலத் திலவர் தங்கள் நலன்களெல்லாம் மடமைப் பாற்றே. 9

### சந்த விருத்தம்

மடமோங்கி தூயர் மிகவாழு ஞான
மணவீசுஞ் சோண கிரியில்
விடமோங்கு கண்ட ருமையோடு கூடி
விளையாடுஞ் சேயி னடியை
படமோங்கு பாந்த ளழல்வாயிற் றேரை
படுமின்னல் தன்னை யுடையீர்!
இடமோங்கு மிந்த புவிமீதி லுங்கள்
இடர்நீங்க சென்று தொழுமே. 10

### நேரிசை வெண்பா

செல்லுலவு வெற்பெல்லாஞ் சீரகமா யேற்றங்கண்
வில்லுமிழ வீற்றிருக்கும் வேலவனை-நல்லார்
சிவமொழியைச் செப்பித் தெரிசிப்பர் தங்கள்
பவமொழியச் சென்று பணிந்து. 11

### கட்டளைக் கலித்துறை (நற்றாயிரங்கல்)

பணிவளை யத்து நுழைவதை யெய்க்கும் பரத்தையராம்
மணிவளை யத்தர் மனத்தினை நம்பி மதுரமொழி
பெணிவளை யத்த துறந்திடி லன்றே பிராணன்விட
துணிவளை யத்திற் கிடமிலை 'சண்முகத் தூமணியே. 12

### நேரிசை. ஆசிரியப்பா

சண்முக னாசான் சாமி மலையன்
சிகிவா கனத்தோன் சீகண் டன்சுதன்
சுடர்விடு வேலான் சூரரை யட்டவன்
செக்க ருடுக்கையன் சேவற் கொடியோன்
சைய மமர்ந்தவன் சகல முணர்ந்தவன்
சொற்பொருள் வடிவன் சோதிவீட் டிறைவன்
சௌரி மருகன் சடாக்கரப் பொருளன்
வெற்பரங் கன்னியை வேட்ட
பொற்பன திணையடி போற்றுவம் யாமே. 13

### அறுசீராசிரிய விருத்தம்

அடியார் பவப்பிணிக் கோரரு மருந்தேயன் பேயருட் கடலே
வடியாத வாருணத் தழுந்தி வாடுமிவ் வேழை யேனுக்கு
முடியாறு நாலுங் கொண்ட அரக்கனை முருக்கிய மூர்த்தியாம்
நெடியோன் மருகா நீள்விசும் பரசே அருளு வாயினியே. 14

### சந்த விருத்தம்

இனிமையொ டுரைதரு மிளஞ்சுக மெனும்படி யிருமாதர்
பனிமதி யிரண்டொளிர் வதுயென யிருபுடை பரிவோடே
நனியிருந் தழகுசெய் தகந்தொறு மமர்ந்தருள் முருகோனே
கனிவொடு துதிசெய மடியனுக் கதிதனைத் தருவாயே. 15

### நேரிசை வெண்பா

தருவாகி நின்றுயர்ந்த தானவனைக் கண்டு
செருவா யதனிற் செகுத்த-பொருவேல்
பழநிமலை யானைப் பணியுடையார் செல்வப்
பழநிமலை யானைப் பணி. 16

### கட்டளைக் கலித்துறை

மலையானை வேலனைப் போரிடை தன்னை வணங்கினரை
மலையானை மான்தரு வள்ளிக் குகந்தானை வான்புரையும்
மலையானைச் சீய மலையுங்கோட் டானை மனந்தளரா
மலையானை வாரிடத் திலையா மரண துன்பங்களே. 17

### நேரிசை ஆசிரியப்பா

கள்ளவிழ் பொதும்பரில் புள்ளின மார்த்தல்
சிந்தையிற் றூய அந்தணர் கூட்டம்
முறையொடு சாற்றும் மறையொலி கடுக்கும்
ஆதியு மிந்தும் அந்தரத் தின்கண்
சோதிகால் மாளிகை துன்னிய தென்ன
நித்திலத் தொகுதியும் நேரின மணியும்
பத்தியி லிமைக்கும் பாங்குடை நியமமார்
பரங்குன் றின்கண் வாழும் பண்ணவ
திருப்புகழ்க் குருகும் திருச்செவி யுடையாய்
கருப்புக ழுடையேன் கழறுமிப் பைந்தமிழ்
அருத்தியி லறைந்ததன் றாயினும்
கருத்தினிற் கொள்வாய்க் கடவுளர்க் கரசே. 18

### அறுசீராசிரிய விருத்தம்

கடம்பொழி களிற தாகக் கானிடை தமையன் தன்னை
குடம்புரை குயத்தா ளஞ்ச கொடுவந்த வுந்தன் மாயம்
தடம்பொழில் நிறைந்த சோலைத் தண்ணறு முகத்தா
யின்னும்
விடம்பயில் களத்தன் தாதை விண்டுவு மறிகில் லாரே.19

### சந்த விருத்தம்

ஆரஞ் செறிதரு மார்ப னயோத்திக் கிறைவன் மகிழ்மருகன்
அடலொடு கிரியை வடிவுறு வேலா லலமர சாய்த்தோன்முன்

வீரம் மிகவளர் சூரருடல்தனை விசையொடு தாக்கியவர்
விரகினி லியற்றும் வெஞ்சமரத்து வியப்புற சயங்கொண்டோன்
நீரம் மிகுநிறை யோதஞ் சுவறிட நிதரறு அயில்விட்டோன்
நிருமல அரிவைய ரிருபுற மேற்கு மெங்கள் குருநாதன்
சீரஞ் சொரிகிற பயிலிட மாறும் நனிசென் றேத்தி யுங்கள்
சிரவந் தனிலவன் பெருமையைக் கேட்டுச் சிந்தனை
செய்வீரே. 20

### நேரிசை வெண்பா

ஏத்தித் தொழுதிடுவோ மின்ப மலர்த்தொடையல்
சாத்திப் புகழ்ந்திடுவோம் தப்பாம-லோத்துகமழ்
தாரகத்தி னுட்பொருளைத் தற்பரனுக் கன்றிசைத்த
ஏரகத்தி னுட்பொருளை யின்று. 21

### கட்டளைக் கலித்துறை

இன்றுகந் தாக விருக்கு மடியேனின் இன்னடியிற்
சென்றுகந் தாவென்று பத்தியில் யான்வந்து செப்பிடினும்
நன்றுகந் தாயிலை நின்கோயின் வாயிலில் நாமுறவே
நின்றுகந் தாவி லரிமுதலோ ரேத்தும் நின்மலனே. 22

### நேரிசை ஆசிரியப்பா

மல்லலம் பாங்கரில் நல்லியற் புன்னை
தடங்கரை புளினமேல் மடல்விரி தாழை
முடைநாற் றத்தைப் புடைக்க ணகற்ற
செந்திலம் பதியிற் சீர்பெற் றிலங்கும்
கந்தா வோருரை கழறுவன் கேண்மதி
தானவர் கடலையுந் தரங்கெறி கடலையும்
வானவர் புரப்பான் மாவடி வேலால்
நீறு செய்த நிகரிலாப் புகழோய்!
கூறு மடியேன் கொடிய பிறப்பாம்
அம்பரந் தன்னையு மழிக்க
எம்பிராற் றந்த இறைவநிற் கரிதே. 23

### அறுசீராசிரிய விருத்தம்

அரியின மிசையைப் பாட ஆடமைத் தோளா ரேய்ப்ப
வரிசிறை மயிலி னீட்டம் வனப்பொடு நடனங் காட்ட

பரிவுட னிதழி பொன்னைப் பாங்குடன் சொரியுஞ் சோலை
வரைதனி லமர்ந்து வாழும் வானவர் வணங்கும் வேளே. 24

**சந்த விருத்தம்**

வேளை மானசிறு காளை யார்கள்மலி
வேலை சூழுமணி சோலையாய்
வாளை மீனமகிழ்ந் தோடி யாடிவரு
வாய மோரமிளிர் பூகத்தின்
பாளை மீதுஅரி தாவிக் காணுவிணின்
லோக மீதுபடர் காவினைக்
கோளை நாளுநனி பேசி வாழுமெனை
கோலப் பீலிமிசை கொள்வையே. 25

**நேரிசை வெண்பா**

கொள்ளே னுயர்வாகக் கோத்திரத்தில் சுற்றத்தை
உள்ளே னுனையன்றி யோர்தேவை-நள்ளேன்
குடியின்கண் நட்பைக் குமரேசா யார்க்கும்
படியின்கண் நீயலவோ பந்து. 26

**கட்டளைக் கலித்துறை**

பந்தனை நீக்கிப் பவந்தனைத் தேய்த்துப் பரிவுடனே
எந்தனை யாளு மிமையவர் கோனையெ னின்னமுதைக்
கந்தனை வேலனைக் கண்ணுண் மணியைக் கருத்தினுளே
வந்தனை செய்யாத மாக்களேன் வந்தாரிம் மண்ணுலகே. 27

**நேரிசை ஆசிரியப்பா**

உலக முவப்ப வலனேர் பென்றாற்குப்
பொலங்குழை யணிந்தவோ ரிலங்குசெவி யீந்தும்
முத்தைத் தருபத்தி யென்ற றைந்த
அரும்பெரும் புலவற் கொருசெவி யளித்தும்
திகட சக்கர செம்முக மென்ற
செஞ்சொல் முனிவற்கொ ரஞ்செவி யளித்தும்
கலிவெண் பாவைக் கழறிய பொருட்கும்
பொலிவிடை செவியி லொன்றனைக் கொடுத்தும்
அரனடி மறவா சரணா லயற்குச்

சுருதி மகிழுமோர் சுரோத்திர மீந்தும்
முருகா என்ற முருகுடை மகட்குன்
அருமைச் செவியி லொன்றனை யளித்தும்
செகத்தின் கண்ணே செந்தமிழ் பரப்பிய
அகத்திய முனிக்கோ ரஞ்செவி யீந்தும்
கிரியா சத்தியாம் கிளர்மணிப் பூணாள்
வழுத்துஞ் சொற்கோர் வான்செவி யருளியும்
இச்சா சத்தியா மின்ப வள்ளிக்கும்
விச்சையில் வல்லரும் விமல யோகரும்
போதரு மேத்துமோர்க் காதினை யீந்தும்
வள்ளலார் கனிந்த வண்கவிக் காக
உள்ள செவிகளி லொன்றனை யீந்தும்
மாலு மயனும் மனத்தி னிடத்தே
நாளு மேத்தி நாவினாற் புகழும்
அன்புடைச் சொற்கு னிருசெவி யளித்தும்
அறுபடை வீட்டிலு மமர்ந்த வேலோய்
சிறியேன் கவிக்குச் செவியிலை யென்று
அருளா திருத்த லழகிய தன்றே
அதனால்,
ஐம்முகத் தானரு ளாறு முகாவுன்
பைம்முகத் தொளியைப் பார்ப்பான் வேண்டித்
தாயது வரவைத் தேடுஞ்
சேயதைப் போலத் தியங்கு கின்றேனே. 28

### பதினான்கு சீராசிரிய விருத்தம்

தியக்குறுமென் சிந்தைக்கு எட்டாத தெய்வமே
தேவர்சிறை மீட்ட கோவே
திருக்குநிறை வெவ்விய சூரர்களை மாய்த்திட்ட
சிங்கமே யினிமை சான்ற
பயத்துததி மீதுவளர் பச்சைமா வண்ணற்குப்
பார்தனி லுகந்த மருகா
பாகினினி னிக்கின்ற பழஞ்சொலாந் தமிழ்ச்சொலை
பண்பு சால்குறு முனிக்கு
நயத்தொடு அன்றீந்த செல்வமே தூய
நக்கீர ரிசைத்த நூற்கு

நற்பூசை தன்னிலே வழுசெய்த மேலோரை
நாரமொடு காத்த ளித்தாய்
புயத்திலே மிளிர்கின்ற நீபமலர் மாலையாய்
புன்மையேன் சாற்று மிந்தப்
புனிதமது சற்றுமில் லாதவென் கவியையும்
பொறுத்தினிது அருள்பு ரிவையே. 29

**சந்த விருத்தம்**

அருடந்து என்னைப் புவிவந்து ஆளி
னெவருன்னை நிந்தை யறைவார்
இருடந்து வோங்கு பொழிலெட்டி வானி
லிரிகின்ற எல்லை மறையா
தெருடந்த நல்ல பகற்போதைத் தேய்க்கு
மெழில்சிந்து மாண்ட குடியில்
முருடுந்து கோயி னனிமேவு மந்த
முகமாறு கொண்ட பொருளே. 30

**நேரிசை வெண்பா**

கொண்டல்வண் ணற்படுக்குங் கோளரவி னாவல்லால்
பண்டைவினை யேன்சொல் பகருமோ-தொண்டர்
கருத்தணிகை வேண்டிக் கனிவுடனே வாழ்த்துந்
திருத்தணிகை வேலன்றன் சீர். 31

**கட்டளைக் கலித்துறை**

சீரலை வாயே ரகங்குன்று தோறாடல் செல்வகிரி
காரலைக் குஞ்சோலை வேளூர் தணிகைக் கடம்பன்றுறை
பாரனைத் தும்புகழ் வேங்கடந் தில்லைப் பழனிமலை
சாரலைக் கொண்டுள்ள செங்கோடு வேலற்குத் தானங்களே. 32

**நேரிசை ஆசிரியப்பா**

தானமுந் தருமமுந் தவமும் வேள்வியும்
ஈனமில் கருமமு மெழிலுடைத் துறவும்
வித்தையும் வித்தமும் வேண்டா
நித்தமுங் கந்தனை நினைக்கவல் லார்க்கே. 33

### அறுசீராசிரிய விருத்தம்

கந்தியி னுச்சி மீது கமலம்வாழ் வாளை மீனம்
உந்தியே குதித்துப் பாளை யொடித்துயர் கனத்திற் றாவி
சிந்து மாமழை தன்னோடு சிறப்புட னிறங்குங் குன்றின்
அந்தம துடைய வாறு முகத்தனைப் போற்று வீரே. 34

### சந்த விருத்தம்

வீரக்கழல்செறி திருவடியும் விண்ணோர் சிறைவிடு கைம்மலரும்
சூரக் குடிகெடு வடிவேலுந் தூயர்க்கருளும் விழியெழிலுந்
தாரக் குழலியர் மதிமுகமுந் தாவிற் சிகியி னடல்நடையும்
பாரிற் புகழ்பவர்பெயர் சொலினும் பாவப் பிறப்பின்
முதலறுமே. 35

### நேரிசை வெண்பா

அற்றவர்கட் கெல்லா மருநிதியாம் மெய்ந்நூற்கள்
கற்றவர் கட்கெல்லாங் கட்புலனாம்-முற்றிப்
பழமுதிர் சோலைப் பரப்பெங்குங் காணும்
பழமுதிர் சோலைப் பரன். 36

### கட்டளைக் கலித்துறை

பரவார் மறந்து மவனடி யன்றியிப் பார்தனிலே
விரவா ரரிவைய ரின்பத் துறைக்கண் விருப்புடனே
இரவா ரொருவனை யேத்திப் பொருட்பெறு மிச்சையினால்
அரவார் சடிலத் திறைதரு கந்தனி னன்பர்களே. 37

### நேரிசை ஆசிரியப்பா

கள்ளவிழ் கொன்றையுங் காயா வுஞ்செறி
முல்லையில் வாழும் நல்லிய லாயர்
குழலினைக் கேட்டு குலாவு மரிக்கு
அழகுடை மருகா அற்புதன் குமரா
போகிகட் கெட்டா யோகக் கொழுந்தே
புலியெலு சீயம் புகர்மா யேனம்
அலைதரு கானை அகமாக் கொண்டு
ஏனற் காத்த பானற் கண்ணியை

காமுக னொருவன் கடுப்பநீ
மாமணஞ் செய்ததோர் மால்வியப் பாமே. 38

**அறுசீராசிரிய விருத்தம்**

பாமலியும் நின்புகழைத் தரணிதனிற் பாடாம லந்தோ வீணில்
காமுகரா யம்புவிழிக் கண்ணியரை வியந்தேகக் கால மெல்லாந்
தார்மதராய்த் தொன்னூலைப் பழித்துவருந் தக்கோர்க்கோர் மருந்தி லையோ
சோமனிரு மூன்றென்ன வொளிவீசு மறுமுகத்துக் கந்த தூமணியே. 39

**சந்த விருத்தம்**

ஏமன் பயப்பட சூர ரடர்த்தபின் ஏனற் புனத்தினிடை
வாம இடைச்சிறு பேதையெனப்படு மாதை யணைத்தபிரான்
காம மனத்துடை தீயகுணத்தவர் காணு வதற்கரியான்
தாம மளிப்பவன் மேவுதிருப்பதி சாமி மலைப்பதியே. 40

**நேரிசை வெண்பா**

மலையைத் துளைப்பிக்கும் மாயைதனைக் கொல்லும்
அலையைக் கலக்கி யழிக்குஞ்-சிலைகொள்
பொருப்பரங் குன்றாமற் போற்றித் துதிக்குந்
திருப்பரங் குன்றார் திறல். 41

**கட்டளைக் கலித்துறை**

பருக்குஞ் சரத்தான் பயமற வாழ பரிகரிதேர்
முருக்குஞ் சரத்தா னவுணரைச் செற்று முலைமிசைமுத்
திருக்குஞ் சரத்தா ளெழினல மெய்தியெ னீனமனத்
திருக்குஞ் சரத்தா னழித்தான வன்கழற் சேர்ந்திருமே. 42

**நேரிசை ஆசிரியப்பா**

இருண்ட கூந்தல் திரண்ட கொம்மைத்
தனமுடை மகளிரைத் தரணியில் வெஃகி
அனமென மயிலென அவரைப் புகழ்ந்து
புற்புதம் போன்றவிவ் வற்ப வுடலில்
ஆவலை வைத்து அலையுங் கொடிய

பாவியே னுன்னடி பற்றுநா ளுளதோ
இன்மரக் காவி லிளங்கிளிப் பிள்ளையும்
பன்மரக் கோட்டிற் பாடும் பூவையும்
வள்ளைக் குறங்கும் பள்ளநீர்ப் பழனத்
தகல்சோ ணாட்டில் முகிலினந் தவழும்
மாட மாளிகைக் கூட கோபுரம்
வெள்ளிமால் வரையெனும் புள்ளூர்க் குமரா
ஊறு பலசெய் தும்பரை வருத்திய
மாறுடைப் பகைவராம் மாயை மைந்தரை
எருவையுங் கொடியு மின்புறு மாறு
பொருவடி வேலாற் பொன்றிடச் செய்தோய்
ஐந்தரு நாத னன்போ டளித்த
செந்திரு வனைய தெய்வ யானையை
ஒப்புட னன்று உயர்மணம் புரிந்தோய்!
செப்பமும் பத்தியுஞ் சீர்சா லன்பும்
ஓதும் புகழு முருகெழு தோற்றமும்
ஏது மில்லா எந்தனை யாட்கொள
மயின்மிசை யதனில் வந்து
அயிலிமைக் கரத்தோ டருளுதற் கடனே. 43

### எழுசீராசிரிய விருத்தம்

கடம்பனே வேளே குறிஞ்சி வேந்தனே
யறுமீன் காதலனே யெங்கள்
மடந்தனை மாய்த்துபே ரின்ப வாழ்வினை
யளிப்பா யென்றுமர் வேண்ட
கிடங்குறு நாமக் கிளரொளி சோலை
கிரியினி லதிர்ப்பொடு தெய்வ
நடமிடு வண்ணச் சிகிமிசைப் பொலியும்
நாதனே யருளு வாயே. 44

### சந்த விருத்தம்

அருமறை செப்பிய யயனுடை கந்தனி
லளியற கொட்டிய செவ்வேளே
இருணிறை சிந்தைய னெனவுனி நின்றிடல்
எழிலுடை யுன்றனக் கொவ்வாதே
கரும்பொடு கந்திகள் மிகுவளர் பண்ணையில்
கயலினந் துள்ளுறு புள்ளூரா

வெருவுடை வெவ்விய நரகிடை செல்லுவர்
விருப்பொடு வுந்தனை நள்ளாரே. 45

### நேரிசை வெண்பா

ஆரவட பூண்முலையா ரன்பினுக் கேயுருகி
பாரதனிற் சீரழியும் பாழ்மனமே-சோர்வில்
அமரகோட் டம்பரவி யார்ப்பரிக்குந் தூய
குமரகோட் டம்பரனைக் கூறு. 46

### கட்டளைக் கலித்துறை

கூறுகைக் கும்நாவு மான்ற அறிவுங் கொடுத்திருந்தும்
ஏறுகைக் கும்பெரு மானருட் கந்தா எழிலிநிகர்
வீறுகைக் குஞ்சரம் மாசூர் படவன்று வீரமுடன்
பாறுகைக் கும்படி செய்தவுன் சீரைப் பகர்ந்திலரே. 47

### நேரிசை ஆசிரியப்பா

இல்லற மேவியும் நல்லறம் புரியா
தகப்பகை யாறையு முகத்தே கொண்டு
பிறன்மனை விழைதல் பெரியோ ரிகழ்தல்
அறன்கடை நிற்ற லாவினைக் கோறல்
பொய்யில் வேதத் தையங் கொள்ளல்
செந்தீ யந்தணர் மந்திரம் பழித்தல்
இன்னதீக் குணங்கட் கிருப்பிட மாகிய
அன்னோ ருன்னை யடைவதி யாங்கனம்
என்றி னைத்தடுத் திலங்குறு
குன்றுகள் தோறுங் கோயில் கொண்டாயே. 48

### எழுசீராசிரிய விருத்தம்

கொண்மூ நிறத்துச் செங்கட் பகட்டினி
லிவர்ந்து நாயனைக் கொலற்கு
மண்மீ தொருநாள் வருங்கொடி மறலிக்
கஞ்சியே யின்றுனை யடைந்தேன்
விண்மே லிரியுஞ் செஞ்சுடர்க் கடவு
ளறுவ ரெனும்படி விளங்குந்

தண்ணா ரறுமுகத் தேவே யன்றெனைத்
தாங்கிக் கொள்ளு தற்கே. 49

### சந்த விருத்தம்

கேத்திர மாயிரஞ் சாத்திர முறைப்படி
யாத்திரை செய்யுங் கேள்வியரே
கோத்திர மீதினிற் காத்திரங் கடிவதை
மாத்திரை யேனுமுட் கொள்வீரேல்
நேத்திரம் போகுமுன் நீர்த்திரை துகிரொடு
மாத்தரளம் கொழி செந்தூர் போய்
தோத்திரம் பலசொலி நாத்தழும் புறகுகன்
நேர்த்தியைக் கண்டடி தொழுவீரே. 50

### நேரிசை வெண்பா

வீரகழற் சேவகரும் மெய்ப்பொருளை ஞானியருந்
தாரகத்திற் காணுந் தணிகையே-சீரநிற
அஞ்சங் கெடுத்தா னருமருக னற்றவர்தம்
வெஞ்சங் கெடுத்தான் விருப்பு. 51

### கட்டளைக் கலித்துறை

விருப்பரங் குன்னவ ரேத மொழித்தன மேன்மையொடு
திருப்பரங் குன்றி னிலைபெற்று நின்றன சீர்க்குறிஞ்சி
பொருப்பரங் குட்டியை வேட்டே யலைந்தன பூங்கரத்தில்
இருப்பரங் குன்றிய வேலொளிர் கந்த னிணையடியே. 52

### நேரிசை ஆசிரியப்பா

அடிமலர் விழுந்த அன்புடன் பண்டு
படிதனில் போற்றிய பராசரன் மக்கட்
கொன்றே யான வோங்கா ரத்தின்
துன்னிய பொருளை நன்னய மாகவும்
இரண்டறக் கலத்த லின்ன தென்பதையும்
முரணுடை மூன்றை யடக்கு முறையும்
நான்மறைப் பகரும் வான்பொரு ளனைத்தையும்
ஐந்தவித் தாரது சிந்தையிற் றன்மையும்
ஆறா தாரத் தற்புத நிலையும்

ஏழா வரண மியல்பினை யனைத்தும்
எண்குணத் தீச னேற்றமா தியையும்
பரிவுடன் விரித்துப் பகர்ந்தருள் செய்தவுன்
குரைகழ லேத்துமிக் கொடியனுக் கருளாய்
இழுமென அருவி யிழிதரும்
பழமுதிர் சோலை மலைவரு வோனே. 53

**எண்சீராசிரிய விருத்தம்**

ஏகமுதற் பொருளாகி யின்ப மாகி
என்றைக்கு முளதாகி யில்லா தாகி
தாகமுடை யார்க்கருளின் வாரி யாகி
தரணிதனி லன்பர்கணம் உய்ய வேண்டி
மேகமுழக் கதுபோல வியங்க ளார்க்கும்
வியனருணைக் கோபுரத்துள் விளங்கும் கோவே
தேகமதை யானென்றே கருது வேற்குன்
திருவடியி லிடமுண்டோ அறிகி லேனே. 54

**சந்த விருத்தம்**

அறுமுக வொருவனை யனுதின முறையொடு நறையவி
மூலர்தூவி
உறுபத மடைகுவர் புகழொடு அவரவர் தொழிலையு
முயர்வோடே
குறுமுனி மலரயன் கலைமகள் மரைவரு திருமகள் குடமாடி
செறுநரை யழிதரு படையுடை சுரபதி சசிமகள் செயமாதே. 55

**நேரிசை வெண்பா**

தேங்கமழுஞ் சோலைத் திருவே ரகத்தினிடை
பாங்குடனே வீற்றிருக்கும் பண்ணவா-தீங்கிலன்பர்
வெஞ்சாத நீறாக்கி மேன்மைகொளு நின்னாற்றல்
அஞ்சாத நாயேற் கருள். 56

**கட்டளைக் கலித்துறை**

அஞ்சக் கரத்தன் மலர்கொண்டு பத்தியி லஞ்சலிசெய்
அஞ்சக் கரத்தற் குருவாகி யீரே ழுவனிபடை
அஞ்சக் கரத்தன் தொழில்செய்த கந்த னருளிருந்தால்
அஞ்சக் கரத்தன் படரஞ்சு மும்மை யணைவதற்கே. 57

### நேரிசை ஆசிரியப்பா

அணங்குடை வானோ ரரனிடஞ் சென்று
வணங்கியே குறைசொலி வாழ்த்தி நிற்கையில்
எம்முடை யைய னிமையவர் முன்னர்
ஐமுகத் தோட தோமுகங் காட்ட
மூவிரு முகத்தினு மூவிரு பொறிகள்
யாவருந் துண்ணெனத் தாவிப் பரவலுந்
செந்தீக் கடவுளும் செழுநீர்க் கங்கையும்
அந்ததீப் பொறிகளை யவன்பணி யாலே
சரவணப் பொய்கையிற் பெருமையோ டுய்க்க
சரவண பவனெனு மொருபெயர் பூண்டோய்
விண்செலு மையருக் கேந்திய சூதமும்
திண்ணிய உக்கஞ் சேர்த்திய வனசமும்
அங்குச முளரியு மகனிடைக் கமலமும்
பங்கமில் சத்தியைப் பற்றிரு நளினமும்
வள்ளியின் மலரடி வருடிய சலசமும்
வெள்ளிய மரைவரு விமலனை சுரர்களும்
பயங்கொள கொட்டிய பங்கே ருகமும்
அண்டரைச் சிறைவிடு முண்டக மலரும்
திருவடி காட்டுமோர் திருமா லுந்தியும்
அடியரை யஞ்சே லெனுமர விந்தமும்
நொடிதனி லசுரரை நூறுபங் கயமும்
கவினொடு விளங்கவுன் காட்சியைக் கண்டவர்
சீரிய தவமுறுஞ் செல்வராய்ப்
பாரினிற் பவப்பிணி யற்றவர் தாமே. 58.

### எழுசீராசிரிய விருத்தம்

தாமத குணத்தா லைம்பொறி யடக்கித்
தவமது புரிவதற் கில்லேன்
பாமர னந்தோ நினையான் நிதமும்
பத்தியால் நினையுமா றருளாய்
தாமரை யினமு மரியொடு கரியுந்
தனித்தனி யுழற்பரங் குன்றில்
மாமறை யேத்தி வணங்குறும் பொருளே
வானவர்க் கமுதமா மணியே. 59

### சந்த விருத்தம்

மணிக்கை யோடிரு மயிலியல் மாதரை
மணத்த சேவகர் முனிவர்கள் தேவர்கள்
வணங்க வேவரு யழகுடை வேலிறை யெனுநாமன்
துணித்த வோர்பிறை யணிசடை யார்மகன்
சுரர்க்கு லாதிப னரசினைக் காத்தருள்
துடிக்கு நாயக னெனும்படி யாடிய முருகோனே
பிணித்த வாணவ மலமதி லேசுழல்
யெனக்கு நீயொரு ஐயனல வோயின
யுனக்கு நானொரு பிளையல வோதய
விலையோதான்
கணிச்சி யேந்திய நமன்விடு தூதரை
கடிந்து பேசிடு நினதடி யாருடன்
கலந்து கூடிடு மொருதனி வாழ்வினைத் தருவாயே. 60

### நேரிசை வெண்பா

தருமன்னை தாதா தரணிதல மில்லம்
அருநிதியும் பேர்கதியு மாமே-பொருவில்
தவளவண் ணத்தான் தலைவணங்கும் போரூர்
பவளவண் ணத்தான் பதம். 61

### கட்டளைக் கலித்துறை

பத்தர்கட் கண்டு பரவச முற்று பணிந்தவர்தங்
குத்திர மெய்யைக் கடிந்தடி சேரபற் குன்றுதொறும்
சித்திர மஞ்ஞை மிசைதிக ழெம்முடை சேவகனார்
அத்திர மாய்கில ரென்னே சிலரிவ் வவனியிலே. 62

### நேரிசை ஆசிரியப்பா

அவத்தினை யியற்றி தவத்தினை விட்டு
ஆலயந் தொழுவதைச் சாலவு மறந்து
இருவினை யவைகட் கிலக்க மதாகி
ஈடணை மூன்றுக் கிருப்பிட மான
உறுதியில் நெஞ்சே! உரைப்பதைக் கேண்மியா
ஊறுகொள் புலன்களை யொருவழிப் படுத்தி
எக்குண னெவ்வண னென்றியம் பொண்ணா

ஏரகத் தண்ணலுக் கின்மலர் சாத்தி
ஐவந் தடைத்துநின் னாருயிர் நீங்குமுன்
ஒல்லையிற் பணிந்து உயர்கதி பெற்று
ஓதக் கடல்சூ ழுலகில்
ஏதப் பிறப்பை யெற்றுதி நீயே. 63

### எண்சீராசிரிய விருத்தம்

நீக்கமற நிறைகின்ற நின்னீர்மை யறியாது
நீள்புவியில் யாத்திரைகள் செய்த பிழையும்
வாக்குமனக் கெட்டாத மறைக்கொ ழுந்தாயை
மதியிலியேன் வாழ்த்திமகிழ் கின்ற பிழையும்
ஊக்கமொ டரூபியாய் நின்றவுனைக் கந்தனே
உருவாக மூர்த்தீ கரித்த பிழையும்
போக்கியெனை யாட்கொள லுன்பார மல்லவோ
பொன்னுலகம் போற்றுதிரு புனித வாழ்வே. 64

### சந்த விருத்தம்

வேதமொ டாகம மிகுபுகழ் மாவடி வேல்கந்தன்
சீதள தாமரை நிகரெழிற் சேவடி சிந்தித்தே
பூதல மீமிசை யளியெனும் பூகொடு போற்றாதார்
ஆதுல ராகியு மறிவிலி யாயு மலைவாரே. 65

### நேரிசை வெண்பா

அல்லும் பகலு மலைத்துவுமை விட்டகலா
தொல்லைதனை யெத்தாற் றொலைப்பீர்கள் - நல்லியல்சேர்
அஞ்சங் கரையாரும் ஆவியுதி கந்தற்கு
நெஞ்சங் கரையாத நீர். 66

### கட்டளைக் கலித்துறை

நீரகத் தாமரைத் தேனினைச் சேலுண்டு நித்தமகிழ்
ஏரகத் தாமரைக் கந்தனைப் பத்தர்க் கெளியவனைச்
சீரகத் தாமரைக் கையன்மைந் தாவென்று செப்பமுடன்
நாரகத் தாமரைக் கன்னலுள் வார்க்கும் நரகில்லையே.
67

### நேரிசை ஆசிரியப்பா

நரனாய்ப் பிறந்து நானிலத் தின்கண்
அரன்கழற் பணியு மன்பர் குழாத்துள்
ஒருவனா யிருந்து வுவந்து வாழ்தல்
அருமையி லரிதே; அதனினு மரிது
மறைப்பொரு ளறியா மலர்மிசை யேகினாற்
கிறைமையைக் காட்டி யிமையவர் காத்த
அருள்பொழி வதனத் தண்ண
லிருசரண் போற்றி இறைஞ்சுதல் தானே. 68

### எண்சீராசிரிய விருத்தம்

தானாகி நின்றவுனை வாழ்த்து வேனைச்
சாருமோ தொல்லைமும் மலங்கள் தாமுங்
கோனாகி நின்றொளிரு மணியே யுன்றன்
குரைகழற்கா லடைந்தேனைத் தொடுமோ சன்மம்
வானாகி மண்ணாகி யனில மாகி
வனமாகி தீயாகி தொண்டர் கட்குத்
தேனாகி யின்பமா யினிக்குஞ் சோதி
திகழ்தணிகை வேலாவெந் தேவ தேவே. 69

### சந்த விருத்தம்

தேனைக் காலுங் குழலார்தஞ் சேவைக் காளா யிருப்பேற்கு
ஆனைக் காத்த திருமாலி னாசைக் கேற்ற மருகோனே
வானைச் சீறுஞ் சிகிமீது வாரித் தோன்றும் ரவிபோல
மானைப் போன்ற அனையோடு மாசிற் காட்சி தருவாயே. 70

### நேரிசை வெண்பா

ஏந்துமுலை யாராசை இப்புவியில் மண்ணாசை
காந்துபொ னாசைக் கருதாமல்-பூந்துழாய்க்
கண்ணிப் பரந்தாமன் காதலிக்குங் கந்தன்தாள்
எண்ணிப் பரவல்நா மென்று. 71

### கட்டளைக் கலித்துறை

என்று தொலைப்பே னறிவழித் தாட்டுமென் கன்மமதை
அன்றல வோவுன தாட்கம லத்தை யடைகுவன்யான்

மன்றுதோ றாடிய வள்ளலு மாயு மகிழ்ந்தருள
குன்றுதோ றாடலை நாடிய அன்பார் குணக்குன்றமே. 72

### நேரிசை ஆசிரியப்பா

குன்றுகள் செறியுங் குறிஞ்சி வாழ்நருங்
குன்றினை யெடுத்த கொண்டல் வண்ணனுங்
குன்றினைத் தடிந்த குலிச பாணியும்,
குன்றுபக யெறிந்த வன்றிறல் வேலோய்!
மருகனென் றழைக்க வந்தருள் புரிந்தனை;
கருங்கட முமிழும் களிநல் யானைகள்
கிழங்ககழ் குழியில் விழுந்தெழ வொண்ணா
தலமருந் துழல்வதை யஞ்சுகங் காணா
மலைநெலைக் கொணர்ந்து வல்லையிற் பரப்பியக்
குஞ்சரம் புரந்து குறிஞ்சி பாடுஞ்
செஞ்சொலுக் குவந்து செம்மாந் திருக்குந்
தணிகா சலத்தன் தண்ணடி
அணியாக் கொள்ளுது மஞரொழி பொருட்டே. 73

### எழுசீராசிரிய விருத்தம்

பொருளினைக் கருதியு னடியிணை மறந்து
பொன்னனணங் கனையா ரின்ப
மருள்விழிக் கிலக்காய் வாடுறுந் தமியனை
மறலியென் செயுமோ வறியேன்,
திருந்திய வின்சொல் மிகுநிறைந் தெழில்கொள்
தேவருங் கற்பதற் கவாவும்
அருந்தமி ழுதனைக் குறுமுனிக் கோதிய
கந்தனே யெந்தைநா யகனே. 74

### சந்த விருத்தம்

ஏறுமயி லைக்கடவி வானிலம னைத்துமொரு
ஏசலிற்க ணத்து வருவோன்
நீறுபட யெற்றிபொரு சூரரைய டர்த்துசய
நீள்கொடியெ டுத்து புவியி
லீறுமுத லற்றதிரு வேரகத்த லத்துவரு
மீசனென சற்று முணரார்

மாறுகொள்ம னத்தைநனி தீநெறிசெ லுத்திமல
மாழ்நரகு நச்சு பவரே. 75

**நேரிசை வெண்பா**

நச்சம்பு வேல்விழியார் நட்புக்கோட் பட்டேனை
இச்சகத்தி லுய்விக்க எண்ணுமோ-பச்சை
கயிலா சனத்தர் களிப்படைய வந்த
மயிலா சனத்தர் மனம். 76

**கட்டளைக் கலித்துறை**

மனத்தை யடக்கிலென் வாயுவைக் கட்டிலென் மாண்புடையோ
ரினத்தை யடையிலென் எண்சித்தி கற்று மெனிவ்வுலகில்
புனத்திற் றினைகவர் புள்ளினை யோட்டுமென் பூங்கொடியாம்
அனத்தை மணந்தவற் கேதலை யன்பரா காதவரே. 77

**நேரிசை ஆசிரியப்பா (வருக்க மோனை)**

தமனியப் பணிகள் தகையொடு பூண்டு
தாமரைப் பொன்னென யாவரும் புகல
திரண்டெழு வகட்டிடைச் சேய்தனைச் சுமந்தோர்
தீண்டாக் கற்புடைச் செம்மகள் துவண்டு
துவண்டடி வைத்தெனத் தென்றலங் குழவி
தூயவன் தமிழ்முனி தொன்மலை தோன்றி
தெருக்களி லாடுந் திருப்பரங் குன்றில்
தேவரு மூவரும் யாவரும் போற்றத்
தையல்க ளிருவராந் தாய்மா ரோடுந்
தொன்றுதொட் டமர்ந்த வன்றிறல் வேலோய்
தோத்திரஞ் செய்துவெந் துவக்கற நாயேன்
பன்மலர் தூவிப் பண்டுவுன்
பொன்னடி துன்னப் புரிந்திலன் தவமே. 78

**எழுசீராசிரிய விருத்தம்**

தவலறு செல்வவா சவனே யென்றும்
தருநிகர் கரத்தா யென்றும்
அவமுறு மாக்கள் தமைப்புகழ்ந் தேத்தா
தடிகளைப் பாடுமா றருளாய்

சிவமணி நீறுந் தரித்தொளிர் மேனிச்
செல்வர்கள் வந்தடி பரவக்
குவடுகள் தோறுங் கோவில் கொண்டிருக்குங்
குமரனே யமரர் வாழ்வே. 79

**சந்த விருத்தம் (நாரைவிடு தூது)**

அமரருட்கற அமரியற்றிய அரனளித்தவ ராகிய
குமரனுற்றிடு சரவணப்புனல் குறித்தொலித்திடு நாரைகாள்
தமரவத்தியு மதியுநிச்சமு மிகுவதைத்திடு தன்மையை
உமைதனக்கொரு மகனெனத்தகு மவரிடத்தினி லோதுமே. 80

**நேரிசை வெண்பா**

ஓதரிய சன்மப் பிணியை யொழிப்பதற்கு
வீதலிலா நன்மருந்தை வேண்டினால்-போத
உருகாவென் னெஞ்சமே யோர்முறையே யேனும்
முருகாவென் றேநீ மொழி. 81

**கட்டளைக் கலித்துறை**

மொழியொக்கு மிக்கமு தம்பாற் குழல்யாழ் முகத்தினிடை
விழியொக்குஞ் சேலுங் கடலுங் கமலமும் வெற்பிளநீர்
கழியொக்குங் கொங்கை யுடையாளைச் சாலக் கரையவிட்டு
பழியொக்க கொள்ளுதல் நீதமோ கந்த பரம்பொருளே. 82

**நேரிசை ஆசிரியப்பா**

ஏருழுஞ் சாலி லிலங்குமண் கட்டியைக்
காருறுஞ் சோலைக் கவின்கனி யிரசங்
கரைத்தழித் தணிகொள் கமலச் செய்சூழ்
திருச்செந் தூருடை செல்வப் பெருமாள்

வேலின் றிறத்தை விளம்புவ ரார்கொல்;
வேலையு மோங்கலும் விண்ணுயர் மாவும்
சூரன தகலமுஞ் சொல்லுமே சிறிதால்!
கூரிய சத்தியின் குணமிது வாகப்

பருப்பத மல்கிப் பல்வளங் கொள்ளும்
பொருப்பருக் கஞ்சிப் பூங்கொடி வள்ளியாங்

கோங்கிள முலையாள் குளிர்கொள
வேங்கை யாகி நின்றதும் வியப்பே. 83

**அறுசீராசிரிய விருத்தம்**

வியனுடைக் கோலமும் விளங்குநற் சிகியும் வெற்றி பூண்ட
புயமிசைத் தவழும் பொற்புடை கடப்பமும் பிரணவப்
பொருளை
நயம்பட வுரைத்த செவ்வாயும் நல்லறு வதனமுந் தேவர்
பயமறச் செய்த வெஃகமு மெந்தனா பரவுதல் மறவாதே. 84

**சந்த விருத்தம்**

தேவே தமிழ்பொழி கோவே திருமலி
சேய்மைப் பதிவளர் தருநீழற்
காவே யறுமுக வமுதே யருணிறை
கடலே யிமையவ ரடலேறே
பூவே மிகுநிறை யலையார் சரவண
பவனே புனிதம தில்லாவென்
நாவே முதலிய புலனைந் தனுமுனை
நன்றாய் வழிபட நல்காயே. 85

**நேரிசை வெண்பா**

காய மெடுத்துக் கருக்குழியிற் சேராது
ஆயநல் வீட்டை அடைவதற்கு-நேயமாய்
கண்ணுங் கருத்தோடு கந்தனா ராறெழுத்தை
எண்ணு மறவா தெடுத்து. 86

**கட்டளைக் கலித்துறை**

எடுத்த பிறவிக டோறு மிளைத்தே னினியுனது
அடித்தலஞ் சேரு முறையினைக் காட்டி யருள்புரிவாய்
படித்தல மீதினி லற்றவர் பற்றா பவப்பிணியைக்
கெடுத்தருட் செய்து விளங்குறுஞ் சேவலங் கேதனனே. 87

**நேரிசை ஆசிரியப்பா**

கேகயப் புள்ளுங் கேழ்மணிக் கோழியும்
பைங்கா லன்னமுஞ் செங்கால் நாரையுஞ்

சென்னிறக் கோணப் பொன்னெழிற் கிளியுந்
தாரா வீட்டமும் போதா கோட்டமும்
புறவப் பேடும் பூஞ்சிறைக் காடையும்
விதவித மாக மிக்கொலி யெழுப்பல்
சதவித மாகிய தக்கை தடாரி
சல்லரி தூரியந் தண்ணுமை திமிலை
கல்லொலி பம்பை கண்ணுறு பேரிகை
இன்னண மியங்க ளியம்புதல் மானும்
சோலை தடஞ்செறி சோலை மலையாய்!
பன்னருஞ் செய்கை பலப்பல மல்கும்
நின்சீர் கேட்டும் நெஞ்சுநெக் குருகா
வன்மன மாக்களை மண்ணில்
என்செயப் படைத்தா னெண்கணன் தானே. 88

எழுசீராசிரிய விருத்தம்

தானவர் தடிந்த வடிவுடை சத்தியா
லாணவக் காட்டினை யெறிந்து
ஊனமில் பத்தி வித்திட யடியே
னுளப்பணை திருத்துநா ளுளதோ
கூனலம் பிறைக ளிரண்டெனத் திகழுங்
கோட்டுடை மதகரி யினத்தை
வானென மருண்டு மயிலின மாடுந்
தடவரை மேவுமா மணியே. 89



சந்த விருத்தம்

மருவார்க ளஞ்சு மயில்சேரு மத்தர்
மழுசூல மேந்து மிறையின்
குருவாகி வந்த வொருஞான மூர்த்தி
குடியாக வாழு மடியார்
கருவா யுழன்று மலபாச முற்று
கலிசூழு மிந்த படியில்
வருவார்க ளல்ல ரிதுவுண்மை தெய்வ
மறையேயி தற்குக் கரியே. 90

### நேரிசை வெண்பா

கருதரிய நின்மனுவைக் காசினியி லன்போ
டுருகிமன மெந்நாளு மோத-அருளுடனே
நின்னவா வேண்டி யிருப்பேற்கு நீலமயில்
மன்னவா தாராய் வரம். 91

### கட்டளைக் கலித்துறை

வரனே யளிக்கு மணியே குறிஞ்சி மலைவருசிற்
பரனே மதுவழி யுஞ்செங் கமலம்போற் பன்னிரண்டு
கரனேநின் றாளே சரணஞ் சரணங் கடனிறச்சீ
தரனே மகிழுந் தணிகா சலத்துநற் சண்முகனே. 92

### நேரிசை ஆசிரியப்பா

முகமுந் திங்களு மூக்குங் குமிழும்
நகையு முத்தும் நகிலமுஞ் சூதும்
இதழு முருக்கு மிடையுந் துடியுந்
தோளுங் கழையுந் தொடையு மரம்பையுங்
காலுந் தளிருங் கையுங் காந்தளும்
உறவு கொண்டாடு முறுப்புடை கொடிச்சியர்
துறவுடை யோருந் துயர்தனைக் கொள்ள
எழுவரை மிசையிருந் திழிதரு தோற்றம்
பொழில்தனை வேட்டு பூவர மகளிர்
இறங்குதல் மானும் புறஞ்சிறை குன்றத்
தருளொடு குடிகொண் டடியரைக் காக்கும்
பகவன் புகழையான் பாடக் கருதுதல்
அகல்கடற் றன்னை அங்கையால் நீந்தி
சேருவ னென்றொரு சிறுவன்
பாரி னிடத்துப் பகருதல் போன்மே. 93

### எழுசீராசிரிய விருத்தம்

போதுகொண் டுந்தன் பொன்னடி சாத்திப்
　　பரவிடு மன்பர்கள் தம்மை
மோதுறுங் கொடிய பிணிகளென் செய்யு
　　மூண்டெழு வினைகளென் செய்யும்

மாதர்க ளறுவ ரகமகிழ்ந் தீம்பா
　　லளித்ததை மடுத்தவன் போல
தாதுறு மலர்நிறை தடத்தினி லன்று
　　களித்திடு மமலையின் சேயே. 94

### சந்த விருத்தம்

ஏலங்கொ ளைம்பாலா றுறவாலே
　　ஏதம்பட் டுழலும்மிவ் வடியேனைக்
காலன்கண் டணுகாம லினிதாகக்
　　கார்மய்யில் மீதேவந் தருள்வாயே
வேல்கொண்டு வரைதன்னை எறிவோனே
　　வேதங்க ளுரைசெய்த கனிவாயா
சேலொன்று புனல்சூழும் வயலூரா
　　சேயென்றோர் நாமங்கொள் பெருமாளே. 95

### நேரிசை வெண்பா

பெற்றமுகந் தேறும் பெரியோ னருளியவோர்
வெற்றி நிணங்கமழும் வேலன்றாள்-பற்றுங்
கருத்துடையா ரல்லாலக் கன்மத்தா லாகுங்
கருத்துடையா ரிப்புவியிற் காண். 96

### கட்டளைக் கலித்துறை

காமுரு மார்பில் கடம்பணி கொண்டு கரத்தினிலே
நாமுறு வேலினை வைத்தபி ராற்கிடம் நாகமென்று
கோமளச் சீய மெழிலியைச் சீறிக் குவட்டிடையில்
ஏமுறப் பாய்ந்து யிடருறுஞ் சோலை எழில்மலையே. 97

### நேரிசை ஆசிரியப்பா

மலைதொறு மரகத மயின்மிசை வருமொரு
கலையுணர் புலவனின் கழலடி
தலைமிசை கொளுபவர் தனுகொள விலையே. 98

### எழுசீராசிரிய விருத்தம்

இலங்கு மறுமுகத் தெழிலு மருள்பொழி
　　யிராறு விழிகளு மங்கை

துலங்குறு தோற்றமுந் தூயநல் லடியுங்
 கண்டுகண் மகிழுநா ளுரையாய்
பலங்கொளும் வேலினைப் பண்டுபோல் விடாயெனப்
 பயோததி யலைகளாங் கரத்தால்
பொலங்கழல் பணிந்து பொன்மணி கொழிக்குஞ்
 செந்திலம் பதியுடை யோனே. 99

### சந்த விருத்தம்

ஓவிய ரங்கெழு தாவுரு கொண்டொளிர்
 ஓரிரு தாயருடன்
தாவிய லஞ்சிறை மாமயில் தன்மிசை
 தாரணி மீதொருநாள்
மேவிய நின்னுரு வேறினை யன்பனை
 மீளலி லாநெறிசேர்
காவிய வம்புய வாவியி லன்றுதி
 காரண பூரணனே. 100

### வாழி விருத்தம்

அறுமுகம் வாழ்க அங்கண் பொழிதருங் கருணை வாழ்க
அறுபடை வீட்டுக் கந்தன் ஆறெழுத் தென்றும் வாழ்க
அறுதொழி லுடையோர் வாழ்க அருமறை நான்கும் வாழ்க
அறுபகைக் கடந்த அன்னோ னடியவர் வாழ்க மாதோ.

முருகக் கடவுள் அலங்கார பஞ்சகம் முற்றிற்று

—

உ

# ஆறெழுத்துப் பத்து

## தா. மூ. பூ. பொன்னம்பலப் பிள்ளை

சத்திதருங் கங்கை நதிமுதல தண்ணதிசா
ரத்திவரு ஞான வருவிதிகழ் சங்கமத்தே
வத்தகைய தீர்த்தத்தெம் மாவையைய மாமணிவண்
ணத்த நினதா ளரவிந்த முள்ளுறுத்திப்
பத்த மொழியப் படிந்தேத்தி நின்றேன்பா
வத்தொடர்பு நீத்து னடியேனா மாறருளே. 1

சங்கத் தவர்க்குந் தலையாம் புலவமல
ரங்கைத் தலத்தி லபயநின்ற நம்பரனே
வங்கக் கடன்மாவை வந்தனையாய் நின்றதிவ
ணங்கள் பவந்தீரு ஞான நெறியளித்துப்
பங்கவினை நீக்கிப் பயனருளு மாறன்றோ
வங்கமல பாத மகநிலவு மாறருளே. 2

சஞ்சலையே தீபத் தகையாய்த் திவலைமல
ரஞ்சலியே யாக வமருலகு பூசிக்க
வஞ்சி திகழரன்போல் வார்தீர்த்த வாரிக்க
ணஞ்சனியல் செய்த வருளுன்னி நீர்குடைந்து
பஞ்சரச நேசம் பறித்துபய பாதமார்
வஞ்செறிய நஞ்செய் மனநிலைக்கு மாறருளே. 3

சங்கக் கடலுடைசூழ் தங்க விலங்கைசா
ரங்கச் சிரமா மசலமிழி நீருற்ற
வங்கச் சலதி யரனோ டிடங்கொளரு
ணங்கை யுருவாய் அவரருளின் ஞான்றிடுமப்
பங்கங் குடைந்து குளிர்சுடர்க ளோடெழுந்த
வங்கங்கைத் தோய்வி னதீதமா மாறருளே. 4

சந்திரனே யாழிற் றரணிநேர் நின்றிருவ
ரந்திநிழன் மாவை யமலா லயத்தெறிய
வந்த மலர்பலபோல் வான்மீ னிமைத்துநங்க
ணந்தரமீ நின்றுலவ வாரா தனைநிலவப்
பந்தம் பரியும் பரானந்த பாதமலர்
வந்தனையே யென்று மறவா நெறியருளே. 5

சண்டக் கருடன்வாய்ச் சர்ப்ப மதன்வாய்நீ
ரண்டுற்ற தேரை யதன்வா யகப்பட்ட
வண்டுற்ற தேனை மகிழ்மிய லானதிம்மண்
ணண்டுற்ற வாழ்க்கை யதுவென் றறியாமே
பண்டுற்ற பாசப் படரூழ் மயனீக்கி
வண்டுற்ற பூமாவை வாச நயமருளே. 6

சக்கரத்துச் சேயரிபாற் சார்பொன் றிரும்பவீ
ரக்கரத்து முற்றி யணைவேள்வி யாறுமுக
வக்கரத்தர் பந்த மடுநாளிங் குள்ளகா
ணக்கரத்திற் கொள்ள வணையாத போலாழிப்
பக்கமெற்றுங் காணாப் பரிசாற் குடைந்துபர
வக்கரமா றுஞ்சிந்தை யன்பிற் சொலவருளே. 7

சற்றேனு மன்பற்ற தானவர்கோன் செய்தபோ
ரற்றே யிருபறவை யாய்ச்சன் னிதியடைய
வற்றா வருள்செய்து வாகனமு மாமணிவா
ணற்கே தனமுமாக் கொண்ட நலம்போற்றிப்
பற்றேது மின்றியன்பாற் பற்றினே னின்சரணம்
வற்பான பாவவினை மாற்றியுய்யு மாறருளே. 8

சஞ்சரிகத் தாமரையான் காணாத் தனிமறைபா
ரஞ்சலிசெய் வாம முனிவற் கருளியதும்
வஞ்சவினை யாற்சிந்தை மான்றுகுறள் வாய்ப்பட்டுண்
ணஞ்சவடி யாரவல நற்றமிழ்க்காற் றுற்றதுமிப்
பஞ்சரத்துப் புள்ளின்பாற் பற்றாவோ பாசபிர
வஞ்சமொழித் துன்னுருவ மாமந் திரமருளே. 9

சந்த மறைப்பொருளாந் தாரகமே நீபத்தா
ரத்தமதி சீரினிறை யாறுநய மாராறு
வத்திரமுங் காண மழையலரோ பூவலர்வண்
ணத்தருவி யோபரம வானந்தத் தேன்குடையும்
பத்திமையோ விங்குள்ள பாசங் கழிவென்றார்
வந்தடைந்தே யுய்ந்தே னினிச்செய் வகையருளே. 10

ஆறெழுத்துப் பத்து முற்றிற்று

உ

# இரத்தினகிரிப் பாலமுருகன் அடைக்கலப் பத்து

## வி. அண்ணாமலை முதலியார்

கட்டளைக் கலித்துறை

அருட்கட லேயுன் அருளினால் அன்பர் அழுந்திநின்றே
சுருக்கெடுத் திட்டார் கடையனேன் உன்றன் கழலிணையைக்
கருத்தினிற் கொள்ளாயிப் பேதையேன் உய்யக் கருவதனை
அருளினால் தீர்த்திரத் நாசலம் ஆள்வாய் அடைக்கலமே. 1

அறிவினுள் ளேயறி வாகி யுணர்த்தும் அருட்சுடரே
பிறிவறி யாவுன் அடியா ருனதடி பேணுகின்ற
நெறியறி யேன்உன் றனையறி யேன்யான் நெகிழ்ந்துருகி
அறியும் அறிவருள் ரத்நாச லாஉன் அடைக்கலமே. 2

வினையேன் இழைத்த பிழையைப் பொறுத்திடும்
மெய்ப்பொருளே
நினையேன் உனையன்றி வேறோர் புகலிடம் நின்மலனே
எனையே பிறவிப் பெருங்கடல் வற்ற எடுத்தருள்வாய்
அனையே அனைய இரத்ன கிரியாய் அடைக்கலமே. 3

பாலினுள் வெண்ணெ யெனமிளிர் கின்றமெய்ப் பாலகன்செவ்
வேலினால் ஆணவச் சூரைத் தடிந்த விறல்மயிலோன்
சீலமே செய்திடு பூசையில் ஒன்றாத சிந்தையனேன்
ஆலமர் கோமகன் ரத்நா சலன்தாட் கடைக்கலமே. 4

கறங்கோலை போலும் பிறிவியிற் பட்ட கயவனின்பால்
பிறங்கிடும் தீவினை தீர்த்துன் னருளைப் பெரிதருள்வாய்
நிறமுரு இல்லாதாய் ஆறு முகமுடை நின்மலனே
அறவிடை யோன்சுதா ரத்நாச லாநின் அடைக்கலமே. 5

கற்றிலேன் ஞானக் கலையுடன் உன்பால் கசிந்துருகப்
பெற்றிலேன் உன்னருள் சேர்ஞானி யார்தம் பெருங்கருணை
உற்றிலேன் ஏழையேன் இன்னுயிர் தந்தேன் உனதடிக்கே
அற்பனேன் வேண்டினேன் ரத்நாச லாநின் அடைக்கலமே.6

எண்ணிலேன் என்னுளே நின்திருப் பேர்ஆ றெழுத்தையுமே
நண்ணிலேன் நின்னடி யார்அடி தீவினை நண்ணியதால்
மண்ணிலே தோன்றி மலர்த்தாள் தொழாது மடிகின்றநான்
அண்ணலே ரத்ந கிரியாய் நினதாட் கடைக்கலமே. 7

என்றனை அஞ்சே லெனவே கருணையால் ஏற்றருளும்
உன்றனை யன்றியோர் தெய்வமும் கொண்டிலேன்
ஒண்பொருளே
இன்றெனை ஒப்புவித் தேன்வினை போக்கி இனிதருளாய்
அன்றுனை ஏத்திலேன் ரத்நாச லாநின் அடைக்கலமே. 8

கண்ணின் மணியே மணியி லியங்கும் கதிரொளியே
நண்ணும் கதியேநன் நாத முடிவுறு நாயகனே
எண்ணும் எழுத்தில் உறைந்தருள் செய்யும் எழிற்பொருளே
அண்ணும் இரத்நாச லாஎனை ஆள்உன் அடைக்கலமே.9

சிந்தை முதலாகச் செய்கை முதல்யாவும் சீரடியில்
பந்த மறஒப்பு வித்தேன் பழவினை பற்றறுத்தே
சந்த நிறைநின் கழற்கீழென் னாவி கலந்திடவே
அந்தண னேரத்ந வெற்பனே யான்உன் அடைக்கலமே.10

**இரத்தினகிரிப் பாலமுருகன் அடைக்கலப் பத்து முற்றிற்று**

உ

# இரத்தினகிரிப் பாலமுருகன் குயிற்பத்து

வி. அண்ணாமலை முதலியார்

எழுசீர் விருத்தம்

கடிமலர் நெடுவாள் கண்ணுமை குமரன்
கரும்பொழி லரத்ந கிரியில்
வடிவுரு தெய்வ குஞ்சரி யுடனே
வள்ளிநா யகிமணம் புரிந்தோன்
அடியினை என்றன் சிரத்தணி செய்ய
அணிமயில் அமர்ந்துநற் சேவற்
கொடியுடன் வரநீ கூவிடாய் குயிலே
குவலயம் கேட்டிடக் குளிர்ந்தே. 1

கருத்தினுட் கருத்தாய் இருந்திடும் கந்தன்
கார்பொழி இரத்தின கிரியில்
இருந்துநல் லடியார்க் கருள்மழை பொழிவோய்
இருஞ்சுடர்க் கொழுந்தென வந்த
பெரும்பொரு ளாய பரசிவக் கன்றைப்
பேதையேன் பிறவியின் மூலக்
கருவினை அழிக்கக் கூவிடாய் குயிலே
கடந்திடப் பிறவியைக் கழித்தே. 2

உள்கிடும் உள்ளத் துணர்வென உணர்த்தும்
உலப்பிலா அருட்பெருந் தேனை
வெள்ளநீர்ச் சடையான் குமரனை என்னுள்
விரவிடும் இரத்னவெற் பனையென்
கள்ளமே போக்கும் தூநெறிச் சுடரைக்
கருமுதல் நசித்துவெம் மாயப்
பள்ளமே வீழா தெடுத்திடக் குயிலே
பாரெலாம் கேட்டிடக் கூவாய். 3

அறிவிலாக் காலத் தகத்தினுட் புகுந்திட்
டறிவதை அருளிய பின்றை
நெறியெலாம் புலமாய்ச் செய்தவெம் பெம்மான்
நேரிழை குறமகள் வள்ளி
பிறிவற வலமே கொள்ளம் பிரானை
பேதையேன் அடைந்திட இன்றே
கிறியெலாம் சாயக் கூவிடாய் குயிலே
கீழ்மையேன் உய்ந்திடக் குளிர்ந்தே. 4

பரம்பர மாகிப் பக்குவம் அடைந்த
பழவடி யார்க்கரு ளமுதைச்
சுரந்திடும் சுப்ர மணியனைச் செருவில்
சூரனை அடக்கியாட் கொண்ட
சுரபதி தன்னை இரத்தின கிரியாம்
தொல்பதி உவந்துவந் திருந்தே
கரந்தகத் துறையும் கந்தனைக் குயிலே
களிமயில் மேல்வரக் கூவாய். 5

ஒருமல முடையார் வடிவிலுள் ளீடாய்
ஒன்றியே உணர்த்திடு வானும்
இருமலத் தார்க்கே மான்மழுத் தாங்கி
எழிலுரு அருள்புரி வானும்
குருவடி வாகித் திரிமலத் தார்க்குக்
கொடும்வினை அழிப்பவன் வெற்பில்
முருகனாம் ரத்ந கிரியமர் குகனை
மூவுல கிறைவனைக் கூவாய். 6

இருளினின் றெனையே யெடுத்தநாள் முதலாய்
இதுவரை உறுபிறப் பிறப்பில்
உருளெனச் சுழன்ற கடையவன் உய்ய
உயர்கதி அளித்திடும் இளையான்
திருமகள் மருகன் தீந்தமிழ்ச் செல்வன்
திருப்புகழ் கேட்டிடக் கூவாய்
மருமலி கடப்பந் தார்புனை மார்ப
வருகெனக் கூவிடாய் குயிலே. 7

எப்பிழை செயினும் பொறுத்தெனை ஆளும்
எந்தையை எனதுளத் துறைந்தே
துப்பறச் செய்யும் தூயவொண் சுடரைச்
சுரர்களின் இன்னலைத் துடைத்தே
ஒப்பறும் இரத்ன கிரியினில் ஓங்கும்
ஒப்பிலா ஒண்பொருட் சேயைத்
தப்பற வரநீ கூவிடாய் குயிலே
தமியனேன் உய்ந்திடக் குளிர்ந்தே. 8

உலகினை நொடியில் சுற்றிய குமரன்
உம்பரின் பகைவரைத் தொலைத்தோன்
பலகலை களுக்கும் பரம்பொரு ளானோன்
பரகதி அளித்திடும் பரமன்
இலகிடு ரத்ன கிரிமிசை அமர்ந்தான்
இசையுடன் அவன்வரக் குயிலே
நலகிரு பைக்கோர் ஆகரன் மயிலோன்
நமனொழித் தருளநீ கூவாய். 9

எனையொரு பொருளாய் உளத்தினிற் றிகழ
ஏற்றருள் செய்திடும் இளையான்
சுனையெனச் சுரக்கும் அருட்குண முடையோன்
சுரர்களைக் காத்திட வந்தோன்
நினைப்பவர் தமக்கே நல்லருள் புரிய
நேடிய இரத்தின கிரியில்
எனைத்தடுத் தாளக் கூவிடாய் குயிலே
இன்னருள் நாம்பெறக் கூவாய். 10

**இரத்தினகிரிப் பாலமுருகன் குயிற்பத்து முற்றிற்று**

உ

# வயலூர்ப் பத்து

## இராம. இராமனாதன் கோனாபட்டு

வேலாட மயிலாட விழியாடப் புவியாட
வேதங்கள் எல்லாம் ஆட
விண்ணாட மண்ணாட விதியாட மதியாட
வீரமிகு சேவல் ஆட
சேலாடும் விழிமாதர் சிறந்தாடத் தினந்தோறும்
தெய்வானை தானும் ஆட
சிவனாட உவமையாடத் திகழ்யானை முகன்ஆடத்
தேவர்கோன் கூட்டம் ஆட
தோளாடக் காவடிகள் துதித்தாடத் தோகையாம்
துணைவள்ளிக் குறத்தி ஆட
சொல்லாடப் பொருள்ஆடப் பாட்டாட அதற்குள்ளே
சொல்லரிய ஜீவன் ஆட
மாலாட உனைப்பாடும் மனமாட மயிலேறி
வாழ்விக்க ஆடி வருவாய்
மன்னனே சிவகாமி மைந்தனே எனைஈன்ற
வயலூர்வாழ் குமரே சனே! 1

கண்ணிலே ஒளியும்நீ கருத்திலே பொருளும்நீ
காற்றும்நீ கனலும் நீயே
கடலிலே அலையும்நீ கரையிலே நிலையும்நீ
கடையும்நீ முதலும் நீயே
விண்ணும்நீ மண்ணும்நீ வேதத்தின் தலைவன்நீ
வெளியும்நீ ஒளியும் நீயே
மேலான தந்தைநீ மீட்டுகின்ற தாயும்நீ
விளையாடும் செல்வம் நீயே

எண்ணும்நீ எழுத்தும்நீ இரவும்நீ பகலும்நீ
எழுதாத உருவம் நீயே
இன்பம்நீ துன்பம்நீ இல்லைநீ உண்டுநீ
என்கின்ற வேதம் நீயே
பெண்ணும்நீ ஆணும்நீ பின்னுள்ள பொருளும்நீ
பேருலகில் எல்லாம் நீயே
மன்னனே சிவகாமி மைந்தனே எனைஈன்ற
வயலூர்வாழ் குமரே சனே! 2

வாழ்வென்ற கடலிலே மனமென்ற படகிலே
வடிவென்ற உடலைத் தாங்கி
வழியொன்றும் அறியாமல் வயிறென்ற கோட்டைக்கு
வகையான உணவு தேடி
பூவொன்று கூந்தலார் போகத்தில் நாளெல்லாம்
புதுக்கடல் நீந்தி நாளும்
பொருளென்ற போதையில் இருளென்ற உலகத்தில்
புலனைந்தும் மயங்கி நின்று
தாயென்று சேயென்று தானென்று பிறரென்று
தள்ளாத உறவு கொண்டு
தாளாத பாசத்தில் மீளாத உலகத்தைச்
சதமென்று நம்பி வாழ்ந்தேன்
வாவென்று மரணத்தின் வாயிலில் அழைத்திட்டேன்
வள்ளல்நீ மறுக்க லாமோ?
மன்னனே சிவகாமி மைந்தனே எனைஈன்ற
வயலூர்வாழ் குமரே சனே! 3

தேன்சிந்தும் கவிகோடித் தினந்தோறும் நான்பாடத்
திறவாத செவியும் உண்டோ?
செந்தமிழைக் கேட்டிருக்கும் திருமுருகன் சந்நிதியில்
சந்ததமும் திரைகள் உண்டோ?
மானழகு விழிமங்கை வள்ளிமயில் பஞ்சணையில்
மயங்கிநீ கிடப்ப துண்டோ?
மண்ணிலே நீசெய்த எண்ணிலா வித்தைகள்
வடிவங்கள் மறைவ துண்டோ?
ஞானத்தின் தலைவனென ஞாலத்தில் உனைச்சொல்லும்
நம்பிக்கை பொய்ப்ப துண்டோ?

நாடறியப் பிள்ளையைத் தந்தைதான் தள்ளிநின்றால்
நியாயங்கள் வாழ்வ துண்டோ?
வானவரைச் சிறைமீட்ட வடிவேலா உன்னைநான்
வையத்தில் விடுவ தில்லை
மன்னனே சிவகாமி மைந்தனே எனைஈன்ற
வயலூர்வாழ் குமரே சனே! 4

பொன்கோடி இருந்தென்ன? பொருள்கோடி இருந்தென்ன?
புவியெல்லாம் ஆண்டும் என்ன?
புதுமைகள் மலர்ந்தென்ன? புகழிலே சிறந்தென்ன?
போகத்தில் வாழ்ந்தும் என்ன?
தன்தேகம் வளர்ந்தென்ன? தாய்தந்தை இருந்தென்ன?
தாரங்கள் வாய்த்தும் என்ன?
தாங்காத பிள்ளைகள் சார்பாக இருந்தென்ன?
சாதனைகள் முடித்தும் என்ன?
முன்தேடிச் சேர்த்தென்ன? முதுமையிலே காத்தென்ன?
முறையாகப் படித்தும் என்ன?
முற்றாத உறவென்ன? மோகத்தின் துறவென்ன?
முழுஞானம் அடைந்தும் என்ன?
வன்நெஞ்சப் பாவிக்கு வடிவேலன் இல்லாமல்
மற்றெல்லாம் இருந்தும் என்ன?
மன்னனே சிவகாமி மைந்தனே எனைஈன்ற
வயலூர்வாழ் குமரே சனே! 5

கனியாத பருவத்து கன்னிமலர் பறித்தேனா
கள்ளுண்டு மயங்கி னேனா
கண்ணீரில் ஏழைமகன் கைப்பொருளைக் கவர்ந்தேனா
கடன்வாங்கி வாழ்ந்திட் டேனா
வனிதையரின் பின்னாலே மனமகிழ்ந்து திரிந்தேனா
மாதாவை மறந்திட் டேனா
வாய்பேசா உயிர்களை வதைத்திட்டு வாழ்ந்தேனா
மனைவியினை வஞ்சித் தேனா
புனிதமுறு மன்றத்தில் பொய்சொல்லிப் பிழைத்தேனா
போகமிகத் தேடி னேனா
போதித்த ஆசானின் புலமையினைப் பழித்தேனா
பூமியை இகழ்ந்திட் டேனா

மனிதனெனப் பிறந்துநான் வையத்தில் செய்ததெலாம்
மன்னிக்க வேண்டும் ஐயா
மன்னனே சிவகாமி மைந்தனே எனைஈன்ற
வயலூர்வாழ் குமரேசனே! 6

வைதாரை வாழவைக்கும் வடிவேலா நான்சொன்ன
வார்த்தையெலாம் பொய்யோ ஐயா
வண்டாடும் தாமரையில் நீஉறங்க நானிங்கு
மன்றாடி நிற்க லாமோ?
ஐயாவோ என்றழுதால் உனையன்றி எனையணைக்க
ஆரிங்கு உள்ளார் ஐயா?
ஆறுமுகப் பேரன்றி அடியேனைக் காப்பதற்கு
வேறுமுகம் உண்டோ ஐயா?
பொய்யான உலகத்தில் புழுவாகத் துடிக்கின்றேன்
புறந்தள்ளி நிற்க லாமோ?
புள்ளிமயில் இப்பாவி புகழ்ப்பாடல் கேட்டிருந்தும்
தள்ளியது பறக்க லாமோ?
வையாபுரி நாடாளும் வண்ணமயில் வாகனனே
மைந்தன்நான் வாட லாமோ?
மன்னனே சிவகாமி மைந்தனே எனைஈன்ற
வயலூர்வாழ் குமரேசனே! 7

மலராகப் பிறந்துநான் பிஞ்சான வடிவாகி
வையத்தில் காயும் ஆனேன்
வாகான கனியாகி வளமான இளமைக்கு
மாதொன்று தேடி நின்றேன்
நிலவான அவளோடு உலகாள எண்ணிநான்
நெடிதான பொருளும் சேர்த்தேன்
நினைவோடும் உடல்தேய நேரான குணம்மாற
நித்தம்நான் நொந்து நின்றேன்
பலநாளும் பாய்வீழ்ந்து பழமாக உடல்சோர்ந்து
பாராத தனியன் ஆனேன்
பஞ்சாக விழிமூடப் பாற்சோறும் செல்லாதுன்
பாதத்தைச் சேர்ந்து விட்டேன்
வலமாக இடமாக வள்ளியுடன் தெய்வானை
வைத்தாளும் எங்கள் ஐயா
மன்னனே சிவகாமி மைந்தனே எனைஈன்ற
வயலூர்வாழ் குமரேசனே! 8

கோடியில் ஒருவனாய்ப் பிறந்ததற்கு அழுவேனா
குறையுடன் பெற்றதற்கு அழுவேனா
கூந்தலார் கடலிலே விழுந்ததற்கு அழுவேனா
கூடிநான் பிரிந்ததற் கழுவேனா
வாடிய உயிர்களின் வாட்டத்திற் கழுவேனா
மாண்டவர் கூட்டத்திற் கழுவேனா
வஞ்சித்து வாழ்கின்ற மனிதருக் கழுவேனா
வயிறுகாய் பசியனுக் கழுவேனா
தேடியே கந்தனைச் செந்தூரின் கடலோரம்
தெரிசித்த பின்னாலும் இந்தச்
சிறுபிள்ளை அழுதிட்டுத் தேம்பிட நீயுமே
தெந்தினம் செய்ய லாமோ?
பாடிய பாட்டெல்லாம் செட்டிமக னாய்ப்பிறந்த
பாசத்தினா லன்றோ ஐயா?
மன்னனே சிவகாமி மைந்தனே எனைஈன்ற
வயலூர்வாழ் குமரே சனே! 9

சங்கத்துத் தமிழ்கொண்டு சாற்றாத போதிலும்
தாளிணைகள் சாராத போதிலும்
சரவணப் பொய்கையில் ஆடாத போதிலும்
தைப்பூசம் காணாத போதிலும்
தங்குபுகழ் பழநிமலை ஏறாத போதிலும்
தணலேறி மிதிக்காத போதிலும்
தாழம்பூக் காவடிகள் தாங்காத போதிலும்
சஷ்டியிலே பாடாத போதிலும்
திங்களொரு நாள்விரதம் சேராத போதிலும்
திருக்கோவில் சுற்றாத போதிலும்
தென்பழநி கால்நடையாய் நடக்காத போதிலும்
திருவீதி புரளாத போதிலும்
மங்கையிரு பக்கத்தே வைத்தாளும் வடிவேலா
மைந்தனைநீ காக்க வேணும்
மன்னனே சிவகாமி மைந்தனே எனைஈன்ற
வயலூர்வாழ் குமரே சனே! 10

வயலூர்ப் பத்து முற்றிற்று

உ

# அநுராதபுரக் கதிரேசன் கோவில் பதிகம்

## க. சோமசுந்தரப் புலவர்

### காப்பு

அரிய கதிரேசன் அரும்பதிக மோதிடுவோர்
பெரிய பேறடைந்து பெருமையாய் வாழ்ந்திடுவர்
கரிய தும்பிக்கைக் களிற்றான் தன்னருளால்
பிரிய மனைமக்கள் பிறரோடும் மகிழ்ந்தே.

### பதிகம்

சரவணத் துதித்த அந்தச்
சண்முகப் பெருமான் றன்னைச்
சிரவணக் கஞ்செய் தேத்தித்
திருப்தியுஞ் சீருங் கொள்வோம்
அரசனைப் பதனைச் செய்யும்
அநுராத புரத்தி லென்னைக்
கரவனைப் பாக்கு வாறாங்
கதிரேசக் காத லோனே. 1

காதலால் யானுஞ் சென்று
கந்தனைக் கண்ணாற் கண்டேன்
ஏதமின் றியன்ற சீரார்ந்
தெழிலுறு கோவில் தன்னில்
சாதலாந் துன்ப மில்லை
சந்ததம் சுகமே யுண்டு
ஆதலா லனைவ ருஞ்சென்
றநுரனை வழுத்து வோமே. 2

வழுத்துவோம் வாழ்வு வேண்டி
வடக்கிருந் திடுவான் றன்னை
எழுத்திலே வடிக்கின் றேனே
எந்தனின் மாட்சி தன்னைப்
பழுத்தநற் பழம்நீ யென்ற
பான்மையாம் பாலன் முன்னை
அழுத்தியே அசுரன் தன்னை
அடர்த்தருள் செய்த தேவே. 3

தேவுதன் தெய்வத் தன்மை
தேர்ந்திடா என்னை யின்று
மேவுதன் கோவி லுக்கு
விருப்பொடு மீர்த்து வந்தே
சேவுகஞ் செய்வா யென்று
திருவழி காட்டி என்பாற்
பாவுகந் தருளும் எந்தை
பகர்திரு வடிகள் போற்றி. 4

திருவடி மறவேன் ஐயா
திருவருள் வழியில் வாழும்
ஒருவர மருளு வீரேல்
உள்ளமும் உணர்வும் ஓங்கும்
பெருநிலை தானே சேரும்
பிஞ்ஞுகா பேதை யேற்கும்
அருளுருக் காட்சி தந்த
அநுரையி லமர்ந்த கோவே. 5

கோவேயென் றென்று முன்றன்
கோலத்தைக் காட்டு வாயேல்
சாவேவ ராதா மென்று
சாகின்றேன் சாட்சி யில்லை
பாவாரஞ் சூட்டி மன்பாற்
பரவுத லறியேன் ஐயா
நாவீறிங் கிருந்து மென்ன
நமனிடம் ஏகின் றேனே. 6

நமனிட மேகு நாளில்
நாமேது செய்கின் றோமால்

எமதுநா னென்ப வற்றை
எறிவதுஞ் செய்வோம் வானம்
கமமிகு நிலையில் நாளுங்
கார்முகில் கதுவி வண்டர்
அமர்பொழில் சூழு மாரு
ரநுரையிற் கந்த வேளே. 7

கந்தவே ளுனது பாதங்
கருத்திலே வைத்தே னையா
வந்தனை வழிபா டாற்றி
வாழ்ந்திடு மக்கள் தம்மைச்
சிந்தனை செயல்சொல் யாவும்
சிறந்திட நல்வாழ் வீந்தே
அந்தமி லமர வாழ்வை
யளித்திடு மநுரை வேலே. 8

வேலனே விக்கி னங்கள்
வினைகளை விடுவிப் பாயே
ஞாலம்போல் லாங்கு நீங்கி
நலம்மிகக் காத்தி டாயே
சீலமார் தமிழ்முன் போலத்
திகழ்ந்திட அருள்செய் வாயே
மாலவன் மருகா கந்தா
வரந்தரு மநுரை வாழ்வே. 9

வரமது தருவாய் போற்றி
வானவ ரேறே போற்றி
கரஞ்சிரங் குவித்தேன் போற்றி
கார்த்திகைத் தீபா போற்றி
புரமிசை யிருப்பாய் போற்றி
புனிதனே குமரா போற்றி
அரனருள் சரவ ணத்தோய்
அநுரையாய் போற்றி போற்றி. 10

**அநுராதபுரக் கதிரேசன் கோவில் பதிகம் முற்றிற்று**

உ

# குன்றக்குடிப் பதிகம் — 1

## தண்டபாணி சுவாமிகள்

### காப்பு

வெண்பா

மன்றாடி தந்த மகனே! வயங்குபுகழ்
குன்றாத குன்றைநகர்க் கோமானே! - நின்றாளிற்
சேர முயலுமென்னைச் சிற்றறிஞர் ஏசும்வினை
தீரவிளை யாடலொன்று செய்.

### நூல்

கொச்சகம்

பொன்னைமதித் திருமாப்போர் புறங்கடையிற் போய்உழலும்
என்னையும்நின் னருட்சீடன் எனவுரைத்தற் கிசைந்தாயோ?
முன்னையுல கீரேழும் முறைப்படிபோய்த் திரும்புதகர்
தன்னைநடத் தியபாலா! தமிழ்க்குன்றைப் பதியானே. 1

அளிவளரும் மலர்க்கூந்தல் ஆயிழையார்க் ககம்குழையும்
எளியனையும் நின்சீடன் எனவுரைத்தற் கிசைந்தாயோ?
களி(று)உகைக்கும் மகவான்தன் கண்கலக்கம் தீர்த்தாண்டாய்!
குளிர்பொழில்சூழ் தருகுன்றைக் குடிபுரக்கும் கோமானே. 2

மானம்ஒரு சிறிதேனும் மருவார்போல் இரந்தலையும்
ஈனனாம் எனைச்சீடன் எனவுரைத்தற்(கு) இசைந்தாயோ?
கானகத்துக் குறப்பேதை களிகூர்ந்து தரும்தினைமாப்
போனகத்துக் கினியோனே! பொழிற்குன்றை புரப்பானே. 3

மாங்குயில்நேர் மொழிநல்லார் மயக்கத்தால் மாழைவிழைந்(து)
ஏங்கும்எனைத் தன்சீடன் எனவுரைத்தற்(கு) இசைந்தாயோ?
வீங்குமுலைத் துணைத்தெய்வ வேழமகள் மணவாளா!
ஓங்குமலை தொறும்ஆடல் உஞற்றும்குன்றைப் பதியானே. 4

சந்தேக மெனும்முதலை தான்விழுங்கத் தளர்ந்துமனம்
நொந்தேனைச் சீடன்என நுவலுகைக்கும் இசைந்தாயோ?
இந்தேறும் செஞ்சடிலத்(து) இறைவனரு ளியபாலா!
கொந்தேயும் மலர்ச்சோலை குலவுகுன்றக் குடியானே. 5

மணங்காட்டும் தண்கமல மலர்ப்பதத்துன் அடியவர்பால்
இணங்காத வன்நெஞ்சத்(து) எனைச்சீடன் என்றாயோ?
அணங்காரும் மயிலினமும் ஆடும்நலம் அவிர்சோலை
உணங்காத குன்றைநகர்க்(கு) உயர்ச்சிதரும் உரவோனே. 6

வாணாளை வீணாக்கி மகிதலத்தில் உழல்வேனை
நாணாமற் சீடனென நவின்றிடற்கும் இசைந்தாயோ?
மாணார்தண் கடம்பணியும் மணிமார்பத்(து) அயில்வேலா!
சேணாடர் புகழ்குன்றைத் திருநகரிற் செவ்வேளே. 7

நீற்றிகழ்ச்சி மலிதீயோர் நெடுங்கழுவின் மிசையேற
ஏற்றியநீ யெனைச்சீடன் எனவுரைத்தற் கிசைந்தாயோ?
மாற்றிலுயர் பொன்போலும் மழமேனிக் குமரேசா!
காற்றியலும் தண்சோலைக் கவின்குன்றைப் பதியானே. 8

சூரன்முதற் றானவரைச் சுடர்வேலால் அடர்கின்றாய்
ஈரமலிந் தெனைச்சீடன் எனவுரைத்தற் கிசைந்தாயோ?
வாரணப்புட் கொடியானே! மயிலூரும் வானவனே!
காரணவும் மலர்ச்சோலைக் கவின்குன்றக் குடியானே. 9

மூவர்களும் பணிந்தேத்தும் முண்டகப்பூம் பதத்தெந்தாய்!
யாவரினும் கடையாகும் எனச்சீடன் என்றனையோ?
சேவலம்புட் கொடியோனே! சிகியுகைக்கும் செவ்வேளே!
பாவலவர் புகழ்குன்றைப் பதிபுரக்கும் கோமானே. 10

இந்தணியும் சடையானை இயற்றமிழ்மா முனிவனைஆண்(டு)
அந்தணன்பால் எனைச்சீடன் ஆகுமென்ற விதம்யாதோ?
மந்தரறி வரியானே! வளங்குலவு குன்றைநகர்க்
கந்தனே! முக்காலும் காரணம்என் றுரைத்தானே. 11

கிள்ளைஎனப் பலகாலும் கிளத்தியசொற் கேட்டிருந்தும்
வெள்ளைமதி யாலிரந்து மெலியும்நெல்லைப் பதியானைத்
தள்ளைநிகர்க் குன்றைநகர்ச் சரவணவேள் சாக்கிரத்திற்
கொள்ளையருட் சீடனெனக் கூறியவா(று) எளிதன்றே. 12

# குன்றக்குடிப் பதிகம் — 2

## காப்பு

### வெண்பா

குன்றா அருள்விளக்கும் குன்றக் குடியில்வந்து
நன்றாம் பதிகம் நவில்வதற்கு - மின்றாழும்
வாகை வடிவேற்கை மன்னனுக்கு முன்உதித்த
தோகையடிப் பிள்ளை துணை.

## நூல்

### அறுசீர்த் தாழிசை

பொன்மயல் கொண்டுதெ ருத்தொறும் ஊர்தொறும்
போகா துனைநாடி
நன்மகிழ் வெய்திநின் ஆறெழுத் தேமிக நவிலப் பெறுவேனோ
பன்மறை யும்புக ழும்குரு வே!மயிற் பரியேறி நடாவும்
கொன்மலி யும்குக னே!வள மேவிய குன்றக் குடியானே. 1

அற்ற மறிந்து(உ)த வத்தகும் நின்னருள் அதையே கருதாமல்
மற்றதை யும்பொரு ளாமென நாடிடும் மடமென்
றொழிவேனோ
பற்றலர் அஞ்சிவ ணங்கிடக் கூவிய பறவைக் கொடிவாழ்வே!
குற்றமி லார்பர வும்புகழ் தோய்தரு குன்றக் குடியானே. 2

எங்கும்உன் அன்பன் எனப்பல ரும்புகழ் இயல்புற்
றும்என்நெஞ்சம்
பொங்குமி டிக்கென லால்மிக வாடிடப் போமே?
அருள்பொய்யோ
சங்குபு னைந்தொளிர் காதுடை யான்விழி தருசண் முகநாதா!
கொங்கும லர்ப்பொழி லால்முகில் ஓவரு குன்றக் குடியானே. 3

காலன்வ ரும்கொடி தெண்ணுகி லாரது கைப்புன்
பொருள்நாடிச்
சாலவ ருந்தவி டுத்தனை யே? இது துதிஎன் றறியாயோ?
மாலவ னும்புக ழப்பொரும் வேல்புனை வலிமைக் குகவேளே!
கோலம றைத்திரள் ஒலிட நீடிய குன்றக் குடியானே. 4

அன்றுது யின்றிடும் வேளையில் வந்தெனை அருணைக்
கிளிதான்நீ
என்றுப கர்ந்தனை, இப்படி விட்டிடல் இயல்பாம்
எனலாமோ?

நன்றுமி குந்துதி பாடிய கீரனை நலியா தருள்செய்தாய்!
குன்றுதொ றாடலின் முந்திய தாகிய குன்றக் குடியானே.5

இச்சைவ ழிப்படும் என்னையும் நின்னருள் எய்தும் பெரியோர்போற்
பிச்சைய ருந்திமு ழுத்திரு நீறணி பீடுற்றி டவைத்தாய்!
செச்சைம லர்ப்புரை யுந்தமிழ் பாடிய திறலா ளர்கள் மிகையாற்
கொச்சைய றக்கிளி பேசிய சீர்திகழ் குன்றக் குடியானே.6

சிட்டர்த மக்குற வாகியுன் அன்பர்கள் செப்பா நெறிசெல்லும்
துட்டர்த மைக்கறு வும்பெரி யோர்அடித் துகள்சூ டுதல்வம்போ?
மட்டவிழ் நீபம லர்ப்புய னே!எழில் மான்தோற் பறைவேடர்
கொட்டவி ளங்குகு றிச்சியுட் சீரிய குன்றக் குடியானே.7

காழிந கர்ப்புல வோன்நிக ராமொரு கவிநா யகன்வந்திங்(கு)
ஏழிசை யிற்றமிழ் பாடிடும் நாள்வரில் என்நெஞ் சமையாதோ!
தோழிய ரோடுறும் வேடமி னாள்அடி தொட்டுப் பணிவோனே!
கோழிவ ரைந்தகொ டிக்கழ காம்உயர் குன்றக் குடியானே.8

சஞ்சல முற்றுவ ணங்கிய வானவர் தம்மூர் மகிழ்வெய்த
வஞ்சம னத்தின னாகிய சூரனை வதைசெய் தனையன்றோ?
நஞ்சம யின்றவ னுக்கொரு மெய்ப்பொருள் நல்கும் குருநாதா!
குஞ்சரி பாகம்இ ருப்பவ னே!எழிற் குன்றக் குடியானே.9

ஆடையெ னப்புலித் தோலையு டுத்தவன் ஐந்தா யுதம்வைத்தோன்
மாடைநி றத்தயன் என்றொரு மூவர்கள் வாழ்வும் தருவாயோ?
ஓடைவ ழிக்கொடு மத்தக மீதிழி வுறுமா மதவேழம்
கோடையி டித்தொனி நாணமு ழங்கிய குன்றக் குடியானே.10

எந்தவ கைச்சம யத்தினும் அங்கவர் எண்ணும் குருவாகி
அந்தநெ றிக்குள்மு டிந்தமு டிப்பினை அருள்கின் றனையன்றோ?
கந்தம லர்க்கம லத்தினும் அன்றுறை கருணா கர!முருகா!
கொந்தலர் குல்லைமு டித்தவ னே!நெடுங் குன்றக் குடியானே. 11

கும்பமு னிக்கரு ளும்பெரி யோனெனும் குன்றக் குடியானைச்
செம்பது மத்தினள் வாழும்நெல் வேலியிற் சிறுவன்
பகர்பதிகம்
தம்பமன னத்தின மும்பகர் கின்றது தவமா முயல்வாரைக்
கம்பலை முற்றும்இ ருப்பிட மாகிய கலிநோய் அணுகாதே. 12

## குன்றக்குடிப் பதிகம் — 3

### அறுசீர் விருத்தம்

நந்தாரும் காதினன்போல் நானிலத்தில்
வாழும்நலம் நண்ணும் என்னை
நொந்தாருள் தலையாக்கல் முறைகொல்லோ?
அருட்கடைக்கண் நோக்கி யாள்வாய்!
இந்தாரும் சடைப்பெருமான் தருமதலாய்!
வடிவேலொன்(று) எடுத்த கையாய்!
கொந்தாரும் மலர்க்கடப்பந் தண்சோலை
குலவுகுன்றக் குடிக்கோ மானே. 1

நீதயைசெய் யாக்கொடுமை மலிந்ததனாற்
பரதவித்து நெஞ்சம் புண்ணாய்ப்
பாதகரும் இகழவொரு கரும்பாறை
தொடும்எனைக்கண் பார்க்க வேண்டும்
சீதமலி கங்கைதரு சிறுவனே!
வெண்சேவற் றிருக்கை யானே!
கோதறுமா தவமுடையார் பெருங்கூட்டம்
குலவுகுன்றக் குடிக்கோ மானே. 2



வேதாளத் தினும்கொடிய மனப்பேயாற்
பரதவித்து வெதும்பும் என்னைப்
பாதாளம் படுபாறைக் கிணறுதொ(டு)என்
றுரைத்துமிகப் படுத்த லாமோ?
மாதாளம் கொடுபொதுவில் நடம்புரிவார்
விழிக்கனலில் வருஞ்செவ் வேளே!
கூதாளம் புனைவேடர் குலம்பரவக்
குலவுகுன்றக் குடிக்கோ மானே. 3

திக்குமுழு மையுமறியத் தொடும்பாறைக்
கிணற்றினிடை தெண்ணீர் உண்டாய்
நெக்குருகித் தொழுமடியார் அனைவருக்கும்
ஒருபெருமை நிகழ்நாள் என்றோ?

முக்குணமும் கடந்தபர மோனபரா
 னந்தம்நல்கும் முருக வேளே!
குக்குடகே தனம்இயலும் திருவிழாக்
 குலவுகுன்றக் குடிக்கோ மானே. 4

பத்தர்களுக்(கு) எளியான்என் றருமறையும்
 ஆகமமும் பகர்சீ ருள்ளாய்க்(கு)
இத்தனைபா டடியனேன் படுமளவும்
 பொறுத்துறும்வல் லிதயம் ஆமோ?
முத்தமிழ்மா முனிபரவு முருகா! விண்
 ணவர்படைக்கோர் முதல்வா! மொய்ப்பூங்
கொத்தலர்மென் குழல்மடவார் விளையாடல்
 குலவுகுன்றக் குடிக்கோ மானே. 5

அஞ்சலளித் தாண்டாய்என்(று) இறுமாந்த
 பெருமைமுற்றும் அழிந்திட்(டு) ஒல்கிப்
பஞ்சரிக்கின் றேனதுசொற் பன்னிருகா
 தினும்புகுதாப் பாரங் கொல்லோ
கஞ்சமலர்த் தொட்டிலிடம் சரவணவா
 வியிற்றுயின்ற கந்த வேளே!
குஞ்சரிவெள வியகொழுநா! குறைவறுசீர்
 குலவுகுன்றக் குடிக்கோ மானே. 6

அறமொருசற் றானாலும் விழையாதார்
 களும்இகழ அடியேன் உள்ளத்
திறம்நெகிழப் படுத்துகின்றாய்! இதுதகுதி
 அலகருணை செயத்தான் வேண்டும்
பெறலரிய மெய்ஞ்ஞானக் கடலமுதே
 ஆறிருதோட் பெருக்கத் தெந்தாய்!
குறமகளுக் கினியநலம் முயல்வோனே!
 குலவுகுன்றக் குடிக்கோ மானே. 7

இச்சைமுழு தொழித்தருள வல்லாய்நீ
 எனஅடுத்தேன் எனைஎல் லோரும்
சைச்சைஎனற் காமாறு செயவிடுத்தாய்!
 இதுவுமொரு தருமந் தானோ?
செச்சைமலர்த் தொடைசூடும் திருத்தோள்எம்
 பெருமானே! தெண்ணீர்ப் பொய்கைக்

கொச்சைநகர்ப் புலவோனே! குளிர்தமிழ்ச்சீர்
குலவுகுன்றக் குடிக்கோ மானே! 8

கடுங்கோடைத் துயர்தவிர்ப்பத் தொடுங்கிணற்றில்
கடும்பாறை காணச் செய்தீண்(டு)
இடுங்கோதென்(று) ஒழித்தருள்வாய் எனக்கிரங்கா(து)
இருப்பதுவும் இசைதான் கொல்லோ?
நெடுங்கோலத் தினன்மகிழும் மருகோனே!
அறுமுகத்தோர் நிமல வேளே!
கொடுங்கோபச் சூர்தடிந்த கொற்றவனே!
குலவுகுன்றக் குடிக்கோ மானே. 9

உன்னிருபங் கயமலர்த்தாள் கருதியருள்
புரிவாய்என்(று) உறுதி கொண்டு
பன்னியபாட் டத்தனையும் பயனறுபாழ்
படுமெனில்எப் படியீண் டுய்வேன்?
சென்னியைந்து ளான்திருமால் அயன்முதலோர்
களும்பரவச் சிகண்டி யூர்வாய்!
கொன்னிமிர்வேற் படைப்புகழே கூறுவார்
குலவுகுன்றக் குடிக்கோ மானே. 10

ஒருபரம்நீ யேஎனநன்(கு) உணராதார்
சிலர்க்குமருள் உதவும் நின்றன்
இருபதமே கருதுமெனை இப்படிச்சோ
திப்பதற்கும் இசைந்தாய் அந்தோ?
சொருபநிரா மயமுடிவாம் பிரணவத்தின்
பொருள்விரித்துச் சொல்லும் ஞானக்
குருபரனே! உருவனந்தம் கொள்வானே!
குலவுகுன்றக் குடிக்கோ மானே. 11

கோடானு கோடிவளம் குன்றாது
குலவுகுன்றக் குடிக்கோ மானைத்
தேடாத நெஞ்சனைய கரும்பாறை
தொடுமொருவன் தெண்ணீர் வேண்டிப்
பாடாகித் தமிழ்ப்பதிகம் பரவுவார்
எவரேனும் படியிற் சற்றும்
வாடாத பேறடைந்து வானகத்தும்
இந்திரன்போல் வசிப்பா ரன்றே. 12

குன்றக்குடிப் பதிகம் முற்றிற்று

உ

# சிங்கை நகர்
# தண்டபாணி வருகைப் பதிகம்

ரெ. இராமசாமி

### காப்பு

சீரார்ந்த சிங்கைநகர் திருத்தண்டா யுதபாணிப்
பேரார்ந்த வருகையெனப் பேணுமிந்தப் பதிகத்தை
நாரார்ந்து பாடிடநான் நல்லருளைத் தந்திடவே
தாரார்ந்த கணபதியின் தாளிணைகள் காப்பாமே.

### சிங்கை நகர் தண்டபாணி

எங்கெங்கும் பைஞ்சோலை எழிலான திருவீதி
அங்கங்கும் சுறுசுறுப்புக் காளான மக்கள்சூழ்
பொங்கிவரும் வளமான பொன்னான சிங்கைநகர்
தங்கியுள்ள தண்டபாணி தலைப்படுத்த வருவாயே. 1

### இன்துணைத் தண்டபாணி

அந்நாளில் நகரத்தார் ஆக்கமதைத் தேடுதற்குத்
தென்னாடு தனிலிருந்து திருநாடாம் சிங்கைக்குப்
பொன்காசு கொண்டுவந்து பொருளீட்டுந் தொழிலுக்கே
எந்நாளும் தண்டபாணி இன்துணையாய் வருவாயே. 2

### தமிழ்தரும் தண்டபாணி

அறிவுக்கே அறிகுறியாம் அருள்வேலை அந்நாளில்
பரிவோடு சிங்கையிலே பரவிவந்து, பின்னாளில்

விரிவாக நகரத்தார் விளைவித்த திருக்கோயில்
தரித்திருக்கும் தண்டபாணி தமிழ்தரவே வருவாயே. 3

### அழகுதிகழ் தண்டபாணி

தங்கமணி முடியோடு தகதகக்கும் முத்தாரம்
பொங்குமொளிக் குண்டலமும் பொன்னான கூர்வேலும்
அங்கமதில் பட்டாடை அணிந்துவரும் அழகுதிகழ்
சிங்கைநகர் தண்டபாணி சிந்தைகுகை வருவாயே. 4

### பண்டாரத் தண்டபாணி

கொண்டாடும் நாட்களிலே கொள்ளும்பல் கோலமதில்
வெண்ணீறுக் காப்புடைய வியனான கோவணஞ்சால்
பண்டாரக் கோலத்தில் பாரிக்குஞ் சிங்கைநகர்
தண்டபாணித் தெய்வமே தலையளிக்க வருவாயே. 5

### சிவனாம் தண்டபாணி

மாறாத இளமையொடு மங்காத எழிலோடு
தீராத நறுமணமும் தெவிட்டாத இனிமையுடன்
கூரார்ந்த கடவுளியல் கொண்டருளும் சிங்கைநகர்
சீரார்ந்த தண்டபாணிச் சிவனேநீ வருவாயே. 6

### கனிவான தண்டபாணி

உனக்கென்று வைக்காமல் உன்னடியார்க் கீந்திடவே
உனதுசுக போகமெல்லாம் உகத்துறந்தே ஆண்டியெனும்
இனியவடி வாலெம்மை என்றென்றுஞ் சிங்கைநகர்
கனிவான தண்டபாணி காத்தருள வருவாயே. 7

### தஞ்சங்கொள் தண்டபாணி

நெஞ்சிலுள்ள கவலையெல்லாம் நேர்ந்துள்ள பாவமெல்லாம்
வஞ்சகரின் சூழ்ச்சியெலாம் வாட்டும்நோய்த் துன்பமெலாம்
''அஞ்சாதே'' எனஅருளி அகற்றிடவே சிங்கைநகர்
தஞ்சங்கொள் தண்டபாணி சடுதியில்நீ வருவாயே. 8

**புள்ளிமயில் தண்டபாணி**

பிள்ளையின்பம் இல்லாமல் பெருங்கவலை
கொள்வோர்க்குக்
கொள்ளையின்பம் கூட்டுகின்ற குலம்வாழும் குழவிபெற
வள்ளிதெய்வ யானையுடன் வரமருளச் சிங்கைநகர்
புள்ளிமயில் தண்டபாணி புறப்பட்டு வருவாயே. 9

**நன்பு நல்கும் தண்டபாணி**

அன்பறமும் அறிவுயர்வும் ஆக்கநிறை வளமைகளும்
இன்புகளும் பண்புகளும் ஏற்றம்நீள் ஆயுளொடு
நன்புகளும் என்வாழ்வில் நல்கிடவே சிங்கைநகர்
அன்புடனே தண்டபாணி அடிபணிந்தேன்
வருவாயே. 10

தண்டபாணித் தெய்வமே
தண்ணருளைச் செய்வையே
தண்டபாணித் திருவடி வாழ்க.

**சிங்கை நகர் தண்டபாணி வருகைப் பதிகம் முற்றிற்று**

உ

# செல்வச்சந்நிதித் திருப்பதிகம்

## த. பொ. கார்த்திகேசு

பன்னிருசீர்க் கழிநெடிலடி
ஆசிரியவிருத்தம்

அன்புகொண் டோர்தமக்கு அகலாத அப்பனே
அண்ணலே ஆறுமுகனே
ஆர்வமுடன் இன்னல்கள் அகற்றிடும் மெய்யனே
அடியேன்நான் என்செய்குவேன்
துன்புகொண் டோர்எவரும் துதித்திடத் தொடர்ந்துநீ
துரிதமாய்ச் சுடர்வேலுடன்
தோகைமயில் மீதேறித் தொல்லைகள் நீக்கியே
தோற்றிநீ ஆண்டருளுவாய்

இன்புகொண் டிடத்தேவர் இயைந்துமே ஏத்திட
எதிர்த்தவுணர் குலமழித்தோய்
எந்தையே ஏழையேன் என்னையும் இவ்வேளை
இரட்சிக்க வேண்டுகின்றேன்
சன்மித்த நீயே சரணமுனை நம்பினேன்
தாங்குத லுன்கடன்காண்
சந்ததம் புகழ்தொண்டை மானாற்றி லமர்செல்வச்
சந்நிதி வேன்முருகனே.

எங்கும்ம ருந்துசெய்வித் தேலாதுன் சந்நிதியில்
ஏத்தித் தொழுதபேர்க்கு
இசைந்தநின் மருந்தினால் எவ்வித நோய்களையும்
எளிதினில் நீகளைந்தே
தங்குசென்மப் பிணிக்கும் மருந்தாகுந் தற்பரா
தகுஞான பண்டிதா
தருணமிது வந்தெனையும் தான்காக்க வேண்டினேன்
சடாட்சரா கந்தவேளே

இங்குமுனை நம்பினேன் ஏற்றதணை வேறில்லை
ஏங்கித் தவித்துநின்றேன்
எழிலாருந் தெய்வமே இன்ப சஞ்சீவியே
இறைவனே யருள்புரிகுவாய்
சங்குதவழ் நெய்தலும் தென்றல்நன் மாருதமும்
சார்ந்தினி திலங்குகின்ற
சந்ததம் புகழ்தொண்டை மானாற்றி லமர்செல்வச்
சந்நிதி வேன்முருகனே.

ஒளியுநீ இருளுநீ ஒலியுநீ ஒருவனீ
உலகங்கள் அனைத்தும்நீயே
உரைக்கின்ற மறைகள்நீ ஓதுமாக மங்கள்நீ
ஒளிர்ந்திடும் உட்பொருளுநீ
வளியுநீ ககனநீ புனலுநீ அனலுநீ
மண்ணுநீ மற்றவையுநீ
வடிவுக்கோர் தெய்வநீ வகையுள அறிவாற்றல்
வருசெயல்கள் யாவுநீயே
அளியிலா நெஞ்சினேன் அனுதினம் நினையாது
ஆணவங் கொண்டலைந்தேன்
அப்பனே பிழைபொறுத் தடியேற்கு நின்கருணை
அளித்தென்றும் ஆண்டருளுவாய்
தளியிலும் மற்றுமுள தலங்களிலு முறைகின்ற
சத்தனே சாத்துவிகனே
சந்ததம் புகழ்தொண்டை மானாற்றி லமர்செல்வச்
சந்நிதி வேன்முருகனே.

செல்வச்சந்நிதித் திருப்பதிகம் முற்றிற்று

உ

# திருக்குமரன் திருப்பதிகம்

## ஸ்ரீராகவன்

முருகன் குமரன் குகனென் றுமொழிந்
துருகும் மனமே உவகை பெறுமே
கருணை பொழியும் கதிர்வே லவனை
ஒருநா ளுமறந் தொழியே னுழலேன்! 1

கந்தா குமரா கதிர்வே லவனே
மைந்தா முருகா மறைநா யகனே!
சிந்தா குலம்தீர்த் தேநீ யருள்வாய்
வந்தாள் எனையே வரமும் தருவாய்! 2

கந்தா சரணம் கதிர்வேல் சரணம்
சிந்தா மணியே தருணம் சரணம்
முருகா சரணம் முகுந்தன் மருகா
மூவா முதல்வா சரணம் சரணம்! 3

மூஷிக வாஹனன் தம்பீ சரணம்
வேத முதல்வா சரணம் சரணம்
விண்ணோர் வணங்கும் வேடுவ சரணம்
விருத்தனே சரணம் விருக்கனே சரணம்! 4

சரவண பவனே சரணம் சரணம்
ஹரவர ஸூதனே சரணம் சரணம்
சதுரா ஷண்முகா சரணம் சரணம்
வரதா வளம்தாள் சரணம் சரணம்! 5

சேவற் கொடியோன் சீக்கிரம் வருக
பாவம் பிணியும் போக்கிட வருக

கூவிய ழைக்கும் கூக்குரல் கேட்டு
வாவா வேலா வந்தே காக்க! 6

சூரனைத் துணித்த சுந்தரா வருக
வீரக் குமரா வள்ளி மணாளா
பாரில் உள்ளோர் வல்வினை போக்கிச்
சீராய் அருளே செந்தில் முருகா! 7

கந்தா சரணம் கடம்பா சரணம்
கார்த்திகை பாலா குருவே சரணம்
காராய்க் கலைமகள் நாவினில் நாளும்
சீராய் இருந்திடச் செய்திட வருக! 8

மாதவக் கண்ணன் மாயோன் மருகா
வள்ளி மணாளா வளமை தருக
வாழ்வைத் தந்திடு வறுமை நீக்கிடு
வணங்கும் எம்மோர் வழியே நின்றிடு! (வந்திடு) 9

குருவே போற்றி குமரா போற்றி
திருவே போற்றி செல்வா போற்றி
சிவனின் மைந்தா ஷண்முகா போற்றி
பரனே போற்றி! பார்வதி பாலா! 10

அறுமுகத் தரசே அண்ணலே போற்றி
அழகுக் குமரன் அடியே போற்றி
இனியன் குழகன் இணையடி போற்றின்
இனிதே வருவான்! இதமே தருவான்!! 11

திருக்குமரன் திருப்பதிகம் முற்றிற்று

உ

# திருச்செந்தூர் பாதயாத்திரைப் பதிகம்

## அரு. சோமசுந்தரன்

செந்தில் ஆண்டவா திருச்செந்தூர் ஆண்டவா
செந்தில் ஆண்டவா திருச்செந்தூர் ஆண்டவா

தேவகோட்டை அன்பரெல்லாம் பாட்டுப்பாடியே
தேடிஉன்னை நாடிவந்தார் செந்தூர்ஓடியே
பாவமெல்லாம் போக்குகின்ற பழனியாத்திரைப்
பக்தரெல்லாம் கூடிவந்தார் பாதயாத்திரை(செந்தில் ஆண்டவா)

வேலெடுத்துப் பாட்டுப்பாடி வெற்றியாகவே
வீரமோடு சுற்றிவந்தார் பற்றிலாமலே
நாலெழுத்துக் கற்றவர்கள் யாருமில்லையே
நமச்சிவாய என்றபின்னர் நாலுமில்லையே
(செந்தில் ஆண்டவா)

காடுமேடு பள்ளமுள்ளு கால்நடையாகக்
கந்தனுக்குச் சிந்துபாடி வேல்படையாகப்
போடுபோடு போடுஎன்று போகுதுபாரே
போரெழுந்த செந்தூருக்குக் காவடிபாரே!
(செந்தில் ஆண்டவா)

பாலரோடு பெண்ணும்ஆணும் பக்தியாகவே
பாட்டுப்பாடிக் கூட்டம்கூடி சித்தியாகவே
வேலருக்குச் சித்திரையில் காவடிஆட்டம்
வேலெடுத்த பேர்களுக்குச் சேவடிநாட்டம்
(செந்தில் ஆண்டவா)

மெல்லமெல்ல மெல்லச்செல்லும் பாதயாத்திரை
மேனிநோகத் தோணியாவான் பாதயாத்திரை
வெள்ளமாகக் கூடுகின்றார் மக்கள்கூட்டமே
வேலன்அங்கே ஆடுகின்றான் வீரஆட்டமே
(செந்தில் ஆண்டவா)

மூட்டைதூக்கி யாத்திரைக்கு முன்னேவந்தவர்
மோகமெல்லாம் மூட்டைகட்டிப் போட்டுவந்தவர்
வேட்டையாடும் வேலனுக்கு வள்ளிஆகிறார்
வேலனது பாதத்திலே புள்ளிஆகிறார்(செந்தில் ஆண்டவா)

சோறுபோட்டுப் பாதையிலே நீரினைஊற்றிச்
சுகமளித்த பேர்களுக்கு வேதனைமாற்றி
ஆறுமுகக் கந்தனவன் ஆறுதல்கூட்டி
அத்தனையும் தந்திடுவான் பால்முகம்காட்டி
(செந்தில் ஆண்டவா)

மாசிமகம் பச்சைசாத்தி மால்மருகாநீ
மாந்தருக்குக் காட்சிதந்தாய் வேல்முருகாநீ
காசிமுதல் குமரிவரை உனதுஎல்லையே
கால்நடந்து வந்தவர்க்குக் கவலைஇல்லையே
(செந்தில் ஆண்டவா)

வைகாசி விசாகத்திலே கடலின்எல்லையே
வந்திருந்த பேரைஎண்ண வார்த்தைஇல்லையே
பங்குனியில் உத்திரத்தில் பக்தர்கூட்டமே
பார்வையிலே ஈர்ப்பதுவும் பாலன்நாட்டமே
(செந்தில் ஆண்டவா)

செந்தூரின் கடற்கரையில் தேரும்ஓடுது
செட்டிநாட்டுக் காவடியும் சேர்ந்துகூடுது
எந்தூரும் எங்களுக்குச் சொந்தமில்லையே
ஈசன்மகன் வேலனைப்போல் பந்தமில்லையே.
(செந்தில் ஆண்டவா)

வெய்யில்என்றும் மழையிதென்றும் வாடவில்லையே
வேட்டிசட்டை சேலைமாற்றிப் போடவில்லையே
கையிலொன்றும் தோளில்ஒன்றும் கனக்குதுமூட்டை
கடலலையில் செந்தூரான் பிரிக்கிறான்ஏட்டை
(செந்தில் ஆண்டவா)

பச்சைமயில் வாகனத்தில் பறந்துவருகிறான்
பக்தர்குறை தீர்ப்பதற்கு விரைந்துவருகிறான்
இச்சைஎல்லாம் வேலனது பாதத்தில்தானே
எழுந்துவிட்டான் நம்முடைய நாதத்தில்தானே.
(செந்தில் ஆண்டவா)

பல்லக்கில் வந்திடுவான் பார்புகழ்வேலன்
பாதத்தில் வந்தவர்க்குப் பைந்தமிழ்ச்சீலன்
உள்ளத்தில் வைத்தவர்க்கோ ராயிரம்கோடி
உவகையுடன் தந்திடுவான் பாயிரம்பாடி
(செந்தில் ஆண்டவா)

அப்பனுக்கும் உபதேசம் அன்றளித்தவன்
அன்புடனே எங்களுக்கும் இன்றளித்தவன்
சுப்பனுக்குப் பின்னர்ஒரு தெய்வமில்லையே
சுகமளிக்க வருவதில்ஓர் ஐயமில்லையே.
(செந்தில் ஆண்டவா)

மேகமுட்டும் கோபுரமும் அங்கேதெரியுது
மின்னலைப்போல் வேலுமங்கே மின்னித்தெரியுது
தாகம்தீரச் செந்தூரானைப் பருகவாருங்க
தமிழால்அவனைப் பாடிஆடி உருகவாருங்க.
(செந்தில் ஆண்டவா)

**திருச்செந்தூர் பாதயாத்திரைப் பதிகம் முற்றிற்று**

உ

# திருச்சந்நிதிப் பதிகம்

## சி. ஆ. வேதநாயகம் பிள்ளை

### வெண்பா

சுந்தரச்சீர் சந்நிதிவாழ் சோதிதிருத் தாடுதித்த
சுந்தரச்சூர் போக்கத் துணையாமே - சுந்தரநீ
தாதாவே ரம்பவெனச் சார்ந்தோர்க் குதவுதிருத்
தாதாவே ரம்புயப்பொற் றாள்.

### நூல்

சீர்பூத்த தினகரப் பிரகாச மொருகோடி
செறிவுற்ற திருவதனமுஞ்
சித்திக்கு மன்பர்களை தீரவே யருளொழுகு
திருநயன மோரிரண்டு
மேர்பூத்த திருநீ றிலங்குதிரு நெற்றியு
மிறையிடப் பாகமேவு
மின்னருட் பாலுண்ட சின்னவா யுந்நன்ன
ரிளநகையு மபயவரத
நேர்பூத்த விருகரமு மிருசெவியு முபயரவி
நேர்குண்ட லங்களுஞ்சீர்
நின்றசெங் கமலமல ரொன்றுதிரு வடிகளொடு
நேர்நின்ற பாலவடிவாய்
தார்பூத்த பொற்சிலம் படியனேன் காணவே
சாமிவந் தருள்கசெல்வச்
சந்நிதித் தலவாச சின்மயக் குருராஜ
சண்முகக் குமரேசனே. 1

தஞ்சமுன் சரணார விந்தமே யன்றியித்
தரணிதனில் வேறில்லைகாண்
சருவலோ கக்குண வாரிநீ யென்றுனது
சந்நிதியை வந்தடைந்தே
னெஞ்சலில் லாததோர் கோடாநு கோடிபவ
மீட்டுமொரு மாபாவிநா
னென்றாலு மவையெல்லாம் போக்கியெனை
ரட்சிப்ப
திறைவனின் கடனாகுமே
கஞ்சிநேர் வஞ்சியுமை கொஞ்சுமுக மாறுடைய
கடவுளே யடலவுணராங்
களைகட் டறப்பயிர் தழைத்தோங்க வைத்தமுரு
காகருணை மழைமேகமே
சஞ்சலந் தீரவரு மன்பர் களிகூரவே
சாற்றுதுதி யோங்குசெல்வச்
சந்நிதித் தலவாச சின்மயக் குருராஜ
சண்முகக் குமரேசனே. 2

இராசாதி ராசனீ பிரகாச சோதிநீ
யேழைபங் காளனுந்நீ
யென்றுமழி யாதவொரு பொருளுநீ யருளுநீ
யேற்பவர்க் கீபவனுநீ
கராசலம் முதலூ ரெறும்பிறுதி யானவுயிர்
காத்தளித் திடுமென்னைநீ
கங்குல்பக லில்லாத பேரின்ப பூரணக்
காட்சிதரு மோட்சமுதனீ
தராதல மனைத்துநீ யேயெனப் பகர்வரருள்
சாதித்த மெஞ்ஞானிகள்
சற்றேனு மறுவிலா நாயகனே வுன்பெருமை
சாற்றவெளி தாகிவருமோ
சராசரப் பிரபஞ்ச மீடேற வானரு
டரித்தவ தரித்தசெல்வச்
சந்நிதித் தலவாச சின்மயக் குருராஜ
சண்முகக் குமரேசனே. 3

சூரனொடு தாரகன் சிங்கனே யாதியாச்
சொல்லொணா வலிபடைத்த

தொலைவிலா வசுரருக் கஞ்சினோ மையநின்
றுணையடிகள் சரணமென்றே
பாராவிண் ணாதனரி பங்கயன் முதலாய
பண்ணவர்கள் வந்துவேண்டப்
பண்டவுண ரைத்தொலைத் தமரருக் கருடந்த
பரதனே வரதகோவே
தீரகத் தில்லாத நீசனே னானாலும்
நினதடிமை யென்றுமிந்த
நேர்மையொன் றைக்கொண் டிரங்கியென்னை
யாளுவாய்
நேசனே நித்தமுத்தித்
தாரகத் துருவான வேலகத் தமலனே
சச்சிதானந்த செல்வச்
சந்நிதித் தலவாச சின்மயக் குருராஜ
சண்முகக் குமரேசனே. 4

உலகத்தி லேழைகளை மிகவாட்டி யேயவர்க்
குற்றபொருள் கொள்ளைகொண்டே
யுற்றமத யானைபோல் முற்றகங் காரமா
யொன்றையுங் கருதிடாமற்
பலமற்ற விவர்துரும் பாயிரஞ் சேர்ந்துமெம்
பருவலிக் கீடாவரோ
பாருமிது வெனவேபி னாடுவோர் தம்மோடு
பரிகாச வார்த்தைபேச
நலமற்ற பாவிகளை யருளற்ற லோபிகளை
நாஸ்திகம் பேசுவோரை
நானணுகி டாமலுன் சீலமுறு மடியரொடு
நாடியே வாழவைப்பாய்
சலமுற்று மமிர்தெனப் பிணிவீட்டி யணிகாட்டு
தவளத் தடாகமருவுஞ்
சந்நிதித் தலவாச சின்மயக் குருராஜ
சண்முகக் குமரேசனே. 5

பாம்பின்வாய்ப் பட்டதொரு தேரையைப் போலவும்
பாய்புலியின் வாய்ப்பட்டதோர்
பலமிலா மானதைப் போலவு மியானேழை
யையுளூற் றயருநிலையை

யோம்பியருள் பொழிகின்ற வீராறு கண்கொண்ட
வுயர்சோதி யானகுமரா
வுணரா திருத்தலென் னோதெய்வ மேதுன்
பொழிந்தமரர் யாரும்வாழ
வாம்பிரப் பேர்மரம தாகியயர் சூர்முதலை
யட்டவடி வேன்முருகனே
யம்புவியில் மெய்யன்பர் சிந்தைகளி யோங்கவே
யாதியுமை யாதியருள்கூர்
சாம்பசிவ மூர்த்திதர வந்ததிரு மைந்தனே
சாரந்தவினை போக்குசெல்வச்
சந்நிதித் தலவாச சின்மயக் குருராஜ
சண்முகக் குமரேசனே. 6

ஆயுள்வே தியரெலாங் கைவிட்டு மாறாத
வருநோய்க ணின்னதருளா
மருமருந் தாற்போக்கி யானந்த முறுகின்ற
வன்பர்கூறுங் களவுபொய்
யோயுநா ளில்லாத வஞ்சகக் கோண்மூட்
டுலுத்தர்தம் பொய்வழக்கி
னுக்கிரமிகு தண்டனைச் சிறைமீளு மன்பரிவ
ரொருகோடி பேர்களுன்னை
வேயுள்வரு முத்தேயிவ் வுலகுக்கு வித்தேயெம்
வினைநீக்கி யாளவந்த
விமலவென் றிசைபாடி யுருகவே யானொருவன்
வேதனைப் படனீதியோ
தாயுமாய்த் தந்தையா யாவுமா யேகமாய்ச்
சற்குருவு மானசெல்வச்
சந்நிதித் தலவாச சின்மயக் குருராஜ
சண்முகக் குமரேசனே. 7

ஐயகோ கானலைச் சலமென்று நம்பியே
யரணிய மலையுமான்போ
லடியனே னிவ்வுலக மாயையி லகப்படீஇ
யஞ்ஞான வஞ்சருறையும்
பொய்யான வித்தேக மெய்யென்று நம்பியே
பொருட்படுத் தாதுனுபயப்

பொன்னடித் தாமரையி னன்னேச மாகமெய்ப்
 போதமென் றோவருளுவாய்
மெய்யர்க்கு மெய்யனாய் மேதினி யெலாமாகி
 மேலிடம தாகியென்று
 மேவுற்ற சோதியா யாதியாய் நீதியாய்
 விண்ணவர்கள் போற்றுகின்ற
தையலுமை யாள்பெற்ற செல்வனே செல்வமுறு
 தண்டலைகள் சூழ்ந்திலங்குஞ்
 சந்நிதித் தலவாச சின்மயக் குருராஜ
 சண்முகக் குமரேசனே. 8

மாடுண்டு கன்றுண்டு மக்களுண் டழகான
 மாடமா ளிகைகளுண்டு
 மதியுண்டு குறையாத நிதியுண்டு சொகுசுண்டு
 மாளாத சேனையுண்டு
நாடுண்டு நகருண் டெனக்கருதி வாழ்வுற்ற
 நவகோடி முடிமன்னர்க
 ணமனார்த முலகேற நாங்கண்டு மிவ்வுலக
 நாட்டத்தி னோக்கமுற்றே
யாடுண்டு பெரியர்நாம் வலியரென் றுலகோரை
 யறைகூவு முறைகேடர்தம்
 மறியாமை யாம்பேயி தென்னவறி யாததோ
 வயின்ஞான வேலேந்தியே
தாடுண்ட மாயவுணர் கோடுண்ட மாய்விழச்
 சமராடு குமரச்செல்வச்
 சந்நிதித் தலவாச சின்மயக் குருராஜ
 சண்முகக் குமரேசனே. 9

கற்றுமறி யேன்பெருமை கேட்டுமறி யேன்சென்று
 காதலுட னடியர்தம்மைக்
 கண்டுமறி யேன்றொண்டு செய்துமறி யேனொன்று
 காசினியி லிட்டுமறியேன்
பற்றுமொழி யில்லாத பாவியே னினதருட்
 பாங்குசெறி சந்நிதியிலாம்
 பண்புவர வந்தடைந் தேனைய னேயெனைப்
 பாதுகாத் தருள்புரிகுவாய்

சுற்றுபர மானந்த சோதிமழை மேகமே
தொல்வினை மாற்றுதெய்வச்
சுத்தமது ரப்பிரச மொத்தமல முத்தருரை
சொற்றதிரு மாமருந்தே
சற்றொழிவி லாதகிரு பைப்பெரிய வெள்ளமே
சந்தத முயர்ந்தசெல்வச்
சந்நிதித் தலவாச சின்மயக் குருராஜ
சண்முகக் குமரேசனே. 10

காலாயு தத்துவச நாதாவெ ராதரவு
காணேன் கடற்புவியிலே
கருதுதுணை தந்துநீ கடுநோ யடுக்கிலொரு
கைமருந் தாகிநமனென்
பாலாயு தம்விடுங் காலதி நேர்நின்று
பாதுகாத் தருள்புரியவும்
பண்புதரு திருநாம மன்பினா லோதியே
பாடிக் கசிந்துருகவும்
வேலாயு தாதிரு வுளம்பெற் வேணுமருள்
வெள்ளமே வெள்ளவமுதே
விளையாடு மயிலேறு ஜெகதீச னேயமரர்
வேண்டுகார்த் திகைமாதரார்
தாலாட்டு கந்தசர வணபவா னந்தனே
தவராசர் போற்றுசெல்வச்
சந்நிதித் தலவாச சின்மயக் குருராஜ
சண்முகக் குமரேசனே. 11

திருச்சந்நிதிப் பதிகம் முற்றிற்று

உ

# திருப்பரங்குன்றப் பதிகம்

க. சரவணமுத்து

### மயிலை மருதடி விநாயகர் துதி

ஆலரசு மருதுகுளம் வயல்செறிவு நாடு
அங்குநடு வேதோன்று மோங்கார வீடு
பாலர்முதல் விருத்தர்தொழும் பயன்கொள்குரு மேடு
பண்புடையார்க் கருள்கொடுக்கும் பத்தியுறை கூடு
மாலயனும் போற்றுகின்ற மந்திரநல் வீடு
மறைந்திருக்க மனைதனைநீ மதியுடனே தேடு
காலமிது கணபதியின் கழலிணைகள் நாடு
காதலுட னருள்புரிவர் கருத்துடனீ பாடு.

### நூல்

(திருத்தாண்டகம் போல)

குணமலையே திருவுருவே குருவே ஞான
குலக்கொழுந்தே யருள்விளக்கே குவல யத்தின்
பணநிதியே வளர்மதியே பற்றொன் றில்லாப்
பரம்பொருளே சுகதருவே பால சுப்ர
மணியரசே மறைவடிவே மலர்ப்பூங் கொத்தே
மாற்றுயர்ந்த பசும்பொன்னே மணவா ளாவா
பணிவேனான் பரங்குன்றப் பதியே வாவா
பன்னிருகைப் பாலகுகா வாவா நீயே. 1

கதிதருவோய் சரணுனக்கே கார்த்தி கேயா
கலாநிதியே யருள்மயமே கருணை தாதா
துதிசெயவுந் தோத்திரங்கள் பாடிப் பாடித்
தொண்டுபுரிந் திடவுமருள் தருவாய் சோதி
மதியுடையான் மகிழவரு பாலா மாயோன்
மருகசர வணபவனே மணவா ளாவா
பதிவேனான் பரங்குன்றப் பதியே வாவா
பன்னிருகைப் பாலகுகா வாவா நீயே. 2

போற்றிசெயப் பற்றறுக்கும் புனிதா நாயேன்
பூதலத்திற் பிறந்துபடும் பாடு போதும்
ஆற்றுவா ரொருவரில்லை யலைந்தே னையா
வண்டினே னாருயிரே யறிவா யென்னோய்
சாற்றினேன் பஃறரமுஞ் சாற்றி னேன்காண்
ஷண்முகனே யறுவர்முலை தரவே யன்று
பாற்குடித்தாய் பரங்குன்றப் பதியே வாவா
பன்னிருகைப் பாலகுகா வாவா நீயே. 3

ஆருயிரே யருமருந்தே யடியார் வேண்ட
வவர்க்கருள்செய் யனாதிமல ரகிதா வெற்குச்
சீருளநற் சுகபெலந்தா செலவுந் தாதா
ஜெயமோடு நற்குணமுஞ் சிறப்புந் தாதா
பேரறிவோ டன்புகலை ஞானந் தாதா
பிறப்பொழிய மோட்சசுக வாழ்வுந் தாதா
பாருலகாள் பரங்குன்றப் பதியே வாவா
பன்னிருகைப் பாலகுகா வாவா நீயே. 4

எண்ணரிய பிறவிதொறு மிறந்தே பின்னு
மெடுத்தெடுத்த வுடலமெலா மிறந்தே தீர
விண்ணகத்தும் மண்ணகத்தும் வினைக ளாலே
வீணாசை தொடர்ந்தென்னை வீழ்த்தி யாட்ட
புண்ணியனே யுனைமறந்தேன் புனித மற்றேன்
புன்குரம்பைக் குணவுபெற வலைந்தேன் போதும்
பண்ணவனே பரங்குன்றப் பதியே வாவா
பன்னிருகைப் பாலகுகா வாவா நீயே. 5

சிரமேற்கை குவியேனான் சிவாய வென்னேன்
சிந்தியே னனுஷ்டான செபமுஞ் செய்யேன்
இரவேயோ பகலேயோ வெந்நே ரத்து
மிந்திரிய வழிமயங்கித் திரிவே னுக்கு
வரமதுதான் வரப்போமோ வாவா வீசா
வந்தனைசெய் திடவழிநீ காட்ட வாவா
பரமதிருப் பரங்குன்றப் பதியே வாவா
பன்னிருகைப் பாலகுகா வாவா நீயே. 6

உற்றாரை யுறவினரை யுலகி லுள்ள
வொருபேரை யுடலமது விடுமந் நேரம்
பற்றாகக் கொள்வேனோ கொள்வே னல்லேன்
பரமதயா பரனேயுன் பாரங் கண்டாய்
சற்றேனும் பிணிவறுமை தாங்கி லேன்நான்
சாமியினி யிகபரமுஞ் சரணுன் பாதம்
பற்றினேன் பரங்குன்றப் பதியே வாவா
பன்னிருகைப் பாலகுகா வாவா நீயே. 7

அருவமே யருவுருவே யுருவே யன்னாய்
அப்பாவென் னாருயிரே அன்பே யிந்தக்
கருவினான் படுந்துயரங் கண்டாய் கண்டாய்
கர்த்தனே கஷ்டமிது நீங்க வைப்பாய்
அருவிருந்தே யருட்பழமே யனைத்துந் தந்த
வநவரத நாயகனே யாசி தாதா
பருபணியே பரங்குன்றப் பதியே வாவா
பன்னிருகைப் பாலகுகா வாவா நீயே. 8

பாலகனா யறுவர்முலைப் பாலை யுண்டாய்
பழம்வேண்டிப் பழநீயாய்ப் பழனி சார்ந்தாய்
வேலதுகொண் டேசூர னுடலங் கீண்டாய்
வேடர்குல வள்ளியைநீ வேட்டல் செய்தாய்
சாலவுநீ முதுமையிலே யிளமை வாய்ந்தாய்
சற்குருவா னாய்நீயெப் பொருளு மானாய்
பாலவணா பரங்குன்றப் பதியே வாவா
பன்னிருகைப் பாலகுகா வாவா நீயே. 9

கண்டேனின் கருணைமுக மாறுங் கண்டேன்
கதிதருநி னபயவர கரங்கள் கண்டேன்
கண்டேனின் வடிவேலு மயிலுங் கண்டேன்
கந்தாவுன் றேவியரின் காட்சி கண்டேன்
கொண்டேனின் மீதுபெரு மாசை கொண்டேன்
குவலயத்தில் வேறொருவர் துணையுங் காணேன்
பண்டிதா பரங்குன்றப் பதியே வாவா
பன்னிருகைப் பாலகுகா வாவா நீயே. 10

**திருப்பரங்குன்றப் பதிகம் முற்றிற்று**

உ

# தென்பசிபிக்காவலர் அருள்மிகு பிஜிமுருகன் பதிகம்

## வித்துவான் அம்பை சங்கரனார்

### காப்பு

வெண்பா

சீராக யான்சாற்றும் செஞ்சொற் பதிகமிதை
நேராக வேமுடிக்கச் செய்யுமே — ஏராக
செம்பிஜி நந்திநகர் செல்வக் கணபதியின்
செம்பதுமத் தாளிணைகள் தாம்.

### நூல்

பன்னிருசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

அண்டபகி ரண்டமும் உன்னாட்சி ஆனது
அதிலுமோர் ஐயமில்லை
ஆயினும் தென்பசிபிக் கடலினுள பிஜியை
ஆனந்த மாகக்கொண்டாய்
கண்டமாம் ஆத்திரே லியரையும் தென்அமெரிக்
காவினரை ஆளநினைவோ
கரும்புவளர் நாடதில் கருத்தாகக் கோயில் கொளும்
கவுரிகண் ணாம் கரும்பே!
கண்டத்தின் நீலமுன் தந்தையின் கருணையை
காசினியெங் கும் சாற்றுமே
கண்ணுதற் பரமனின் கண்ணாய் விளங்கியொளிர்
கண்மணி! கடம்ப! முருகா!
கண்டனைய பிஜியில் நந்திநகர்க் கோயிலுள
செல்வமுத் துக்குமரனே!
அடியவர்க் கருளுவான் அனைத்துலகும் அருள்மழையைப்
பொழியுமெம் முருகையனே. 1

உலகெலாம் தமிழர்தம் நாகரிகம் ஒருகாலத்
தோங்கி யிருந்த தென்பர்
உண்மையென நிறுவுவான் ஒளிமிகுநற் பிஜியில்
ஒளிர்கோயில் கொண்டிலகுவாய்
அலகிலா இன்னல்கள் யாம்பட்ட பாடிங்கு
அகிலலோ கமுமறியுமே
அருள்மிகுநின் கடைக்கணருள் அடியோமை ஆட்கொண்டு
ஆதரித் துளதுசத்தியம்
இலகுகடல் நடுவிலே குன்றுதோ றாடுபவன்
எளியோங்கட் காக இரங்கி
இரட்சிக்க வந்தநின் எளிமையை என்றும்நாம்
எண்ணியே நெஞ்சு நெகிழ்வோம்
திலகமென ஒளிர்நந்தி திருக்கோயில் கொண்டிலகும்
செல்வமுத் துக்குமரனே!
அடியவர்க் கருளுவான் அனைத்துலகும் அருள்மழையைப்
பொழியுமெம் முருகையனே. 2

இறைவனி னின்னருள் பத்தருக்கு நேராக
எப்போதும் வாய்த்ததில்லை
குருவினால் திருக்கோயில் மூர்த்தியால் அடியரிம்
மூவரா லன்றிநிகழா
நிறையன்பு அடியராம் அறுபத்து மூவருமிம்
மும்முறையுள் ஒன்றுபற்றி
முருகா! உன் அடியிணைகள் தஞ்சமென அடைந்திட்டார்
அறுமுகச் சிவனுநீயே!
குறைவிலா நிறைவாய குகசுப்பிர மணியனே!
குருவாயும் உபதேசித்தாய்
சாதுகுப்பு சாமியை பிஜிக் கனுப்பிநீ
சற்சனசங் கங்கூட்டினாய்
துறைபல்கு நந்திநகர் திருக்கோயில் கொண்டிலகும்
செல்வமுத் துக்குமரனே!
அடியவர்க் கருளுவான் அனைத்துலகும் அருள்மழையைப்
பொழியுமெம் முருகையனே. 3

தமிழ்தமிழென் றாலுமே அமிழ்துதான் ஊறிவிடும்
தண்ணளி இசைஇனிமையும்

புண்ணியப் பயனுமே போதரு மாதலால்
புவியுளோர் போற்றிமகிழ்வர்
இமிழ்கடல் வரைப்பினுள் பிஜித்தீவு தன்னிலே
இருந்தமிழ்க் கல்விநிலையம்
சிறப்பாக ஓங்கிநல் தமிழாம் அமுதினைச்
சிறார்பலரும் துய்க்கின்றனர்.
தமிழ்க்கல்விக் கழகமும் திருமுறை களும்நாளும்
சிறந்தோங்கி மிளிர்ந்திடவுமே
செந்தமிழ் முருகைய! சிறிதுமனம் வைத்தருள்
செந்திலம் பதிஅதியனே!
அமிழ்தெனக் கருப்பஞ்சாறு ஆறெனப்பாய் நந்தி
அழகமர்முத் துக்குமரனே!
அடியவர்க் கருளுவான் அனைத்துலகும் அருள்மழையைப்
பொழியுமெம் முருகையனே! 4

எங்குமே இறைவனி னிருப்பிடம் அவனன்றி
எதுவுமே நிகழ்வுறாது
பசுவிற்கு உடலெலாம் பால்நிறைந் திருக்கினும்
பால்மடியில் தான்சுரக்கும்
பொங்குமிவ் வுலகினில் போற்றுநல ஆன்றோர்கள்
பூரண அருள்பெறவுமே
பூரண! உன் ஆலயம் புவியினில் எடுத்தனர்
போற்றுதற் குரியதாகும்
நங்குலக் குமரனருள் நாடியே பிஜியரேம்
நற்கோயி லும்சமைத்தேம்
நம்பினர்க் கருள்சுரக் கும்குமர! நாயேமை
நற்கதிக் காளாக்குவாய்
மங்குல்நிறை பிஜியில் நந்திநகர் இலகிடும்
செல்வமுத் துக்குமரனே!
அடியவர்க் கருளுவான் அனைத்துலகும் அருள்மழையைப்
பொழியுமெம் முருகையனே! 5

ஒருதரம் சரவண பவாஎனவும் ஓதினால்
ஓடிவரும் உந்தன்நிலையை
உளத்திலே கொண்டுமே உருகிடும் அடியரேம்
உளத்துன்பம் போக்கியருள்வாய்

கருதரிய உன்னுடைய பெருமையை உன்னியே
காசினியில் ஞானியர்பலர்
அருணைமா முனிவரரும் திருப்போரூர் அடிகளும்
அலகில்புகழ்ப் பாம்பனடியும்
பொருவரிய கவிதைஅஞ் சலியினால் உனதுபுகழ்
கனக்கவே அறியச் செய்தார்
ஏழையேம் எம்முடைய இருந்தமிழ் மாலையையும்
இதயத்தி லேற்றுமேநீ
மருவினிய பிஜியில் நந்திநகர் தன்னில்வளர்
செல்வமுத் துக்குமரனே!
அடியவர்க் கருளுவான் அனைத்துலகும் அருள்மழையைப்
பொழியுமெம் முருகையனே! 6

சத்தியின் றிச்சிவ மில்லைஎன் பதுதானும்
சாத்திர முடிபுமாகும்
அன்பின்றிச் சிவமுமே இல்லைஎன்பதுதானும்
அருள்மூலர் திருவாக்குமாம்
பத்தியின் பாலராய் உள்ளநம் தமிழரேம்
பரமனே உன்னையன்றி
பாவிக்க வெண்ணார துண்மைநா டறியுமே
கடம்பைச் சந் நிதிமுறையைப்போல்
எத்திக்கும் போற்றுநல் எழில்முருகன் நற்றலம்
பாடல்கள் மெத்தஉண்டு
எளியேமுக் கருள்சுரந்து எங்கணும் விளங்கிடும்
எம்பிஜி நந்திமுருகா!
சித்திக்கு வித்தாய பிஜியில் நந்திநகர்
செல்வமுத் துக்குமரனே!
அடியவர்க் கருளுவான் அனைத்துலகும் அருள்மழையைப்
பொழியுமெம் முருகையனே 7

யாவரும் போற்றுநல் களவியலுக் குயர்ந்த உரை
இஃதென உணர்த்தியவன்நீ
இருங்கந்த புராணத்தை என்றுமே நிற்கவே
ஒன்றுமே திருத்தியவன்நீ
பாவரும் புலவர்பலர் பல்லாண்டு காலமாய்ப்
பரவவும் மகிழ்ந்திட்டநீ

பாமரர் யாங்களும் பாடுமிப் பாட்டினை
பன்னிரு செவியிலொன்றின்
தேவரும் தேவியர்கள் அருளோடு கேட்டுமே
செவிகுளிர அருளொ ணாதோ?
இச்சையும் ஞானமும் செயலுமே மூன்றாக
இசைந்துள ஆற்றலென்பர்
ஆவரும் ஆற்றலுடன் அருள்பிஜி நந்திநகர்
செல்வமுத் துக்குமரனே!
அடியவர்க் கருளுவான் அனைத்துலகும் அருள்மழையைப்
பொழியுமெம் முருகையனே. 8

என்றுமே குன்றின்மீ தமர்ந்துறையும் இறைவனீ
எளியோங்கட் காகவுந்தன்
பன்னியர்க ளிருவருடன் கடற்காற்றை ஏற்றுமே
பரம! நீ வருகைபுரிந்தாய்
குன்றமர்ந் துறையுமெம் முருகைய! நெய்தலைப்
பேணியது என்றும்மறவேம்
நந்திநகர் தன்னிலே துறுகலின் மீதுன்றன்
காட்சிஅள விடலொணாதே
துன்றுநா லாயிரங்கண் படைத்திலன் நான்முகன்
என்றுமுனர் ஓதியசொல்
உண்மையாய் விளங்குதே உன்னெழிற் காட்சிதனை
ஓதியும் முடிவொணாதே
நின்றநல் பிஜியின் நந்திநகர் தன்னிலே
செல்வமுத் துக்குமரனே!
அடியவர்க் கருளுவான் அனைத்துலகும் அருள்மழையைப்
மெம் முருகையனே. 9

வகுத்தான் வகுத்தபடி வந்துந்தன் தாள் சேர்ந்தோம்
வாழ்விப்ப துன்பரங்காண்
ஆகமமுறைப்படி ஆன்றோர்கள் வாழ்த்துடன்
ஆலயமும் நன்குசமைத்தோம்
தொகுத்தபல் கோடியாம் உயிரையும் காத்துநீ
இரட்சிப்ப துந்தன்வசமே
தொண்டனேன் வாழ்வுக்கும் துணையாக இருந்துமே
கரையேற்று வாய்அறுமுகா!

மிகுந்தசெங் கருணையாய்! மேதினியின் மீதுவந்து
மிளிர்ந்தஉன் கடைக்கணோக்கு
பரவிடும் உயிர்களுக் கெல்லாமும் காட்டிநீ
பரகதியும் கூட்டுகந்தா!
தொகுத்தநல் பிஜியில் நந்திநகர் தன்னுளே
செல்வமுத் துக்குமரனே!
அடியவர்க் கருளுவான் அனைத்துலகும் அருள்மழையைப்
பொழியுமெம் முருகையனே 10

**தென்பசிபிக் காவலர் அருள்மிகு பிஜிமுருகன் பதிகம் முற்றிற்று**

உ

# நல்லைப் பதிகம்

## க. மயில்வாகனப்பிள்ளை

### காப்பு

வெண்பா

சீர்மே வருணல்லைச் செங்கைவடி வேலனுக்குப்
பார்மே லொருபதிகம் பாடவே—கார்மேகஞ்
சார்மயிலை மாமருதத் தண்ணிழலில் வீற்றிருக்குங்
கார்மருவு யானைமுகன் காப்பு.

### நூல்

ஆசிரிய விருத்தம்

அலகிலாச் சூரியர்க ணிலவல்போற் ப்ரகாச
மானபொன் மேனியழகும்
ஆறுகுண மானமுக மாறுமுடி யாறுமீ
ராறுநற் கருணைவிழியும்
இலகுசீர்க் குறுமுறுவ லுஞ்சிறிது மஞ்சிடே
லீகுவா மருளையென்றே
இயையபய வரதமோ டெஃகமுத னற்படைக
ளேந்துமீ ராறுகரமும்
உலகெலாந் தொழுமுபய கிண்கிணிச் சீறடியு
முலவாத பட்டுடையுமாய்
ஒளிருமயில் வாகனத் தேறிநின் மடமாத
ரோடுகண் குளிரவருவாய்
விலகிடாச் செயலினா லடியனே னிதமுமுனை
வேண்டிப்பு கழ்ந்துதொழுவேன்

மேயவிப் பாரிலே மிளிர்நல்லை யூரிலே
விரவும்வேற் சத்திதரனே. 1

எந்நாளு மெனைவருத் திடுவறுமை போக்கிநீ
யேர்கொணிலை வைப்பதெந்நாள்
இரவுபக லோயாது கவலையால் வாடுமென்
னிருதயங் குளிர்வதெந்நாள்
துன்னார்த மிடையூறு நீக்கியனு கூலநீ
துணையிலேற் கருள்வதெந்நாள்
தொலையாம லெனைநிதம் பீடிக்கு நோயறச்
சுகமதைத் தருவதெந்நாள்
அஞ்ஞான திமிரமற நல்லறிவு கூட்டியே
யடியெனைக் காப்பதெந்நாள்
அமரரொடு முனிவர்முதல் யாவரும் போற்றிநின்
றர்ச்சிக்கு மேகமுதலே
மெய்ஞ்ஞான வுததியே நிதிபொழியு மேகமே
விரவுசுக வெள்ளமேசீர்
மேயவிப் பாரிலே மிளிர்நல்லை யூரிலே
விரவும்வேற் சத்திதரனே. 2

பூவுலகி லெனையீன்ற பொன்னனைய வன்னைநீ
போற்றியரு ளப்பனுந்நீ
பொங்குகலை ஞானமருள் சற்குருவு நீயுளம்
பூரித்த தெய்வமுந்நீ
பாவுலக மானநில நீர்நெருப் பொடுவாயு
பரவுமா காயமுந்நீ
பணியுமடி யார்நிதமு மேத்தித் துதித்திடும்
பரிதிமதி சீவனுந்நீ
மூவுலகு மாளிந்த்ர போகமருள் வோனுநீ
முராரியய னாக்குவோனீ
மொழியுமெய்ப் பத்தியும் புத்தியுஞ் சித்தியும்
முத்தியுட னீபவன்னீ
மேவுலக கோடிதமை யாக்கிவைத் தழித்திடும்
விண்ணவா சரணுனக்கே
மேயவிப் பாரிலே மிளிர்நல்லை யூரிலே
விரவும்வேற் சத்திதரனே... 3

சுத்தமோ வில்லாத வஞ்சக வசுத்தனான்
றூயநல புண்யமில்லாச்
சுத்தப்பெ ரும்பாவி யித்தரையி னான்பெருஞ்
சும்மையா யவதரித்தேன்
நித்தமுயர் வாழ்வுதரு கல்வியறி வில்லாத
நிர்மூட னானுயர்ந்த
நீள்பெருஞ் செல்வநற் பதவியி லுறாவறிய
நிலையினை யடைந்தவன்யான்
இத்தரையி லெப்பெரிய போகமு மிலாததனி
யேழைநா னுன்றனடியே
யென்றனக் குற்றதுணை யென்றுவந் தெய்தினே
னெளியனேற் கருளவேண்டும்
வித்தகக் கர்த்தனே சுத்தனே நித்தனே
மிளிருமெய் வாழ்வுதருவோய்
மேயவிப் பாரிலே மிளிர்நல்லை யூரிலே
விரவும்வேற் சத்திதரனே.... 4

இடிகேட்ட வரவமென வேங்கினேன் மழையிலா
தெரியுறும் பயிருமானேன்
இனியதண் டாமரையி னிலையிடைத் தளம்புநீ
ரென்னநின் றசைதலுற்றேன்
கடிகாட்டு பாம்புவாய்த் தேரைபோன் மாழ்கினேன்
கானனீர் மானுமானேன்
காவலுட் பட்டசிறை யாளர்போ னிலையழீஇக்
கனதிகிற் பட்டுநின்றேன்
படிமாட்டு வேறொருவர் துணையிலாப் பேதைநான்
பட்டதுயர் சொல்லவென்றாற்
பல்லாயி ரங்கோடி வற்சரஞ் செல்லினும்
பகரமுடி வெய்திடாதே
மிடியோட்டு பார்வையருள் பூமினுக் கன்பனாம்
விண்டுவிற் கரியமருகா
மேயவிப் பாரிலே மிளிர்நல்லை யூரிலே
விரவும்வேற் சத்திதரனே.... 5

பொல்லாத வஞ்சகப் புல்லறிவி னேனையிப்
புன்மொழி பிதற்றுவேனைப்
பொறையிலா மூர்க்கனைக் கறையுலாந் தூர்த்தனைப்
பொய்ம்மொழிகள் பேசுவேனை

நல்லார்கள் கூட்டமன் றல்லார்கள் கூட்டமே
நாடுகூட் டுறவினேனை
நன்றுசெய வொருநாளு மொன்றிடாப் புத்தியிடை
நட்புமிக வைத்துளேனை
எல்லாரு மெந்நாளு மாகொடிய னோபழிக
ளெண்ணாதி யற்றுபாவி
யென்றுகுறை கூறவே நின்றபழி காரனெனை
யீடேற்று நாளுமுளதோ
வில்லாரு மதிவதந நல்லார்க ளந்தவிரு
மெல்லியர்க் கேற்றகணவா
மேயவிப் பாரிலே மிளிர்நல்லை யூரிலே
விரவும்வேற் சத்திதரனே.... 6

பயமொன்று சுடுகாட்டி னடமாடு பேய்களைப்
பாவியா னொப்பனையோ
பயன்பெறற் காலையிடை யிட்டுப் பிழிந்திடும்
பைங்கரும் பினையுமொப்பேன்
நயநின்ற கார்க்கடலி னலைதுரும் பாகிமிக
நானலைத னீயறிகுவாய்
நல்குரவு வன்பிணி பகைத்துயர்க ணாளுக்கு
நாண்மாறு மாறுமென்றே
இயல்கின்ற நம்பிக்கை யோரொருக் காலுறீஇ
யெளியனைத் தேற்றலன்றி
இகமிதிற் சுகமுறப் பெறுகிலே னொருநாளும்
யானிலவு காத்தகிளியாய்
வியனொன்று மெத்தொழிலி னும்பிரதி கூலமே
மேவிடற்கா வென்விதியோ
மேயவிப் பாரிலே மிளிர்நல்லை யூரிலே
விரவும்வேற் சத்திதரனே... 7

வேண்டுவார் வேண்டுவதை வேண்டியாங் கருளுமியல்
விண்ணவா நின்றனருள்கூர்
வேலாயு தப்பெருமை யென்னெனப் புகழுவேன்
மெய்யடியர் மாத்ரமேயோ
ஆண்டுசே ரெவருமது காண்டலும் மஞ்சலித்
தன்பினால் விம்மிவிம்மி
யனலிடைப் பட்டதோர் மெழுகுபோன் மனமுருகி
யாநந்த வருவிபொழிய

நீண்டதண் டா.காார மாய்விழுந் தெழீஇயவ
ணினைந்துதோத் திரமுரைப்பார்
நினதுசித் கூத்தெலாம் பலருமனு பவத்திலே
நெடுநா ளறிந்ததன்றோ
வீண்டொழா ரெவருமுங் கென்னுமிதி னாற்றிடம்
மேவியான் றொழுதுநின்றேன்
மேயவிப் பாரிலே மிளிர்நல்லை யூரிலே
விரவும்வேற் சத்திதரனே... 8

கிருபாலு வேசிற் சுகோதய விலாசமே
கிளர்பெருஞ் செல்வமேசெங்
கேழுடைய நந்தசூ ரியருதய மேயமிர்த
கிரணநிரை வீசியழகி
னுருவாரு மளவிலாச் சந்திரர்த முதயமே
யுண்ணவுண் ணத்தெவிட்டா
துற்றதண் ணமுதமே கற்பகச் சோலையே
யொளிர்காம தேனுவேபொன்
தருவார்ம லர்க்கணெழு செந்தே னளக்கரே
சங்கநிதி பதுமநிதியே
தகையசிந் தாமணிக் குவியலே யெனையிவட்
டந்துகாத் தருளுமுதலே
வெருவாத சிங்கமே யென்றென் றுனைப்பாடி
மேவுதற் கருள்புரிகுவாய்
மேயவிப் பாரிலே மிளிர்நல்லை யூரிலே
விரவும்வேற் சத்திதரனே.. 9

கண்ணார நோக்கியும் வாயார வாழ்த்தியுங்
கருதிமன தாரவுனியும்
கருணா கரக்கடவு ணினதுபொான் வேலினைக்
கருதருஞ் செயலையதனால்
மண்மீதி யான்பல வரங்களு மடைந்துசீர்
வாழ்வுறீ நின்றுமவைமேல்
வைத்தபே ராசைபோய் மாமுகில்கொ லென்னவரு
வாரணத் தேறிவருமென்
கண்ணாள னேயடிய னானுனைச் சேர்வதெக்
காலமோ மிகமுதிர்ந்த
காதலான் மேனியுமெ னுள்ளமும் வாடினேன்
கருணைசெய் தாளவேண்டும்

விண்ணாளி சத்யலோ காதிபதி வைகுந்த
மேவுபதி யெவருமேத்த
மேயவிப் பாரிலே மிளிர்நல்லை யூரிலே
விரவும்வேற் சத்திதரனே... 10

**நல்லைப் பதிகம் முற்றிற்று**

உ

# மாவைக் கதிர்காம வடிவேலர் பதிகம்

## க. சரவணமுத்து

### காப்பு:

#### வெண்பா

மாவைக் கதிர்காம மன்னடிக் கோர்ப்பதிகப்
பாவைக்குந் தாரணியப் பாலிக்கும்-வாழ்வைக்
கருதடியார் போற்றைங் கரத்தான் மயிலை
மருதடிவாழ் வோன்றாள் மலர்.

### நூல்

#### ஆசிரிவிருத்தம்

அன்புதரு நயனங்க ளீராறு மருள்பொழிய
அந்நிகர் கரங்களொன்று
மம்முகக் குறிப்பினா லம்முறை நடாத்தவே
அன்பரா நந்தமேவ
இன்பமுட னிருமருங் கும்வள்ளி தெய்வானை
யேகமாய் வீற்றிருக்க
இலைகொள்வேல் கைகொண்டு மயின்மீ
திவர்ந்துசே
வற்கொடி பிடித்தவெங்கள்
துன்பமற நீலநிற வானமிசை ஞாயிறெழு
தோற்றமேய்க் கும்மென்பராற்
றூயதிரு மேனியது கண்டுபே ராநந்த
சுகவாரி தோய்வதென்றோ?

என்புருக வந்திதய செங்கமல மீதிலுறை
யென்சாமி குமரகுருவே
இதமாவை யுறுநாத கதிர்காம வடிவேல
இனியமெய்ஞ் ஞானமணியே. 1

எந்தைபர தக்கண்ட தீர்த்தங்கள் பலவடி
யேன்பிணிக ணீங்கவில்லை?
யென்றிலங் காதீவு வந்துதென் திசைநாடி
யின்பகதிர் காமத்திலே
அந்திபக லறியாது வந்தனைபு ரிந்துருகி
மாணிக்க கங்கையாடி
அன்புமிக மாருதப் புரவல்லி நின்றுதுதி
பாடவருள் வேட்டபெருமான்
வந்துவட திசையிலுள நகுலகிரி யாடிலவர்
வதனமது பதுமமெனவும்
வானுலவு மதியெனவு நிலவுமென் றறையவே
வநிதையு மருட்பேற்றினா
லிந்தவித மேபுரிந் தின்பநல மெய்தினா
ளென்சாமி குமரகுருவே
இதமாவை யுறுநாத கதிர்காம வடிவேல
இனியமெய்ஞ் ஞானமணியே. 2

தினகர னுதிக்கமுன் னைந்துநா ழிகையெனத்
தினமுநான் துயிலொழிந்து
திவ்யநன் னீராடி யேபுனித வெள்ளாடை
யோடுதிரு நீறுமணிய
நினதுதிரு வாலயம் நண்ணியல கிடமெழுக
நின்தொண்டு புரியவென்றும்
நின்றுதுதி பாடவே மேளமொடு சல்லாரி
வீணையும் நாதசினமுங்
கனமான நின்பெருமை சொலமணியி னோசையது
கிண்ணெனச் சங்குநாதங்
காதில்விழ மெய்யடிய ரன்பினொலி வானெழக்
காட்சிபெற லெனதுவாஞ்சை
எனதுமன மதையறிவை யருள்புரிய வேண்டினே
னென்சாமி குமரகுருவே

இதமாவை யுறுநாத கதிர்காம வடிவேல
இனியமெய்ஞ் ஞானமணியே. 3

தேன்கரும் பமுதுநெய் தயிர்தெங்கு நீர்செழும்
பழமோடு கஸ்தூரியும்
திவ்வியகோ ரோசனம் புனுகுசந் தனமுதற்
தேடரிய கந்தமெவையும்
ஆன்றசீ தளசுகங் காசலமு மடியனா
னன்போடு நிறையஆட்டி
யர்ச்சனை புரிந்துபதி னாறெனும் முபசார
மாற்றினை வேத்யமூட்டி
ஊன்றுதிட பக்தியோ டுனதா றெழுத்துமே
உச்சரித் துன்பதத்தி
லூரியமலர் சிலதூவி யுனதுபுகழ் பலகூறி
யுருகற் கவாவிநின்றேன்
ஈன்றவென தன்னையே யெனதுமன மறிவையே
யென்சாமி குமரகுருவே
இதமாவை யுறுநாத கதிர்காம வடிவேல
இனியமெய்ஞ் ஞானமணியே. 4

அன்னையே தந்தையே யாருயிர்த் துணைவனே
ஆலால முண்டவர்க்கு
மருணகிரி நாதர்நக் கீரர்குறு முனிவர்முத
லடியார்க ளெல்லவர்க்கும்
முன்னைநாட் குருவாக வந்தநீ யல்லையோ?
முகில்பரங் குன்றுசெந்தூர்
முதியவே ளாவிகுடி யேரகங் குன்றுதோ
றாடல்பழ முதிர்சோலையு
மன்னுசன் னிதிகந்த வனனல்லை யிணுவையொடு
மாவையி லைப்பதிகளும்
மருவியங் கங்கவர்கள் வேண்டுவர மீயுநீ
மற்றெனைக் காத்தலரிதோ?
என்குறைக ணீக்கிநித முன்கிருபை தந்திடுவை
யென்சாமி குமரகுருவே
இதமாவை யுறுநாத கதிர்காம வடிவேல
இனியமெய்ஞ் ஞான மணியே. 5

முன்னைநாட் செய்தநற் றவமே திரண்டுனது
முளரிபத மணையவந்தேன்
முழுமோச மானவிக் கொடியநோ யுடலைநான்
மூதுலகர் தாமிகழவே
கன்மங்க ளென்னென்ன செய்தேனோ! வென்மீது
கருணைதான் சிறிதுமிலையோ?
கதியெனக் கிதுவெனிற் பதிதனக் கடிமைமேற்
பற்றுமோ சற்றுமிலையே
அன்னையென் செய்திடிற் கன்மங்க ணீங்குமோ?
ஐயவொரு கனவிலேனு
மாசிதந் தென்பிணிக ணீக்கினா லுன்பெருமை
யடியோ டழிந்துபோமோ?
என்னநான் செய்வதினி? யுன்கிருபை தந்திடுவை
யென்சாமி குமரகுருவே
இதமாவை யுறுநாத கதிர்காம வடிவேல
இனியமெய்ஞ் ஞானமணியே. 6

ஐயகலி யுகத்திலே ஆறுவ தனத்திலே
அன்புதரு நயனத்திலே
ஆறிரு கரத்திலே யுன்னிரு பதத்திலே
யழகுதரு ரூபத்திலே
உய்யவருள் விதத்திலே யுன்னா யுதத்திலே
யுத்தம செபத்திலென்று
முன்னையென் மனத்திலே நிற்குநிலை யத்திலே
யுண்மையொடு வைத்திடாமல்
வையக முகத்திலே வநிதைய ரிடத்திலே
வாக்குசா துரியத்திலே
வஞ்சகக் குவட்டிலே வருபெரு பணத்திலே
வைத்தவென் மனமடங்க
எய்துதின மெத்தின? மெனதுமன மறிவையே
யென்சாமி குமரகுருவே
இதமாவை யுறுநாத கதிர்காம வடிவேல
இனியமெய்ஞ் ஞானமணியே. 7

பொல்லாத வெகுரோகி மெய்யாக மிகுலோபி
புண்ணியமில் லாதபாவி

புருஷவடி வற்றஅவ லட்சணப் பழிரூபி
புன்றொழி லியற்றுபோகி
நல்லார்க ளுறவின்றி யல்லார்க ளுறவுமிக
நாடுமொப் பற்றகாமி
நாதனடி தேடாத் துரோகியரு ளில்லாத
நகைதவழ் விரூபதேகி
கல்லாத அவிவேகி யென்றெனைப் பழிமொழிக்
காளாக வைத்தவிதியே
கதியாகி விட்டதோ! மனமிகவு நோகுதே
காட்சிதந் தென்னையாள்வாய்
எல்லாரு மேத்துமொரு நல்லா யெனக்கருள்வை
யென்சாமி குமரகுருவே
இதமாவை யுறுநாத கதிர்காம வடிவேல
இனியமெய்ஞ் ஞானமணியே. 8

திங்களொளி வீசுமணி செம்பவள மணியரசர்
சிரமீ திலங்குமணியென்
சித்தமிசை யசையுமணி முத்திதரு ஞானமணி
செல்வமணி சிந்தாமணி
தங்குமயி லாடுமணி மங்கையர்கள் பாகமணி
சச்சிதா னந்தமணிசீர்
தழையவே சரவணப் பொய்கையி லுதித்தமணி
தவமணி தயாபரமணி
பங்கமில் லாதநற் றூயமணி பாலர்மணி
பச்சைமணி நீலமணிசேர்
பன்னிரு புயாசலப் பருமணி யெனக்குமொரு
கண்மணியெ னப்பகருவேன்
எங்குமுள குகவிதய செங்கமல மீதிலுறை
யென்சாமி குமரகுருவே
இதமாவை யுறுநாத கதிர்காம வடிவேல
இனியமெய்ஞ் ஞானமணியே. 9

கதிர்காம யாத்திரைய ரரகரா வென்னுமொலி
காடுநா டாறுமலையுங்
கடலோர நகர்வீதி யெங்கணும் மேவியக்
களிப்போடு பக்திதருமே

எதிராக வருமானை கரடிபுலி கண்ணுக்கு
மெட்டாம லோடிவிடுமே
யெம்பிரான் கோயிலிடை நம்பிவரு பேர்களென்
றென்றுமுன் னடிமையாக்கிக்
கதிநீ யெனக்கருதி யுடலோடு பொருளாவி
காதலோ டீடுவைப்பார்
காதலோ! அவ்வணம் பாவியேன் செய்வதெக்
காலமோ? கருதிவருவாய்
எதிலுமுன தடியிணைக ளபயமென் றெண்ணினே
னென்சாமி குமரகுருவே
இதமாவை யுறுநாத கதிர்காம வடிவேல
இனியமெய்ஞ் ஞானமணியே. 10

மாவைக் கதிர்காம வடிவேலர் பதிகம் முற்றிற்று

உ

# மாவைக் கந்தன் பதிகம்

## இ. நமசிவாயம்

### காப்பு

#### வெண்பா

மன்னுந் திருமாவை வாழ்வுகந்த கந்தனடி
உன்னி யொருபதிகம் யானோத — மின்னுமணிப்
பையரவஞ் சூடுசடைப் பண்ணவன்முற் றந்தவைந்து
கையனடித் தாமரையே காப்பு.

### நூல்

#### பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

தேவர்சிர மீதுதன தீரடிகள் சூடிமிகு
சீர்புகழ வார்வமுடனே
சேவைபுரி வோர்கள்சுர தாதியர்க ணேசமொடு
தேனினிசை பாடியினிதாய்
மேவிநட மாடவது நாடிமகிழ் வோடுறையு
மேலமரர் கோமகளெனும்
மேதகுதெய் வானையொடு மானுதவு மேர்கொளிள
வேடர்மக டானுமுறவாய்
ஆவியென மேவியிரு பாலுமுனை நாடிமகிழ்
வாயமர ஞானவடிவே
லாயுதமின் வீசியுன தோர்கரம தாகவுற
வாடுமயின் மீதுவருவாய்
மாவலிய மேதிமிசை பாசமுட னாடியெமை
மாமறலி யோடிவருநாள்

மாகமுகு வாழைபல வானளவி யேநிறையு
மாவைநகர் வாழ்முருகனே. 1

ஆறுதலை வேயுமிறை சூரனெனு மாவவுண
னாதியரி னாறுதலிழந்
தாறுதலை நாடிவரு மான்முதல வானவர்க
ளாறுதலை மேவுதலுற
ஆறுதலை மேவிமுக மாறினடு வாநயன
மாறினுறு மாறுபொறிதந்
தாறுகுண மாறுமுக மாகவிழி தோள்செவியி
ராறுகொள வேயருள்செய
ஆறணைய ராதரவி னோடுபய மீயவுமை
யாயுமிக வாதரமுற
ஆறுவன மாயமறை யோதுநரை யாளுமிறை
யாகிவல சூரன்முதலா
மாறுபடு வோரழிய வேலைவிடு வாயெமது
மாதுயரு மோயவருள்வாய்
மாகமுகு வாழைபல வானளவி யேநிறையு
மாவைநகர் வாழ்முருகனே. 2

தேமதுர மேவுதமி ழாய்புலவ னாகிவரு
தேசிகசி காமணிசிவன்
சீடனெனு மாறமர வோமெனும காமறையி
னேருபொரு டேரவருளும்
சாமி,கட மாமுனிவ னோடருணை நாதனடி
சாரவுயர் ஞானமுதவும்
தாத,வர னோடெதிர்பு வாதமிடு கீரனுயர்
தாழ்வரையி லோர்குகையிலே
யேமமுற வேசிறைசெய் பூதமத னான்மறுகி
யீகருணை நீயெனவுனை
யீரடிப ராவியொரு பாநுவல வேவியயி
லேமமவ னேயவருள்செய்
வாமைமக யாமுமுன தீரடிப ராவுவமெ
மாயவினை மாயவருள்வாய்
மாகமுகு வாழைபல வானளவி யேநிறையு
மாவைநகர் வாழ்முருகனே. 3

வானமழை யீயவுழல் வாயுவெழ மேதினியில்
வாழுமுயிர் ஊண்முதலிய
வாழ்வுமுத லானபெற வேதுவென வோதிரவி
மாகரிய வாழியின்மிசை
ஞானமறை யோர்கள்துதி யோதவுயிர் யாவுமெழி
னாடியிசை பாடிமகிழ
நாடுகுண மாதிசையி னீடுமொளி யோடுமுற
னாட்வெழின் மாமயிலிலே
பானுமுத லானகதிர் யாவுமளி மூலமெனும்
பான்மைதிகழ் பேரொளியுடன்
பாருலகி லேதவர்முன் னாரருள்கொ டேகியருள்
பாலசிகி வாகனவுனை
மானசம தாகவழி பாடுபுரி வோமருள
வாகனக சோதிவடிவாய்
மாகமுகு வாழைபல வானளவி யேநிறையு
மாவைநகர் வாழ்முருகனே. 4

வீரமிகு வாகுவெனும் வானவனை நேர்பொருது
வேறலரி தாகமலையில்
மேவியொளி தாரகனை மாயையொடு போயழிய
வேல்விடுபந் நாகமுமழித்
தாரமகிழ் தேவரொடு தேவகிரி மேவிவர
ரானவர்செய் பூசனைமகிழ்ந்
தாயிடையி னீங்கிமணி யாறுதவழ் சூழலில்கு
மாரபுரி யாயநகரை
நேரரிய தாநிறுவி மாலயன்வ லாரியொடு
மாதவரு நேயமிகவே
நேமமொடு தாள்பணிய நோதலறு வாழ்வுதவி
நீடுமரு ளோடுறைகுக
வாரமுட னாமுனது தாள்பணிவ நாடியெமை
வாடலற நீதுணைசெயாய்
மாகமுகு வாழைபல வானளவி யேநிறையு
மாவைநகர் வாழ்முருகனே. 5

காமமொடு கோபமுத லானபகை யாறுமுயர்
வானநெறி காணவுதவா
காயமுறு நோய்பசியி லாமைபகை யாதியன
காரிருளை யீவமனதில்

7560cc

பூமிபொருள் வீடுபத மேலையதி காரமிவை
போலுமெம பேறுகளெனும்
போதமுற யாமுலகி லேபிறவி மேவியிடர்
பூணவரு காரணமெதென்
றேமமுற வாயுநெறி மேவலிலை வாழுமுறை
யீதெனவெ தேனுமறியா
தேயிருளி லோர்குருட னேகுமிட மேதுமறி
யாதிடறி யேகுவதென
மாமயில யாமலைவ நீயருளி ஞானவொளி
வாழ்வுதர வாகடுகியே
மாகமுகு வாழைபல வானளவி யேநிறையு
மாவைநகர் வாழ்முருகனே. 6

கோடியநு கோடிபொருள் தேடினுமென் மேலுமொரு
கோடிபொருள் தேடியலைவர்
கூறுசுக வாழ்வுறினு மேலுமதன் மேலுமது
கூடுகென வோடியுழல்வர்
வாடிவரு வோர்வறுமை கூறியடி தாழ்வுறினும்
வாழியென வேதுமளியார்
மாமறைமு னாயபல நூலறிவர் யாவரொடும்
வாதிடுவர் நீதியறியார்
நாடியவை யோர்மகிழ நீடுமுரை பேசிடுவர்
ஞானநெறி யாதுமுணரார்
ஞானியரி னாடகம தாடுவர நேகருளர்
நாமுமது வேயடியெமை
வாடிடவி டாமலற நீதிநெறி ஞானமியை
வாழ்வுபெற நீயருளுவாய்
மாகமுகு வாழைபல வானளவி யேநிறையு
மாவைநகர் வாழ்முருகனே. 7

நீறுபதி னாறிடமு மோதுமுறை யேயணிவர்
நீடுவிழி மாலைபுனைவர்
நேசவடி யார்களென வேடமிடு வார்தினமு
நேமமொடு பூசனைகளுங்
கூறுமுறை யேபுரிவர் வேதமறை யோதிடுவர்
கோதிலடி யாரிவரெனக்
கோடியரின் வாழுவர்மண் மாதர்பொரு ளேதினமுங்
கூடவழி தேடியுழைவர்

ஏறுபுகழ் பூசைபெறு மாறுநினை வாரழிவி
லேமமறி யாரருளில
ரேதமுறு வாரிவர நேகருளர் மேதினியில்
யாமுமது வேயடியெமை
மாறுபடு வாழ்வொருவி வாழவழி நீயுதவி
மானவடி வேலவவருள்
மாகமுகு வாழைபல வானளவி யேநிறையு
மாவைநகர் வாழ்முருகனே. 8

ஆதியறு மூலமல மாகியிருள் போலவுள
ஆணவம தான்மயலுற
ஆருலக காரணரி யாமவரொ டேதுதொடர்
பானவரென் றாய்வறிவற
யாதினுமெ மோடுநிக ராருமிலை மேதினியி
லேதலைவர் யாமலதிலை
ஏதரிது யாஞ்செயவென் றேதரும நீதிவழி
யேதுமறி யாமலுழலும்
ஊதியமி லாதவரில் யாமுமலை யாதபடி
ஓதுநெறி நீயருளியே
ஓதுமறை தானுமறி யாதவுன தீரடியுள்
ளூடுநிலை யாயமைதரும்
மாதிருவை யேதருதி மாதிருவர் பாலமர
மாமயிலின் மேல்வருகுகா
மாகமுகு வாழைபல வானளவி யேநிறையு
மாவைநகர் வாழ்முருகனே. 9

வேலவருள் நீலிதரு பாலவருள் ஆறுமுக
வீரவருள் பாவகியருள்
மேலையம ரேசன்மக ணேசமண வாளவருள்
வேடர்மக ணாயகவருள்
கோலமயின் மீதமர்கு கேசவருள் கூவியிசை
கூறுமணி சேவலவருள்
கூறுகிரி வாசவருள் ஆதிமறை நாதவருள்
கோதிலடி யார்கள்வினையின்
மூலமற வேல்கொடழி யீசவருள் சூர்திறலை
மோதியழி தீரவருள்கைம்

மோதகன்ச கோதரகு மாரபுரி மேவிவதி
மோதருள்வி லோசனவருள்
மாலன்மரு மானருளென் றேதுதிசெய் வேமையருள்
வாய்கதிரை மாமலையனே
மாகமுகு வாழைபல வானளவி யேநிறையு
மாவைநகர் வாழ்முருகனே. 10

**மாவைக் கந்தன் பதிகம் முற்றிற்று**

உ

# மாவைச் சுப்பிரமணியக் கடவுள் பதிகம்

குமாரசுவாமிக் குருக்கள்

## காப்பு

### வெண்பா

செம்பதுமை சேர்மாவைச் செய்யகுகன் மேற்பதிகம்
அம்புதுமை யாக வறைகுதற்கு—நம்புதுமை
ஆனையரு ளைங்கரத்தா னன்பர்க் குதவுமடி
சோனையருள் செய்யத் துதித்து.

## நூல்

### ஆசிரிய விருத்தம்

திங்களொடு பானுமுத லானநவ நாயகர்கள்
சேரொளிகொ ணவரத்தினச்
செங்கனக முடியேறு குழையாறி ரண்டுமிளிர்
தேசோம யத்துருவமாந்
தேங்கருள் விழிக்கமல மீராறு கொண்டழகு
செய்யுமுக மாறினொடு
துங்கமுறு முந்நூலொ டாரம்ப தக்கங்க
டொங்குநீ பத்தலங்கல்
தோய்ந்தமணி மார்பகம் வாய்ந்தவே லாயுதந்
தூயகுலி சப்படையொடு
துயல்வரு மலர்க்கர மியல்வர வளர்ந்தோங்கு
தூவிமயி லேறியிருபாற்

புங்கவர்க ளுக்கமுத மிட்டமா லிடம்வந்த
பொற்கொடியர் பற்றிநிற்பப்
புகழுமடி யாருளக் கமலத்தில் வந்திடும்
புண்ணியபு ராணமுதல்வா
பூவடியை நம்பினேன் பூசிக்கு மடியனேன்
புன்மைதீர்த் தருளவேண்டும்
எங்குமுள பொருளாயு மென்னுளக் கவலைதனை
யேனொழிக் காதொளித்தாய்
ஏழையேன் செய்தபிழை யாதேனு முண்டாயி
னின்னேபொ றுத்தருளுவா
யெழில்வள்ளி கணவனே பொழின்மாவை நேயனே
யீசகுரு நாதகுகனே. 1

அரிபிரம ரறியாத வானந்த சோதியா
யகிலாண்ட மாகியுற்ற
வாதிசிவ நேத்திரத் தாறுபொறி யாகவந்
தவியாத சோதியாகி
யனலனோ டனிலனும் மாற்றாம லாற்றியே
யணிகங்கை வைப்பவதுதன்
வரிதிரைக் கையினாற் சரவணப் பொய்கையின்
வைக்கவந்தா றுருவமாய்
வாடாத மாதரறு முலையூறு பாலமுத
வாரியுண் டாடிநிற்கும்
வடிவினைக் காணநின் னன்னையும் மத்தனும்
மால்விடையி வர்ந்துவந்து
கருதின ரெடுத்துநன் மணிமார்பு றத்தழீஇக்
காதலாலொன் றுசேர்த்துக்
கந்தனெனு நாமமிட் டவர்நடு விருத்துறக்
காணுசோமா ஸ்கந்தமாய்க்
காரேறு வானநெறி தானேறு கைலையுறு
கந்தகிரி வந்தபரமே
இருவினைக் கீடான வாசையுற் றுழலுவேற்
கெப்போது னருள்கிடைக்கு
மேழையேன் செய்தபிழை யாதேனு முண்டாயி
னின்னேபொ றுத்தருளுவா
யெழில்வள்ளி கணவனே பொழின்மாவை நேயனே
யீசகுரு நாதகுகனே. 2

கங்கையைத் தலைமீது மங்கையை மடிமீது
    கண்டழகு கொண்டசுடரைக்
  கருத்தினி லிருத்தியனு பூதியின னாகியவ
    கத்தியனி ரந்துநிற்பக்
  கனைஞான வுபதேச குருவாகி யினியதமிழ்
    காட்டுகுரு வாக்கிவைத்த
மங்கையுமை செப்போது கொங்கைபா லமுதூறி
    வழியும்வாய் முருகவுன்றன்
  மாறிலா வாறெழுத் தோதுவார் தீவினை
    மாய்வதற் கையமுண்டோ
  வரிசைபெற் றுயர்தேவ ரெல்லோரு முன்னாமம்
    வாயாலி சைத்தவரலோ
அங்கியொரு கையில்வைத் தடியின்மற் றொருகைவைத்
    தபயமொடு தமருகம்மு
  மமரவைத் தமராத திமிரபத கன்முதுகி
    னடிவைத்து நடனமாடி
  யானந்த மொடுநோக்க வானந்த னைத்தாவு
    மரியவரை தோறுமாடி
இங்கெனைக் கருணையா னோக்காது கைவிடின்
    யாவரெனை யஞ்சலென்பா
  ரேழையேன் செய்தபிழை யாதேனு முண்டாயி
    னின்னேபொ றுத்தருளுவா
  யெழில்வள்ளி கணவனே பொழின்மாவை நேயனே
    யீசகுரு நாதகுகனே. 3

பங்கயன் மாயவன் னிந்திரன் வானவர்கள்
    பாலாழி கடையுநாளிற்
  பாலாகி வந்தவிட முண்ணுமென் றஞ்சியே
    பார்த்தோடி வந்தடுக்கப்
  பக்கத்த மைத்துவரு நஞ்சினை மிசைந்தபசு
    பதிதந்த பாலநின்னை
அங்கயற் கண்ணியுமை மங்கைகண் குளிரவந்
    தாடுங்கு ழந்தையென்ப
  ரசைவற்ற மேருகிரி யிசைவுற்று வானவர்க்
    கானபே ருருவுகாட்ட
  வையநின் னுருவினைக் கண்டஞ்சி யவரழித
    லறிகிலாப் பரமவாதர்

புங்கவர் பெரும்பகை துரத்துமொரு வேல்கொண்டு
புரியவிழ்க டப்பமாலை
புரளுகடி மார்பின்வட மேருநிக ரிணைமுலைகள்
புக்குநன் கழுந்தத்தழூஉம்
புயலளக வள்ளியொடு தெய்வானை பாங்குறப்
புள்ளிமயி லேறிவருவாய்
எங்கிருந் தாலுமுன் னடிமையைக் கைவிடே
லிகபரசு கப்ரசாத
வேழையேன் செய்தபிழை யாதேனு முண்டாயி
னின்னேபொ றுத்தருளுவா
யெழில்வள்ளி கணவனே பொழின்மாவை நேயனே
யீசகுரு நாதகுகனே. 4

வைகறைப் போதெழுந் தாறெழுத் தோதிவட
வாரிதியொ டமருதீர்வை
வார்புனன் மூழ்கிவெண் ணீறப்பி யக்கமணி
மார்புறவ ணிந்திருந்து
மாசந்தி வந்தனை முடித்துமதி தவழ்சோலை
மாவைநக ரத்தில்வந்து
பொய்யெனப் புகலுமுடல் பூமியிற் புரளுறப்
புரிவலஞ் செய்தெழுந்து
புண்ணியமெய் யாலயத் துட்புகுந் தன்போடு
போரானை வதனத்தனைப்
பூசைபுரி வித்தபின் னாசையொடு நின்கோயிற்
பொன்வாசல் முன்புநின்று
கைகளைச் சிரமீது சேர்த்துநாக் குழறிடக்
கண்ணினீ ராறுபெருகக்
களிப்பினுட னாயிரத் தெட்டுநா மமுஞ்சொலிக்
கடம்பலரினர்ச் சனைபுரீஇக்
கற்பூர வாராதரி கங்கண்டு கசியுமிரு
கண்ணுளார் தங்களுக்கிங்
கெவ்வகைப் போகமும் மிசைவுறச் செய்துநின்
னிணையடி யளிக்குநாத
வேழையேன் செய்தபிழை யாதேனு முண்டாயி
னின்னேபொ றுத்தருளுவா
யெழில்வள்ளி கணவனே பொழின்மாவை நேயனே
யீசகுரு நாதகுகனே. 5

கற்பகத் தருநீழல் பிரியாத ரம்பையர்கள்
காட்டநா லிருமங்கலம்
கைத்தாள மொத்தாடு மாதர்வா யோடுதீங்
கவியமுத முண்டுநீண்டு
காழ்கொண்ட நாலுகோட் டிபமுகைத் தசுரரைக்
காதிக்குறைக் குமொருவன்
பொற்பத மிழந்துபுவி புக்கடவி போயுறப்
புங்கவரை யேவல்கொண்டு
புன்புலால் சுமப்பித் திருஞ்சிறைப் புகுத்துளம்
புண்ணுறவ முங்கவைத்துப்
புரிசடைப் பண்ணவன் பொன்னடிதனைப் பேணிப்
பொருவில்பல் வரங்கள்கொண்டு
அற்புதத் தாயிரத் தெட்டண்ட மரசுசெய்
தரியமா யங்கள்கற்ற
வவ்வசுர சூரபன் மாவினைச் சங்கரித்
தாடுமயி லொடுசேவலா
வாக்கிமக வானையர சேற்றிமுடி சூட்டியவ
னருமைமக டனைமணந்த
எற்பக வெறிக்குநின் னெழிலோங்கு புகழ்வகுத்
திசைக்கவென் னான்முடியுமோ
வேழையேன் செய்தபிழை யாதேனு முண்டாயி
னின்னேபொ றுத்தருளுவா
யெழில்வள்ளி கணவனே பொழின்மாவை நேயனே
யீசகுரு நாதகுகனே. 6

தாமோதரக் கடவு ணாபியங் கமலமலர்
தந்தபர மேட்டிதன்னைத்
தளையிட்டு விரிவுற்ற வுலகத்தை யருள்செய்து
தானேது லங்குபிரம
தற்பரா நந்தகுக வற்புதா நந்தசிவ
சற்குணா தீதநாத
காமாதி யாறுபகை யேறாதி ருக்கவுங்
கருத்திலெப் போதுமுன்னைக்
கருதாத கசடரைக் கூடாதி ருக்கவுங்
கற்றோரர வைக்கணின்று
கற்பகம் போலவுரை தப்பாது ரைக்கவுங்
காரேறு கேட்டபணிபோல்

ஏமாறி யெதிர்நிலா தேற்றபகை யோடவு
மெட்டுவகை யைசுவரிய
மெல்லாமி சைந்துலகில் வாழ்ந்திருந் தீற்றினின்
னிணையடி நிழற்கெய்தவு
மீராறு கருணைவிழி நேராக வேணுமென்
றென்றுமுனை யேத்தல்புரிவேன்
ஏமார்ந்து மாநிலத் தவர்வாழ வந்தபர
வேகாந்த நாதவொளியே
யேழையேன் செய்தபிழை யாதேனு முண்டாயி
னின்னேபொ றுத்தருளுவா
யெழில்வள்ளி கணவனே பொழின்மாவை நேயனே
யீசகுரு நாதகுகனே. 7

ஐம்மையார் பூமிநீர் தேயுவளி யாகாச
மானவைம் பூதமுந்நீ
யரிதிங்க ளியமான னானமூன் றோடுசேர்ந்
தட்டமூர்த் தங்களுந்நீ
யாயினும் மடியாரு ளத்தினைச் சோதிக்க
வகலநின் றாய்வதுந்நீ
பொய்ம்மையாந் தாய்தந்தை மனைமக்க ளாதியாம்
பொருகடலி லிடுவதுந்நீ
பொன்னாசை யலையடிப் பட்டுவரு மின்பமாம்
புளினத்தி லேற்றுவதுந்நீ
போனசென் மத்தினிற் செய்ததவ மாய்ந்துமிகை
போக்கியருள் புரிவதுந்நீ
மெய்ம்மையா யடியவரு ளத்துறைந் தவர்க்கென்று
மிக்கருள் சுரப்பதுந்நீ
மேலான கல்வியும் மழியாத செல்வமும்
மேவுறவ ளிப்பதுந்நீ
வேறொருவர் மனைமேவி யிரவாம லெந்நாளும்
வேண்டுவன தருவதுந்நீ
எம்மையாண் மாலினிரு கண்ணிகரும் வல்லிய
ரிணைந்துபடர் தருவுநீயே
யேழையேன் செய்தபிழை யாதேனு முண்டாயி
னின்னேபொ றுத்தருளுவா
யெழில்வள்ளி கணவனே பொழின்மாவை நேயனே
யீசகுரு நாதகுகனே. 8

மாருதப் பிரவல்லி தன்குதிரை முகமாற
மாற்றிநன் முகமாக்கினை
மன்னன்முசு குந்தனுக் குன்றம்பி மார்களை
மன்பொருந ராக்கிவைத்தாய்
மறைமுனி மகத்தில்வரு செச்சையை யிவர்ந்துதிரு
வாகனம தாக்கிவைத்தாய்
பாரினின் மலைக்குறவர் பால்வந்த வள்ளியைப்
பற்றிமனை யாக்கிவைத்தாய்
பாரிடமு ணாதபடி பாடுநற் கீரனைப்
படிமீது மீட்டுவைத்தாய்
பண்டிதர்க ளீண்டியுறை சங்கத்தி ருந்துபொருள்
பகரவும் பண்ணிவைத்தாய்
சூருடல்பி ளந்துபின் கோழிமயி லாய்வரச்
சொல்லடிமை யாக்கிவைத்தாய்
தொல்பரங் குன்றினிற் றெய்வானை யம்மையைத்
துணைமனைவி யாக்கிவைத்தாய்
துய்யதோள் வீரனுக் குருவெலாங் காட்டியே
தூயனாச் செய்துவைத்தாய்
ஈருமிரு தலைக்கொள்ளி யெறும்புபோ லலைந்திடும்
மிழிஞனுக் கருளலரிதோ
வேழையேன் செய்தபிழை யாதேனும் முண்டாயி
னின்னேபொ றுத்தருளுவா
யெழில்வள்ளி கணவனே பொழின்மாவை நேயனே
யீசகுரு நாதகுகனே. 9

உன்னையல் லாதுபிற தெய்வத்தை நேசிக்கி
னுன்புகழ்க் கேற்றமாமோ
வொப்பிலாக் கருணைதரு நாளெதுவென் றென்றுன்னி
யுன்னியென் மனமுருகுதே
யுற்றதுணை யானநீ யறியார்கள் போலொன்று
முரையாதி ருக்கலாமோ
மின்னையல் லாதுவமை யில்லாத யாக்கையின்
மேவுபல னென்னைகொல்லோ
மேனாளி னீட்டுதவ மில்லெனினு மக்குறையை
வீட்டியருள் கூட்டலரிதோ

விடையேறி யருண்மைந்த வுமைமாது பெறுகந்த
வெற்றிவே லுற்றகைய
அன்னையர்க ளிருவரையு மிச்சைகிரி யாசத்தி
யாக்கிநடு வாகிஞான
மானவடி வாகிமுது ஞானகுரு வாகிவழி
யடியார்கள் பாவினுக்கே
யாசையுற் றவர்மனப் படியெலா மாக்குவோ
யருடரக் கலியுகத்தில்
என்னையுனை யல்லாது கண்கண்ட தெய்வமில்லை
யென்றந்தை யன்னைகுருவே
யேழையேன் செய்தபிழை யாதேனு முண்டாயி
னின்னேபொ றுத்தருளுவா
யெழில்வள்ளி கணவனே பொழின்மாவை நேயனே
யீசகுரு நாதருகனே. 10

வாழ்த்து

ஆவுமந் தணரும் வாழ்க வமரரு முகிலும் வாழ்க
கோவுஞ்செங் கோலும் வாழ்க கோயிலு மறையும் வாழ்க
பாவுமைந் தெழுத்தும் வாழ்க பற்பமு மணியும் வாழ்க
பூவுநல் லறமும் வாழ்க புனிதரு முறையும் வாழ்க.

மாவைச் சுப்பிரமணியக் கடவுள் பதிகம் முற்றிற்று

உ

# மாவைநகர் முருகவேள் பதிகம்

க. சோமசுந்தரப் புலவர்

## காப்பு

மன்னுமருள் கூர்மாவை வைவேற் பெருமான்மேற்
பன்னுந் தமிழ்ப்பதிகம் பாடவே—முன்னருளும்
அஞ்சக் கரத்தனுத வாதிமறை மாமுதல்வன்
பஞ்சக் கரத்தன் பதம்.

வந்திப் பவர்க்கருளும் மாவைவடி வேற்பெருமான்
சந்தத் தமிழ்ப்பதிகஞ் சாற்றவே—புந்திவரும்
முன்னாளிற் பொற்கூடல் முத்தமிழு மாய்ந்தகலைச்
சொன்னா யகிதாட் டுணை.

கண்ணுள் மணியே கருத்துட் கருத்தேயென்
புண்ணியமே ஞானப் பொலஞ்சுடரே—அண்ணலே
மாவைத் திருநகர்வாழ் வைவேற் பெருமான்மேற்
பாவைத் தருவாய் பரிந்து.

## நூல்

ஓரா யிரங்கோடி கிரணசூ ரியரென்ன
வொளிகாலு மாறுமுகமும்
உயிர்கள்சஞ் சிதவினைக் கட்டறப் பார்க்கின்ற
ஒப்பில்பன் னிருவிழிகளுங்
காரா யிரம்புரையு மீராறு கைகளுங்
கனகதண் டைக்கால்களும்
கன்னிமார் பாகமுங் கொண்டமங் கலஞான
காருண்ய வடிவமுடனே

ஆராத காதலுட னனுதினமு மனமுருகி
ஆறெழுத் தோதிமுன்னின்
றழுதழுது தொழுகின்ற பழவடியர் கண்குளிர
அஞ்சலென வருமுருகனே
வாராத சித்தியருள் பேராயிரங் கொண்ட
வள்ளலே மாவைநகர்வாழ்
மங்கையுமை பாலனே செங்கைவடி வேலனே
மயில்வா கனக்கடவுளே. 1

திங்களணி செஞ்சடைச் சங்கரன் நுதல்விழிச்
செங்கனலி லேபிறந்து
தெய்வசர வணமணிப் பொய்கைதனி லோராறு
சிறுவர்வடி வாய்வளர்ந்தே
அங்கணுறை யோராறு மங்கைமார் கொங்கைதரும்
அமுதுண்டு விளையாடியே
ஆறுதிரு முகமுமீ ராறுசெங் கரமுமாய்
அருளுருக் கொண்டமுருகா
செங்கணரி யும்மலர்ப் புங்கவனு மிந்திரனுந்
தேவர்குழு வும்வேண்டிடத்
திண்டிறல் மிகுஞ்சூர பன்மனைக் கொன்றமரர்
சிறைவிடுத் திடுகுமரனே
மங்கல வளம்பெருகி யெங்குமிசை பொங்கிமிகு
மாவைநக ரதனில்வாழும்
மங்கையுமை பாலனே செங்கைவடி வேலனே
மயில்வா கனக்கடவுளே. 2

தேவாதி தேவனே யாதிமறை யடிமுடிகள்
தெரியாத குருநாதனே
செங்கடம் புங்குல்லை யுஞ்செச்சை மாலையுஞ்
சேர்ந்தபன் னிருதோளனே
பாவாணர் தருகின்ற செந்தமிழ்த் தொடையமுது
பருகுமா றிருகாதனே
பத்தர்கள் வினைத்தொடர் பறுத்தவர்க கினியவருள்
பாலிக்கு மிருதாளனே
மூவா முகுந்தற்கு மருகனே யொருகைமா
முகவனுக் கொருதுணைவனே

மொய்ம்புடைய வாகுமுத லொன்பதின்மர் கும்பிடும்
முதல்வனே யபயமபயம்
மாவான வடிவொழிய மாருதப் புரவிக
வல்லிதரு மாவைநகர்வாழ்
மங்கையுமை பாலனே செங்கைவடி வேலனே
மயில்வா கனக்கடவுளே. 3

ஏழைத் தொழும்பருக் கிக்கலி யுகத்திலே
இனிமையுட னெதுவுமருளும்
இரக்கமுள கடவுளுனை யன்றிவே றில்லையென்
றேவரும் புகலுகின்றார்
தாளைக் கொடுத்தெனது சஞ்சலம் முழுவதுந்
தவிர்த்தருள வேண்டுமென்றே
சந்ததமு முளமுருக மந்திர நினைந்துவெகு
தாண்மையொடு நின்றிரந்தால்
நாளைக் கடத்திவந் திட்டதல் லாலுனது
நல்லருள் கொடுத்ததிலையே
நல்லன் பிலானென்று தள்ளிவிட நீதியோ
நாதனே யபயமபயம்
வாழைக் குலங்கமுகு தேமா வருக்கைமிகு
மாவைநக ரதனில்வாழும்
மங்கையுமை பாலனே செங்கைவடி வேலனே
மயில்வா கனக்கடவுளே. 4

அத்தனே முப்பத்து முக்கோடி தேவர்க்கு
மாதியே வேதமுதலே
அறியாத மலரவன் சிரநடுங் கக்குட்டி
ஆரருள் சுரந்தகுமரா
பத்திசெயு மடியருக் கெத்துயரு நீக்கிடும்
பரமகா ருண்யமுருகா
பகருநால் வகையேழு பிறவிமிகு யோனியெண்
பத்துநூ றாயிரமதில்
எத்தனை தரம்பிறந் தேனிறந் தேனோத
எண்ணுக் கணக்குமுண்டோ
இன்னுமுன் திருவருட் பேறுபெற வெண்ணாத
ஏழைதனை யாள்வதெந்நாள்

வைத்தவா ரணமேவு கொடியனே யடியர்புகழ்
மாவைநக ரதனில்வாழும்
மங்கையுமை பாலனே செங்கைவடி வேலனே
மயில்வா கனக்கடவுளே. 5

வேறான பாவங்கள் செய்தபே ரென்னினும்
மெய்ஞ்ஞான வள்ளலேயுன்
மேலான சந்நிதி யடைந்தபேர் தூயராய்
மிகுவாழ்வு பெறுவரென்கை
தேறா தெதிர்த்துமுன் மாறான சமர்செய்த
தீரமிகு சூரனுக்குந்
திருவடி பரித்திடும் பேறுதந் திடுமருட்
செய்கையால் இனிதுணர்ந்தேம்
நீறாடி மைந்தனே ஆறான அக்கரம்
நிறைந்தவோங் காரவொளியே
நின்னடித் தொண்டுபுரி யேழையடி யேங்கட்கு
நீயிரங் காததென்னோ
மாறாத பிணிமாற்று நகுலமலை யருவிபுடை
மருவிடும் மாவைநகர்வாழ்
மங்கையுமை பாலனே செங்கைவடி வேலனே
மயில்வா கனக்கடவுளே. 6

கங்கைதரு மைந்தனே கார்த்திகைச் சிறுவனே
கானக் குறத்திகணவா
கற்புமலி தெய்வகுஞ் சரிகேள்வ னேயமரர்
கழலடி வணங்குமிறைவா
எங்குமுறை ஆதியே யாவுமறி சோதியே
யாவர்க்கு மொருநீதியே
ஈராறு கையனே காரேறு மெய்யனே
என்னுயிர்க் கினியவுயிரே
சங்கமலி புலவனே சங்கரன் குரவனே
தமிழ்முனிக் கருள்தேசிகா
சரவண பவாயநம சரவண பவாயநம
சாமிநா னுனைநம்பினேன்
மங்கல நிறைந்தமறை யந்தணர் தினந்துதிசெய்
மாவைநக ரதனில்வாழும்

மங்கையுமை பாலனே செங்கைவடி வேலனே
மயில்வா கனக்கடவுளே. 7

தேமேவு நவரத்ன முடியழகு மோராறு
திருமுகக் கருணையழகுந்
தேனொழுகு தாமரைப் பூவென்ன வருளொழுகு
திருவிழியீ ராறினழகும்
பூமேவு செம்பவள விதழழகு முத்துமணி
பூத்தபுன் னகையினழகும்
பொன்னகல மார்பழகு மின்னுகுண் டலநிலைப்
பொலிவழகும் மாலையழகும்
காமேவு பூங்குழற் கன்னிமா ரோரிருவர்
கட்டழகு மிட்டதண்டைக்
காலழகு மேழைநான் கண்குளிர வேகண்டு
களிகொள்வ தெக்காலமோ
மாமேவு வடிவொழிய மாருதப் புரவீக
வல்லிதரு மாவைநகர்வாழ்
மங்கையுமை பாலனே செங்கைவடி வேலனே
மயில்வா கனக்கடவுளே. 8

செம்பிற் களிம்பென்ன மருவுமா ணவமலச்
சேட்டையா லறிவிழந்தே
செய்வதுந் தவிர்வதுந் தெரியாம லலையுநாள்
தீமைபல புரிதலியல்பே
வெம்புமம் மலமாயை கன்மத் தொடக்கிலா
விமலநீ கருணையாலே
மிகுபிழை பொறுத்துமே னெறிநாட்டி யாட்கொண்டு
விடுவதுன் கடமையன்றோ
அம்புவி தனிற்கலி யுகத்திலே கண்கண்ட
அற்புதக் கடவுணீயே
ஆற்றமுடி யாததுயர் ஆற்றியுன் பொன்னடி
அடைக்கலங் காத்தருளுவாய்
மன்பதைக் கருள்புரிய வென்றரு ளுருக்கொண்டு
மாவைநகர தனில்வாழும்
மங்கையுமை பாலனே செங்கைவடி வேலனே
மயில்வா கனக்கடவுளே. 9

பொய்யற்ற கீரனுக் கருளவிலை யோதேவர்
புன்மையை அழிக்கவிலையோ
பொன்னகர்க் கிறைவன் மகன்கனவில் வந்தவன்
போற்றவருள் புரியவிலையோ
மையற் பெருங்கிரி துளைக்கவிலை யோவேலை
வற்றவே லேவவிலையோ
வாகுமுத லானவர்க் கருளவிலை யோமுனிவர்
மற்சவுரு மாற்றவிலையோ
தையற்கொர் கரம்வளர வுதவவிலை யோவூமை
தமிழ்பாட வருளவிலையோ
தண்டமிழ்ப் புகழ்கூற வருணகிரி நாதனைச்
சாவாது காக்கவிலையோ
வையத் தெமக்கருளு வதுபெரிய வருமையோ
மாவைநக ரதனில்வாழும்
மங்கையுமை பாலனே செங்கைவடி வேலனே
மயில்வா கனக்கடவுளே. 10

கந்தநம வைந்துமுகர் தந்தமுரு கேசநம
சுங்கைதரு மைந்தாநம
கார்த்திகே யாயநம பூத்திடுக டம்புபுனை
கனகமணி மார்பாநம
எந்தைநம ஈரறு புயத்தநம மன்னுயிர்க்
கீசநம நேசாநம
இமையவர்கள் தலைவநம கன்னிமா ரிருவருக்
கினியமண வாளாநம
தந்தைநம சங்கரன் குரவநம வைங்கரன்
தம்பிநம நம்பிநமவோம்
சரவண பவாயநம சரவண பவாயநம
சாமியுன் னபயமபயம்
வந்தனைசெய் மாதவன் பூசித்த நகுலமலை
மருவுமுயர் மாவைநகர்வாழ்
மங்கையுமை பாலனே செங்கைவடி வேலனே
மயில்வா கனக்கடவுளே. 11

மாவைநகர் முருகவேள் பதிகம் முற்றிற்று

உ

# மாவைப் பதிகம்

## க. மயில்வாகனப் பிள்ளை

### காப்பு

#### வெண்பா

ஈறுவெழுத்துப் பேர்ப்பொருளாய் முன்னகல வேபருவம்
மேவிடைபோய்த் தேன்கடைபோய் வேரிப்பே—ராவதடி
வாழ்மயிலை யைங்கரனை வாழ்த்தில்வரு மாவைநகர்
வாழ்குமர னற்பதிகம் மற்று.

### நூல்

#### ஆசிரிய விருத்தம்

உலகெலாந் நொடியில்வரு சித்ரக்க லாபமயி
 லூர்திமே லிவருமுருகா
ஓங்கலொடு சூரனுட னீங்குமா றுருவுமவ்
 வுரவுவே லேந்துமுருகா
அலகிலா லீலையாற் கோன்மகளு மான்மகளு
 மார்வமுற வைக்குமுருகா
அடுதிறற் கோழிநின் றோங்கிய விறற்கொடிய
 தைத்தகவு யர்த்துமுருகா
நிலவுசீ ரீராறு திருவிழியு மருள்பொழிய
 நின்னாறு வாயிடத்தும்
நிகழவே புன்முறுவல் செவிமடுத் தருள்வையோ
 நீண்டவிண் ணப்பமிதனை
மலைவிலார் மலைமக டமைந்தனே கந்தனே
 வாரண முகற்கிளையவா

மாவையம் பதியமல தேவருந் துதிகுமர
வள்ளலே ஞானவடிவே... 1

ஊரின்றி யொருகுணங் குறியின்றி வினையின்றி
யோதிடும் பெயருமின்றி
உன்னவொரு சார்பின்றி முன்னினொடு பின்னின்றி
யுற்பத்தி நாசமின்றி
நேரின்றி மேலின்றி யெப்படியு மளவிடா
நினையறிவி னாற்குறைந்த
நிலையினி லிருக்குநா மருடமைக் குறிகளா
னேமித் திறைஞ்சல்கருதி
ஆர்கின்ற முற்றறிவு முதலா றருட்குணனை
யாறுதலை யாக்கிவைத்தும்
அங்ஙனே மற்றைய குணங்களையு நற்குறிக
ளாலமைய வைத்துமதனால்
வாரொன்று கொங்கைமட வார்கணவ நின்னையே
வந்தித்து மருளவேண்டும்
மாவையம் பதியமல தேவருந் துதிகுமர
வள்ளலே ஞானவடிவே.... 2

தேவநின் றிருவடிப் பெருமையும் மகிமையுஞ்
சிவபிரான் றோள்களறியும்
செம்மைநிறை ஞானமுஞ் சாட்குண்ய பேதமுந்
திசைமுகன் றலைகளறியும்
மேவலர் துதிக்குநின் சௌரியமு மாண்மையும்
வெய்யசூ ரங்கையறியும்
மிளிர்கடைக் கண்ணருளு ஞானமுந் தீக்கையும்
வெற்பின்முனி நோக்கமறியும்
பூவலுறு பேரழகு நித்தநீ டிளமையும்
பூவாளி யங்கமறியும்
பொங்குபெரு வாழ்வுமா நந்தபோ கமும்புவி
புரப்பவன் சுதைகளறிவார்
மாவள ரருட்டிறமை தொண்டரறி வார்கொடிய
வன்னெஞ்சி னேனறிவெனோ
மாவையம் பதியமல தேவருந் துதிகுமர
வள்ளலே ஞானவடிவே... 3

அத்தநீ யெந்நாளு மருள்பொழிந் தேவர்க்கு
மாநந்த போகமருளி
அழகில்வீற் றிருக்கவொரு திவ்விய க்ஷேத்ரமிங்
காக்கவெற் கருளவேண்டும்
பத்தியிற் சிரேட்டமுறு மாதவன் பத்திபோற்
பத்தியெற் கருளவேண்டும்
பத்தர்பல ரக்கோயி றன்னிடைக் குழுமியெப்
பாலுநின் றேத்தவேண்டும்
சுத்தமும் பத்தியுஞ் ஞானமும் வல்லகுரு
தொண்டங்கு செய்யவேண்டும்.
தோமிலாச் செய்கையிவை பூரணப் படினெளிய
தொண்டரேம் வாழ்வுபெரிதே
மத்தியுறு சூரியர்கள் பல்கோடி போன்றொளி
வயங்குபொன் மேனியுடையாய்
மாவையம் பதியமல தேவருந் துதிகுமர
வள்ளலே ஞானவடிவே... 4

பொன்மழை பொழிந்தருள் சுரந்திடு திறத்துநற்
புட்கலா வர்த்தமெனவே
பொதியுமெய்ஞ் ஞானப்ர சங்கமழை யூற்றியிப்
புவியினுக் கீசனியல்பு
நன்முறை விளக்கியுப தேசமருள் சீலனாய்
நண்ணுநற் பதவிவாய்ந்து
நாடுமுயர் பத்தியைச் சாதனையி லும்வைத்து
நம்மவர்க ளுய்திபெறுவான்
வின்மலி சிறப்புடைச் சமயதா பனஞ்செயும்
விறல்கொள வதாரபுருஷன்
வேண்டுமெங் குறையகல வுற்பவஞ் செய்யுமா
விடினினக் கென்னகுறைசீர்
மன்மலியு மாருதப் பிரவல்லி முன்னாள்
வயங்குபிர திஷ்டைசெய்த
மாவையம் பதியமல தேவருந் துதிகுமர
வள்ளலே ஞானவடிவே... 5

பறையுமெய்ப் பதினெண்பு ராணத்தை யும்முனிவர்
பணியுஞான் றோதுகுருநீ
பரவுசீர்க் குறுமுனிக் கருளியே முடிமிசைப்
பாதம்வைத் திட்டகுருநீ

குறைவிலா முப்பத்து முக்கோடி தேவருங்
கும்பிட் டிறைஞ்சுகுருநீ
குடிலையின் பொருள்சொலாப் பிரமனைக் குட்டிமுற்
கொடியசிறை யிட்டகுருநீ
அறையுமவ் வகிலாண்ட கோடியும் பின்படைத்
தவனைமகிழ் வித்தகுருநீ
அமரர்முதல் யாவருந் துதிசெய்யு மீசற்கு
மக்குடிலை சொன்னகுருநீ
மறைமொழியு நன்னெறியி னொழுகிடச் செயவல்ல
வான்குரு வெனக்குமருளாய்
மாவையம் பதியமல தேவருந் துதிகுமர
வள்ளலே ஞானவடிவே... 6

அண்டரை வருத்தியுக நூற்றெட்டு மழிவின்றி
யாயிரத் தெட்டுலகமும்
அரசுபுரி தனியாண்மை கொண்டவெஞ் சூரனோ
டவனனுசர் சுற்றமுதலாம்
கண்டகரை யவரெறுழ்ப் புயமெனும் மலைகளைக்
கடிதுபொடி யாக்குவடிவேல்
கைத்தலத் தேய்ந்தழகு செய்வததை நீகடைக்
கட்குறிப் பருள்வதுண்டேல்
மிண்டியஃ திம்மென்னு முன்னெனது கன்மமலை
வீறறப் பொடிசெயாதோ
வென்றிதர வென்றுசம ரென்றுமெதிர் பார்க்குமே
வெறுத்திதை மறுத்துவிடுமோ
மண்டலம் புரப்பதற் கீதுமோ ரருமையோ
வாடிநான் றாங்ககில்லேன்
மாவையம் பதியமல தேவருந் துதிகுமர
வள்ளலே ஞானவடிவே... 7

வாசுகியை முதலான வட்டநா கங்களும்
மற்றையவி யாளமெவையும்
மறுகித் திடுக்குற்று நடுநடுங் கிக்கொடிய
வாய்கணஞ் சுமிழவிரையும்
ஆசுகமு மொப்பில்லை யென்னவரை நொடியிலே
யகிலலோ கமுமுலாவி
அண்டங்க ளாயிரத் தெட்டையுந் தனதுபெடை
யன்றீன்ற முட்டையெனவே

நேசமாய்ச் சிறகணைத் திடுமணித் தோகையந்
நீலக்கி ரீவமயிலை
நீண்முடிச் சேடனோ டண்டங்க ளுண்டுமிழு
நின்பராக் கிரமமயிலை
மாசறப் பணிக்கினென் மாயையா மரவுமுடி
வாய்ப்பிடித் துதறிடாதோ
மாவையம் பதியமல தேவருந் துதிகுமர
வள்ளலே ஞானவடிவே... 8

கரியமுகில் வண்ணனுஞ் சதுமுகப் பிரமனுங்
கற்பகச் சோலையிறையும்
கணிதமறு வானவர் குழாங்களும் மிக்கபல
காலநொந் துற்றபயமாம்
பெரியவிரு ளுங்கொடிய வவுணரிரு ளுங்கரிய
பிரபஞ்ச மூடுமிருளும்
பிறவிக்கு வித்தாகி யடியர்க்கு நோத்தரு
பெருந்திகில் விளைக்குநிலையார்
அரியவிரு ளும்விடிய வான்றலை யுயர்த்தியே
யதிபல பராக்கிரமமாய்
அறைதரக் கூவுமச் சேவனின் கைத்துவச
மதனைநீ பணித்தியென்றால்
வரதவென் னாணவக் கரியவிருள் போய்விடிய
வண்மையொடு கூவிடாதோ
மாவையம் பதியமல தேவருந் துதிகுமர
வள்ளலே ஞானவடிவே... 9

ஐயகலி யுகத்திலே கண்கண்ட தெய்வநீ
யல்லவோ வடியரெல்லாம்
அருள்கலி யுகக்கடவு ளென்றடி துதித்துநின்
னருளெலா மடைதலுற்றார்
வையமிசை நின்புகழ்க ணாடொறும் பாடியும்
வரமுறப் பெறுகிலேனான்
வாடுமென் கவலையற நீயருட் டிருவுளம்
வையாத தென்கருத்தோ
செய்யநா னின்னடிமை யல்லனோ வல்லனேற்
றிருவுளம் பற்றன்முறையே
தெரியாத வன்போல மவுனமுற் றாயெனிற்
சீரருட் கீனமன்றோ

மையலற நீயருள்வ தில்லையே னிந்தைநினை
வந்தடையு மென்பதறிவாய்
மாவையம் பதியமல தேவருந் துதிகுமர
வள்ளலே ஞானவடிவே... 10

மாவைப் பதிகம் முற்றிற்று

உ

# மாவைப்பதிகம்

அ. குமாரசுவாமிப் புலவர்

### காப்பு

#### வெண்பா

செந்திருவாழ் மாவைத் திருக்கோயில் வீற்றிருக்குங்
கந்தவேண் மேற்பதிகங் கட்டுரைக்க-வந்தனைசெ
யும்பருக்கு மிம்பருக்கு முற்றகுறை முற்றொழிக்குங்
கம்பமதத் தும்பிமுகன் காப்பு.

#### ஆசிரிய விருத்தம்

சீர்மேவு நவரத்ந சிங்கார கோலமிகு
செம்பொனின் மகுடமுடியுந்
திவ்விய குணங்களோ ராறுமாய் வீறுற்ற
செய்யமுக மூவிரண்டும்
ஏர்மேவு நீபமலர் மாலையொடு செச்சைமல
ரினமாலை புரளுமார்பும்
எழின்மேவு மகமேரு கிரிபோல நிலவுற்ற
விணையிலாப் புயமிராறுங்
கார்மேவு கடலிலெழு மலரிபோன் மயிலின்வரு
கனகமய மேனியோடு
கவின்மேவு மாண்டலைக் கொடியும்வேற்
படையுமாய்க்

காட்சிதந் தருள்புரிகுவாய்
பார்மேவு பல்லுயிர்க் குயிராகி நிறைகின்ற
பாரமே சுரவடிவமே
பாவலா தேவர்தங் காவலா மாவையம்
பதியில்வதி கந்தவேளே. 1

சத்தியந னெறிவிட்ட தீயனேன் புரிவினைக
டக்கவா றளவைசெய்து
தலைவநீ கற்பித்த படியன்றி யிடையொன்று
தமியேனை யடைவதில்லை
இத்துணி விருந்துமென் புத்திதிட மின்மையா
லெண்ணாத வெண்ணமெண்ணி
யாதுவரு மோவெனக் கருதிநித மேங்குவேன்
யாவுநீ யறிதிகண்டாய்
சத்திதர வோங்கார திவ்விய சடாக்கர
தமோகுணா தீதமுதலே
சரவணோற் பவசுர சகாயபரி சுத்தசிற்
சைதன்னிய ரூபவாழ்வே
பத்திசெயு மெய்யன்பர் சித்தமிசை குடிகொண்ட
பரிபூர ணானந்தமே
பாவலா தேவர்தங் காவலா மாவையம்
பதியில்வதி கந்தவேளே. 2

தராதலா திபராய்க் கராசலா திகளான
சதுரங்க சேனைசூழத்
தலைமைநிலை கூடினும் புலமைமிக நாடினுஞ்
சகதலம் பலவோடினும்
பராவுறூஉ நின்பாத பதுமமே சதமென்று
பற்றுவை யார்களாயின்
பண்டைவல் வினையேகி யண்டரண் டந்தொழும்
பரகதிக் குரியராகார்
சராசரா காரமே யானசத் தியநித்த
சச்சிதா நந்தமுதலே
தற்பரா சிற்பரா கற்பனா தீதனே
சகலலோ கைகநாதா
பராபரா காங்கெயா பாவகீ தேவகீ
பாலகோ பாலன்மருகா

பாவலா தேவர்தங் காவலா மாவையம்
பதியில்வதி கந்தவேளே. 3

ஆருயி ரெனப்படுந் தனிமையேன் கேவலத்
தாணவத் தான்மயங்கி
யாசைகொண் டுலைதல்கண் டறிவற்ற நிலைபெற்ற
அடிமையின் பாலிரங்கிப்
பேரருள் மிகப்புரிந் தாக்கையொடு போக்கியம்
பிறவுநீ சேர்க்கைசெய்து
பின்னரவை நீக்கியே மோக்கவழி யாக்கிடும்
பேறுதரு நோக்கமாகத்
தேருமோ ருருவிலா யாயினுங் கோயிலாய்ச்
செறிதலம் பலவமர்ந்தாய்
தேவனே நின்கோயில் நின்பாத நித்தமுந்
தெரிசனஞ் செய்யவைப்பாய்
பாருமாய் நீருமாய்த் தேயுவாய் வாயுவாய்ப்
பரவெளியு மானவொளியே
பாவலா தேவர்தங் காவலா மாவையம்
பதியில்வதி கந்தவேளே. 4

இச்சைக ளடக்கிலேன் கொச்சைகள் கடக்கிலேன்
ஏகசிவ யோகமார்க்கம்
ஏறிலேன் பெரியர்மொழி தேறிலேன் றுதியெடுத்
தேத்திலேன் முறைகாத்திலேன்
நிச்சமும் பொய்ச்சமொழி கூறுவேன் சீறுவேன்
நியமநிலை மாறுவேனன்
னீதிமொழி மீறுவேன் சூதுமொழி வீறுவேன்
நீசனே னையு மாள்வையோ
விச்சுவா தீகனே செச்சையணி வாகனே
மேவிருமெல் லியர்பாகனே
வீரதர சிங்கார சூரகுல சங்கார
வேற்கரா புதபாற்கரா
பச்சைமா மயிலேறு சச்சிதா னந்தனே
பாகீர திக்குமகனே
பாவலா தேவர்தங் காவலா மாவையம்
பதியில்வதி கந்தவேளே. 5

பேரகங் காரமோ டாருமீ தெனதெனப்
பேசுமம காரநீத்துப்
பேரின்ப மயமான கேவல சுகம்பெறும்
பெற்றியொரு சற்றுமின்றி
ஊரகந் தேடுவார் போரகஞ் சாடுவா
ரோடுவா ருடல்வாடுவார்
உலோபரைப் பாடுவார் மாதரைக் கூடுவார்
உண்மைநிலை யுணரமாட்டார்
சீரகங் கெழுதணிகை யேரகம் பழனிமலை
செறிபரங் குன்றுமுதலாந்
தேவா லயந்தொண்ட ராவார் தமக்கெலாஞ்
சித்திதர நித்தமுறைவோய்
பாரகம் பரவுமுப காரகா தாரகப்
பதகனா ருயிர்மாரகா
பாவலா தேவர்தங் காவலா மாவையம்
பதியில்வதி கந்தவேளே. 6

நன்னிலை நிறுத்திலேன் புன்னிலை வெறுத்திலேன்
நகைமிகை பொறுத்திலேனா
னானென தெனுஞ்செருக் காலதிக மோகமே
நண்ணுவேன் புகழெண்ணுவேன்
கன்னியர்க ளின்பமே மன்னியந னிலையென்று
காணுவேன் மயல்பூணுவேன்
கைப்பொருள் வரும்பொழுது மெய்ப்புள
கரும்புவேன்
கபடநா டகமாடுவேன்
என்னிலையை யென்சொல்வே னைம்பொறியின்
வழிசெல்வேன்
ஏழையேன் பாலிரங்கி
ஈசநின் பாதமற வாதவிசு வாசமே
எக்காலு நிற்கவருள்வாய்
பன்னிரு புயாசலா நின்மலா சின்மயா
பாவையுமை தருபாலகா
பாவலா தேவர்தங் காவலா மாவையம்
பதியில்வதி கந்தவேளே. 7

பிணியோடு பசிவறுமை சிறிதேனு மெனைவந்து
பீடித்த லின்மைவேண்டும்
பெருமநின் கதைகளைத் துதிகளைக் கேட்டுமகிழ்
பேறுமீந் தருளல்வேண்டும்
பணியே புரிந்துநினை நணியே வணங்குமொரு
பத்தியுந் தருதல்வேண்டும்
பாவியே னாயினுந் தீயனேன் பாலருட்
பார்வைவைத் தாளவேண்டும்
கணியே யெனக்குறவர் வரைமே லுதித்தசக
காரணா பரிபூரணா
கானவர் கொடிக்குமுயர் வானவர் பிடிக்குமொரு
காந்தனே மலைவேந்தனே
பணியாத வர்க்குமரு டணியா தியானுனது
பாதமெப் போதுமறவேன்
பாவலா தேவர்தங் காவலா மாவையம்
பதியில்வதி கந்தவேளே. 8

நண்பே பொருந்துதவி முன்பே யிழந்துபுவி
நண்ணும்விண் ணவர்கள்கோமான்
நற்கருணை பெற்றேற வற்புதா னந்தமாய்
நக்கனெற் றிக்கணுற்று
மண்பா லடைந்துமுறை யின்பா லமைந்துசெரு
மற்றிணை யிலாதியற்றி
மன்னுசூர் முதலான தானவர்கள் யாரையும்
மாய்வித்து வானவர்க்கு
விண்பேறு பெறவைத்த வன்பேறு செகதேக
வீரனே சுகுமாரனே
விக்கிரம வேல்கொண்டு நக்கீர னுயிர்காத்து
வேண்டுநல் லருள்புரிந்தோய்
பண்பேறு சுரகங்கை மலைமங்கை தரவந்த
பாலனே சயசீலனே
பாவலா தேவர்தங் காவலா மாவையம்
பதியில்வதி கந்தவேளே. 9

பைந்தொடி மடந்தையர்கள் தந்தசுக வின்பமே
பாங்குபெறு முத்தியென்னும்

பாவலோ காயதன் போலமங் கையர்கள்பாற்
பற்றுவைத் தலைவர்சில்லோர்
சந்ததமு நிலையென்று மண்பொனுக் காகவே
தமைமறந் தலைவர்சில்லோர்
சாராம லிவருறவு மேலான சுகவாழ்வு
தன்னையான் தேடவைப்பாய்
கந்தமுறு நீபனே செந்திலூர் வாசனே
கந்தமா தனகிரீசா
கார்த்திகே யாவிசா காகுகா காங்கெயா
காஞ்சிமா வடியில்வாழ்வே
பந்தமற மெய்யடியர் வந்துதுதி செய்துயும்
படிவடிவு கோயில்கொண்டோய்
பாவலா தேவர்தங் காவலா மாவையம்
பதியில்வதி கந்தவேளே. 10

**மாவைப் பதிகம் முற்றிற்று**

உ

# மாவைப் பதிகம்

## க. சரவணமுத்து

### காப்பு

சீர்மாவை மேவுமருட் செங்கைவடி வேலனுக்குப்
பார்மே லொருபதிகம் பாடுவேன்-கார்மேவு
மஞ்சு கரமுடையா னன்புடையர் நெஞ்சடைவான்
கஞ்சமலர்த் தாளிணைகள் காப்பு.

உலகினி லுழன்றியான் படுகின்ற துயரங்க
ளொருகோடி யுண்டுமெய்யா
யுற்றதுணை நீயன்றி வேறில்லை யன்பனே
யுன்கழல்கள் போற்றிசெய்தே
னிலவுகாத் ததன்கனி யருந்துதற் கெண்ணியங்
கிருக்குமோர் கிள்ளைபோல
வெனதிதய மனுதினமு மிப்படி வருந்தவோ
வீசவுன் கிருபையிதுவோ
நிலவினொளி யெனவீசு கருணைபொழி கண்ணுடைய
நிமலனே நித்யவாழ்வே
நிர்க்குணா பூரணா வற்புதா னந்தனே
நிறைவான கிருபைமுகிலே
கலபமயின் மிசையேறி வந்தென்னை யாளுவாய்
கர்த்தனே யுமைமைந்தனே
காரணா மாவைவா ழீஸ்வரா மந்த்ரவேல்
கைதனிற் கொண்டதேவே. 1

பஞ்சமா பாதகம் வஞ்சகங் கொஞ்சமும்
பற்றின்றி யோடிவிடவும்

பற்றுள்ள தாய்தந்தை குருதெய்வ மிவர்களைப்
பக்தியொடு நேசிக்கவும்
நெஞ்சமிவ் வுலகினிற் சீவன்கள் பட்டுழலு
நெறிகண்டு நைந்துருகவும்
நின்பெருமை பேசிடுஞ் சங்கங்க ளங்கங்கு
நிலைபெற்று நீடிக்கவுஞ்
சஞ்சலம் தீரவே பரசமய நண்பருஞ்
சைவசித் தாந்தநெறியைச்
சரியாக வோர்ந்துமே மறுஜனன மெய்யென்று
சாதிப்ப தற்குமருள்வாய்
கஞ்சமல ரடிவள்ளி தெய்வானை காந்தனே
கர்த்தனே யுமைமைந்தனே
காரணா மாவைவா ழீஸ்வரா மந்த்ரவேல்
கைதனிற் கொண்டதேவே. 2

நிதியிலார்க் குணவில்லை யயலில்லை யினமில்லை
நேசமது தானுமில்லை
நீசனுக் கறிவுபொறை தயவாதி குணமெலா
நிலைத்திங்கு நிற்கமாட்டா
நதிகடல்கள் தாண்டியே நற்றலங் கட்கேகி
நம்பனருள் பெறவுமாட்டேன்
நாயேனை வாட்டுமிக் கொடியநோய் நீங்கநா
னன்மருந் தறியமாட்டேன்
பதியையா னடைவதற் கானபுண் ணியமோடு
பத்திபெற் றடியனுய்யப்
பாக்கியந் தருகவென் றோலமிட் டலறினேன்
பண்ணவா வெற்குவேறு
கதியில்லை மயிலேறி வந்தென்னை யாளுவாய்
கர்த்தனே யுமைமைந்தனே
காரணா மாவைவா ழீஸ்வரா மந்த்ரவேல்
கைதனிற் கொண்டதேவே. 3

எந்தவூ ரெச்சாதி யெச்சமய மென்னினு
மேதுமொரு பேதமின்றி
யெவர்நீதி பக்திவிசு வாசமிவை யுடையரோ
வவரையே சிஷ்யராக்கிச்

சொந்தமாய்க் காத்தவர்க ணின்றொண்டு
புரிதல்போற்
றொண்டர்தந் தொண்டனாகிச்
சுகவாழ் வவர்க்குமிக வேண்டியே யாநந்த
சுத்தநிலை காட்டுகுருவே
இந்தவே ழைக்கருள் சுரந்திட விரும்புவா
யெப்போது மடிமையென்றே
யின்றுனது பாதமலர் வந்துமிகு மன்பாக
வேத்திநின் றேதுதித்தேன்
கந்தகுக மயிலேறி வந்தென்னை யாளுவாய்
கர்த்தனே யுமைமைந்தனே
காரணா மாவைவா ழீஸ்வரா மந்த்ரவேல்
கைதனிற் கொண்டதேவே. 4

பெலமோடு தைரியங் குறையாத நற்சுகம்
பெறவெனக் கருள்கிடைத்தாற்
பிணிவறுமை நீங்கிடுங் கருணைபொறை சேர்ந்திடும்
புண்ணியஞ் செய்தல்கூடும்
நிலையான திடபக்தி யடியனான் கொள்ளுவே
னித்தமுன் சீரடிக்கே
நிறைவான பூசைசெப முதலான செய்துமே
நின்றுதோத் திரமுரைப்பேன்
தலமூர்த்தி தீர்த்தமிவை தமியேன் வணங்கியித்
தரணியோர் பெரிதுவக்குஞ்
சற்குருவை யண்டியான் முத்திநெறி கண்டிடச்
சமயமிது வாகுமையா
கலபமயின் மிசையேறி வந்தென்னை யாளுவாய்
கர்த்தனே யுமைமைந்தனே
காரணா மாவைவா ழீஸ்வரா மந்த்ரவேல்
கைதனிற் கொண்டதேவே. 5

அன்பில்லை யன்னையொடு தந்தைசோ தரமில்லை
யயலில்லை யுறவின்முறையா
ராருமிலை யரியகுரு தானுமிலை நல்லகுண
மறிவுபொறை யாதியெல்லா
மென்மனத் திடைநிற்க வல்லவோ வில்லையே
யாதினிச் செய்வதென்றே

யெண்ணியென் னிருதயம் புண்ணாகி நோகுதே
யேற்றவழி காட்டிவைப்பாய்
சொன்னதைச் சொன்னபடி செய்யென்று சொல்லினுஞ்
சோருதே கன்மநெஞ்சஞ்
சொல்லாமல் விடவெனிற் பொல்லாமை செய்யுதே
சோலியிது சோலியிதுகாண்
கன்மவினை நீக்கவே வந்தென்னை யாளுவாய்
கர்த்தனே யுமைமைந்தனே
காரணா மாவைவா ஸ்ரீஸ்வரா மந்த்ரவேல்
கைதனிற் கொண்டதேவே. 6

அன்பனே நீசரெனை வந்துவந் தணாப்பயா
னவர்களுரை மெய்ம்மையென்றே
யறியாமை யானம்பி வெகுமோச மாகினே
னாதலால் வந்தெனக்கு
முன்பிலே நின்றுனது கருணைபொழி கண்ணுளும்
முகங்களோர் மூவிரண்டும்
மும்மலங் களைநீக்கு முன்பாத தாமரையு
முன்னான்கு கைகளோடு
அன்பையு முபதேச மிதுவேளை செய்தெனக்
கறியாமை நீங்கநல்ல
வற்புதச் சமயமிது நிச்சயந் நம்பினே
னறிவுதரு மெய்த்தெய்வமே
கன்மவினை நீக்குபவ வந்தென்னை யாளுவாய்
கர்த்தனே யுமைமைந்தனே
காரணா மாவைவா ஸ்ரீஸ்வரா மந்த்ரவேல்
கைதனிற் கொண்டதேவே. 7

மனமென்னு மலரிலே யுனையா னிருத்திய
மன்பென்னு நன்னீரிலே
மாறிமா றிப்பண்பி னபிடேக மதுசெய்ய
மற்றுமென் கண்கள்வழியாய்க்
கனதாரை தாரையாய் நீர்பெருகி வழியவுங்
கசிவுகொண் டெனதுதேகங்
கடுவேர்வை கொள்ளவு மெய்ம்மறந் தயரவுங்
கன்மனங் கரைந்துருகவும்

முனதுபத மேயெனக் குதவியென வென்பொரு
ளுடலாவி யாவுமீந்தே
யொப்படைத் திடவுமுன் னருளெனக் கீகுவாய்
யோங்குமுயர் ஞானவொளியே
கனகமணி யணியுமொரு பாலசிவ சுந்தரா
கர்த்தனே யுமைமைந்தனே
காரணா மாவைவா ஸ்ரீஸ்வரா மந்த்ரவேல்
கைதனிற் கொண்டதேவே. 8

உண்மையாய்ச் சமயங்க ளுன்னையே போற்றியுன்
னருள்பெறற் கானபலவு
மோதியே நல்லவழி காட்டிமெய்ஞ் ஞானரச
முலகினுக் கூட்டுமெனினும்
மண்ணுலகர் தமதறிவு கொண்டுதம் மிச்சைபோல்
மாற்றியே போதிப்பதால்
மானிடர்க் கறியாமை நீங்கிடும் காலமினி
வருவதற் குறுதியுண்டோ
நுண்ணறிவு மெய்ஞ்ஞான மருள்தயவு பொறுமையிவை
நிறையவே பெற்றபெருமை
நீடித்த குருசர்வ சமயமா னிடர்க்குமுப
தேசமது செய்யவைப்பாய்
கண்ணற்கு மருகனே வந்தென்னை யாளுவாய்
கர்த்தனே யுமைமைந்தனே
காரணா மாவைவா ஸ்ரீஸ்வரா மந்த்ரவேல்
கைதனிற் கொண்டதேவே. 9

அந்தகன் வந்துயி ரலைக்கின்ற போதெனக்
காருதவி செய்யவருவா
ரையனே யுனையன்றி வேறெவரு மில்லையுன்
னடியிணைகள் போற்றிசெய்தேன்
சந்ததமும் வந்தெனக் குபதேச மதுசெய்வை
சச்சிதா நந்தமுதலே
சற்குணா நந்தனே யற்புதப் பிரமமே
சகலகலை யோதுகுருவே
விந்தையா யுயிர்களைக் காக்குமொரு தெய்வமே
வேதவடி வானபொருளே

விற்பன விலாசமே மெய்ஞ்ஞான பானுவே
விண்ணவர் துதிக்குமுதலே
கந்தகுக மயிலேறி வந்தென்னை யாளுவாய்
கர்த்தனே யுமைமைந்தனே
காரணா மாவைவா ஸ்ரீஸ்வரா மந்த்ரவேல்
கைதனிற் கொண்டதேவே. 10

மாவைப் பதிகம் முற்றிற்று

உ

# செல்வச் சந்நிதி முருகன் திருப்பள்ளியெழுச்சி

ச. வயித்தியலிங்கம் பிள்ளை

சீருறு நினதருள் செறியடி யவர்தஞ்
சிந்தையி னிலமில கினவவ ரருள்மா
மேருறு கிரியெழு சிதமென வல்லோன்
இந்திர திசைவரை யினிலெழு கின்றான்
பேருறும் அரிமுதல் அமரர்கள் பரவப்
பேசரு மறைமிகும் ஒலியொடு பரவ
நேருறு தொண்டைநன் நகூருறு வளச்சந்
நிதியரசே பள்ளி யெழுந்தரு ளாயே. 1

ஆண்டலை கூவின வன்னி புட்ட
மன்பொடு கூவின புள்ளொலி பரந்த
மாண்டகு சங்கமொ லித்தன வானின்
மருவிய தாரகை மறைந்தன கடன்மேல்
ஏண்டகு கதிரவன் றோன்றினன் அன்பர்க்
கெளிவரு மறுமுக விறையவ மிகவே
நீண்டிடு மரநிறை வனமுறு வளச்சந்
நிதியரசே பள்ளி யெழுந்தரு ளாயே. 2

தோத்திர மிசைத்திடு மடியவ ரொருபால்
சுற்றியஞ் சலிசெயு மடியவ ரொருபால்
காத்திடு வெனவரு மடியவ ரொருபால்
கைகுவித் தேதொழு மடியவ ரொருபால்
பூத்திரள் சிந்திடு மடியவ ரொருபால்
பொறபுற வெங்கணு நிறையவந் தெடுத்தார்
நேத்திர மணியென குருபர வளச்சந்
நிதியரசே பள்ளி யெழுந்தரு ளாயே. 3

மணிமயி லதன்மிசை நீயிருந் தாங்கு
மறிகடன் மிசையொடு கதிரவ னுதித்தான்
அணியுறு மரைமலர் நினதரு ளடைந்த
வன்பர்த முகமென விகசித மான
கணியுறு புனமதில் வருகிற மாது
காதலோ டணைதரு வாகுமுந் நான்கா
நிணதரு படைநிசி சரர்தமை யடுசந்
நிதியரசே பள்ளி யெழுந்தரு ளாயே. 4

அயனரி முதலிய வமரர்க ளறியா
வானந்த மெய்ப்பொரு ளேநின தடித்தொண்
டியன்முறை புரியடி யவர்தமக் கெளியாய்
இன்னமு தேகரும் பேமுடி மணியே
நயனம திடைநின்று களிதரு தேனே
நாயக னேகுக னேயறு முகனே
நியமமோ டுறுபவர்க் கருடரு வளச்சந்
நிதியரசே பள்ளி யெழுந்தரு ளாயே. 5

ஓதரு மொளிவிடு முனதயில் கண்ட
வுறுமயில் புரியவஞ் சனிபடை யொப்பக்
கோதரு கதிரறி யெழுவது கண்ட
கூரிரு ளழிந்தது குலவிய மதிய
மூதொளி மழுங்கிய துனதமர்க் கழிந்த
மொய்யறு மவுணர்த முகமென வறமார்
நீதரு மறிஞரும் வருதிரு வளச்சந்
நிதியரசே பள்ளி யெழுந்தரு ளாயே. 6

திறற்புய னாதிய வீரர்கள் சூழத்
திண்டிறல் கெழுமிய பூதர்கள் சூழப்
பிறப்படு முனிவரொ டமரர்கள் சூழப்
பேரயில் முதலிய படைத்திறஞ் சூழ
வறற்படு குழற்சசி மகள்குற மகளோ
டருடர வமர்தரு வறுமுக வர்த்த
நிறக்கடம் பணிபுய நிறைதரு வளச்சந்
நிதியரசே பள்ளி யெழுந்தரு ளாயே. 7

பச்சிலை யொடுமலர் பரிவொடு கொணர்ந்தார்
 பாலுறு காவடி பலப்பல கொணர்ந்தார்
வச்சிர நவமணி மாலைகள் கொணர்ந்தார்
 மாமணி செறியுநன் மகுடங்கள் கொணர்ந்தார்
இச்சையொ டிருவழி முதலிய கொணர்ந்தா
 ரெண்ணிய வரம்பேற வீண்டின ரிங்கன்
நிச்சய முறுதவர் தொழிதரு வளச்சந்
 நிதியரசே பள்ளி யெழுந்தரு ளாயே. 8

ஐந்தொழில் நடம்புரி கையனு முமையு
 மன்பொடு தழுவுதற் ககநினை வுற்றார்
சிந்துர வதனவைங் கரத்தலை வனுநற்
 சிரமுகந் திடவிரும் பினனரி முதலாஞ்
சுந்தர வமரர்கள் பணிசெய வந்தாய்
 தூயநன் மறைமுதற் கலையுணர் புலவ
நிந்தையி லவர்துதி புரிநிறை வளச்சந்
 நிதியரசே பள்ளி யெழுந்தரு ளாயே. 9

தென்மலை முனிவனுக் கருளிய குருவே
 தேவர்க ளிடர்களைந் திடவரு முருவே
அன்னையம் பிகைக்குமுன் னுறவிடு பாதா
 வரன்செவி யினிற்பிர ணவமுரை நாதா
முன்னடு முடிவில தாகிய சோதீ
 முத்தர்க டமதுள மேவிய வாதீ
நெல்மணி வயல்புடை சூழ்திரு வளச்சந்
 நிதியரசே பள்ளி யெழுந்தரு ளாயே. 10

**செல்வச் சந்நிதி முருகன் திருப்பள்ளியெழுச்சி முற்றிற்று**

உ

# திருச்செந்திலாண்டவன் திருப்பள்ளியெழுச்சி

வெற்றி வேற்கரமுடையாய் எமையுடையாய்
விடிந்ததுன் பூங்கழற்கிணை மலர்கொண்டு
சுற்றிய அடியேங்கள் தூய்மனத்துடனே
சொல் மகிழ்வுடன் நிறைதினம் திருவடி தொழுவோம்
தெற்றிய கமலங்கள் அலரும் தண் வயல் சூழ்
திருச்செந்திலம்பதி வாழ் முருகோனே
எற்றுயர் சேவற் பதாகையையுடையாய்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே 1

கீழ்த்திசை அருணனும் கிளரொளி வீச
கிளி மயில் குயில் காகம் சேவல்கள் கூவ
காரிருள் நீக்கிடும் கதிரவன் வரவும்
கடிமா மலருடன் ஏந்திய கையார்
தாழ்ந்திடு சென்னியர் தவமுடைப் பெரியோர்
தனித்தனி நாமங்கள் புகலுவார் நாவில்
ஏழிசை பரவும் நற்செந்திலம்பரனே
எம் பெருமான் பள்ளி எழுந்தருளாயே 2

வெண் சங்கமுழங்கின விசையொலி பேரி
வித வித வாத்தியங்கள் ஒலித்தன பலவால்
தண்ணருள் சுரந்திடும் தளிர் மலர்ப்பாதங்கள்
சார்ந்துடன் தெரிசிக்க யாவரும் வந்தார்
பண்ணிரை வேதியர் வேதமுழங்கி
பனிமலர்த்தூவியே பரவினர் மருங்கில்
எண்ணரும் செந்தியில் இசைந்தமர் முருகா
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே, 3

பாற்குடம் காவடிபக்தர்கள் ஒருபால்
பரிவுடன் வழிபடும் அன்பர்கள் ஒருபால்
நாற்றிசையோர் திரை கொணர்ந்தனர் ஒருபால்
நலமுடன் தமிழ்மறை ஒலிப்பவர் ஒருபால்
பாற்கடல் துயின்றோனும் பிரமனும் ஒருபால்
பண்புடன் ஊர்வசி அரம்பையர் ஒருபால்
ஏற்குறும் ஒளிதிகழ் செந்திலமர்ந்தோய்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே, 4

பஞ்ச பூதங்கள் யாவும் பரவிநின்றோய் என்றும்
பார்க்குமிடந்தோறும் பண்புற அமர்ந்தாய்
எஞ்சலில் இசையுடன் ஏற்றுதல் அல்லால்
என்புருகவும் நினைக்கண்டறியோம் யாம்
தஞ்சமென்றடியவர்க் கருளும் செந்தூரா
சதுர் மறை யூடுறை ஷண்முகநாதா
எஞ்சிய பழவினை அறுத்தெமையாண்ட
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே. 5

செப்பரும் அடியவர் தனியிருந்துணர்வார்
செய்வினை யகற்றிடுவார் தவர் பலரும்
ஒப்பரும் இருடிகள் தம்மனையோடும்
உவமையில் ஜெயத்தோடு ஒன்றியே அமர்ந்தார்
செய்ப்பெறும் நீள்வயல் சூழ்திருச்செந்தூர்
சிறப்புடன் அமர் சிவசுப்பிரமணியா
எப்பிறப்பினும் உனை ஏத்திட அருள்வாய்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே, 6

தேனினி தெனக்கண்டு பால் இனிதெனவே
செப்புகின்ற அமுதம் இனிதென உணரரர்
மானமர் திருவடி மடிமிசை உறவே
வந்தெமை ஆண்டிட இங்கெழுந்தருளும்
மேல் நிமிர் சோலை சூழ்செந்திலம்பதிவாழ்
வேலனே சீலனே விஞ்சையர் கோனே
ஞானவடிவே எமை ஆட்கொண்ட கோவே
நாதாந்தனே பள்ளி எழுந்தருளாயே, 7

ஆதி நடுவும் அந்தமாகியும் நின்றாய்
அரி அயன் அறியார் யாருனை அறிவார்

ஜோதி வடிவாம் இரு தேவியும் நீயும்
தொல் புகழ் அடியார்க் கருள் செய்யும் பரனே
ஓதிய மறை புகழ் உருவினைக் காட்டி
உயர் திருச்சீரலைவாய் நகர் காட்டி
வேதிய ராவதும் காட்டி வந்தாண்டாய்
விமலனே திருப்பள்ளி எழுந்தருளாயே. 8

வானகத் தேவரும் வழிபடும் நின்னை
மாபொருளே நிதம் வாழ்த்திட என்றும்
மான் இப்புவிதனில் வந்தமர் வாழ்வே
மன்னு செந்தூரா வழிவழி யடியோம்
ஊனகத்துலவி நின்றொளிரும் செந்தேனே
ஒளிக்கொளியா யென்றும் பரவும் அடியார்
ஞான அகத்தினில் நற்றொளிரானாய்
நல்லமுதே பள்ளி எழுந்தருளாயே. 9

அவனியிற் பிறந்து நாம் ஆய்வறிவில்லா
ஆனகாலம் வீணாய்ப் போக்கினோம் அவமே
சிவகுமார யாங்கள் உயர்ந்திட நினைந்து
சீரலைவாய் உறைவாய்அயன் மாலாம்
புவிதனில் போற்றவும் புகழவும் நின்றாய்
புண்ணியனே நின் கருணையும் நீயும்
தவமிலா சிறியேமை தடுத்தாள வல்லாய்
தயரபரனே பள்ளி எழுந்தருளாயே. 10

திருச்செந்திலாண்டவன் திருப்பள்ளியெழுச்சி முற்றிற்று

உ

# கதிரைமலைப் பள்ளு

## காப்பு

கார்சேருஞ் சோலைக் கதிரையில்வே லாயுதன்மேற்
சீர்சேரும் பள்ளினிசை செப்பவே — கூர்சேரும்
கொம்பொருகைக் கொண்டவிறற் கும்பவயிற் றைந்துகரக்
கம்பமதத் தும்பிமுகன் காப்பு.

### அவையடக்கம்

ஒக்க வுதும்பரத்தி னொண்மணியை வைத்தாலும்
மிக்கவர்க ளெல்லாம் விரும்புவார் — அக்கதைபோ
றென்கதிரை வேலர் திருநாமம் பாடலால்
என்கதையை யெண்ணா ரிகழ்ந்து.

## நூல்

### கடவுள் வணக்கம்

சீர்கொண்டசெ ழுங்கம லந்தனில்
வாழ்மங்கைமா னும்புய மங்கையர்
சேரும்புவி மகிழ்வொடு செறிவாகி
ஏர்கொண்டவ னஞ்செறி மன்றினி
லேயைந்தொழில் கொண்டுந டம்புரி
ஈசனடி யார்க்கருளும்பசு பதிபாலன்
கூர்கொண்டொரு கொம்பு நலந்திகழ்
மாதங்க முகன்கர மைந்துடைக்
கோலந்திகழ் குரிசிலினிருபதம் மறவேனே
கார்கொண்ட ககனம் படியுந்தூய
கானந்திகழ் கதிரையில் நிகழெதிர்
காலங்களி னருள்செயு முருகன் பள்ளிசை பாடவே. 1

### மூத்தபள்ளி இளையபள்ளி குடும்பன் வரவோடு அவர் பெருமை கூறல்

வாசங்கொள் மலர்சூடிக் கேசங்கொள் கருமுகிலின்
வார்கொண்டை யிடைநோக வளைபுலம்பத்
தேசங்கள் விலைபேசுந் தூசெங்கு மிசைமேவச்
சீர்கொண்ட யிடைநோகச் சிலம்பலம்பப்
பாசங்கள் பலபவ நாசஞ்செய் திருவேணிப்
பகீரதா கங்கைவயற் பள்ளியுடனே
காசெங்குஞ் சுடர்வீசும் காசிநன் மாவலி
கங்கைவயற் பள்ளன்பள்ளி தோற்றினாரே. 2

### மூத்தபள்ளி வருதல்

கொண்டலைப் பொருவுமலர்க் குழலுங் கனதனக்
கூடம் சுமந்த யிடைக்கொடி யசையவே
விண்டலத்தின் மாமதியை வென்றமுகம் வேர்வரும்ப
வெண்டரள மணிமாலை மெய்யி லங்கவே
தொண்டர்களுக் கன்பருளும் தென்கதிரை வேலன்
சூரனைத் தடிந்துமிக வீரமுற்ற வெம்மான்
கண்டவர்க்கு நன்மைதரும் கந்தவேள் மாவலி
கங்கை வயற்பள்ளி தோற்றி னாளே. 3

### இளையபள்ளி வருதல்

நஞ்சௌனக் கரியவிழி யஞ்சனக்குறி யெழுதி
நத்துமுத் தணிந்து பொன்னி னணிதாங்கி
விஞ்சுகருங் குழல்வீழ வேயைவென்ற தோளிலங்க
வில்லூர்திப் பட்டினா லுல்காசஞ் சேர்த்து
குஞ்சர முகன்கரமொ ரைந்துடையோ னொற்றைக்
கொம்பன்கொண்டல் வண்ணன்தனி லன்பு
கொண்ட மருகோன்
கஞ்சமலர்ப்பதம் போற்றிக் கணபதி பகீரதா
கங்கை வயற்பள்ளி தோற்றி னாளே. 4

### பள்ளன் வருதல்

வெண்டரள வர்ணத்தூசாற் கச்சையுங் கட்டி—மயில்
வில்லூர்திப் பட்டினாற் றோட்பாரஞ் சேர்த்துக்
கண்டகள்ளைப் பிரியமுற்றுக் கொண்டுகுடித்துக்—களித்துக்
கண்சிவந்து மீசைகோதிக் கந்த னருளால்
தொண்டரணி நீறுநெற்றி மீதிலங்கப் பொட்டும்—இட்டுத்
தோகைபோல் மண்வெட்டி தோளிற் போட்டு

மண்டலமெண் டிசைபோற்றும் கதிரைவள-நாட்டு
வயற்பண்ணை செய்யும்பள்ளன் தோற்றினானே. 5

**பள்ளியர் தத்தம் நாட்டுவளம் கூறல்**

நஞ்சு போல்விழி மங்கையர் கூடி
நயங்கள் பேசி யிசைபாடி யாடி
பஞ்சு போலடி மெல்ல நடந்து
பணைத்த கொங்கை கனத்திடை தொய்ய
விஞ்சு கோதை விரித்து நறும்புனல்
மீது லாவி விளையாடக் கண்டு
மஞ்சு மஞ்சி மலையி லொளிக்கின்ற
மாவலி கங்கை நாடெங்கள் நாடே. 6

வஞ்ச வஞ்சியர் கற்பழித் தோர்மறை
வாண ராருயிர் மாய்த்தவ ரேனும்
செஞ்சொல் வேத விதியால் வருபுனல்
தேவ தேவன் திருக்காசி மேவித்
தஞ்ச நீணதி யென்று மனத்துன்னித்
தர்ப்பணம் புரிந்தா லவர்தங்கள்
பஞ்ச பாதக மெல்லாம் தொலைக்கும்
பகீர தாகங்கை நாடெங்கள் நாடே. 7

காசில் பொற்சிலம் பின்சிக ரத்தைக்
கால்ப றித்தே யெறிந்திட வந்த
மாசில் தென்கோண மாமலையைச் சூழும்
மாவலி கங்கை நாடெங்கள் நாடே. 8

வரமு டைக்கபி லன்முன் னெரிந்தநல்
வன்மைச் சாகர ரின்சுவர்க் கம்பெறப்
பரம னைத்தவம் பண்ணியே பெற்ற
பகீர தாகங்கை நாடெங்கள் நாடே. 9

போத நாண்மலர் நாயக னார்நற்
புரந்த ரன்முதற் றேவர்கள் யாவர்க்கும்
மாத வர்க்கு மரிய தவம்வைக்கும்
மாவலி கங்கை நாடெங்கள் நாடே. 10

மாய வஞ்சக் கொடும்பவர் மாய்ந்திட
வந்தே யங்க மெடுத்தவர் போடப்
பாவந் தீர்த்துப் பரகதி யேற்றும்
பகீர தாகங்கை நாடெங்கள் நாடே. 11

செய்ய கேது தலையற்ற வந்நாள்
திருந்தும் பூசைகள் செய்து முடிப்போன்
வையம் போற்றிட நற்கதி யுற்றிடும்
மாவலி கங்கை நாடெங்கள் நாடே. 12

நலம தாகவே பூசித்த பேர்க்கெந்த
நாளும் பாக்கிய மோக்ஷமி யாவும்
பலவி தத்தினு மீந்திடு கின்ற
பகீர தாகங்கை நாடெங்கள் நாடே. 13

கோவிற் றன்சொற்கீழ் மேலுல கெல்லாம்
கொள்ளும் வேலைக் கதிரையில் வேலன்
மாவி லூன்றிப் பதம்வைத்துக் காத்திடும்
மாவலி கங்கை நாடெங்கள் நாடே. 14

அதிக பாவிக ளாயினு மெவ்வுயி
ராயினு மத்த லத்தி லிறந்தாற்
கதித ருந்திருக் காசியைச் சூழும்
பகீர தாகங்கை நாடெங்கள் நாடே. 15

எங்கும் மாமணி விற்பொலி யுங்கதி
ரெங்குந் தாமரை யன்னம் படுமலர்
மங்கு றாத வளந்திக ழுந்திரு
மாவலி கங்கை நாடெங்கள் நாடே. 16

திங்கள் தோறுமும் மாரிகள் பெய்யச்
சிறந்த சீருடன் தேனிசை செப்பப்
பங்க யத்தைக் குளங்கள் பரிக்கும்
பகீர தாகங்கை நாடெங்கள் நாடே. 17

அணி யிளங்கதி ராயிர முள்ள
வருக்கன் போய்க்குட பாலிடை மேவ
மணி கொணர்ந்து மணிவிளக் கேற்றிடு
மாவலி கங்கை நாடெங்கள் நாடே. 18

காய்ச்சுத் தோயலுடன் சோறு மிட்டுக்
கடனுக் காகவே கைமரக் காலால்
பாய்ச்சியே செந்நெல் முத்தளக் கின்ற
பகீர தாகங்கை நாடெங்கள் நாடே. 19

வேணிச் சங்கரர் தொண்டர்க ளென்று
　　வீடு தோறு மிரப்பவர்க் கெல்லாம்
மாணிக்க மள்ளிப் பிச்சை கொடுத்திடும்
　　மாவலி கங்கை நாடெங்கள் நாடே. 20

ஆரேனுந் தொழு வோர்க்கன்பு கொண்டவ
　　ராசை யின்படி யாக வருள்வோன்
பேர் புகன்றிடு வோரையுங் காத்தவன்
　　பேசுங் கங்கை நாடெங்கள் நாடே. 21

பொன்னு லோகம் பொருவுநன் னாட்டின்
　　பொழிலிற் றோகை மயில்நின் றுலாவும்
வன்ன வேலன் கதிரைக் குமரேசன்
　　மாவலி கங்கை நாடெங்கள் நாடே. 22

**இளையபள்ளி தன் ஆண்டையின் பெருமை கூறல்**

**(விநாயகர் பிரபாவம்)**

எங்கு மாகி யெவருக்கு மின்னதென்
　　றெண்ணொ ணாத பராபர மாகி
மங்கு றாத பரையாகி யானந்த
　　மான நீதிப் பரஞ்சுட ராகிப்
பொங்கு பூரண நற்சிவ சத்தி
　　பொலிவதால் நாத விந்துவு மாகி
அங்கி லங்கிய சோதிச் சதாசிவ
　　மாகி யெல்லா வுலகமு மானோன். 23

ஆன வைந்தொழில் தன்னையும் வெவ்வே
　　றடைவ தாக நடத்திய மூர்த்தி
தான்ம கிழ்ந்திட வந்தே யுதிக்கும்
　　தனையன் யாவையும் தானாக்க வல்லோன்
மான தங்க கயமுக சூரனை
　　மங்க வேதடிந் தம்புவி மீது
மேன்மை யானவி நாயக மூர்த்தியெம்
　　வேந்தன் மாவலி கங்கைவயற் பள்ளி. 24

**மூத்த பள்ளித் தன் ஆண்டையின் பெருமை கூறல்**

**(சுப்பிரமணியர் பிரபாவம்)**

முந்தி நீயெங்க ளாண்டையென் றேசொன்ன
　　மூர்த்தி பின்னவன் முக்கட் பெருமான்

தந்த வெண்பொறிச் சண்முக மும்பொன்
 தயங்கு மெய்யுமீ ராறுதடக் கையும்
எந்த நாளும் விளங்கு முலகமீ
 ரேழுங் காக்கு மிறையவ னாகிக்
கந்த மேவு சரவணப் பொய்கையிற்
 கந்த வேளென வந்தே யுதித்தோன். 25

உதிக்கும் வெம்மைக் கொடுந்தக் கனைக்கொன்ற
 வுத்த மன்வீர பத்திர னாலும்
மதிக்கும் மூர்த்திக ளாலுநற் றேவர்கள்
 மற்று முள்ள கணநாத ராலும்
சதிக்கொ ணாவரத் தோடுநூற் றெட்டுகம்
 தாங்கி யாயிரத் தெட்டண்ட மாண்ட
கதிக்குஞ் சூரனைக் காய்ந்துவிண் ணோர்தமைக்
 காத்தவன் சிறை கட்டற மீட்டோன். 26

மீட்டு வானத்து மேன்மையுண் டாகவே
 வெள்ளை வாரணற் கேபொன் மகுடம்
சூட்டி யேயர சாக்கிய பின்னர்த்
 துடியிடைப் பிடி நன்னடைச் செவ்வாய்க்
கோட்டி ளம்பிறை போனுதற் கூந்தற்
 குயில் நிகர்த்த தெய்வானைப் பிராட்டியை
வேட்ட கந்தனெம் மாண்டையயல் லோதிரு
 மேவுங் கங்கை வயற் பள்ளியாரே. 27

குயிற் கூக் கேட்டல்

மாதவரும் ஞானிகளும் மாமுனிவ ரானவரும்
 வானுலகும் வாழவே கூவாய் குயிலே
நீதியுட னேபுவியை யாளுமன்ன ரான்வர்கள்
 நீடூழி வாழவே கூவாய் குயிலே. 28

தீதகல வேசகல பேர்க்குநிறை வாயநன்மை
 சேரமகிழ் வாகவே கூவாய் குயிலே
காதமெழு கீதமொடு காசிகதி ராபுரியெக்
 காலமும் வாழவே கூவாய் குயிலே. 29

பொங்கரவ ணிந்தவன் நடம்புரியு மன்றுமிகு
 புகழ்பெற விளங்கவே கூவாய் குயிலே
சங்கரிதரும் புதல்வ னங்கைதிக ழுயில்வேலன்
 சந்நிதி தழைக்கவே கூவாய் குயிலே. 30

திங்கள்தொறு மெங்குமழை மும்முறைகள் பெய்யவும்
திண்புவி தழைக்கவுங் கூவாய் குயிலே
வெங்கலி யுகந்தனிற் சகலசன முந்தவம்
மிகுந்துதின முஞ்செயக் கூவாய் குயிலே. 31

வஞ்சவெஞ் சூரன்கிளை துஞ்சவமர் செய்கந்தன்
வைவேல் தழைக்கவென்று கூவாய் குயிலே
கஞ்சனஞ் சிடவினவி யேசிறையில் வைத்திட்ட
கருணையுள முருகனென்று கூவாய் குயிலே. 32

மஞ்சுமென் குழல்பூவை கொஞ்சுமென் சொல்லினிய
வள்ளிநா யகனென்று கூவாய் குயிலே
சஞ்சலந் தவிரக்கொ டுஞ்சிறையி னீக்கியருள்
தந்திடுந் தீரனென்று கூவாய் குயிலே. 33

வாரிறுகு முலையாளா மம்மைகா தலனுடைய
மாணடிகள் வாழவென்று கூவாய் குயிலே
நேருடன் புவிமீதில் நன்னீதி நாதனருள்
நீடூழி வாழவென்று கூவாய் குயிலே. 34

### மழை பெய்ய வரங் கேட்டல்

வேதியர்கள் குலவணிகர் வேளாளர் மரபிலுள்ளார்
பாதிமதிச் சடையோனெம் பரமனருள் தென்கதிரை
நீதிபெறும் வேலவரை நேசமுடன் போற்றிசெய்து
ஓதுமலர்ப் பதம்பணிந் துவந்துமழை கேட்டனரே. 35

### மழை பெய்ய வரங் கொடுத்தல்

என்றமொழி தனைக்கேட்டு யெழில்வருணன் தனை
யழைத்து
வென்றியுடன் மழைபெய்ய வேணுமென விளம்பினரே
நன்றெனவே மனமகிழ்ந்து நன்முகிலை வரவழைத்து
இன்றுமுதல் மழைபொழிகென் றெழில்வருணன்
விடைகொடுத்தான். 36

### மழை பெய்தல்

சுரநதி யுருமுற் றெழுமுகில் பரவித்
தொனிதரு பரவைத் திரைபொருநீர்
பரிவொடு பருகித் திசைதிசை பரவிப்
பணிவரை தோறுந் திகழ்வுறவே. 37

பரன்தரு குகன்மகிழ் கதிரா புரியிற்
பலமணி விஞ்சுங் கடமுறவே
நிரந்தர மதிரு முரசின் முழங்க
நிலமக ளஞ்சி நடுங்கினளே. 38

நிலவெழ விண்மே லெங்கணு மின்னி
நெருங்கிய காலுற நின்றதிர
நலவரை நகரம் பொழில்வன மெங்கணும்
நன்மழை மாரி பொழிந்ததுவே. 39

கானக மிருக சாதிகள் பறவைகள்
கட்புலன் மூடி நடுங்குறவே
தேனிசை பயில்கதி ராபுரி யெங்கணும்
செழுமழை மாரி பொழிந்ததுவே. 40

**ஆற்றில் வெள்ளம் வருதல்**

கனக மலைக்குவ டொடிய விசைப்பொடு
கலவி நிலத்திடை சுலவியநீர்
சினைகொள் மரத்துற நெரிய வகற்றிய
சிறையுட னிரைபுள்ளும் வெருவுறவே. 41

வனமதி லுறைதரு மதகரி யுலவையில்
வலிகெட நளிருட லுலைவுறவே
சினைமணி களுமிக நிறைவுற வருவெளம்
திசைதிசை தோறு நிறைந்ததுவே. 42

**குறிஞ்சி**

பாரப் பதலை யருவி பெருகிப்
பதறிக் கதறிக் கொதித்துரம்
பாய்ந்து சிலையி லோய்ந்து திகழும்
பகட்டு மருதம் பொருப்பொடே

சேரப் புரளத் தரளத் திரளைச்
சிதறிக் கதறிச் சிந்துரம்
தியங்கு புனலில் மயங்கித் தியங்கிச்
செயங்கெட் டொடுங்கி நடுங்கவே

ஆரத் தருவை யலைத்துக் குலைத்து
அகிலைப் பறித்து முறித்து நீள்

ஆம்பி ரத்தொடு காம்பு மிக்குயர்
தேம்பு னத்திடை மோதியே

வாரைப் பொருது குயத்தி குறத்தி
வள்ளி கணவன் மலர்ப்பதம்
வழுத்திக் குறிஞ்சி நிலத்தைக் கடந்து
வந்து பாலை யடைந்ததே. 43

பாலை

பாலை நிலத்திற் புகுந்து மிகுந்து
பரவிக் குமுறி யகிலுடன்
படரை மேவி யுருண்டு புரண்டு
பனித்து மிருகம் பதறவே

வேலைக் கிணைய தாகத் திரைகள்
வீசிச் சீறி மோதவே
வெருண்டங் குருண்டு பருந்து புறவு
மிதக்கும் புனலின் வெதிர்ப்பொடே

ஆலக் கவர வயிரை நகர
அழகு மணிகள் திரையொடே
அலையும் பெருகிப் பரவிக் கரையில்
அதிர மீறி யார்க்கவே

சீலத் துடன்மைக் காளி துணைகொள்
செய்ய பதத்தை வழுத்தியே
தேறு நிலங்கடந் தோடிக் கூடிச்
செய்ய முல்லை யடைந்ததே. 44

முல்லை

அடரும் புனலிற் சுடரும் சுழிகண்
டண்டர் வெருவி யோடவே
ஆவின் குலங்கள் தியங்கிப் புனலில்
அலைபுட் குடம்போ லலையவே

படலுந் தடியும் கொடியும் குடிலும்
பாயும் பாதைத் தொகுதியும்
பச்சை மாதவிப் பைந்தாண் மலரும்
பலவும் புனலிற் படியவே

திடரும் பெருகித் திரைகொண் டெறிந்து
சிறக்கும் கனகஞ் சிதறியே
செறியு மறியும் கொறியு முயலும்
திரையிற் கரையிற் சிதறவே

சுடரும் பஞ்சா யுதன்பொற் பதங்கள்
தொழுது கலவிச் சுலவியே
துய்ய முல்லை யெல்லை கடந்து
தோன்று மருதம் புகுந்ததே. 45

### மருதம்

மருத வனத்தைத் துளக்கி யுழக்கி
மணக்கு மிஞ்சி செண்பகம்
மாழை வாழை தாழை வேழம்
வருக்கை பலவும் நெருக்கியே

முருக்கித் திருக்கி யடிகள் பறிய
முறித்துக் குடிலின் மோதியே
முளரித் தடத்தை மடக்கிக் கலக்கி
முதிரும் வெள்ளம் பரந்து போய்ப்

பெருகு புகழ்கொண் டுயர்தென் கதிரைப்
பெருமான் தனது தொண்டர்மேற்
பெருத்த கருணை வெள்ளம் போலப்
பெருகி யெங்கணு மருவியே

தருவைந் துடைய குலிச பாக
சாத னன்றனை வழுத்தியே
தாழ்ந்து மிகுந்து மருதங் கடந்து
தழைக்கு நெய்தல் புகுந்ததே. 46

### நெய்தல்

புகுந்து தாழை வனத்தைக் குறுகிப்
பொடித்து மடித்து விருப்புடன்
போதை வீசித் தங்கு மறலிற்
புரியுந் திடரைச் சருவியே

பகிர்ந்து மகிழ்ந்து பரந்து நிறைந்து
பாரக் கடலிற் சேரவே

பரவிப் பரவர் வலையுங் கயிறும்
பாயும் பாதைத் தொகுதியும்

மிகுந்த கலமும் மரமும் பாயும்
வீச்சு வலையும் வீசிமேல்
மிதக்கும் புணையும் தூண்டிற் கயிறும்
வேண்டும் பவளக் கொடிகளும்

முகுந்த னனந்த சயனம் பயிலும்
மூரிக் கடலைத் தாவியே
முடுகித் திரையிற் கரையிற் படிந்து
முதிரும் வெள்ளம் பாய்ந்ததே. 47

மாக நின்று குலவி வந்துயர்
மலையைக் கடந்து மண்ணின்மேல்
வழுத்திக் குறிஞ்சி பாலை முல்லை
மருதம் நெய்த லிவையெலாம்

ஓகை கொண்டெழ வாரி மண்டி
உலவி யெங்கணு மோடியே
உடைத்துப் புடைத்து நிலத்தைக் கலக்கி
உலகர்க் குதவும் படியதால். 48

ஏக னெம்பெரு மான்ப ரன்தரும்
ஏந்தல் கதிரைக் கிறைவன்நால்
எட்டறம் புரி யன்னை பாலன்
இமையோர் தற்பர மானவன்

வாகன் வள்ளிம ணாளன் மகிழ்ந்து
வாழுங் கதிரை நாட்டிலே
மாவலி கங்கை யாறது பெருகி
வருதல் பாரும் பள்ளிரே. 49

### வெள்ளத்தில் ஓடும் மீன்வகை

குண்டத் திருக்கை பறவை தரளம்
கொடுவா லுழுவை கும்பிளா
குறவை பிறையன் காரை மணலை
குழு முரல்கடல் மறிமண்ணா

தொண்டை மடவை நாரை பாரை
சுறவு வாளை கடல்வரால்
சுரும்பு நெத்தலி கெத்தலி கத்தலை
தும்பை யோரா வஞ்சூரன்

கெண்டை திரளி சள்ளைவெள்ளை
கீழி காலை பாலைமீன்
கெளிறு மலங்கு துலங்கு புனலிற்
கீழுலாவு றால் முறால்

மண்டிக் குதித்துக் கடலின் மீன்களும்
வாவிக் கழியின் மீன்களும்
மதத்துச் சினத்துக் குதித்துப் பாயும்
வளமை பாரும் பள்ளிரே. 50

### பண்ணைத் தலைவன் வரவு

சுற்றித் திரித்தபழு தைப்புரிபோல் வாகும்—மிக்க
தொந்திவயி றும்வளையற் காலினழகும்
வற்றிப்போன வாரணம்போல் மார்பினழகும்—சுட்ட
வட்டப்பானைபோ லுள்ளமொட்டந் தலையழகும்
உற்றுப் பார்க்க வச்சமான கூகைமுகமும்—தெத்தல்
ஓலைச்செவி யூசற்பாசிப் பல்லினழகும்
சற்றப்பாலே விட்டுப்போன வொட்டற்காதும்—பெற்ற
தனிப்பண்ணைக் காரனாருந் தோற்றினாரே. 51

### பள்ளியர் பண்ணைத் தலைவனை வணங்க வருதல்

மேகவர்ணச் சேலையுடுத் துல்காசம் பூண்டு—கையில்.
விரலாழி யிட்டிருகைக் கடகம்பூண்டு
ஆகமீதி லாரம்பு னைந்தாரம் பூண்டு—விழிக்
கஞ்சனமு மெழுதிநுதற் சிந்தூரமிட்டு
நோகவஞ்சி யிடைகனத்த தனபார மசையக்—காலில்
நூபுரஞ் சிலம்பலம்ப மெல்லநடந்து
பாகனைய சொல்லுடைய வன்ன நடையீர்—எங்கள்
பண்ணைக்கார னாரைத்தொழ வாரும் பள்ளிரே. 52

### பண்ணைக்காரனாரை வணங்குதல்

சுரித்த கழுத்தனாரே கும்பிடுகிறேன்—வட்டச்
சொறித்தேமற் காதனாரே கும்பிடுகிறேன்

பெருத்த வயிறனாரே கும்பிடுகிறேன்—வாதம்
பிடித்தபொற் காலனாரே கும்பிடுகிறேன்
திருத்தமில் லாதவரே கும்பிடுகிறேன்—சற்றே
திருகல் முதுகனாரே கும்பிடுகிறேன்
அரித்ததந் தத்தனாரே கும்பிடுகிறேன்—பண்ணை
ஆண்டவரே யாண்டவரே கும்பிடுகிறேன். 53

### மூத்தபள்ளி பண்ணைத் தலைவனிடம் முறையிடுதல்

பண்ணைக்கார னாரைக்கண்டு மாவலி கங்கை—வயற்
பள்ளிதானு முள்ளமுறைப் பாடெல்லாஞ் சொல்வாள்
பெண்ணைப்புறஞ் சொன்னதென்று கோபங்கொள்ள
வேண்டாம்—என்
பேச்சைச்சற்றே யுற்றுக்கேளும் பேதைப்பள்ளன் தனது
கண்ணைப்போலே பகீரதா கங்கைப் பள்ளி
தன்னை—வைத்துக்
கன்னித்துய ராக்கியெனைக் கைவிட்டா னாண்டே
எண்ணத்திலு மவளல்லா லென்னை நினையான்—அவள்
இட்டமருந் தால்மயங்கி விட்டான்கா ணாண்டே. 54

### இளையாள் எதிர்மாற்றம் கூறுதல்

ஆண்டவர்க் கல்லாதுபின்னை யாருக் குரைப்பேன்—இவள்
ஆகடியம் பேசியதை யாருடன் சொல்வேன்
மூண்டசினம் தீரவென்கை தீண்டுவே னாண்டே—திரு
முன்னேயாச்சுப் பின்னேயல்ல வென்னதான்
சொல்வாள்
வாண்டது முண்டதுஞ்சில் வளப்பங்கேளு
மாண்டே—கொழு
மண்வெட்டி விற்றுத்தின்ற திவனிவளொ டாண்டே
வேண்டுமென்ற பண்டங்கொண்டு கள்ளுமருந்தி—என்தன்
மேலேபிழை சாட்டிவிட்ட மேன்மையோ ஆண்டே 55

### மூத்தபள்ளி கூற்று

மேன்மையெந்தன் முன்னின்று பேசாதே போடி—கரு
வேழமதமும் பிணத்தி லிட்ட ரிசிதானும்
தேனும்வெள்ளைக் குன்றிமணி வேருநாரு
மிலையும்—கன்னித்
தென்னைமுன்ன மீன்றதொரு தேங்காயும் சேர்த்தே

கானமீது நிறைகள்ளிப் பாலுடனே வேருங்—கருங்
காக்கணங் கொவ்வை விரையுங் காக்கைநாக்கும்
ஆனபடி யுண்டைகூட்டிப் பள்ளனுக் கிட்டே—பின்னும்
ஆரறிவா ரென்றுசொன்ன தாரடி பள்ளி. 56

### இளையபள்ளி மாற்றம்

ஆரைவெறுப் பேன்விதியை யல்லாதுபின்னை—எங்கள்
ஆண்டைமுன் னென்னைப்பார்த் தில்லா
தெல்லாஞ் சொன்னாள்
ஊரையுலை மூடிகொண்டு மூடலாமோடி—இந்த
ஊருக்கு ளாருக்கடி யுண்டிந்த வித்தை
தேரைவிழி யுந்திரங்கற் றேவாங்கின்பித்தும்—புற்றிற்
செல்லுநச்சுப் பல்லிவாலு நெல்லிக் கொழுந்தும்
சாரைநிணமும் உருக்கிக்கூட்டி யுலர்த்தி—வீரத்
தலையோட்டில் மையுண்டாக்கிச் சாதித்தா
ளாண்டே. 57

### மூத்தபள்ளி கூற்று

காட்டில் வாழுங் கழுகின் தயிலமும்
கையி லூத்தையு மெய்யில் வேர்வும்
கோட்டு நாகத்தின் பூவும் துடரிக்
கொழுந்துங் கூன லழுங்கின் தசையும்
வேட்டை வாளியின் கூடு மடவியில்
வேடன் பாடலிச் சாற்றி லரைத்து
ஊட்டியே பள்ளன் தேட்டமெல் லாம்பறித்
துண்ட கள்ளி யிவள்காணு மாண்டே. 58

### இளையபள்ளி மாற்றம்

மெய்யில் நாவிச் செவியினில் மாசுடன்
வேங்கைப் பல்லுந்தே வாங்கினிற் பித்தும்
பைய ராவின் தலைதனின் மூளையும்
பன்றி முள்ளுமொ ருள்ளியும் கூட்டிக்
கையி னாலே யரைத் துண்டைபண் ணிவெங்
கள்ளுஞ் சுள்ளுடன் பள்ளனுக் கிட்டாள்
பொய்யும் மிந்திர மாசால வித்தையும்
பூரை யென்னவும் கற்றாள்கா ணாண்டே. 59

**மூத்தபள்ளி கூற்று**

கற்ற வித்தையெல் லாமிந்த வூரவர்
கண்டு கேட்டு மிருப்பவர் போலே
இற்றை நாள்வரை யிதையொன்றாய் வைத்துநான்
எப்படிச் சொல்லு வேனென் றிருந்தேன்
சற்றே தண்ணீர் தலைக்குமே லோடினால்
சாணென் னமுழம் தானென்ன சொல்லும்
உற்ற வேளையிற் சொல்லா திருந்தால்
உறுதி யல்லவென் றுரைத்தேன்கா ணாண்டே. 60

**இளையபள்ளி மாற்றம்**

மண்ணிற் பாதம்வைத் தாலிங் குயிர்பல
மாயு மென்றே உறியி லிருப்பார்
எண்ணிப் பேதமில் லாமற் கொலைகள்
இரவிற் செய்யும் சமணரைப் போல
உண்ண வுந்தின்ன வுங்கள்ளுக் குப்பண்டம்
உள்ள பண்ணையில் மாட்டையும் விற்றுத்
திண்ண மாகவென் மேல்வைத்து மாறின
செய்தி தன்னையுங் கேட்டீரோ வாண்டே. 61

**மூத்தபள்ளி கூற்று**

அக்கரை யாற்றி லிக்கரை மண்ணும்
அழுத பால னடிப்பட்ட மண்ணும்
திக்கெங் குந்திசை யேழூரில் மண்ணும்
திரட்டியே தெய்வப் பிள்ளையா ராக்கி
........................
....................
அக்கினிக் குள்ளே வைப்பாள் செபிப்பாள்
அழைப்பாள் காணு மவன்வர வாண்டே. 62

**இளையாளைப் பண்ணைத் தலைவன் உரப்பல்**

அருக்குவாள் சற்றே விழிக்குமை யெழுதுவாள்
அழகான கூந்தலை யள்ளி முடிவாள்
செருக்குவாள் சற்றே செல்லங்கொண் டாடுவாள்
தேனுடன் கொஞ்சம் பாலுங் கலப்பாள்
உருக்குவா ளூரில் பள்ளரெல் லோரையும்
உச்சியாம் பொழு தூணுக் கழைப்பாள்

நருக்குவேன் கையில் மண்வெட்டி யாலே
நாட்டுக்காகப் பொறுத்தேன்நான் காணே. 63

**பள்ளன் மூத்தபள்ளியை**
**நேரஞ்சென்றதற்குக் காரணம் கேட்டல்**

என்னடி பள்ளி யேகாந்தக் காரிநீ
இந்நேரம் மட்டு மென்னடி செய்தாய்? 64

ஆறு போந்தங்கே தண்ணீரு மள்ளி
அழுத பிள்ளைக்குப் பாலும் புகட்டி
சேறு போந்த சிறுநெல்லுக் குத்தித்
தீட்டி யாக்கவும் சென்றதோ பள்ளி! 65

**அவள் ஆண்டைக்குக் கூறுதல்**

காலமே சென்று பாலுங் கறந்து
கமுகம் பூப்போ லரிசியுந் தீட்டிக்
கடுகவே வைத்துக் காய்ச்சிய பாற்கஞ்சி
காலாலே தட்டி யூற்றினா னாண்டே. 66

இப்படிக் கொத்த நாடங்கப் பள்ளனுக்
கெப்படிக் கஞ்சி காய்ச்சுவே னாண்டே. 67

**பள்ளனை விளித்துப் பண்ணைத்தலைவன்**
**பண்ணைச்செயல் வினவல்**

இந்நிலம் புகழ் தென்கதிரைக் கும
ரேசன் பண்ணை வயல்தனி லுள்ள
செந்நெல்லும் விதை வன்னெல்லுக் கோட்டையும்
செப்ப மான நுகமும்நன் மாடும்
வன்ன மேழியும் மண்வெட்டி யும்பட
வாளும் பாரக் கொழுவு மேர்க்காலும்
இன்ன தென்று கணக்கெனக் குச்சொல்ல
இங்கேவா மாவிலி கங்கைநற் பள்ளா. 68

**பள்ளன் அவைகூறல்**

அந்து தின்றதோ ராயிர கோடி
ஆவினந் தின்ற தாயிரங் கோடி
சிந்தி யேவெள் ளெலியுங் குருவியும்
தின்று போனதோ ராயிரங் கோடி

விந்தை மானும் மரையும் மதஞ்சொரி
வேழ முந்தின்ற தைஞ்ஞூறு கோடி
இந்த நாளள வின்படி யாக
இருந்த கோட்டையி தொன்றுந்தா னாண்டே.69

துய்ய தென்கதி ரைப்பதி வேலவர்
சூரை வெல்லத் தொடங்கிய போது
அய்ய மாக வெருண்டோடிக் கானில்
அடைந்து போனதொ ராயிரங் காளை
வைய மீது கவிப்புல வோர்க்கும்
மறைவல் லோர்க்குமீ ராயிரங் காளை
கையி ராறுபடை யானையன் துய்யன்முக்
கண்ண னேறெனக் காளையொன் றுண்டாண்டே.70

வெற்றி சேர்கதி ரைக்கும ரேசர்க்கு
வேத நூற்படி கோவிலுண் டாக்க
உற்ற போது நிலம்பரி சோதிக்க
உழுது தேய்ந்து தொராயிர கோடி
மற்ற தெல்லாம் வயலுழும் போதினில்
மாணிக்கம் பட்டுத் தேய்ந்தன போக
அற்பு தன்னறு மாமுகன் மாதுலன்
அண்ணன் பாலொர் கலப்பையுண் டாண்டே. 71

கன்னல் சேர்வயற் றென்கதி ரைப்பதிக்
கந்தன் கோவிலில் மாமதில் செய்ய
மின்னுஞ் சுண்ணமில் லாமல்வி சாரிக்கும்
வேளை யில்வந்து காட்சிகொ டுத்தோன்
சொன்ன தோரிடத் திற்சுதை வெட்டித்
தொலைந்து போனதொ ராயிர கோடி
என்னிடத்தினில் வேறொன்று மில்லை
இந்த மண்வெட்டி யொன்றுந்தா னாண்டே.72

**மூத்தபள்ளி முறையீடு**

அருமறை நூலன்—எழில் பெறும்
அசுரர்கள் காலன்—எழில் மிகும்
ஆனவை வேலன்—சங்கரி
அருளிய பாலன்

கருமுகி லொருவன்—மனமிக
மகிழ்வுறு மருகன்—பன்னிரு
கையுடை முருகன்—மாவிலி
கங்கைநல் வயலில்

அருவிகள் கொய்யான்—அதுதொழில்
அடுத்ததும் செய்யான்—அல்லும் பகலும்
அடியளை வைவான்—அவனுரை
அடங்கலும் பொய்தான்

ஒருமொழி சொல்லான்—என்னுடை
அருகிலும் நில்லான்—ஒருகுடி
கெடுக்கவும் வல்லான்—அதிக
ஊதாரி காணாண்டே. 73

குறமகள் பாகன்—எழில்தரு
கோலமெய் வாகன்—அரனருள்
குரிசில் குமாரன்—வெகுபுகழ்
கொண்ட வுதாரன்

மறைதனக் கரியான்—வடிவுள
மஞ்ஞையிற் பிரியான்—மனமிகு
மாவிலிகங்கை—வயல்தனில்
மருவியங் கங்கே

நிறை புனல் தெளியான்—வளர்பண்ணை
நிறைகளை கழியான்—என்னை
நெருப்பெனப் படுவான்—அவள் தன்னை
விருப்புடன் தொடுவான்

உறைபதி யங்கே—ஆண்டைக்
கொரு பொழுதிங்கே—சொன்னால்
உருட்டியே யடர்த்தங்—கென்னை
வெருட்டுவா னாண்டே. 74

உம்பரை மீட்டோன்—வேதனை
ஒருமொழி கேட்டோன்—அடியவர்க்
குறுதுயர் தீர்ப்போன்—வன்ன
ஒயில்திகழ் மயிலோன்

கம்பநல் யானை—முகமுள
ஐங்கர முடையோன்—துணையெனக்
களிகொளும் வேலன்—மாவிலி
கங்கைநல் வயலில்

வம்புகள் பண்ணு—வன்அவள் தன்னை
மனத்தினி லெண்ணு—வன்விளை செந்நெல்
வயலையும் பாரான்—என்னுடை
வளவிலும் வாரான்

அம்பெனும் விழியாள்—கிளியினும்
அதிவித மொழியாள்—என்னுடை
ஆருயிர்க் கினியாள்—என்றாங்
கறைகுவ னாண்டே. 75

வாரணக் கொடியோன்—பங்கய
மலரெனும் விழியான்—சூரனை
வன்சிர மரிந்தோன்—வஞ்சகர்
நெஞ்சிடம் பிரிந்தோன்

காரணக் கந்தன்—வரமருள்
கௌரிதன் மைந்தன்—பன்னிரு
கையுடை முருகன்—மாவிலி
கங்கைநல் வயலில்

ஏர்தனைப் பிடியான்—மனதினில்
எனக்கறக் கொடியான்—இல்லத்தை
எட்டியும் பாரான்—வயல்பண்ணை
பட்டியும் பேரான்

சூர நெட்டூரப்—பள்ளன்
துடிப்புடன் நெளிப்பும்—போகத்
துச்சன னிவனைத்—தொழுவில்
தொடுத்திடு மாண்டே. 76

**பள்ளன் தொழுவில் மாட்டுண்டு கிடக்க மூத்தபள்ளி வந்து கண்டு கூறுதல்.**

ஆகமு முயிரும் போலே யொன்றாய்
அவளிட மாசை யாகியபோது

காகமும் வில்லும் போலவே யென்னைக்
சுண்ட கண்ணும் கடலிற் கழுவித்
தாக மேறிப் பகீர தாகங்கைத்
தனிவயற் பள்ளி தன்குடிற் கேகிப்
போகசு வென்சலிப் புங்காலிலே தொழுப்
பூண்டி ரோசொல் புலைப்பள்ள னாரே. 77

ஒன்று நான்சொல்ல வொன்பதுஞ் சொல்லி
உறுக்கி யேவை துரப்பி வெருட்டிக்
கன்று காலியும் விற்றுக் கள்ளுஞ் சுள்ளுங்
கள்ளப் பள்ளியா ரோடு குடித்து
என்றும் பண்ணை வயல்தனில் வாராமல்
எடுத்துப் பேச்சில் வெருட்டி யுருட்டி
நின்று மிண்டுகள் தான் பண்ணுகின்ற
நெளிப் பெங்கேசொல் புலைப்பள்ள னாரே. 78

**அவன் அவளை மன்னித்தல் கேட்க வேண்டுதல்**

கன்னியாக வுனைக்கைப் பிடித்துநான்
கண்ணைப் போலக் கருதிநடந்தேன்
முன்னை வல்வினை யாலே யுனைவிட்டு
மோச மாக வவளிடம் போனேன்
அன்னை பின்மனை யாளென் றெவருக்கும்
அவனி யோர்சொல்லும் மப்படிப் போலே
என்னை நீருங்க ளாண்டைக்குச் சொல்லி
இருகை கூப்பி விடுவித்துக் கொள்ளும். 79

**அவள் அவனை மீட்கவேண்டிப் பண்ணைத் தலைவனைப் பரவல்**

கான வேடரைக் கண்டு நின்றாங்கே
கனகம் போல மலர்ந்தொரு வேங்கை
தான தாய்நின்ற தென்கதி ரைப்பதிச்
சண்மு கன்குகன் தன்பண்ணை தன்னில்
போன மாடுங் கலப்பை நுகமும்
பொதுக்கில் லாமலே நானொப்புத் தாறேன்
ஆன செந்நெல் பயிர்செய்து தாறேன்
அடியேற் காக விடும்பள்ள னாரை. 80

### வேறு

பொன்னகர் மேவிய மன்னவனே
யென்றனாண்டே—பள்ளன்
பொல்லாத கள்ளுக் குடித்த
மதியினாற் போனான்
மன்னிய மாவிலி கங்கைநல்யாறு
பரவுதே—கட்டி
மறிக்கவும் வேறொரு பேரில்லை
யேபண்ணை யாண்டே. 81

வேளை முகூர்த்தமும் வேளாண்மை நேரமு
மாகுதே—பள்ளன்
வேலை தன்னை யிங்கேயார்
விடுவார்கா ணாண்டே
ஏழையெனக் காகப்பிழை பொறும் பண்ணை
யாண்டே—பள்ளன்
இருகாலிற் பூண்ட தொழுக்
கழற்றுமெ னாண்டே. 82

### தொழுவிலிருந்து விடுபட்ட பள்ளன் விதை முதலிய வளம் கூறல்

சின்னக் கொம்பன்வெள்ளை வாலன்
புள்ளிச்சிவப்பன்—காலிற்
சிலம்பன் குடச்செவியன்
செங்காலன் கூழை
வன்னத் தேமற்காதன் தோகை
வாலன்கறுப்பன்—சற்றே
வளைந்தகொம் பன்மயிலை
யணில்முது கன்நல்ல
கன்னத்திற் சுட்டியன்வட் டக்கட்டைக்
குளம்பன்—துய்ய
காயாமலர் போனிறத்தன்
கருங்கழுத்த னென்றே
செந்நெல்தர ளஞ்சொரியு
மாவிலிகங்கை—வயற்
சேரும் பண்ணை மாட்டின்வகை
செப்பினே னாண்டே. 83

சுத்தமர கதத்தாலே படவாளும் துய்ய
சோதிவயி டூரியத்தா லேர்க்கா னுகமும்
நித்தமிலங் கும்புருட ராகமேழியும் மணி
நிலவெறிக் கும்வயிரத் தாலே கொழுவும்
பத்தரைமாற் றுத்தங்கப் பூட்டாங் கயிறும்
பளிங்கினா லேசமைத் திட்டவுழு கோலும்
கத்தன்கதி ரைக்கிறைவன் மாவிலிகங்கை—வயற்
கலப்பைக் கணக்கின்வகை காணுமென் னாண்டே. 84

### நெல்லு வகை

பச்சைப்பெரு மாள்கறுப்பன் பாளைமுகரன்—செழும்
பன்றிக்கூரன் வெள்ளைவா லன்பவளச் சம்பா
அச்சடியன் கார்குருவை யானை முகரன்—குண்டை
ஆனதொரு பெருநெல் லழகிய வாணன்
மெச்சிப்பல ரும்விரும்பு மலையழகன் துய்ய—கதிர்
வேற்பெருமான் மாவிலி கங்கை வயலில்
இச்சையுடனே நெல்லின் கணக்குச் சொன்னேன்
இன்னமுள நெல்லின்பேர் சொல்லொணா
தாண்டே. 85

### நெல் விதைக்கும்படி கூறுதல்

அருக்க னென்றால்நல்ல ரேவதி யென்றால்
ஆனமிர்த யோகமென்றாற் பஞ்சமி யென்றால்
பெருத்த முகூர்த்தமுச்சி மிதுனமா மென்றாற்
பேரான கரணமுஞ் சிங்கமா மென்றால்
கருத்துள் நினைப்பவரைக் காப்பவனா மெங்கள்
கந்தவேள் மாவிலி கங்கை வயலில்
திருத்தி வரம்புகட்டிப் பரம்படித்து நல்ல
செந்நெல்விரை தெளித்திடச் செல்லடா பள்ளா. 86

### வயலுழும்போது பள்ளனைக் காளைமுட்டப் பள்ளன் விழுந்து மூர்ச்சித்த செய்தி பண்ணைத்தலைவர்க் கறிவித்தல்

மாறில் லாத புகழுடை யோனரன்
மைந்தன் மாவிலி கங்கை வயலில்
ஏரும் பூட்டி யிணைக்கிணை சால்விட்
டிணங்க வேநின் றுழுகின்ற நேரம்

ஆறு பாயக் கயல்குதிக் கொள்ள
அஞ்சி யேபுள்ளிக் காளை வெருண்டு
சீறியே யெங்கள்பள்ளன்மேற் பாயத்
தியங்கிச் சேற்றில் விழுந்தான்கா ணாண்டே.87

**பள்ளிகள் புலம்பல்**

மாலைப் பொழுதிலே—மருதடி வயலில்
மாணிக்கச் சிலம்பனை—வலக்கையிற் பிடித்து
கோலக்குதிரைக் குடலன்—கூரிய கொம்பால்
குத்தி யெடுத்துக்—கோட்டிலே வைத்து
ஏலக்குழலாள்—எழுவியுன் புருஷனை
எருதுபாய்ந்த சேதி—இன்னுமறிந்திலையோ
பாயுமெரு தென்றுசொன்—னாருமிலையையோ
பாவிப்பண்ணைக் காரனாரும் பள்ளனுக்கு
முன்னே. 88

மாவிலி கங்கை வயலுழையிலே—உனைச்சீறி
மதக்காளை யுறப்பாயவே
பாவியேன் செய்த வினையோ—எங்கை
பள்ளிகண்ணூறு பட்டதோ வறியேன்
சேவின் கழுத்தில் நுகம்முதல் வைத்திட்ட—அந்தச்
சீரில்லாதபொல்லா முகூர்த்தமோ
ஆவிமயங்கியிங் கேகிடக்கின்றாய்நீ—எழுந்திராய்
அலங்கார வீரப்பள்ளனே. 89

கஞ்சமுகப்பள்ளி யிளையாள் கள்ளில்—இட்ட
கற்ற வித்தை சித்தி பெற்றதோ
கொஞ்சி யவள்தனைச் சேராமலிருந்த—வெங்
குறையாலே மையல் கொண்டதோ
.........................
.......................
வஞ்ச நெஞ்சி செய்திட்ட சூதோ—நீ எழுந்திராய்
வடிவின் மிகுத்த பள்ளனே. 90

துஷ்ட நிஷ்டூரப் புலைச்சி—அவள் சண்டி
துரோகி யிளை யாளவ ளன்பால்
பட்டி மாட்டைக் கொள்ளையாய் விற்று—உனக்கும்
பரிவினா லூட்டிய கள்ளில்

இட்டமருந் தாலுனக்கு வந்தபொல் லாப்போ—ஐயோ
இரண்டு கண்ணும்மேற் சொருகி
மட்டில்லாத மூர்ச்சை பொருந்தி—மெத்த
வருந்துகின்றாயென் பள்ளனே. 91

மார்பின்முலை யரும்பு முனம்—என்னை
மற்றொருவர் விரும்பு முன்னம்
தூரி யெழுதற்கரிய—எந்தன்
துய்ய விடை சோருமுன்னம்
சீரியதோர் புயந்தழுவி—என்னைச்
சேர்ந்து மதன்ரதி யெனவே
ஓர் பொழுதும் பிரியாமல்—இருந்தாய்
உகந்தென்னைப் பாராயோ. 92

பன்னுதமி ழோரெவரும்—நின்று
பரவுகதி ரையில் வேலன்
மன்னியமா வீலிகங்கை—வயல்
வளமைகளைப் பார்ப்பவரார்
கொன்னுலவு மென்மார்பின்—வாசக்
குரும்பை முலை பார்க்கிலையோ
பன்னியவென் சோகமெலாம்—இங்குப்
பார்ப்பவரார் தீர்ப்பவரார். 93

### பள்ளனெழுந்திருத்தல்

ஆருமறி யாததோ ரடவிதனின்—மத
ஆனைகா ணாததோ ராலங்கன்று
ஆருமறி யாமலே சென்று—அந்த
அரிய மூலிகைதனைக் கண்டு
ஆருமறியாம லேபிடுங்கி வந்து—அதை
அரைத்துக் கரைத்துப்பள்ளன் வாயில்வார்க்க
சோரும யக்கமெல் லாமுடன் தெளிந்தே—அங்குத்
துடித்துப் பதைத்துப் பள்ள னெழுந்தனனே. 94

### பண்ணைச்செயல் காணவருமாறு பண்ணைத்தலைவனை வேண்டுதல்

மண்டல மெண்கதிரை வேலர்மகிழ் கின்ற
மாவிலி கங்கைவயல் தன்னி லுழுதே

எண்டிசை யுந்திருக் கறவரம் பெடுத்தே
இட்டசிறு கட்டிதட்டிப் பரம்படித்தே
தண்டமிழி தென்னவே செந்நெல் முளைத்திடவே
தழைதானே யெடுத்துவயல் தன்னில் நடவே
கண்டிருகண் களிக்கவெங்கள் பணிவிடைக ளெல்லாம்
காணவரவேணுமிப் போபண்ணை யாண்டே 95

**நாற்று நடுதல்**

**(தரு)**

அண்டர் பணியத் தவமும் பயனும்
அருளி வினைக ளறுப்பவன்
அருள் விளங்கிய கரிமு கற்கிளைய
அறுமுகன் குகன் குருபரன்

எண்டலம் புகழ் கதிரைக் கிறைவன்
என்றும் நினைப்பார்க் குரியவன்
இருட்டு வஞ்சகத் திருடருக் கொளித்
திருப்பவ னெமைப் புரப்பவன்

கொண்டல் வண்ணனுக் குரிய மருகன்
குமர னமர குஞ்சரி
கொழுநன் மாவிலி கங்கை வயலில்
கூடி யாடிப் பாடியே

தண்டை புலம்ப விடைகள் நோவத்
தரள வடங்க ளசையவே
தாவித் திரிந்து தூவி நாற்றுத்
தன்னை நடவாரும் பள்ளிரே. 96

மயிலி லேறி வருமு தாரன்
மார னுக்குநல் மைத்துனன்
வாசக் கதிரை மலையில் வேலன்
மாவிலி கங்கை வயலிலே

கயிலி மயிலி குயிலி தையலி
கருவி திருவி யொருவியும்
காரி வாரி வீரி சூரி
கறுப்பி காத்தி கட்டைச்சி

அயிலை நிகரும் விழிகள் புரள
அழகு பொன்முடி யசையவே
அவர வர்க்கொரு பிடிவகுத் துவைத்
ததிதீவி ரத்துடன் நடுகையில்

செயலின் மருவிக் கயல்கள் வெருண்டு
சேற்றிற் குதித்துப் பாயவும்
சிறைப்புள் ளொடுத்துத் திரும்பிப் போகும்
சித்திரம் பாரும் பள்ளிரே. 97

மாலுக் கிளைய வல்லி முலையை
வருந்தி யருந்தி வளர்ந்தவன்
மாசி லாத கதிரை வேலன்
மாவிலி கங்கை வயலிலே

காலுக் கிசைந்த சிலம்பு புலம்ப
கனத்த தனங்க ளசையவே
கனகப் பணிக ளிலங்கக் கிரணக்
காது வடங்க ளாடவே

பாலுக் கிசைந்த தேனுக் குவமை
பகரு மிரண்டு பாங்கியர்
பணிந்து குனிந்து நெளிந்து வளைந்து
பாடி யாடி நடுகையில்

வேலிக் கருகில் வேழத் திரளில்
விளைந்து பரந்த முத்தெலாம்
வெள்ளை யெகினம் கருவென் றயிர்க்கும்
விரகு பாரும் பள்ளிரே. 98

மனத்திற் றவமுற் றிருந்த தொண்டரை
வளர்த்துப் பொருள்கள் கொடுப்பவன்
வான்றென் கதிரை மலையில் வேலன்
மாவிலி கங்கை வயலிலே

கனத்த தனத்தி யனத்தின் நடைச்சி
கந்தி சந்தி சுந்திசீர்
கன்னி பொன்னி யன்ன மென்னி
கமலி யுலகி கமலத்தி

அனத்தி னினங்கள் என்னக் கூடி
அருகிப் பெருகிப் புருவத்தை
அசைத்து நெளித்து நகைத்துக் களித்து
ஆடிப் பாடி நடுகையில்

சினத்து மலங்கு கலங்கு புனலிற்
சிறுத்த கெண்டைகள் சிதறியே
தேரை பாய நாரை பறக்கும்
சித்திரம் பாரும் பள்ளிரே. 99

காரைப் பொருந்துங் குவடு புடைசூழ்
கதிரைப் பதியிற் கந்தவேள்
கானக் குறத்தி கணவன் கலக்கக்
கலங்கு மவுணர் குலங்களின்

மார்பைப் பிளந்த மாலின் மருகன்
மஞ்ஞைப் பரியில் வருகுகன்
மதுரைக் கவிஞர் புகழும் வேலன்
மாவிலி கங்கை வயலிலே

சேரத் திரண்டு நிரைத்துப் பரந்து
சிரித்துப் புருவம் நெரித்துக்காற்
சிலம்பு புலம்ப வோடிக் கூடிச்
செவ்வை யாக நடுகையில்

தாரைப் பொருந்து மார்பிலே யிரு
தனத்தி லேகுழைக் கனத்திலே
தகைப்பி லேசின்னச் சிரிப்பிலே பள்ளன்
தயங்கி றானடி பள்ளிரே. 100

பொற்பு மிகுத்திடு நற்றவ முற்றிடு
புற்றுமு னிக்கருள் புரிந்தவன்
புட்ப மெடுத்திரு பூம்பத மர்ச்சித்துப்
பூசைசெய் வார்களி லாசையான்

மற்றவர் முப்புர முற்றெரியச் சினம்
வைத்துந கைத்தவன் மனமகிழ்
மைந்தன் கதிரை மலையில் வேலன்
மாவிலி கங்கை வயலிலே

சற்கரை யொத்திடு சொற்க ளுரைத்திடு
சற்குண மங்கையர் கூடியே
சற்றுமோர் குற்றமில் நெற்பயி ருற்றிடு
தன்மைய ராயங்கு நடுகையில்

அற்புதச் சிற்றிடை வெற்பு முலைக்கனத்
தற்றிடு மற்றிடு மென்னவே
அக்குழ லிற்கரு விற்பொலி வண்டுகள்
ஆர்ப்பது பாரும் பள்ளிரே. 101

கலைக்கு கந்தவர் மிகுத்துக் கற்றவர்
கருத்து றத்தொழுங் கந்தவேள்
கருத்து மகிழுங் கந்தன் மாவிலி
கங்கை திகழுநல் வயலிலே

சிலைக்குக் கைத்தொயி லிழைத்துக் கட்பொத்து
கைக்கூ டைத ரித்துத்தாள்
தெரித்துத் திக்கெங்கும் மதிக்க வெண்டுய்ய
திங்கட் குடையோன் முடியென்ன

முலைக்குப் பொற்கச்சிட் டிறுக்கிச் சிற்றிடை
முறுக்கிப் பட்டுடை திருத்தித்தான்
முதிர்ச்சி கொண்டு திமிதித் தொம்மென
முடுகிக் கடுகி நடுகையில்

வலைக்குத் தப்பி வயலிற் கிடந்த
வண்சங் கோடுறு வாளையை
வனக்கொக் குக்கொத்தி யெடுத்தொக் கக்கக்கும்
வளமை பாரும் பள்ளிரே. 102

**நெல் விளைதல்**

மருமத் திலங்குங் கடம்ப னுயர்ந்த
வான வர்க்கரு ளானவன்
வளருங் கதிரை மலையில் வேலன்
மாவிலி கங்கை வயலிலே

ஒருசொற் குரியன் முருகற் கன்பன்
உயர்கு லத்தவ னுத்தமன்
உலகம் புகழு மமரர் நாதன்
உதவும் புதல்வ னானவன்

திருவுக் கிறைவன் சரணம் போற்றிச்
செய்யுந் தர்ம நாயகன்
சிந்தை மகிழ்ந்து தினமும் புவியிற்
செய்யுந் தருமம் போலவே

பெருகிப் பயிர்கள் வளர்ந்து கதிர்கள்
பேத மின்றியுண் டாகியே
பெருமை யான தொண்டர் மேல்வைத்த
கருணை போல விளைந்ததே. 103

## அருவி வெட்டுதல்

தேனவிழ் பூந்தொடை மார்பன் குகன்
தென்கதி ரைப்பதிக் கிறைவன்
வானவர் போற்றிடு முருகன் மகிழ்
மாவிலி கங்கை வயலில்
கூனரி வாள்கை யெடுத்தே செந்நெல்
கூட்டமிட்டே கொய்யத் தொடுத்தே
தானருவி விரைந்து வெட்டு மந்தத்
தன்மை பாரும் பள்ளிரே. 104

தொண்டர்களுக் கருள் கொடுப்போன்—அன்பர்
தொல்வினை பற்றறக் கெடுப்போன்
மண்டலம் புகழ் முருகன்—குகன்
மாவிலி கங்கை வயலிலே
கண்டவர் களெட்டிப் பார்க்கப்—பண்ணைக்
காரனார் கண்ணுக்கு மேற்கத்
திண்டிற மாய்வெட்டித் திரும்பிப்—போகுஞ்
சித்திரம் பாரும் பள்ளிரே. 105

கந்தமி குந்ததார் மார்பன்—கறைக்
கண்டனு கந்தகு மாரன்—வைவேற்
கையன்—அன்பர்—மெய்யன்—மிகு
துய்யன்—செய்ய—மெய்யன்
சிந்தைநி னைந்தவர்க் கன்பன்—உற்றுத்
தேடாத வர்க்கொரு வம்பன்—செங்கை
வேலன்—உமை—பாலன்—அசுரர்ச்
செற்றிடு காலன் நல் வயலில்

இந்தெனு மென்னுதல் மானார்—மத
லீலைக்கி சைந்தசெந் தேனார்—கயல்
விழியார்—குழல்—மொழியார்—கூந்தல்
நெளியார்—பசுங்—கிளியார்
தெந்தன தெந்தன வென்றே—வெட்டிச்
சின்ன நெடுங்குர லொசியச்
சிந்தை மகிழ்ந்து கொண்டாடி—வயற்
செந்நெ லருவிகொய் தாரே. 106

### பொலிகுவித்துப் பொலிகாணப் பண்ணைத்தலைவனை அழைத்தல்

மன்னுபுகழ்த் தென்கதிரை வேலர்மகிழ்கின்ற—துய்ய
மாவிலிகங் கைவயல் தன்னில் விளைந்த
செந்நெலறுத் தேனவைகள் சேரமலை போலச்
செப்பமுட னாயிரம்போர் கட்டிமிதித்தேன்
கொன்னுலவு நாகமெனத் தூற்றிக்குவித்தேன்—அதில்
கோவில்விரைக் கைஞ்ஞூறுகோட் டைகட்டிவைத்தேன்
இன்னதள வென்றுகண்டு கண்களிக்க—இப்போ
நீருமங்கெழுந் தருளவேணும் பண்ணையாண்டே. 107

### பள்ளன் மூத்த பள்ளியைக்குறித்து முறையிடுதல்

மூத்தபள்ளி யென்னைமெத்த மோசடிகள்
சொன்னாள்—அவள்
மோசம்பண்ணி யேபசிக்கு
மோருந் தாராளாம்
வார்த்தை யொன்று சொன்னவுடனொன்பதுஞ்
சொல்வாள்—எதிர்
வரும்பொழுது நீட்டிய
கால்மடக் காமலிருப்பாள்
பார்த்தபொழு தெல்லாமெனைப் பழுது
சொல்வாள்—சின்னப்
பள்ளியைக் கண்டவுடன்
துள்ளி விழுவாள்
கோத்திரத்தி லில்லாத குணம்படைத்து
வந்தாள்—இவள்
குற்ற மெல்லாம்
ஆருடன் கூறுவேனாண்டே. 108

### மூத்தபள்ளி முறையீடு

இல்லத்திலுஞ் சற்றுமிரான் என்னையுந்
தேடான்—சொன்ன
ஏவல்சொன்னால் நாவையரி
வேனடியென்பான்
ஒல்லைபொழு தென்றுமவ
ளில்லம்பிரியான்—செந்நெல்
உள்ளதெல்லா மவளுக்கே
யுண்ணக்கொடுப்பான்
அல்லும்பக லென்றுமில்லை அங்கே
யிருப்பான்—அவட்
காசைகொண்ட நாள்
முதலென் னேசமறந்தான்
சொல்லிப்பய னில்லைப் பின்னை
யென்னதான் சொல்வான்—தன்மேற்
சூழ்ந்தபிழை யெல்லா மென்மேற்
சூட்டினா னாண்டே. 109

### பள்ளிகள் ஒருவரையொருவர் ஏசல்

### இளையபள்ளி

ஆமோடியி தெல்லாமிவ் வூரறியா தோடி—சொன்னால்
அத்தனையும் வெட்டவெளி யாக்குவே னடி
ஓமேடி யுன்னோ டுரைக்கலா மோடி—வெள்ளை
உப்புங் கர்ப்பூரமு மொக்குமோ போடி. 110

### மூத்தபள்ளி

ஒக்குமோ தோகையுடன் வாரணமு மாடிப்—பொல்லா
உவர்நீரில் வேமோ பருப்பிங்கே போடி
வெட்கமில் லாதமுழு நீலிமழு மாறி—பாரில்
வேழங்கண் டாளியஞ்சி வெருளுமோ போடி. 111

### இளையபள்ளி

வெருட் டாதேபூனை யுடனேயெலி யெதிர்த்தால் தப்பி
மீளுமோடி மாவலி கங்கையிற் பள்ளி
பொருட் டாகவுனை வைப்பனோ போடி
உன்புத்தி யெல்லாமிங்கே சித்தியா தேடி. 112

மூத்தபள்ளி

உரைத்த வுரைசொலி யெனக்குமுன் வர
உனக்குவீ றோடி
பரத்தை யுனதிரு தனத்தை யுயிரொடு
பறித்திடுவ னேடி. 113

இளையபள்ளி

பறியெடி திருவிலி யறிலிலி படுநீலி
பறிதனை நிகர் வயிறி
அறியெடி நாயே யெனதிரு கையின்
வலிமையை யறியா முழுமூடி. 114

மூத்தபள்ளி

மாறுரை பேசவு மேசவு மாச்சுதோ
மழுமாறிய முழுமூடி
பேறிலா நீலி துரோகி யென்னோடுரை
பேசவுமா மோடி. 115

இளையபள்ளி

பேசியுமெ ன்னெதி ராகவுநின்று
பிழைக்கவும் வல்லாயோ
தேசம றிந்திடு மென்னுடை யாண்டவன்
செய்கை யறியாயோ. 116

மூத்தபள்ளி

எவ்வுலகு மெவ்வுயிரு மெப்பொருளை யும்படைத்த
இறையவனைக் காலில்விலங் கிட்டுவைத் தவன்
நவ்விதரித் தங்கையத்தன் வந்தினிய சொன்னதனால்
நான்முகனை விட்டவனம் மாண்டையல்ல
வோடி. 117

இளையபள்ளி

அன்றமரர் சபைதன்னி லம்புலியைச் சபித்தே
அன்றுமுத லென்றுநல்லோ ராண்டிலொருநாள்
இன்றளவு மங்கவனை நோக்காம லேயிருக்க
எதிராய்ச் சபித்தவனெம் மாண்டையல்ல
வோடி. 118

### மூத்தபள்ளி

சங்கரி கதவடைத்துத் தாழ்பூட்டத் தாழ்திறக்கச்
சங்கரன் தன்னாலும் முடியாத படியால்
அங்கவனு மாங்கிவனை யேநினைக்கப் பூட்டுவிட
அப்போ திறந்தவனெம் மாண்டையல்ல வோடி. 119

### இளையபள்ளி

நித்தமும் மிவனையே நினைத்துப்பூசை செய்யாமல்
நிந்தித்த பேர்க்கொன்றுஞ் சித்திப்ப திலையால்
அத்தனை பேருமுன் நினைப்பதுந் தொழுவதும்
அர்ச்சனை புரிவதும்நம் மாண்டைக்கல்ல
வோடி. 120

### மூத்தபள்ளி

என்றும் அவனிதனி
லிருந்தக்கார முதலான
பண்டமெடுத் துண்டவனுன்
னாண்டையல்ல வோடி

### இளையபள்ளி

அன்றுலவி யேவலையில்
மீனாகவே கிடந்து
அகப்பட்டுக் கொண்டவனுன்
னாண்டையல்ல வோடி. 121

### மூத்தபள்ளி

அவனியறி யத்தக்கன்
வேள்விதனிற் றின்னப்போய்
அகப்பட்டுக் கொண்டவனுன்
னாண்டையல்ல வோடி

### இளையபள்ளி

தவனமென வேசொல்லித்
தேனுந் தினைமாவும்
சாதித்துத் தின்றவனுன்
னாண்டையல்ல வோடி. 122

**மூத்தபள்ளி**

ஆங்கவனுக் கொருபெண்வே
றெங்குங் கிடையாமல்
அசுரர்பெண் கொண்டவனுன்
னாண்டையல்ல வோடி

**இளையபள்ளி**

வேங்கைமர மாகிநின்று
மின்னிடைக் குறமகளை
விரும்பி யணைந்தவனுன்
னாண்டையல்ல வோடி. 123

**மூத்தபள்ளி**

அம்புயத்தி னால்மலையை
யன்றெடுத்த ராவணன்றன்
அங்கையாற்குட் டுண்டவனுன்
னாண்டையல்ல வோடி

**இளையபள்ளி**

அம்புவியிற் றேவமின்னா
ரானசொர்க்க மின்றிமிக
ஆரமுலை யுண்டதுமுன்
னாண்டையல்ல வோடி. 124

**மூத்தபள்ளி**

அல்லவெடி நானும்நீயும்
சொன்னதெல்லா மிருக்கட்டும்
ஆண்டையை யிழுக்கச்
சொன்ன தாரடிபள்ளி.

**இளையபள்ளி**

வல்லமையாய் நீயுரைத்தால்
நானுமதற் கானபடி
மாறுரையா தேயிருக்க
மதிப்பாயோடி கள்ளி. 125

**மூத்தபள்ளி**

மதியாதிரு கண்ணால்
மருட்டியே காசுவாங்கி
வயிறு வளர்ப்பதுவும்
நாங்களோ பள்ளி

**இளையபள்ளி**

கொதியுற்ற பிட்டுத்தின்று
கொண்டகண வன்வயிற்றைக்
குறைத்துத் துரத்தினதும்
நாங்களோ பள்ளி. 126

**மூத்தபள்ளி**

பல்லெல்லாஞ் சுரையின்
விதைபோலவே யுதிரப்
பாதத்தி னாலுதைப்பேன்
பார்த்திரு பள்ளி

**இளையபள்ளி**

வல்லமையால் மாயவஞ்சப்
புள்ளின்வாய் கிழித்ததுபோல்
வார்த்தைசொன்னவாய் பிளப்பேன்
பார்த்திரு பள்ளி 127

**பண்ணைக்காரன் சண்டையை விலக்குதல்**

பாரறியவுங்களாண்டை இருவோருமோர்
பிதாவின் பிள்ளை
பண்பிதென்ன வென்றுறுக்கிப்
பண்ணைக்கார னாரும்
போராயெழுந்த சண்டை
தன்னையும் விலக்கிப்
பொலியளவு கண்டுமிகப்
புத்தியுஞ் சொல்லி. 128

புத்தமிர்த மன்னவிரு
பேரையுநட் பாக்கிப்

போற்றிபுகழ் தென்கதிரைப்
புங்கவர் பிரானெங்
கத்தனெமை யாள்முருகன்
கந்தவே ளருளைக்
கைதொழுது வாழிவாழி
யென்று வாழ்த்தினனே. 129

**வாழ்த்து**

**(இது நூலுக்குரியதன்று)**

அருணவிக சிதகமல மலரைநிகர் தருவதனம்
ஆறுமனு தினமும் வாழி
அமரர்தொழு கனகசபை நடனமிடு பரமசிவன்
அருண்முருகர் சரணம் வாழி

கருணைமழை பொழிபனிரு நயனமதி னொடுவலிய
கவினுலவு தோள்கள் வாழி
கனகிரியை யிருபிளவு படவுருவு நெடியவயில்
கரதலத் தினிது வாழி

வருணமர கதவழகு திகழவரு மவுணனெனும்
மயிலினொடு சேவல் வாழி
வனசரர்த மிறையுதவு குறமினொடு கடவுள்மயில்
எனுமிவர்கள் தினமும் வாழி

தருணமிது வெனவமரர் பணிகதிரை யமர்கந்தர்
தமதடியர் நிதமும் வாழி
சகசநிரு மலபரம சுகிர்த பரிபூரண
சடாக்ஷரம் வாழி வாழி. 130

**கதிரைமலைப்பள்ளு முற்றிற்று**

# நூலாக்கம்

**பதிப்பாசிரியர்:** சித்தாந்தச் செம்மல், சைவசித்தாந்த மாமணி வித்துவான் இரா. அம்பை சங்கரனார் ஆசிரியர், ''சித்தாந்தம்'' சென்னை. **இணைப் பதிப்பாசிரியர்:** கலாநிதி நா. சுப்பிரமணியன் முதல்நிலை, மூத்தவிரிவுரையாளர், தமிழ்த் துறை, யாழ்ப்பாணப் பல் கலைக் கழகம், யாழ்ப்பாணம்; **நூல் தொகுப்பு சேகரிப்பில் உதவி, ஆலோசனை:** மயிலங் கூடலூர் பி. நடராசன், யாழ்ப்பாணம்; க. முத்துக் குமார சுவாமி, சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை; புலவர் வி. அண்ணாமலை முதலியார், பெங்களூர்; புலவர் த. கனகரத்தினம், வெள்ளவத்தை, கொழும்பு; எம்மெஸ். சுந்தரேச ஐயர், திண்டிவனம்; ரெ. ராமசாமி, அலோஸ்டார், மலேஷியா; ஐ. குலவீரசிங்கம், கோலாலம் பூர், மலேஷியா; மகாவித்துவான் சி. அருணைவடிவேலு முதலியார், காஞ்சிபுரம்; திருப்பழனஅடிகள், (பழனிசாமி படையாச்சி), ரோஸ் ஹில், மொரிசியசு; வித்துவான். வே.ரா. தெய்வ சிகாமணிக் கவுண்டர், வேலம் பாளையம்; ஐ. தி. சம்பந்தன், இலண்டன்; கவிஞர். ந. கந்தசாமி, மல்ல சமுத்திரம்; முனைவர் ஆ. கந்தையா, சிட்னி, ஆஸ்திரேலியா; மு. சு. சங்கர், திருநெல்வேலி; முனைவர் பொ. பூலோகசிங்கம், கொழும்பு; திருமதி சந்தனா நல்லலிங்கம், கொழும்பு; சுப. ஆவுடையப்ப தேசிகர், அம்பா சமுத்திரம்; டாக்டர் பழனிச்சாமிக் கவுண்டர், பிஜித் தீவு; பீக்கே நாயுடு, தென் இந்திய சன்மார்க்க சங்கம், நந்தி பிஜித்தீவு; கவிஞர் கலைவாணன், திருவானைக்கா; ஈ. வி. சிங்கன், சிங்கப்பூர்; வே. பேரம்பலம், மிக்சிகன், அமெரிக்கா; வி. எஸ். குமாரசாமி, இசுக்கார்பரோ, கனடா; ந. ஜயராமன், மேலமாம்பலம், சென்னை; **நூலாக்கம், அகராதி, மெய்ப்பு, மேற் பார்வை:** புலவர். வெற்றியழகன், நங்கநல்லூர், சென்னை; கௌசல்யா சுப்பிரமணியன், மயிலாப்பூர், சென்னை; த. பஞ்சநாதன், பெசண்ட்நகர், சென்னை; அம்பை ச. பரமசிவம், மாம்பலம், சென்னை; **ஒளிஅச்சுக் கோப்பு, கணிப்பொறிப் பணி:** க. இரவி, க. சாந்தி, கோ. பார்த்த சாரதி, ம. இராசப்பா, மூவை ந. சுந்தரராசன், அ. ஜெயராஜசிங்கம், நா. உஷா, ச. செந்தில்குமார், சி. சண்முகம், சென்னை; **பக்கமூாக்கல்:** ஓவியர்கள் அ. சந்திரஹாசன், ஜெ. பூவரசு, லோ. பாலமுருகன்; **வண்ண ஓவியங்கள்:** இரா. சிவக்கொழுந்து, வண்ணாரப்பேட்டை, சென்னை; **படச்சுருள் எதிர்மறை:** சக்தி வண்ண ஆய்வகம், சிந்தாதிரிப்பேட்டை, சென்னை; **அச்சிடல், கட்டு வேலை:** ஸ்ரீபாலாஜி கிளாசிக்ஸ், பாதர் தோட்டம், சென்னை; **தங்க அச்சு:** விநாயகா டைஸ்டாம்பு ராயப் பேட்டை சென்னை; கிருஷ்ணன் கட்டாளரகம், வன்னியதேனாம்பேட்டை; செந்தில் கட்டாளரகம், திருவல்லிக்கேணி, சென்னை; **அலுவலக உதவி** செ. ரா. ஷோபனா, ச. பரமசிவம், கி. சரவணன், ச. முருகவேள், சென்னை **நிதிக்கட்டுப்பாடு:** தெ. அருணாசலம், சென்னை; **பொது தொடர்பு, இணைப்பு, மேற்பார்வை:** தெ. ஈஸ்வரன், கொழும்பு. **தயாரிப்பு:** க. சச்சிதானந்தன், மறவன்புலவு, சாவகச்சேரி.